கழக வெளியீடு: ௧௧௯௭

# தனிப்பாடல் திரட்டு

## உரைக் குறிப்புக்களுடன்

(நான்காம் பகுதி)



ஆசிரியர்:
கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி - 6. சென்னை - 1.

1964

# பதிப்புரை

சங்க காலத் தொகை நூல்களுக்குப்பின் பல ஆண்டுகளாகப் பாவலர் பாடிய பாக்கள் தொகுக்கப் படாது மறைந்துபோயின. துஞ்சியவையொழிய எஞ்சிய பாடல்களை இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த இராமநாதபுரம் மன்னர் பொன்னுச்சாமித் தேவர் தம் பெரு முயற்சியால் சந்திரசேகர கவிராச பண்டிதர் தமிழகம் எங்கணுஞ் சென்று மிக முயன்று தேடித் தொகுத்துத் தரத் தனிப்பாடற்றிரட்டு எனப் பெயரிட்டு அச்சிற்பதித்து வெளியிட்டனர். அப் பாடல்களுக்கு உரையும் அவரே எழுதுவித்தனர் போலும்.

அதனை யடிப்படையாகக் கொண்டு அப் புத்தகத்தி லுள்ள பல பாடல்களுடன் புதிய பல பாடல்கள் சேர்த்து முதற் பாகம் இரண்டாம் பாகம் எனக் குறிப்புரையுடன் புஷ்பரத செட்டியார் பதித்து வெளியிட்டனர். பின்னரும் அப்புத்தகங்களில் உள்ள பாக்களை எடுத்தும் விடுத்தும் புதிய சில பாடல்களைத் தொகுத்தும் தனிச்செய்யுட் சிந்தாமணி எனப் பெயரிட்டுச் சண்முகஞ் செட்டியார் வெளியிட்டனர். மதுரைப் பதியிற் சிலகாலம் வசித்த மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்களும் பல பாடல்களைத் தேடிக் கண்டு தொகுத்து மூவாயிரத் தெண்ணூற்றுப் பதினைந்து பாடல்கள் கொண்ட புத்தகமாகத் தனிச் செய்யுட் சிந்தாமணி என்ற பெயரையே யமைத்து வெளியிட்டனர்.

இவ்வாறு தமிழ் நாட்டில் தனிப்பாடல்கள் பல உலவுவன தமிழ் மொழியின் தெய்வத் தன்மைக்கும் தொன்மைக்கும் வன்மைக்கும், புலவர் பன்மைக்கும் எடுத்துக்காட்டாக இலங்குகின்றன. வாழ்வு நன்மைக்கும் இவையே வழிகாட்டுவனவாம்.

தனிப்பாக்கள் சொல்லின்பம், பொருளின்பம், அமையத்திற்கேற்ற சொல்லாற்றல் பலவகைக் கற்பனை அலங்காரம் அமைந்தவைகளாகக் காணப்படுவதால் அவற்றிற் பலவற்றை ஆய்ந்து நல்லன தொகுத்து நம் கழக வாயிலாக வெளியிடக் கருதினம். கருப்பக்கிளர். திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அதற்குத் தகுதியுடையவரெனத் தெரிந்து தொகுத்துத் தருமாறு கூறினம். அவர்கள் பழைய பாக்களோடு புதியவைகளைத் தேடியும் தற்கால அறிஞர்கள் பாடல்களையும் தொகுத்துங் குறிப்புரை வரைந்துமுதவினர். அவற்றுள் "தனிப்பாடல் திரட்டு" என்ற பெயருடன் மூன்று பகுதிகள் கழக வாயிலாக முன்னரே வெளிவந்துள்ளன. தற்போது நான்காம் பகுதி வெளிவருகின்றது. இதனைத் தொகுத்த அருமையும் பெருமையும் இந்நூலினை ஆயும் புலவர் பெருமக்கட்கே புலனும். ஏனையோர்க்குத் தோன்ரு என்பது இயற்கையே.

தமிழன்பர்கள் பலரும் கழகப் பணியைப் போற்றி அவற்றை வாங்கியும் வாங்குவித்தும் கற்றும் கற்பித்தும் தமிழ் நாடு முன்னேற்றமுற முயல்வார்கள் என முன்னுகின்றேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

நூல்வடிவில் தொடர்நிலைச் செய்யுளாகச் செய்யப் பெருமல் யாதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டுத் தனியாகச் செய்யப்பட்ட பாடல்கள் தனிப்பாடல் என்னும் பெயரைப்பெறும். பழங்காலத்துச் சான்ருேர் கள் அவ்வப்போது பாடிய பாடல்கள் தனிப்பாடல்க ளாகவே அமைந்தன. அவை அக்காலத்திலேயே ஒன்று சேர்த்துத் திரட்டப்பட்டன. அதனுல் அவை கள் நூல்வடிவை யடைந்தன. சங்கநூல்கள் தனிப் பாடல்களால் அமைந்தனவேயாம். அப்பாடல்கள் அக்காலத்தில் தொகுக்கப் பெருமல் விடப்பட்டிருக்கு மாயின் இந்நாளில் நாம் கிடைத்தற்கரிய பெருஞ் செல்வத்தை இழந்த வறியவர்கள் ஆகியிருப்போம். அவைகள் ஒன்றுசேர்க்கப்பட்டமையே இன்று நமக்கு அருநிதிக் குவியல்களாக அமைந்துள்ளன.

இடைக்காலத்திலே தனிப்பாடல்களைத் திரட்டு வதில் யாரும் ஊக்கங் காட்டவில்லை. இதனுல் இடைக் காலத்தில் வாழ்ந்த எண்ணற்ற புலவர் பெருமக்களின் அரிய தனிப்பாடல்கள் நமக்கு அகப்படாமலே போயின. கம்பர், காளமேகப் புலவர் முதலியவர்களின் தனிப் பாடல்களும் நமக்கு முழுவதுங் கிடைத்துவிட வில்லை. ஒரு சில கிடைத்தன. எஞ்சியவை மறைந்து போயின.

இராமநாதபுரத்தில் இந்நூற்ருண்டின் தொடக் கத்திலே வாழ்ந்திருந்த பொன்னுச்சாமித்தேவர் தனிப் பாடல்களிற் சிந்தையைச் செலுத்தினுர். தம்மீது பல

புலவர்களும் பாடிவருந் தனிப்பாடல்களையும் பிற தனிப் பாடல்களையும் ஒன்று சேர்த்துத் திரட்டி நூல்வடிவாக்க வேண்டும் என்று விரும்பினர். அப்பணியினைச் செய்யு மாறு சந்திரசேகர கவிராச பண்டிதர் என்னும் புல வரைக் கேட்டுக்கொண்டார். சந்திரசேகர கவிராச பண்டிதர் பலவிடங்களில் முயன்று அரிய தனிப்பாடல் களைத் திரட்டித் தனிப்பாடல் திரட்டு என்னும் பெய ரோடு வெளியிட்டார். இப்பாடல் திரட்டு உரை யெழு தப்பட்டு முதல் பாகம் இரண்டாம் பாகம் என்னும் பெயர்களோடும் வெளியிடப்பட்டன.

முறையூரில் வள்ளலாக விளங்கியிருந்த சண்முகஞ் செட்டியார் என்பவருந் தனிப்பாடல்களைத் திரட்டி வெளியிடுவதிற் கருத்துச் செலுத்தினர். தம்முடைய அவைக்களப் புலவராக இருந்த கொட்டாம்பட்டி கருப் பையாப் பாவலர் என்பவரைக்கொண்டு மேலுந் தனிப் பாடல்களைத் திரட்டச் செய்தார். இத்திரட்டில் சந்திர சேகர கவிராசர் திரட்டிய பாடல்களும் உள்ளடங்கின. கருப்பையாப் பாவலர் தாம் திரட்டியவைகட்குத் 'தனிச் செய்யுட் சிந்தாமணி' என்று பெயர் கொடுத்து வெளி யிட்டார்.

இதன்பின் மதுரைமாநகரில் வாழ்ந்திருந்த மு. ரா. கந்தசாமிக் கவிராயர் தனிப்பாடல்களைத் தொகுக்கும் வேலையில் ஈடுபட்டார். தனிச்செய்யுட் சிந்தாமணியில் உள்ள பாடல்களுடன் வேறு பல பாடல்களையும் புதியனவாகச் சேர்த்து மூவாயிரத்து எண்ணூற்றுப் பதினைந்து பாடல்களைக் கொண்ட பெரிய நூலாகத் தனிச் செய்யுட் சிந்தாமணி என்னும் பெயருடனேயே

புத்தகமாக வெளியிட்டார். ஆயினும் இத்தொகுதியிலும் சேராத நூற்றுக் கணக்கான பாடல்கள் பலவிடங்களிலும் வழங்கிக்கொண்டிருந்தன. சிலர் 'செந்தமிழ்' முதலிய திங்களிதழ்களில் தனிப்பாடல்கள் பலவற்றை வெளியிட்டனர்.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் தனிப்பாடல் திரட்டு, தனிச்செய்யுட் சிந்தாமணி ஆகியவைகளில் இடம்பெருமல் திங்களிதழ் முதலியவற்றில் வெளியாகியுள்ள பாடல்களையும், தற்காலப் புலவர் பெருமக்களின் சிறந்த பாடல்களையும் தொகுத்து மேற்படி பாடல் திரட்டுகளோடு இணைத்துத் தனிப்பாடல் திரட்டின் ஒன்றிரண்டு பாகங்களோடு மூன்று நான்கு பாகங்களையும் முடித்து வெளியிடவேண்டுமென்றும் நூல் விரியாவாறு பதவுரையின்றிப் பாடல்கள் விளங்கும் அளவுக்கு மட்டும் இன்றியமையாக் குறிப்புரையோடு வெளியிட வேண்டும் என்றும் விரும்பினர்.

'செந்தமிழ்' முதலிய திங்களிதழ்களில் வெளியாகியிருந்த சில பாடல்களைத் திரட்டியதோடு தற்காலத்தில் வாழ்ந்துவரும் புலவர் பெருமக்களிட மிருந்தும் சிறந்த பாடல்களைப்பெற்று நான்கு பகுதிகளையும் முடிவு செய்தேன். இந்நான்காம் பகுதி ௯௭௬ புலவர்களின் 691 பாடல்களும் பல புலவர்கள் பாடிய வேறு பல பாடல்களும் கொண்டதாக விளங்குகின்றது. ஆக இப்பகுதியில் பழம்புலவர்களின் பாடல்களும் தற்காலம் வாழ்ந்திருக்கும் புல்வர் பெருமக்களின் பாடல்களும் சேர்ந்து மொத்தம் 951 பாடல்கள் அடங்கியுள்ளன.

சிறந்த கருத்துக்களமைந்த பாடல்களும் அற நெறியை விளக்குவனவாகிய பாடல்களுமே இப் பகுதி களில் அமைந்துள்ளன. பொருளற்ற பல பாடல் களைப் பயனின்மை கருதி நிறுத்திவிட்டேன்.

நான் தனிப்பாடல்களைத் திரட்ட முயற்சி செய்து பல நூல்நிலையங்களில் திரட்டியதோடு தனிப்பட்ட புலவர்கட்கும் எழுதினேன். சிலர் உள்ளக் கிளர்ச்சி யோடு மனமுவந்து பாடல்களை அனுப்பினர். சிலர் அனுப்புவதாக எழுதியதோடு மனநிறைவு கொண்ட னர். அறிஞர்கள் தங்களிடம் உள்ள அரிய பாடல்களை அனுப்புவார்களாயின் அவைகளை இனிவரும் பகுதி களிற் சேர்த்து என்றும் நிலைபெறும் வண்ணஞ் செய்ய லாம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பைந்தமிழ்ப்பண்ணை,
கருப்பக்கிளர்.
தஞ்சை மாவட்டம்.
24—11—'64

சு. அ. இராமசாமிப் புலவர்.

# பாடிய புலவர்கள்

| எண் | பெயர் | பக்கம் | பாடல் தொகை |
|---|---|---|---|
| ௫௮. | சோணாசலம் பிள்ளை | ௯௬ | ௨ |
| ௫௯. | சொக்கலிங்க பெத்தண்ணாற் பூபதி | ௯௭ | ௧ |
| ௬0. | வி. தண்டபாணி தேசிகர் | ௯௮ | ௩ |
| ௬௧. | தருமலிங்கம் பிள்ளை | ௯௯ | ௧ |
| ௬௨. | சேடகிரிராயர் | ௧00 | ௨ |
| ௬௩. | ச. குருநாத முதலியார் | ௧0௧ | ௧ |
| ௬௪. | சுந்தரேச ஐயர் | ௧0௩ | ௧ |
| ௬௫. | வாங்கல் ஐயாச்சாமி முதலியார் | ௧0௪ | ௧ |
| ௬௬. | கையேட்டுத் தம்பான் | ௧0௬ | ௨ |
| ௬௭. | கண்ணுவையர் | ௧0௭ | ௧ |
| ௬௮. | குமாரசாமிக் கவிஞர் | ௧0௮ | ௧ |
| ௬௯. | ச. இரத்தினவேலுப் பாண்டியர் | ௧0௯ | ௧ |
| ௭0. | பாலூர் இராமசாமி முதலியார் | ௧௧௧ | ௧ |
| ௭௧. | முகமது பதியுதீன் சாகேப் | ௧௧௨ | ௧ |
| ௭௨. | பழநி நாவலர் | ௧௧௩ | ௧ |
| ௭௩. | முத்துக் குமாரசாமிப் பாண்டியர் | ௧௧௪ | ௧ |
| ௭௪. | முகமது இபுறுகிம் சாகிபு புலவர் | ௧௧௫ | ௫ |
| ௭௫. | வீரபத்திர சிவாநந்த யோகி | ௧௧௬ | ௧ |
| ௭௬. | செய்கப்துல் காதிர் நயினார் லெப்பை | ௧௧௭ | ௧ |
| ௭௭. | முத்துச்சாமி ஐயர் சி. எஸ். | ௧௧௯ | ௧ |
| ௭௮. | நெ. வேலாயுதம் பிள்ளை | ௧௧௯ | ௧ |
| ௭௯. | முத்து ராமையா | ௧௨0 | ௧ |
| ௮0. | நெல்லை துரைசாமிப் பிள்ளை | ௧௨௨ | ௧ |
| ௮௧. | செ. க. கந்தசாமிக் கவிராயர் | ௧௨௩ | ௨ |
| ௮௨. | வ. த. சுப்பிரமணிய பிள்ளை | ௧௨௪ | ௧௨ |
| ௮௩. | பாலகிருட்டிணக் கவிராயர் | ௧௨௯ | ௭ |
| ௮௪. | முகமது அப்துல் காதர் புலவர் | ௧௩௪ | ௧ |
| ௮௫. | தொண்டைமான் முத்தையா | ௧௩௫ | ௫ |
| ௮௬. | அ. வரதநஞ்சைய பிள்ளை | ௧௩௭ | ௫ |
| ௮௭. | அ. நாராயணசாமி ஐயர் | ௧௪0 | ௧ |
| ௮௮. | கு. குமாரசாமிப் பிள்ளை | ௧௪0 | ௫ |

---

உ

செந்திலாண்டவன் துணை

# தனிப்பாடல் திரட்டு

## உரைக் குறிப்புக்களுடன்

## (நான்காம் பகுதி)



### க. பெரும்பற்றப்புலியூர்நம்பி

[இவர் பாண்டிவள நாட்டில் வேம்பத்தூர் என வழங்குஞ் செல்வி நகரில் ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகட்கு முன்பு விளங்கியிருந்தார். தமிழ்மொழி வடமொழி இரண்டையும் நன்கு கற்றுப் புலமை பெற்றவர். இவர் திருவிளையாடற் புராணத்தை வடமொழியில் இருந்து மொழிபெயர்த்துப் பாடினார். அது பெரும்பற்றப் புலியூர்நம்பி திருவிளையாடல் என வழங்குகின்றது.]

[புராணத்தை இயற்றச் செய்த மன்னன் அரங்கேற்ற முடிவில் பல விருதுகளையும் பல்லக்கு முதலியவைகளையும் வழங்கிச் சிறப்புச் செய்தான். அப்பொழுது இவர் பாடியது.]

1. பல்லக்கு மேலேறிப் பல்லக்கு மேலிட்டோம்
பல்லக் கணிசொக்கைப் பாடினேம்—பல்லக்கு
மன்னு குறையுண்டு மண்மதிக்கும் விண்மதிக்கும்
என்ன குறையுண் டெமக்கு.

(அ - ரை.) *பல்லக்கு - சிவிகை. பல் அக்கு மேலிட்டோம் - பல சிவமணிமாலைகளை அணிந்து கொண்டோம். பல் அக்கு அணிசொக்கைப் பாடினேம் - பல எலும்பு மாலைகளையணிந்த சொக்கநாதரைப் பாடினேம். மன்னு குறையுண்டு - நிலைபெற்ற குறைவானது உண்டு. மண்மதிக்கும் விண்மதிக்கும் - மண்ணுலகத்தாரால் மதிக்கப்பெறும் விண்ணுலகத் திங்களுக்கும்.* (க)

## உ. கந்தசாமிப் புலவர்

[பாண்டிவள நாட்டில் ஈழுவர் குலத்தில் தோன்றியவர். முருகக் கடவுளுடைய திருவருள் பெற்றுப் பெரும்புகழுடன் விளங்கியவர். நொண்டி நாடகம் என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றினர்.]

[ஒருவர் தம்முடைய கையில் மண்ணை மறைத்து வைத்துக்கொண்டு "என் கையில் இருப்பது யாது?" என்று கேட்டபொழுது பாடியது.]

**2.** **கொங்கைக்குச் சந்தனமாம் கோலவிழிக் கஞ்சனமாம்**
**திங்கணுத லுக்குத் திலகமாம்—மங்கையர்நின்**
**ருடல் புரிகின்ற ஆழ்வார் திருநகரி**
**மாடத் திருவீதி மண்.**

(அ - ரை.) *கோலவிழி - அழகியகண். அஞ்சனம் - மை. மாடத் திருவீதி - மாளிகைகள் அமைந்த அழகிய தெரு.* (க)

## ௩. தவராச சிம்மம்

[இவர் திரிசிரபுரத்தில் அரசு செலுத்தியிருந்த மல்லையபூபன் அவைக்களப் புலவர். பிரமராக்கதையால் பிடிக்கப்பட்டிருந்த தன் மகளை அரசன் திருவாரூர்க்கு அழைத்துச்சென்று சிதம்பரநாத தேசிகருடைய அருளைப் பெற்றபோது உடன்சென்றவர். சொற்போர் செய்ய எண்ணியவர்.]

[சிதம்பரநாத தேசிகர் அருட்கண் செலுத்தியவுடன் நல்லறிவு தோன்ற அப்பொழுது பாடியது.]

**3.** **இருளாமல் வெளிருமல் விரல்மடித் தெண்ணுமல்**
**எடுத்தடி மடக்கா மலே**
**இறுகிச் சுமந்ததொரு சொற்சுவை பொருட்சுவை**
**யியைந்தநற் கோவை பெறவே**

ஒருநா ழிகைக்குநா ருயிரம் வளர்மடல்
உலாத்தூது கோவை பரணி
உலகத்து ளாசுபா டும்பெரிய புலவர்யார்
உரைத்திடிற் கமலை யவனே

வரராசர் தவராசர் கவிராசர் புவிராசர்
மகராசர் கொண்டா டவே
வனசமல ரோன்மனைய வளைநா விருத்தியிம்
மண்டமெ லாஞ்செ யித்து

நரராசர் பொற்சரக் கறையெலாம் திறைகொண்ட
நரவாக னப்பிர தாபன்
நாகப் பணுமகுட போதப்ர தாபனருள்
ஞானப்ர காச குருவே.

(அ - ரை.) இருளாமல் வெளிருமல் - அறிவு மயங்காமல். ஆசு பாடும் - விரைவாகச் செய்யுள் பாடும். வனசமலரோன் மனையவள் - கலைமகள். நரவாகன பிரதாபன் - பல்லக்கின்மேல் ஏறும் புகழையுடையவன். நாகப் பணுமகுட போதப்ரதாபன் - சிவபெருமான். (௩)

## ௪. காமினி

[இவள் தொண்டைவள நாட்டில் கழைக்கூத்தாடிகள் வகுப்பிலே தோன்றியவள். கழைக்கூத்தாடுதல் முதலிய அரிய வேடிக்கைகளைக் கற்றிருந்ததோடு தமிழ்மொழியையும் நன்கு கற்றுக் கவிபாடுந்திறம் பெற்றிருந்தாள்.]

[பாண்டியன் விருப்பப்படி இரண்டாவதுமுறை விச்சுளிப் பாய்ச்சல் என்னும் வித்தையைச் செய்யத் தொடங்கியபோது பாடியது.]

4\. மாகுன் றனையபொற் றேளான் வழுதிமன்
வான்கரும்பின்
பாகொன்று சொல்லியைப் பார்த்தெனைப் பார்த்திலன்
பையப்பையப்
போகின்ற புள்ளினங் காள்புழற் கோட்டம்
புகுவதுண்டேல்
சாகின் றனளென்று சொல்விர் அயன்றைச்
சடையனுக்கே.

(அ - ரை.) மாகுன்று - பெரிய மலை. வழுதிமன் - பாண்டிய மன்னன். பாகொன்று - பாகானது பொருந்திய. பையப் பைய - மெதுவாக மெதுவாக. புழற்கோட்டம் - ஓர் ஊர், தொண்டைநாட்டில் உள்ளது. அயன்றை - அயன்றை என்னும் ஊர். சடையன் - சடையன் என்பவர். இப்பாடல் புகழேந்தியாரால் செய்யப்பட்டதெனவும் கூறுவர் சிலர். (௧)

## ரு. வாலசரசுவதி சுப்பிரமணியக்கவிராயர்

[இவர் தோன்றிய இடம் காலம் முதலியன விளங்கவில்லை. உடையார்பாளையத்தில் கச்சியுவரெங்க துரை என்பவர் பெருநிலக் கிழாராக அரசு செலுத்திக் கொண்டிருந்த காலத்தில் அவருடைய அவைக்களப் புலவராக விளங்கியிருந்தார். கல்வி கேள்விகளில் வல்லவராகையால் இவருக்குக் கவிச்சக்கரவர்த்தி என்னுஞ் சிறப்புப் பெயரும் வழங்கியது.]

[கச்சியுவரங்க துரைமீது பாடியன.]

5\. திடமிகுத்ரி கடவிகட தடசெவிக ளடர்திதலை
செறிசிந்து ரான னத்தன்
சிந்தைமகிழ் தன்துணைவ னுனசர வணபவன்
திருவருள் வரப்ர சாதன்
சீலமிகு வீராக மச்சைவ சேகரன்
சேகராசர் சபைமெச் சிடச்

செந்தமிழ்க் கவிமாரி பொழிமேகன் மேலெதிர்த்
திடுபுலவ சிம்மச ரபம்

மடலவிழும் வனசமலர் வாணிபீ டாசனன்
வாகைமிகு மோக வசனன்
வெண்டமிழ்க் குதவாத லுத்தப் பிசாசர்மேல்
வசைசொல்கவி காள மேகம்
வடசொலின் பாரதத் தாதியைத் தென்சொலின்
வழுத்தினேன் வம்ச திலகன்
வாலைசரஸ் வதிசுப்ர மணியக்க விச்சக்ர
வர்த்திவர விட்ட நிருபம்

கடலெனப் புடவிகிடு கிடெனவுடை படவடவை
கனல்சிதற மிகுத ரியலர்
களைத்திரட் டிச்சிரத் தைத்தறித் துக்கழுக்
கட்கிரைகொ டுத்து வெற்றி
கட்டத் துசங்கட்டி அட்டதிக் கரசர்நிதி
கட்டவொப் பஞ்செ லுத்தும்
கச்சிரங் கேந்த்ரதுரை காலாட்கள் தோழசே
கரக்ரீடி யினிது காண்க

வடவரைகு மாரிபய றணிநாதர் பாரிநறு
மலர்ப்பூங் குழற்க வுரிமேல்
மாலைப்ர பந்தநின் பாலருள் புரியவும்
வழுத்தினேம் உமது கொலுவாம்
மகராசர் சபைமுன்ப்ர சங்கஞ்செய் திடவென்னை
வரவழைக் கும்ப டிக்குன்
வனசமலர் வாய்மலர்ந் துத்தார மதுசெய்ய
மனமகிழ்ந் திடவேண் டுமே.

(அ - ரை.) *திடமிகு - ஆற்றல் மிகுந்த. த்ரிகடம் - மும்மதம். தடசெவிகள் - பெரிய காதுகள். அடர்திதலை - நெருங்*

*டிய புள்ளி. சிந்தூர ஆனனத்தன் - யானையின் முகத்தையுடைய ஆனைமுகக் கடவுள். சரவணபவன் - முருகக்கடவுள். வீராகமச் சைவசேகரன் - வீரசைவன். வனசமலர் வாணி - தாமரைமலரில் எழுந்தருளிய கலைமகள். மோகவசனன் - கவர்ச்சியாகப் பேசுபவன். பாரதத்து ஆதி - பாரதத்தின் முதலாகிய ஆதிபருவம். அரியவர் - பகைவர். துசம்கட்டி - கொடிகட்டி. வடவரை - இமயமலை.* (க)

6. பஞ்சலட் சணகாவி யத்தினுல் கவிதையில்
பகர்முத் தமிழ்ப்ர பந்த
பாரகா வியமெலாம் சொல்லும்ப்ர பலவாக்கி
பலகற் பனைப்பொக் கிஷம்
பனுவலாட் டிக்கிதய பிடாச னன்பார
தாதியுரை செய்யும் வம்சன்
படபடென் றெதிரிட்ட கவிஞரையெ லாந்துகள்
படப்படத் தாக்கும் வாக்கன்

வஞ்சகர்க் கிடியேறு அரிகரப் பிரமாதி
வல்லபம் மிகுந்த சுகுணன்
மாருத இட்டலிங் காபரண வீராக
மச்சைவ தெய்வ புருடன்
மண்டலா திபர்கள்சபை மெச்சப்பிர சங்கமிகு
மதுரகவி பொழியு மேகம்
வாலைசரஸ் வதிசுப்ர மணியக் கவிச்சக்ர
வர்த்திவர விட்ட நிருபம்

கஞ்சமலர் முகலளித ரஞ்சிதன் பயறணி
கடவுளர் சமத்தான மால்
கற்றவர்க் கருள்முத்து விசயரெங் கேந்த்ரனும்
காத்ரனென்ன வளர்பார்த் திபன்
கனகசிம் மாசனக் கிரீடாதி பதியரசர்
கப்பமிடும் வளர்நர பதி

கச்சிரெங் கேந்த்ரனும் காலாட்கள் தோழசே
கரபதி இனிது காண்க

தஞ்சமென் ருேருக்கும் சங்கீத சாகித்யம்
தன்னையுரை நாவ லோர்க்கும்
தந்தநின் மூதாதை அம்சம்நீ ஆமெனச்
சகமுனைப் புகழ்த லாலுன்
சமுகமது தேடிவரும் எமதுதமி ழைக்கண்டு
சால்வைமுத லான வஸ்த்ரம்
தனகனக பூடணமும் வாகனு திகளுடன்
தந்தனுப் பிடவேண் டுமே.

(அ - ரை.) *பஞ்சலட்சண காவியம் - ஐந்திலக்கணங்களும் அமையப்பெற்ற நூல். பாரகாவியம் - பெரிய நூல்கள். பொக்கிஷம் - பொருளறை. பனுவலாட்டிக்கு இதய பீடாசனன் நாமடந்தையாகிய கலைமகளுக்கு மனமாகிய இருக்கையைக் கொடுத்தவன். தாக்கும் வாக்கன் - மோதித்தாக்கும் வாக்கை யுடையவன். அரிகரப்பிரமாதி - திருமால் சிவன் நான்முகன் முதலிய தேவர்கள். கஞ்சமலர்முக லளித ரஞ்சிதன் - தாமரை மலரைப்போன்ற அழகிய முகத்தையுடையவன். பயறணிநாதர் என்பது உடையார் பாளையத்தில் எழுந்தருளிய கடவுளின் காரணப் பெயர். அம்சம் - கூறு.* (உ)

7. வீனுளர் கோடி இருந்தாவ தென்ன விலட்சணத்தால்
மானுர் தமைத்தினங் காண்கிலென் ஞங்கரு மாமுகில்
[போல்
கோனுத வள்ள லெனுங்கச் சிரங்கக் குமுனன்முகம்
காணுத கண்சித்தி ரப்பாவை தன்னிரு கண்ணெனுக்குமே.

(அ - ரை.) *வீனுளர் - வீனன மனிதர்கள். விலட்சணம் - நல்லியல்பு. மானுர் - மாட்சிமைப் படாதவர். கோனுத - குறைவு படாத.* (௩)

8. ஈனுவைப் போல இரங்காத பேரைக்கண் டென்னபலன்
நாணுமல் வேண்டும் பொருள்களுண் டாமென நாடிவந்து

கோதை வள்ள லெனுங்கச்சி ரங்கக் குமுணன்முகம்
காணாத கண்சித்தி ரப்பாவை தன்னிரு கண்ணொக்குமே.

(அ - ரை.) சித்திரப்பாவை - ஓவியத்தில் எழுதப்பட்ட பதுமை. (ச)

9. விண்டாவு பாற்கரற் கண்டே முளரி விகசித்திடும்
வண்டார்வு சோமனைக் கண்டே குமுத மலர்தருமால்
தண்டார் புயக்கச்சி ரங்கமகிபதி தன்முகத்தைக்
கண்டால் மலரும் புலவோர் இதய கமலங்களே.

(அ - ரை.) விண்தாவு - விண்ணில் தாவிச் செல்லுகிற. பாற்கரன் - கதிரவன். முளரி - தாமரை. விகசித்திடும் - மலரும். சோமன் - திங்கள். குமுதம் - ஆம்பல். இருதயகமலம் - உள்ளத் தாமரை. (ரு)

10. மாதாவைப் போலிவ் வுலகினைக்
காத்திட வந்தமன்னன்
தாதாவல் லான்மற்றும் வேறுமுண்
டோஎன்முன் சாற்றிடுவாய்
மூதாதை என்றிடுங் கச்சிரெங்
கேந்திரன் முன்னடைந்தோர்க்
கேதா கினுங்குறை யுண்டோ
வதனை யியம்புகவே.

(அ - ரை.) மாதா - தாய். தாதா - கொடையாளி. மூதாதை. பாட்டன் முதலியோர். (சு)

11. கல்லா தவரிடம் செல்லாது வாழக் கனகமழை
சல்லாப மாகப் பொழிந்திட வந்த தயாநிதியாம்
மல்லார் திணிபுயக் கச்சிரங் கேந்த்ர வரோதயமான்
நல்லார்க்கு மற்றவ ரெல்லார்க்கு மேமிக நல்லவனே.

(அ - ரை.) கனகமழை - பொன்மழை. சல்லாபம் - வேடிக்கை. மல்லார் திணிபுயம் - மற்போர் புரியும்படியான ஆற்ற

லமைந்த தோள். வரோதயமான் - வரத்திறைல் தோன்றிய சிறப்புடையோன். (எ)

12. மாலேந்து சேயர் பயறணி நாதர் மனமுகந்த
வேலேந்து கண்ணி நறுமலர்ப் பூங்குழல் மெல்லிநல்லாள்
காலேந்தி மள்ளர் தொழுதேத்தச் சிம்மா
[சனத்தின்கட்செங்
கோலேந்து மெங்கச்சி ரங்கேந்த்ர னென்னுங்
[குணதுங்கனே.

(அ - ரை.) காலேந்தி - அடிகளைத் தாங்கி. மள்ளர் - வீரர். குணதுங்கன் - சிறந்த குணங்களை யுடையவன். (அ)

13. முடிதாங்கு மன்னவர் மூவரும் யாவரும் மூதுலகில்
கொடிதாங்கு கம்பர் முதலான வர்க்குக் குலம்விளங்கப்
படிதாங்கு மானியந் தந்ததுண் டோமிகப்
[பாவித்தென்றன்
குடிதாங்கி ஆதரித் தான்கச்சி ரங்கக் குலதுங்கனே.

(அ - ரை.) மன்னவர் மூவர் - சேர சோழ பாண்டியர். மானியம் - இறையிலி நிலம். (கூ)

14. பூமிபுகழ் கச்சிரெங்க புரவலநின்
றுட்டில்வரும் போதொன் றின்பால்
வாமமுறும் மயிலொன்றும் அன்னமொன்றும்
சிங்கமொன்றும் மானி ரண்டும்
மாமைமிகு சக்கரப்புள் ளிரண்டுடனே
கெண்டைரெண்டு வராலி ரண்டோ
டாமைரெண்டு நண்டிரண்டு கண்டுவந்தேன்
இப்புதுமை அறைவை தானே.

(அ - ரை.) போது ஒன்றின்பால் - தாமரை மலரைப் போன்ற முகத்தையுடைய ஒரு பெண்ணிடத்தில். வாமம் உறு - அழகு பொருந்திய. இதில் கூறப்பட்ட மயில், அன்னம், சிங்கம், மான், சக்கரப்புள், கெண்டை, வரால், ஆமை, நண்டு ஆகியவை

கள் மங்கையர்களுடைய சாயல், நடை, இடை, கண், கொங்கை, கண், கால் முதலியவைகட்கு உவமையாதலின் இவ்வாறு கூறினர். (௧௦)

15. நற்சங்கப் பயிர்விளங்கத் துர்ச்சங்கக்
களைபறித்து நன்றே செய்யும்
சற்சனர் விவேகியென்றும் புகழ்நிலவை
ஒத்ததென்றுந் தரணி மன்னன்
பொற்சிலையா மேருமுதல் இமசேது
பரியந்தம் புகழ்மை யோங்கும்
சொற்சிங்க வரதுங்கச் சச்சிரங்க
நின்புகழென் சொல்லற் பாற்றே.

(அ - ரை.) துர்ச்சங்கக் களை - தீயவர் கூட்டமாகிய களை. மேரு - மேருமலை. புகழ்மை யோங்கும் - புகழ் சென்றுலாவும். சொற்சிங்கம் - சிங்கத்தைப்போல் கம்பீரமாக அமைந்து பேச வலவன். (௧௧)

16. திருவிளங்கு மணிமார்பன் இருபதாம்
புயமலரைத் தியானித் தேத்தும்
தருவிளங்குங் கரன்முத்து விசயரங்கத்
தராதிபன்றன் தவத்தால் வந்தோன்
உருவிளங்குங் கீர்த்திபெற்ற உடையார்பா
ளையத்தமர்ந்தே உலகம் போற்றும்
மருவிளங்கு மலர்மார்பன் என்றகச்சி
ரங்கனெங்கள் வரிசை மாலே.

(அ - ரை.) திருவிளங்கும் மணிமார்பன் - திருமால். இருபதாம்புய மலர் - இரண்டு திருவடித் தாமரை மலர்கள். தருவிளங்கும் கரன் - கற்பகதருவைப்போல் விளங்கும் கையை உடையவன். (௧௨)

17. திக்கெட்டும் வளரும்வகை கொழுந்தோடிப்
படர்கீர்த்திச் செங்கோ லோச்சி

இக்கட்டு வந்தவர்கள் ரங்கவிலா
சக்கட்டில் இருந்தி சைக்கின்
நெற்கட்டும் பணக்கட்டும் மரகதத்தின்
கட்டுமணிக் கட்டு நேரே
பொற்கட்டுந் தந்தருள்வன் கச்சிரங்க
நாதனெனும் புனித வேளே.

(அ-ரை.) இக்கட்டு - துன்பம். அரங்கவிலாசக் கட்டு என்பது இரவலர் காணவருவோர் புலவர் முதலியோரைப் பார்த்து உரையாடும் மாளிகையின் ஓரிடம். (கஎ)

18. முத்தனையே கைக்கொண்ட மதனனெனத்
திருவுருவம் முழுதும் பெற்றே
கைத்தனுவைக் கொண்டரகு ராமனெனுங்
கச்சிரங்கக் காவ லோய்கேள்
நத்தனையே பொருவுமுத்து விசயரங்க
பூபால நரேந்தி ரன்றன்
எத்தனைநாள் தவமிருந்தான் நின்னைமக
வென்னப்பெற் றெடுக்கத் தானே.

(அ-ரை.) கைத்தனு - கைவில். நத்தனையே பொருவு - திருமாலையே ஒத்த. நரேந்திரன் - மக்களுக்குத் தலைவன். (கஅ)

19. சித்தநைந்தே நூறுமக மியற்றியவன்
மகவானுச் சிறந்தி ருப்பன்
இத்தனையேன் றென்னமுடி யாப்பானை
யத்தினையிங் கியைந்து நின்றாய்
சித்தமகிழ் கச்சிரங்க மகிபவுடை
யார்பானை யத்தைச் சேர
எத்தனையா கம்புரிந்தாய் இந்திரனுக்
கிந்திரனாய் இருக்கத் தானே.

(அ - ரை.) [illegible] - [illegible]. மகவான் - இந்திரன். [illegible] (கரு)

20. வழிவழியாய் வாழையடி வாழையாய்
வந்தவர்க்கு மகிமை யுண்டு
வழிவழியா வாராதா ரென்னசெல்வம்
இருந்தாலும் மதிப்புண் டேயோ
வழிவழியாய் வன்யகுலர் விளக்குமுந்து
விசயரங்க மகிப னுக்கு
வழிவழிசேர் கச்சிரங்க மகிபவனைக்
கிளையாமோ வழங்கத் தானே.

(அ - ரை.) வழிவழியாய் - பரம்பரையாய். மகிமை - [illegible] - பொருட்செல்வை கொடுக்க. (கசு)

வெண்பா

21. தேசமன்னர் வாசல் திருக்கதவுங் கச்சிரங்க
ராசமுகி றன்னரண்ம ணைக்கதவும்—காசினியில்
ஏத்தும் புலவரைக்கண் டெப்போ திறுமுறையே
சாத்துந் திறக்குமிது தான்.

(அ - ரை.) தேசமன்னர் - நாட்டிலுள்ள பிற அரசர்கள். தேசமன்னர் வாசல் திருக்கதவு சாத்தும்; கச்சி ரங்கராசன் அரண்மனைக் கதவு திறக்கும் என்று கூட்டுக. (கஎ)

22. கச்சிரங்க சாமிப்பேர்க் காலாட்கள் தோழனெனும்
வச்சிரதே கம்படைத்த வள்ளலே—இச்செகத்தில்
சந்ததிபெற் றேங்கித் தரணிச்செங் கோலோச்சித்
சந்ததமும் வாழ்க தழைத்து

(அ - ரை.) சந்ததி - வழிமுறை. தரணிச் செங்கோல் - [illegible] அரசாட்சி. சந்ததமும் - எப்பொழுதும். (கஅ)

23. எல்லா அறமும் இயற்றிப் புகழ்கொண்டு
வல்லாண்மை மிக்குற்ற மன்னவனே—பல்லூழி

கச்சிரங்க சாமியெனுங் காலாட்கள் தோழாநீ
வச்சிரதே கம்பெற்று வாழ்.

(அ - ரை.) வல்லாண்மை - பேராற்றல். பல்லூழி - பல காலம். (கக)

24. ஓர்சாம மன்றிமறு சாமத் துதவினனே
பேர்மேவு கன்னனுனைப் போலவே—சீர்மேவு
கச்சிரங்க சாமியெனுங் காலாட்கள் தோழாநீ
வச்சிரதே கம்பெற்று வாழ்.

(அ - ரை.) கன்னன் ஒருசாமப் பொழுதளவு மட்டுமே கொடை கொடுத்து அதற்குமேல் நிறுத்திவிட்டுப் பிற காரியங்களில் ஈடுபட்டு விடுவான் என்பர். (உ0)

[மேற்படி பெருநிலக் கிழாரின் மகனான பெரியசாமி யென்னும் முத்து விசயரங்கப்ப காலாட்கள் தோழர் என்பவர் மீது பாடியன.]

பதினன்குசீ ராசிரிய விருத்தம்

25. தங்கமக மேருவோ மன்மத கிரீடமோ
சக்ரவா கத்தி னிணையோ
தமனியக் கலசமோ கூவிளங் கனியதோ
தண்ணெனுங் குமிழின் இணையோ
துங்கமத யானையின் கும்பமோ மாதுளம்
துய்யபழ மோப ரணியோ
சுத்தநவ ரத்நவொளிர் கந்துகத் தினையதோ
சோடான இளநீர் களோ
பொங்கமிர்த கும்பமோ சம்பிர மோகளப
புளகமணி மீறு செண்டோ
பூவின்றி மீதெழுங் கொடியொன்றின் மேல்ரெண்டு
பூவென் றரும்பி நிற்கும்

செங்கமல மோவெனும் கொங்கைமங் கையர்மதன
　　தீரரண சூரா கரா
　செயகச்சி வளர்முத்து விசயரங் கப்ரபல
　　சிம்மாச னுதி பதியே.

(அ - ரை.) சங்கமக மேருவோ - தங்கத்தினுலாகிய மகா மேருமலையோ. சக்ரவாகம் - சக்ரவாகப் பறவை. தமனியக் கலசம் - பொற்குடம். கூவிளங்கனி - வில்வப்பழம். குமிழ் - நீர்க் குமிழி. கும்பம் - மத்தளம். பரணி - சாந்துச் செப்பு. கந்துகத் திணை - பந்தின் இரட்டை. சோடான - இரட்டையான. சம்பீரம் - எலுமிச்சம்பழம். (உக)

26. உன்பிதாக் கச்சிரங் கேந்த்ரனே தயரதன்
　　உனதுதாய் மார்மூ வரும்
　உரிமைசேர்ந் திடுகின்ற கௌசலைகை கைசுமித்
　　திரையாம் உனக்கு வாய்த்த

தம்பிமார் மூவர்பர தசத்துருக் கனிலக்கு
　　மன்றன்னை நிகரா குவர்
　சனகரா சேந்திரன் உனதுமா மன்விசய
　　ஒப்பிலா மழவ ராயன்

அன்பினில் மிகுந்தேவி சானகி யாகுமுன்
　　லவனுனது செல்வ னுவன்
　அருகுளோர் அங்கதன் சாம்பவன் சுக்ரீவன்
　　அநுமாரு மாத லாலே

தென்புநிறை ராமாவ தாரநீ மகுடாபி
　　டேகபதி என்ன வந்தாய்
　செயகச்சி வளர்முத்து விசயரங் கப்ரபல
　　சிம்மாச னுதி பதியே.

(அ - ரை.) தயரதன் - தசரதச் சக்கரவர்த்தி. இச்செய்யுளில் செய்துள்ள இராமாயண உருவகம் புலவருடைய அறிவாற்றலை நன்கு புலப்படுத்துகிறது. (உ௨)

இருபத்தெண்சீ ராசிரிய விருத்தம்

27. பங்கய அரும்பிணை இலாதுபங் கப்படப்
பம்பரங் கண்டு சுழலப்
பைம்பொனின் கும்பம் பயப்படப் பூஞ்சிமிழ்
பாரினிற் கடைபட் டிடப்
பசியதெங் கின்குரும் பைகள்வெட்கி யுதிரவே
பாரியிள நீர்வெட் டுணப்
பந்துநிகர் அன்றியடி பிடிபடப் புற்புதம்
பருமிதங் கண்டு மறையத்

தங்கமக மேருமுக நோக்கிவளை யச்சூது
தாய்வென்றி யாரும் வெட்டத்
தாளந் தகாதெனத் தட்டமணி முடியிதின்
சமதையன் றெனவி லைபடச்
சக்ரவா ளம்பொருந் தாதுசிறை படவானை
தன்கொம்ப டாதொ டிபடத்
தான்வீறு கொண்டுமின் னிடைவருந் திப்புனுகு
சந்தங் கமழ்ந்த வாடை

எங்கணும் பரிமளித் திடமார்பி னிடமெலாம்
இழைபுகா மற்ப ரந்தே
இடங்கொண் டடர்ந்தே திரண்டுவிம் மிப்படர்ந்
தெழில்தே மலைப்பெற் றுமே
இணையே தெனப்புகல வண்ணுந் தசைந்தே
எதிர்த்தவர்க ளைக்குத் தியே
இறுமாந் திருந்தகொங் கையின்மங்கை மாரெலாம்
ஏத்தியுனை யேயி றைஞ்சி

செங்கமல முகநோக்கி எங்களைச் சார்ந்துநின்
திண்புயத் தால்த ழுவியே

தீரரண சூரகெம் பீரவொய் யாரமிகு
திறமிக்க மதனன் மார்க்கச்
செயகொக்கொ கப்படிக் கெம்மையா ளென்றுமே
சேவித்து நிற்கி றார்பார்
செயகச்சி வளர்முத்து விசயரங் கப்ரபல
சிம்மாச னாதி பதியே.

(அ - ரை.) பங்கய அரும்ப - தாமரை மொட்டு. இளை யிலாது - தப்பில்லாமல். பங்கப்பட - குற்றத்தையடைய. பாரி விசாரி - பெருந்த நிசாரி. பற்பநம் - கீர்த்துப்பழி. சமதை - ஒப்பு. சக்ரவாளப் பாறை தொடர்ந்தயில் ஒருவடையது. அந் தரைய பாறை கொட்டைக்குப் பொருதுச்சிறையிடைப்பட்டதாக இதுபொருள் சொல்லக்கூடாது பாடிய புலவரின் அறிவுநலம் விளக்கப்படுவது. (உக)

28\. முப்பத்து முக்கோடி சாமிகட் கெல்லாம்
முதற்சாமி யான சாமி
முனிக்குமெனக் குங்குரு சாமிதந் தைக்கு
மொழிசாமி நாத சாமி
முத்துக்கு மாரசா மியினுபா சனைபெற்ற
மொழிதமிழ் தருஞ்சா மியின்
முக்குறுணி விக்கிநேஸ் வரர்நித் தனஞ்செய
மொழிந்திட்ட வம்ச திலகன்

மெய்ப்ரப லவம்ப லத்தாடு வார்வழி
விளங்குறு தமிழ்ச்சா மியாம்
மெய்ச்சாமி ராமசா மிக்கதையினைக்கம்ப
விச்சித்ர மதுசொல் நிபுணன்
மெச்சுபச் சைக்கந்த சாமியெம கண்டம்
விளம்பிட்ட வம்சம் வந்து
மேவிடும் வாலைசரஸ் வதிசுப்ர மணியகவி
வேந்தன்வர விட்ட நிருபம்

துப்பன நிறச்சாமி விக்ரகச் சாமிபா
    வைச்சாமி துய்ய சாமி
  தோற்றுகும் பச்சாமி சந்தனச் சாமிமருள்
    தோய்கறுப் பண்ண சாமி
  சொற்சாமி தாமெலாம் வாங்கிடுஞ் சாமிமுன்
    தோன்றிமொழி யாத சாமி
  சொற்பே சிடுஞ்சாமி யாம்பெரிய சாமிதுரை
    துயமகிழ் கொண்டு காண்க

இப்புவியி னிற்புகழ்மை யாற்பெரிய சாமிநன்
    கெய்தலால் நல்ல சாமி
  எங்கள்சா மிக்கருணை யானசெங் கோற்சாமி
    யாவரும் இறைஞ்சு சாமி
  இம்பர்மகிழ் நின்சமுகம் வந்திடுஞ் சீட்டுக்
    கவிக்குநின் மனமி சைந்தே
  ஏறுபரி வாகனம் சதமெனும் பொன்னிவைகள்
    ஈந்தனுப் பிடவேண் டுமே.

(அ-ரை.) முக்குறுணி விக்னேசுவரர் சித்தனைச்செய மொழிந்திட்டவம்ச திலகன்:- இப்புலவருடைய முன்னோர்களில் ஒருவர் வாக்குப் பலிதமுள்ளவராக இருந்தார். அவர் முக்குறுணி விநாயகர் திருக்கூத்தாடியருள வேண்டுமென்று பாட அவ்விநாயகக் கடவுள் அவ்வாறே செய்தருளினர். அப்புலவருடைய வழிமுறையில் தோன்றியபடியால் தம்மை வம்ச திலகன் என்றார். துப்பன நிறச்சாமி - பவழம்போன்ற நிறத்தையுடைய சாமி. (உஅ)

[மதனத்தூரில் உணவிடும் அறச்சாலை கட்டி வைத்தபொழுது கச்சிரங்க துரையின்மீது பாடியது.]

29. திருமால்மன் உண்ணுமல் சிவனுநஞ்சைத் தின்னுமல்
    செங்கமலப் பொருட்டு வேதன்
  உருமாறி அன்னமெனப் பறந்திடாமல் உயர்மறைபோர்
    வடிவின்வந்தே அன்னம் உண்ணக்

கருமானேர் கரதலனுங் கச்சிரங்கக் காலாட்கள்
தோழமன்னன் கருத்து வந்தே
வருமாம தனத்தூரில் அன்னசத்ரம் வைத்திட்டார்
எவரும்வந்து துய்த்திட் டாரே.

(அ - ரை.) *திருமால் மண் உண்ணுமல்: உகமுடிவில் திருமால் உலகம் முழுவதையும் விழுங்குகிறுர் என்பது நூன் முடிபு. செங்கமலப் பொகுட்டு வேதன் - தாமரைப் பூவில் எழுந்தருளிய நான்முகன். உருமாறி அன்னமெனப் பறந்திடாமல் - அடிமுடி தேடத் தொடங்கிய காலத்தில் நான்முகன் தன்னுடைய உண்மை வடிவம் மாறி அன்னப் பறவையாக விண்ணிற் பறந்து சென்றுன். அன்னம் என்பதற்குச் சோறு எனவும் பொருள் உண்மையால் நான்முகன் சோறு என்றுசொல்லி அலேயாமல் என்னும் மறுபொருளுந் தொனிக்கிறது. கருமால்நேர் - கரிய திருமாலேயொத்த. துய்த்திட்டார் - உணவுகொண்டார்.* (உ௯)

[ஆநந்தபாடி என்னும் ஊரில் அறச்சாலே கட்டி வைத்தபோது பாடியது.]

30. ஆனந்த பாடியெனக் காசிக்குப்பேர் ஆதலினுல்
அதிலிறைவ ராஜே ரெல்லாம்
தானந்த வங்கள்செய்ய வருவார்போவார் தங்குதற்குச்
சத்திரங்கள் சமைப்பார் போல
மேனந்த வொன்றனந்த மாகுமென்று மேலாமிவ்
வானந்த பாடி தன்னில்
தானந்தக் கச்சிக்கல் யாணரங்கச் சமத்தான
பதிசத்ரம் சமைத்திட் டாரே.

(அ - ரை.) *சமைப்பார் - செய்வார். ஒன்று அனந்தம் ஆகும் என்று - ஒன்று கணக்கற்றதாக வளரும் என்று. சத்ரம் - அறச்சாலே. சமைத்திட்டார் - அமைத்திட்டார்.* (௩௰)

[வேட்டையாடியபோது பாடியது.]

31. நாட்டரசர் பலரும்வந்தே இதனேக்கண் டேராமன்முதற்
செய்தவர்கள் பலர்க ளேனும்

காட்டரசர் செயும்வேட்டை தனக்குமன்னுங் கட்டிநிக
ராவாரோ வெனவி ளம்ப
வேட்டரசர் வலைகட்டி ஞமலிசூழ எங்கள்கச்சிக்
கல்யாண ரெங்க வேந்தன்
காட்டரச புலிமுதலாம் விலங்கையெல்லாம் கலைத்திட்டார்
வெட்டிவெட்டித் தொலைத்திட் டாரே.

(அ - ரை.) நாட்டரசர் - நாட்டில் உள்ள அரசர்கள். ஞமலிசூழ - நாய்கள் சூழ. காட்டு அரச புலி முதலாம்-காட்டுக்கு அரசாக இருக்கிற புலி முதலிய. (உஎ)

## ௬. கனகசபைக் கவிராயர்

[இவர் உடையார்பாளையம் பெருநிலக்கிழாரின் அவைக்களப் புலவராக இருந்த வாலசரசுவதி சுப்பிரமணியக்கவிராயருடைய மகன். தம்முடைய தந்தையைப் போலவே இவருஞ் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். இவர் இயற்றிய தனிப்பாடல்கள் கிடைக்கின்றனவே யன்றி நூல்கள் இயற்றிய விவரந் தெரியவில்லை.]

[உடையார் பாளையம் பெருநிலக்கிழாராக இருந்த கச்சிக்கலியாணரங்கக் காலாட்கள் தோழ உடையார் என்னும் பெருநிலக் கிழார்மீது பாடியன.]

32. சித்திநற் புத்திமிகு பத்திபத் தர்க்களித்
திடுமும்ம தத்த யானை
திகழ்வத்ர முளகர்த்த னுக்கிளைய முத்தையன்
திகழ்கருணை கூர்வாக் கியன்
செந்தமி ழெனுங்கட லினைச்சுவைத் துப்புசித்
தேப்பமிடு காள மேகம்
சீலமொடு மகிமைபெறு விரசை வத்தின்சி
காமணியெனு ஞ்சி ரேட்டன்

காளமேகம் - சூல்கொண்ட கரிய முகில். இகலான கவிஞருக்கு - பகைவர்களான புலவர்கட்கு. இன்கவி - இனிய செய்யுட்கள். ஊர்த்துவசம் - வெற்றிக்கொடி. ஒட்டலர்கள் - பகைவர்கள். மீறு அடக்கும் - ஆணவத்தை யடக்குகிற. அரி - சிங்கம். விளம்பரிய நற்கீர்த்தன் - சொல்லுதற்கரிய கீர்த்தியை உடையவன். சகுண சற்கீர்த்தன் - நற்குணங்களெல்லாம் சேர்த்துவைக்கப்பட்ட இடம் போன்றவன். கட்டார்க்காளன் - பிறருடைய துன்பத்தைப் போக்குபவன். பொன் விக்ரகன் - பொன்னைக் கொடையாக வழங்குபவன். வில்லாளர் - வில்லாண்மை யுடையவர். இப்பூ - இப்பூவுலகம். உகந்து - மகிழ்ந்து. பொறாமை - பொறுமை. உன் இணை - உனக்கு ஒப்பு. அனந்தன் - ஆதிசேடன். சோமன் - வேட்டி. (௧)

33. வாளைக் குவளையை ஒப்பாங்கண் மாதர் மதன்பரமன்
தாளைத் தொழும்வில் விசயன் தமிழ்வலர் தங்கட்கன்ன
நாளைக்கின் றைக்கென்று சொல்லாம லேயெந்த
[நாளும்பசி
வேளைக் குதவுவன் கல்யாண ரெங்கநல் விற்பன்னனே.

(அ-ரை.) வாளை - வாளாயுதத்தை. குவளையை - குவளை மலரை. வில்விசயன் - வில்விசயனைப் போன்றவன். தமிழ்வலர் - தமிழில் வல்லவர். (௨)

34. அவ்வேளை யொத்த நிசவாசன் கச்சிக்கல் யாணரெங்க
செவ்வே ளயிற்கர வீரியன் வாக்கில் செயம்படைத்தான்
இவ்வேளை மற்றொரு வேளையின் றுளையென் றுமலுந்தான்
எவ்வேளை யும்வந்து கேட்பதை யீவன் இரவலர்க்கே.

(அ-ரை) அவ்வேளை - அந்தக் காமனை. அயிற்கர வீரியன் - கையில் வேலைப்பிடித்த வீரமுடையவன். எவ்வேளையும் - எந்தச் சமயத்திலும். (௩)

35. நந்தார் கரத்தன்னால் சோதரி யான நறுமலர்ப்பூங்
கொந்தார் குழலியின் மன்னாரு ளாலிக் குவலயத்தே
வந்தா தரிப்பன் யுவரெங்க சாமி மனமகிழச்
சிந்தா மணிக்கச்சிக் கல்யாண ரெங்க சிகாமணியே.

(அ-ரை.) ஏந்தாய் காத்தருள்வாய் - எம்பிழையைக் கையிலேவாங்கி ஒப்புக்கொள்வாய். சோதரி - உமையவள். (ச)

36. ஈட்டும் பொருள்கள் இரவலர்க் காமென எண்ணிநிலை
நாட்டும் புகழ்ரங்கன் கச்சி புயரங்க ராசனெனும்
பாட்டளி போலுநற் பாவாணருக்குப் பரிந்தனந்தை
ஊட்டுந் துரைகச்சிக் கல்யாண ரெங்கநல் லுத்தமனே.

(அ-ரை.) பரிந்து அனந்தத்தை - விரும்பிச் சோற்றினை. (ரு)

37. ஆரா கிழுமுனைப் போலே கொடுப்பவ ரம்புவியில்
நேராரு மில்லை தருமசீல நிருபனெனும்
பாராளு மன்னர் சபாசென மெச்சும் பராக்ரமனும்
தீர செயகச்சிக் கல்யாண ரெங்க சிகாமணியே.

(அ-ரை.) தருமசீல நிருபன் - அறத்தையே உடைமையாகப் படைத்த அரசன். பராக்கிரமன் - பேராற்றலுடையவன். (சு)

38. எந்தன முந்தனந் தந்தன மாதலின் ஈரப்பன்னீர்
சந்தனம் பூசித் தழுவி யணையச் சமயமென்றே
வந்தனஞ் செய்தனம் வந்தே யணைய மருவிடுவாய்
தந்தனஞ் செய்யலை கல்யாண ரெங்க தயாநிதியே.

(அ-ரை.) எம் தனமும் தனம் - எங்களுடைய கொங்கைகளும் தனம் என்னும் பெயரையுடையவாகலின். வந்தனம் செய்தனம் - வந்து வணக்கம் செய்தோம். தந்தனம் - ஏமாற்று வித்தை. (எ)

39. வாரா தவரெவர் நின்பாற் கவிவலர் வந்துன்முகம்
பாரா தவரெவர் பாடா தவரெவர் நின்புகழை
சேரா தவரெவர் நின்னன்பு கன்னன் எனவுதித்த
தாராள னுங்கச்சிக் கல்யாண ரங்க தயாநிதியே.

(அ-ரை.) சேராதவர் எவர் நின் அன்பு - நின் அன்பினைக் கூடாதவர் எவர். தாராளன் - விரிந்த மனப்பான்மையுடையவன். (அ)

40\. திருமுட்ட மேவி வளர்பூ வராகர் திருவருளை
ஒருமிக்க வேபெற்றிங் கிந்திரன் போல உயர்ந்தசெல்வம்
தருமொக்க வேபெற்று வாழ்வோய்நின் தோளைத்
[தழுவுறுவேன்
ஒருமுத்தந் தாகச்சிக் கல்யாண ரெங்கநல் லுத்தமனே.

(அ - ரை.) திருமுட்டம்-திருமால் திருப்பதிகளில் ஒன்று. பூவராகர் - திருமால். (கூ)

41\. சுந்தர மேவு மிளமைப் பருவந் தொலையுமுன்னே
கந்தனைப் போலக் கலவிகள் செய்து களிப்புறவே
சிந்தனை செய்தனள் என்றோ தவக்கமெற் சேர்ந்தணை
[வாய்
சுந்தர மாங்கச்சிக் கல்யாண ரெங்க சுகோதயனே.

(அ - ரை.) கந்தன் - முருகன். கலவிகள் - இன்பவிளையாடல்கள். என்றோ தவக்கம்-காலம் தாழ்த்தது என்? சுகோதயன் - இன்பத் தோற்றத்திற்கு இருப்பிடமாக இருப்பவன். (௪0)

42\. பாட்டுக்குப் பாத்திரம் நீயன்றி யாருளர் பாரின்கண்ணே
மோட்டுக் குலாமரைப் பாடியென் னுமுத் துண்டமுண்டா
நாட்டுக்குள் மானிய முண்டா விலைக்குச் கண் ணும்பு
[முண்டா
நீட்டுப் புகழ்க்கச்சிக் கல்யாண ரெங்கநன் வீதியனே.

(அ - ரை.) பாட்டுக்குப் பாத்திரம் - பாடல்பெறுதற்கு உரியவன். மோட்டுக்குலாமர் - கீழ்மக்களிற் பெரியவர்களாக இருப்பவர்கள். மானியம் - இறையிலிநிலம். (௪௧)

[தீபாவளிக்கு வேட்டி கொடுத்ததைக் குறித்துப் பாடியது.]

43\. கொண்டலெனத் தருகரத்நான் கச்சிரெங்க
ராசனெனுங் குபேரன் முன்னுள்
எண்டிசையோர் கொண்டாடுந் தீபாவ
ளிக்குமுனம் என்பி தாவாம்

கொண்டமிழ்ப்பா வலன்வாலே சரஸ்வதிக்கோர்
விராகன்வத்ரம் தந்தான் இந்தான்
பண்டிலகயில் துண்டேவக்கு வந்ததென்கல்
யாணாரேங்க பண்புள் ளோனே.

(அ-ரை.) கொண்டல் - முகில். தரு - கற்பகதரு. ஓர் விராகன் வத்ரம் - மூன்றரை ரூபா பெறுமானமுள்ள வேட்டி. தந்தி - மேலாடை. (௪௨)

[இராமேசுவரம் போகச் செலவுக்குக் கொடுத்த போது பாடியது.]

44. தேனூறு மாலைபுனை செவ்வே ளென்னும்
செயகச்சிக் கல்யாண ரேங்க மன்னு
நானூறி லாதிரா மேச்சு ரப்பேர்
நற்பதிக்கே கும்படிக்குச் செலவுக் குப்போன்
நானூறு கேட்டதற்குக் கவிகூ ரேய்தி
நானூறு தருவனென நல்க லாலே
மேனூறு பருவமுமுன் புகழ்த மைத்து
மேனூறு விருதுகொடு விளங்கற் பாற்றே.

(அ-ரை.) ஊறு இலாது - இடையூறில்லாமல். நான் ஆறு தருவன்என - நான் ஆறு ரூபாய் கொடுப்பேன் என்று. ஆறுபருவம் - ஆறுயாண்டு. (௪௩)

[கச்சியுவரெங்க துரையின்மீது பாடியன.]

45. சித்திபதி புத்திபதி நித்யபதி கணபதித்
தேவன் சகோத ரபதி
ஸ்திதிமதி கொடுத்திடுந் திருவே ரகப்பதிச்
செல்வனருள் பெறுச ரஸ்பதி
செந்தமிழ் இலக்கிய இலக்கணம் எனச்சொலும்
சிந்துபதி வீர சைவத்

திணபதி எனச்சொலுங் கனகசபை நாவலன்
தேர்ந்தெழுதி விட்ட நிருபம்
சத்ரபதி புத்ரபதி சித்ரபதி மித்ரபதி
சாஸ்த்ரபதி நேத்ர பதியாம்
சந்தான பதியுலகு வந்தாளு நிதிபதி
தருந்தான பதியா கிய
சக்ரபதி யானபோன் விக்ரகப் பதியாம்
தராபதி சிமாச னபதி
சங்கநிதி பதுமநிதி பெற்றபதி ரதபதிகெ
சாதிபதி சேனு பதி
நத்தும்பிர சித்தபதி வித்வபதி சீபதியை
நாடுறும் பிரகஸ் பதி
நரபதிகிர் பாபதி குலாதிபதி சேதுபதி
ராசர்துதி செய்தி டுபதி
நற்பெருமை மிக்கவளர் மேருவிற் கொடிகட்டு
ராச்யசாம் ராச்ய பதியாம்
நன்றிமகிழ் கின்றபதி கச்சியுவ ரங்கமகு
டாதிபதி நன்கு காண்க
சித்தசன் எனத்திகழ் இலட்சண மிருந்திடு
திறச்சிங்க பதியா கிய
சீர்பெற்ற நின்பாட்ட னர்பெற்ற புகழலால்
செப்பவே ருெருவ ருளரோ
செகமேலா மெச்சுநின் சமுகமது வந்திடுஞ்
சீட்டுக் கவிக்கி சைந்து
சீரித் தலத்தின் புராணமதை அச்சிடச்
சிந்தைமகிழ் தந்தருள் வையே.

(அ - ரை) சித்திபதி - காரியசித்திக்குத் தலைவன். புத்திபதி - அறிவுக்குத் தலைவன். நித்யபதி - என்றுந் தலைவனாக

உள்ளிமான் எனக்கருதிச் சீமான்பூ
மானெனவே உறவு கொண்டு
துள்ளிமான் சவரிமான் கடம்பைமான்
புள்ளிமான் சும்மா நல்லூறும்.

(அ-ரை.) வள்ளிமான் - வள்ளியம்மை. குஞ்சரிமான் - தெய்வயானை. சேமான் - முருகன். மான்மதம் - கஸ்தூரி. சும்மா நல்லூறும் - சும்மா வந்துசேரும். (கள)

[வேடிக்கைப்பாவைகள் வந்தபோது பாடியது.]

49. உம்பர்பதி அவையின்கண் நடனமிடும்
அரம்பையர்கள் உறவு பெற்றே
தம்பதர்பூ தலம்படியா தவர்விழிகள்
இமையுறு தாமம் வாடா(து)
இம்பரெலாம் புகழ்ந்தேத்துங் கச்சியுவ
ரங்கமன்னன் இந்தி ரன்றன்
தம்பிசபை எனக்கருதி வந்தவெனப்
பலபாவை சார்ந்த வன்றே.

(அ-ரை.) உம்பர்பதி அவையின்கண் - தேவேந்திரனது அவையினிடத்திலே. அலர்விழிகள் இமையுறு - மலரைப்போன்ற விழிகள் இமைக்காமல். தாமம் வாடாது - மாலை வாடாமல். இம்பர் எலாம் - இவ்வுலகத்தின ரெல்லாம். கச்சியுவரங்க மன்னன் அவையை இந்திரன் தம்பியின் அவையெனஎண்ணி வந்தன என்க. (கஅ)

[ஒட்டகம் வாங்கினபோது பாடியது.]

50. செழித்திடும் ஒட்ட கந்தான் செழுவளம் மிகுந்த நீதி
பழுத்துறு சிந்தைக் கச்சி யுவரங்க பார்த்தி பன்போல்
வழுத்துறக் காண்கி லாது வானுல குளரோ என்னக்
கழுத்தினை நீட்டி யெட்டிப் பார்ப்பது கடுக்குமன்றே.

(அ-ரை.) செழுவளம் - பெருஞ்செல்வம். வழுத்துறக் காண்கிலாது - போற்றுவதைப் பார்க்க முடியாமல். கடுக்கும் - ஒக்கும். (கக)

[தீபாவளிக்கு உசாவச்சென்றபோது பாடியது.]

51. சங்கநிதி பதுமநிதி முதலான செல்வந்
தழைத்தவுடை யார்பா ரோயச்
சமத்தானம் என்னும்மக மேருமலை வாசமாச்
சலநிதியை உண்டு வந்து
மங்களம் தாயருட் சூல்கொண்டு செல்வார்க்கு
மற்றையர்க் குங்கன கமா
மழைபொழியு நாளின்மிடி யாங்கோடையி னுலே
மறைப்புற்ற பேர்க ளுக்கு
எங்கணும் இளைப்பறக் கருணைப் பெருந்தகை
எனுஞ்சூறை மாரு தத்தால்
எனும்எனும் என்றுபரி கோடான கோடியா
ஈந்தே புகழ்க்கொடி நிறீஇ
வங்காள முதல்மெச்சு கச்சியுவ ரெங்கனென
வாழ்வுறுங் கனக முகிலே
மகிழ்செய்கங் காஸ்நானம் ஆனதா என்றென்றும்
வாழிமிக வாழி வாழி.

(அ - ரை.) சலநிதி - கடல். மிடி - வறுமை. சூறைமாருதம் - சூறைக்காற்று. எனும் எனும் - இனும் இனும். பரி - குதிரைகள். கங்காஸ்நானம் ஆனதா - தீபாவளி எண்ணெய் முழுக்கின்பின் நண்பர்களைப் பார்க்கச் செல்வோர் இவ்வாறு கேட்டு மகிழ்வது மரபு. (உ0)

[பொங்கல் முடிந்தபின் பார்க்கச் சென்றபோது பாடியன.]

வெண்பா

52. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுத லென்றுலிக்குங் கற்பகமே—சேமமிகு
பூமிபுகழ் கச்சி யுவரங்க பூபால
சாமியுன்றன் பால்பொங்கிற் று.

(அ - ரை.) "தாமின்புறுவ துலகின்புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்" என்பது திருக்குறள். சேமம் - நன்மை. பொங்கல் உணவைச் செல்வோர் "பால் பொங்கிற்றா?" என்று கேட்டல் மரபு. (உக)

விருத்தம்

53. சண்முகக் குமரகுரு பரன்இரு சரோருகத்
தாள்என்னும் முடிபு னைந்தே
சாஸ்திரத் துறைதரும் தேற்றமுங் கல்வியும்
தருகாது கண்ண தாகி
மண்முகம் புகழுறும் அமைச்சர்பிர தானியிவர்
மருவுற்ற தோள்க ளாகி
மருமம்யா வுந்தெரியு நெஞ்சுமா னேசர்சே
வகர் வயவர் கவசமாகித்
தண்முகத் தோடுவந் தவர்தமக் கிருநிதி
தருங்குணஞ் செங்கோ லதாய்த்
தன்குடி எனக்குடி களைப்புரந் தருள்செயும்
தாளாண்மை தாள தாகிப்
பண்முகத் திவையையுடை யார்பா லையத்தில்
படைத்தர சாங்க யோகப்
பாலனுங் கச்சியுவ ரங்கமக ராசநின்
பால்பொங்கல் மிகவா ழியே.

(அ - ரை.) சரோருகத்தாள் - தாமரை மலர்போன்ற திருவடி. மண்முகம் - உலகத்திடம். வயவர் - வீரர். தண்முகத் தோடு - அருள் பொருந்திய முகத்தோடு. உலந்தவர் - வறுமை யால் வாடியவர். தாளாண்மை - முயற்சி. தாள் - கால். பண் முகத்து - பண்புடைமையில். (உஉ)

[புகழைப் பாடியன.]

54. தன்னையெனுஞ் சீதாச மேதன்முன்
னும்பின்னும் வளர் நாமத்தோ

டுள்ளவர்தம் புகழெலா மொருங்கிரா
மாயனைமா யுற்ற தேபோல்
கள்ளவிழும் வாகையணி கச்சியுவ
ரங்கமன்னு காசி னிக்குள்
பிள்ளைபிள்ளை தலைமுறைக்கு நின்புகழே
நிற்கப்பேர் பெற்ரு யன்றே

(அ - ரை.) தள்ளை - தாய். இராமன் பெருமையால் புகழ் முன்னும் பின்னும் நின்றாற்போல் நின்னால் புகழ் நிலைபெறு மென்றார். (௨௩)

55. அட்டதிசை பரவுகச்சி யுவரெங் கேந்திரா
வறுநூற்று நாற்பத்தைந் தாண்டு முன்னம்
பட்டமுட னுண்டமு தாதை யாருட்
பாரதனில் நின்போலும் பண்பார் யாரே
துட்டர்தமைக் கட்டிமிகச் சயமே கட்டித்
தொல்விருதுத் துசங்கட்டித் துன்னர் தம்மை
வெட்டுபுகழ்க் கொடிபடர்ந்து மேருக் கப்பால்
மேலவர்க்குஞ் சட்டமென மேவு மன்றே.

(அ - ரை.) அட்ட திசைபரவு - எட்டுத் திக்கிலுள்ளோர்களும் போற்றும். துட்டர்தமைக்கட்டி - தீயவர்களை அடக்கி. விருதுத்துசம் கட்டி - வெற்றிக்கொடி கட்டி. துன்னர் - பகைவர். (௨௪)

[குண்டலம் போட்டபொழுது பாடியன.]

56. குண்டலத்தில் இந்திரன்கற் பகத்தினிடை வரங்கலன்றிக்
கோக்கன் னன்பால்
குண்டலத்தை வாங்கினுன் கொடுத்தானென் றிடுபுகழைக்
கொண்ட துண்டோ
குண்டலமா வுற்றோர்க்குக் கொண்டலெனத் தரும்விருது
கொண்டு ளோய்பொற்

குண்டலந்தந் தனைகச்சி யுவரங்க மன்னபுகழ்
குலவு வாயே.

(அ - ரை.) குண்டலத்தில் இந்திரன் - விண்ணில் உள்ள இந்திரன். கோ கன்னன்பால் - அரசனாகிய கன்னனிடத்தில். கொடுத்தான் என்றிடுபுகழைக் கொண்டதுண்டோ - இந்திரன் யாவருக்கேனும் ஒன்றினைக் கொடுத்தான் என்று சொல்லப் பெறுகிற புகழைப்பெற்றதுண்டோ? குண்டு அலமா - ஆழ்ந்த துன்பமாக. கொண்டல் - முகில். குலவுவாய் - விளங்குவாய். (உரு).

57. விடையேறும் பரமனுக்குக் கோபுரமும்
படித்துறையும் விளங்கக் கட்டும்
படையாரும் முன்கச்சி யுவரங்க
மன்னனெனும் பாட்டன் போல
இடையாகு மன்னவர்கள் என்னபுக
ழினைப்பெற்றார் இலங்கும் வண்ணம்
அடையாளக் குண்டலந்தந் தனைகச்சி
யுவரங்க அரச ரேறே.

(அ - ரை.) இடையாகும் மன்னர்கள் - இடைக் காலத்திலே வந்த அரசர்கள். அடையாளக் குண்டலம் - அடையாளமாக விளங்குங் குண்டலம். (உசா).

[கொடையை வியந்துபாடியது.]

58. கோடி கோடி உலோபிய ருக்கெலாம்
கொடுத்துக் காட்டுங் குணப்பெருங் குன்றனுன்
ஈடில் கச்சி யுவரங்க மன்னன்றன்
ஏத்தி டுங்கவி வாணருக் கீவது
கோடி கோடி எனச்சொல வேபல
கோடி கோடி கொடுக்குந் தகைமையால்
நாடி லிக்கொடைக் கீடென வேஎந்த
நாட்டி லுண்டென நன்கு மதிப்பரே.

(அ - ரை.) கோடி கோடி உலோபியருக்கெலாம் - பல உலோபியர்கட்கு எல்லாம். கோடி கோடி - புத்தாடைகள் பல. (உஎ)

[அரங்கவிலாசம் என்னும் கலியாணமால் மண்டபத்தைப் புகழ்ந்து பாடியன.]

59. திருக்கிளரும் அரண்மனைமுப் பத்திரண்டு
கட்டழகுந் திரண்டொ ருங்கே
இருக்குதலால் அரங்கவிலா சப்பெயர்க்கல்
யாணமால் எழிலைக் காண
உருக்குமணி யொடுகண்ணன் துவாரகையை
விட்டிங்கே உறைத லாலே
நெருக்குறுகோ வர்த்தனத்தின் குடையெனப்பொற்
குடையொன்று நேர்ந்த தன்றே.

(அ - ரை.) திருக்கிளரும் - அழகு மிகுந்து விளங்கும். கோவர்த்தனத்தின் குடையென - கோவர்த்தன குடையைப் போல. (உஅ)

60. இந்திரன்தன் சபையான சுதன்மையுமந்
தரத்தொளிப்ப ஈசன் தோழன்
மந்திரிதன் சபையான அளகைநகர்
வடக்கென்னும் மாநாட் டோடச்
செந்திருவாழ் கச்சியுவ ரங்கமன்னன்
புதுப்பித்துச் சிறப்ப மைந்த
சுந்தரஞ்சேர் கல்யாண மாலினுக்கு
நேரேவற்றைச் சொல்ல லாமே.

(அ - ரை.) இந்திரனுடைய அவையின் பெயர் சுதன்மை. ஈசன் தோழன்மந்திரி - குபேரன். (உகூ)

61. ஆயிரங்கண் ணுடையுற்றே அயிராவ
தத்தினையேற் றண்டங் காத்து

மீயுயருஞ் சுதன்மைத்தாய்ப் புலவர்புகழ்
பெருமைத்தாய் விபுலை மேய்ப்ப
மேயசயந் தனைப்பெற்றுங் கேட்டதையிந்
திராணியெய்து மேன்மை நோக்கி
நாயகனிந் திரனயர்கல் யாணமால்
அழகென்ன நவிலு வேனே.

*(அ - ரை.) ஆயிரங்கண்ணுடைபற்று - ஆயிரங்கண்ணுடிகள் அடைக்கப்பெற்று; ஆயிரங்கண்ணனை விரும்பிப்பெற்று. மீ உயர்ச்சிப்பொருட்டு. அச்சதன்மைத்தாய் - அழகிய சதன்மை என்னும் பண்டத்தையுடையதாய்; அழகிய சதை வேலைகள் செய்யப் பெற்றதாய். புலவர் புகழ் - தேவர்கள் புகழுகிற; அறிஞர்கள் புகழுகிற. விபுலை - பூமி. சயந்தனைப்பெற்று - சயந்தன் என்பவனைப் பிள்ளையாகப் பெற்று; வெற்றியைப் பெற்று.* (௬0)

[ஒன்பான் வகைக்கோள்களை நிறுவிய போது பாடியது.]

62. அந்நாளில் தசரதன்தான் சனிப்பதிட்டை
நாகையினில் அமைத்த லாலே
பொன்னுனி யானரகு ராமனைப்பெற்
றேத்திருவும் பொதிந்துற் றுலல்
இந்நாள்ஒன் பதுகோளும் பதிட்டைசெய்த
கச்சியுவ ரெங்க வேந்தல்
எந்நாளும் எண்ணமெலாம் பலித்துமக
ராசனென இருந்து வாழ்க.

*(அ - ரை.) சனிப்பதிட்டை - சனிபகவானைப் பிரதிட்டை செய்து. பொன்னுனி - பொன்னையாள்பவன்.* (௬௧)

## ௭. முத்தாபரணக்கவிராயர்

[இவர் விருத்தாசலம் என்னும் பழமலையில் ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன்னர் வாழ்ந்திருந்த சுப்பராயக்கவிராயர் என்பவருடைய மகனாகத் தோன்றி

யவர். இவரும் இவருடைய தந்தையும் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினர். இவர்கள் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை.]

[உடையார் பாளையம் கச்சிக்கல்யாணரங்க துரையின்மீது பாடியது.]

53. கோடையாளி மலையினிற் கவிமாரி அநுதினம்
கொண்டலென வேபொழிபவன்
குரைதிரைக் கடல்மடை திறந்தென இலக்கியம்
கூறும்ப்ர சண்ட வாக்கன்
கூறிடுஞ் சகலகலை ஞாபகன் நாற்கவி
குறிக்கும்ப்ர தாப சீலன்
கும்பமுனி யருள்பெறு வரப்ரசா தன்வாணி
கொஞ்சிவிளை யாடு நாவன்
திடவிருத்தா சலச் சுப்பரா யக்கவிஞன்
சேர்ந்தஇரு கண்ம ணியெனும்
சேயன்முத் தாபரண கவிராசன் மகிழ்வினொடு
தேர்ந்தெழுது சீட்டுக் கவி
செல்விவளர் மார்பனும் கல்வியில் அனந்தனும்
செல்வமதி லேத னதனும்
தெரிவையர்கள் கண்டளவில் வேலனோ மாரனோ
திருமா லெனப்பு கலுறும்
அடல்மிகுந் திடுதீரன் ஒன்னலர்கள் கண்டீரன்
அட்டலெட் சுமிவி லாசன்
ஐந்தரு வுடன்சங்க நிதிபத்ம நிதியுன்றன்
அருள்நோக்கி ஏவல் செய்ய
அணிமாட மேடையும் மதில்கோ புரங்களும்
ஆலயந் தேர்கள் நிரையும்

அம்புவி மடந்தைமுக மாகும்உடை யாபுரிக்
கரசுபுரி மன்ன ராகும்
தடையிலாக் கொடைமாரி பொழிகச்சி ரங்கேந்த்ர
தனயனு கியமே ருவாம்
சந்த்ரமுக னுங்கச்சிக் கல்யாண ரெங்கதுரை
தாட்டிகன் எதிர்ந்து காண்க
சதிருடன் கடவுள்வாழ்த் துக்கவிதை முப்பதும்
சமுகமதில் கேட்டு கந்து
சால்வைசோ மன்சோடோ டுருமால் சரப்பளிகள்
தந்தனுப் பிடவேண் டுமே.

(அ - ரை.) கொடையாளி மலையினில் - கொடையாளியி னுடைய புகழ் மலையில். கவிமாரி - கவிமழை. கொண்டல் - முகில். குரை திரைக்கடல் - ஒலிக்கின்ற அலைகளையுடைய கடல். சகலகலை ஞாபகன் - எல்லாக் கலைகளையும் நினைவில் வைத்திருப் பவன். கும்பமுனி - குடத்தில் தோன்றிய அகத்தியர். வாணி - கலைமகள். சேயன் - மகன். தனதன் - குபேரன். ஒன்னலர்கள் கண்டீரன் - பகைவர்கட்கு அரிமாவாக இருப்பவன். ஐந்தரு - ஐவகைத் தேவமரங்கள்; அவை அரிசந்தனம், கற்பகதரு, சந்தா னம், பாரிசாதம், மந்தாரம் என்பன. அம்புவி மடந்தை முகம் - அழகிய நிலமகளின் திருமுகம். உடையாபுரி - உடையார்பாளை யம். தனயனுகிய - பிள்ளையாகிய. சந்த்ரமுகன் - திங்களைப் போன்ற முகமுடையவன். தாட்டிகன் - பெருமையுடையவன். சால்வை - துப்பட்டா. சோமன்-வேட்டி. சோடு - தொடுதோல். உருமால் - மேலாடை. சரப்பளி - பொன்னுற் செய்த கழுத்தணி. (௧)

## அ. சின்னநல்லான் துரை

[இவர் உடையார் பாளையத்தில் பெருநிலக் கிழாராக விளங்கியிருந்தவர். கல்வியறிவிற்சிறந்து செய்யுள்பாடுந் திறமை பெற்றிருந்தார்.]

[தம் குருவின் மேல் பாடியன.]

64. நன்னூலுங் காரிகையும் நன்ருந் திவாகரமும்
பன்னூலும் ஆராய்ந்து பார்ப்பதேன்—முன்னூலும்

கொண்டாடுந் தில்லைக் குருநமச்சி வாயர்முகம்
கண்டாலும் உண்டே கதி.

(அ - ரை.) பன்னூலும் - பல நூல்களும். முன்னூலும் - பழமையான நூல்களும். குருநமச்சிவாயர் - அருணைக் குருநமச்சி வாயருடைய வழிமுறையில் வந்த ஒருவர்; இவர் தில்லைத் திரு மடத்தில் எழுந்தருளியிருந்தபடியால் தில்லைக் குருநமச்சிவாயர் எனப் பெற்றார். (க)

65. கீதம் பரதங் கிளர்பல் கலைக்யானம்
வேதம் பரிமளிக்க வீசுமே—கீதக்
கொழுந்திருக்குந் தில்லைக் குருநமச்சி வாயர்
தழைந்திருக்கும் ஆஸ்தானம் தான்.

(அ - ரை.) கீதம் - இசை. பரதம் - கூத்து. கிளர்பல் கலைக்யானம் விளங்குகின்ற பல கலையறிவு. ஆஸ்தானம் - இருப் பிடம். (உ)

## கூ. நா. அங்கப்பபிள்ளை

[இவர் பவானி என்னும் ஊரில் நாகப்பபிள்ளை என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றினர். சிறந்த புலவராகத் திகழ்ந்த இவர் நூல்கள் சில செய்துள்ளார். தம்முடைய அருமை மனைவி காலஞ் சென்றபோது நாற்பது பாடல்களால் இரங்கற்பாக் கள் பாடி வருந்தினர். இவ்விருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இருந்தவர்.]

[முருகப்பச் செட்டியார் என்பவர்மீது பாடிய சிலே டைப் பாடல்கள்.]

யானைக்கும் முருகப்பச் செட்டியார்க்கும்

66. ஆருந் துதிக்கையால் அண்டினரைத் தாங்குகையால்
கூடும் மதமுகமே கொள்கையால்—சேருமெழிற்
பஞ்சரத்தின் அஞ்சுகமே பன்னுமுரு கப்பனுக்குக்
குஞ்சரத்தை ஒப்பாகக் கொள்.

(அ - ரை.) இருந்துதிக்கையால் - பொருந்திய தும்பிக் கையினால்; எல்லோரும் போற்றுகிறபடியால். அண்டினரைத் தாங்குகையால் - சேர்ந்தவர்களைக் காப்பாற்றுகிறபடியினால்; எதிரியவர்களைச் சுமக்கிறபடியால். மதமுகம் - மதம்பொருந்திய முகம்.; களிப்புப் பொருந்திய முகம். அஞ்சுகமே - கூண்டில் இருக்கிற கிளியே. பன்னும் - எல்லோரும் புகழ்ந்து பேசும். குஞ்சரம் - யானை. (௬)

ஊசிக்கும் திங்களுக்கும்

**67.** மெல்லக் கலையேறும் மேவுமிரு பக்கமுமாம்
சொல்லத் தகுதாரம் சூழ்நலால்—தொல்லுலகில்
பூசிக்குஞ் சங்கரனைப் போற்றும் முருகப்பா
ஊசிக்குச் சந்திரனேர் ஓது.

(அ - ரை.) கலையேறும் - ஆடையில் குத்தித் தைக்கப் பெறும்; ஒன்று முதல் பதினைந்துவரை கலைகள் ஏறப்பெறும். தாரம் - எல்லை, நீர். (௭)

வேதியர்க்கும் கடைக்கும்

**68.** கலைமறை வாய்வைத்துக் காணவெடுத் தார்க்கும்
மலைவறவே சொல்லி மகிழ்வார்—நிலைவரத்தை
ஆதலால் வேதியரை அன்பாம் முருகப்பா
கோதிலா ஆவணமாக் கொள்.

(அ - ரை.) கலைமறை - கலையாகிய மறையை. கலை - நிறைகல்லே. மலைவு அற - திகைப்பு நீங்க. ஆவணம்-கடை. (௮)

சிவனுக்கும் திருமாலுக்கும்

**69.** தங்க வுடுக்கையுறும் தாரா பதியைமுனம்
துங்க முடிசூடுந் தூய்மையால்—பொங்கரவம்
ஏற்ற பெருமையால் எங்கள் முருகப்பா
சாற்றுசிவன் விட்டுணுவே தான்.

(அ - ரை.) தங்க உடுக்கையுறும் - தங்கையிலே உடுக்கை பொருந்தப்பெறும்; பீதாம்பரம் அணியப்பெறும். தாராபதி - திங்கள். அரவம் - பாம்பு. (௯)

உலுத்தர்களும் கற்புடை மாதர்களும்

70. நாடார் பரபோகம் நண்ணார் பிறவாயில்
தேடார் பொருட்கழிவு செத்தாலும்—மாடாய
தந்தனத்தின் தூசும் தராரே முருகப்பா
அந்தலுத்தர் பத்தினியே யாம்.

(அ - ரை.) நாடார் பரபோகம் - மேலான இன்பங்களை எண்ணமாட்டார்கள். பிற ஆடவர்களுடைய போகங்களை விரும்ப மாட்டார்கள். பிறர் வாயில்தேடார் - பிறர்வாசலைத் தேடிப்போக மாட்டார்கள். பொருட்கு அழிவு தேடார் - பொருளுக்கு அழிவு தேடமாட்டார்கள். மாடாய - பொருளாகிய. தந்தனத்தின் தூசும் - தம்முடைய பொருளில் ஒரு தூசியாவது; தங்கொங்கை யின்மேலுள்ள ஆடையையேனும். (ரு)

அரசனுக்கும் வறியவர்க்கும்

71. தனமுடையார் தம்மைத் தழுவி யவர்பால்
மனமுடையா நிற்பர் மறந்தே—தினமுந்தம்
பஞ்ச விடர்தீரப் பார்த்து முருகப்பா
செஞ்சொலர சேழையெனச் செப்பு.

(அ - ரை.) தனமுடையார் தம்மைத் தழுவி - கொங்கைகள் உடையவர்களைச் சேர்ந்து; பொருள் உடையவர்களைப் பொருந்தி; மனம் உடையாநிற்பர் - மனத்தைப் பறிகொடுத்து நிற்பர். பஞ்ச இடர் - பஞ்சமாகிய துன்பம். (சு)

வெற்றிலைக்கும் வேசிக்கும்

72. மேலேறிக் கிள்ளலினுல் மெல்லிதழ்வாய் சேர்தலினுல்
கோலேறு வல்லியிடை கொள்ளலால்—மாலேறக்
கண்டவர்கை எய்தலினுல் காண்முருகப் பாவேசி
விண்டுநிற வெற்றிலையாய் விள்.

(அ - ரை.) மேலேறிக் கிள்ளல் - வெற்றிலையைக் கொடிக் கால்மேல் ஏறிக்கிள்ளுதல்; இன்பவிளையாடலில் நகக்குறி வைத்தல். மெல்லிதழ்வாய் சேர்தல் - இதழ் சுவைத்தல்; வெற்றிலையை மெல்லிதழ்வாய் பொருந்திய வாயினிடத்திலே சேர்த்தல். (எ)

இதுவும் அது

73. சேர்த்துப் பிடிக்கையால் செந்துவர்வாய் உற்றிடலால்
பார்த்துக் களிக்கின்ற பண்பதனுல்—சீர்த்தமென்
பட்டையுமேற் சுற்றிடலால் பன்னும் பரத்தையரைத்
திட்டமுடன் வெற்றிலையாய்த் தேர்.

(அ - ரை.) *சேர்த்துப் பிடிக்கை - வெற்றிலையை ஒன்ருகச் சேர்த்துப் பிடித்தல்; தனங்களைச் சேர்த்துப் பிடித்தல். பட்டையுமேற் சுற்றிடலால் - வாழைப்பட்டையையும் மேலே சுற்றுவதால்; பட்டாடையையும் மேலே சுற்றிக்கட்டுவதால். பன்னும் - கூறும். பரத்தையர் - விலைமகளிர்.* (அ)

இதுவும் அது

74. அங்கண் கடைமருவும் ஆகம் பசப்பேயும்
மங்கள மாமில்லில் வந்தமரும்—எங்குமிசை
கொண்ட முருகப்ப கோமானே வெற்றிலையை
விண்டிடுவாய் வேசியென வே.

(அ - ரை.) *அங்கண் கடை மருவும்-அழகிய கண் காதளவு சென்று பொருந்தும்; அங்கு கடையினிடத்திலே விற்பதற்குப் பொருந்தும். ஆகம் பசப்பேயும் - உடல் பச்சைநிறமாகவிருக்கும். மங்களமாம் இல்லில் வந்தமரும் - நன்மைகள் நடைபெறும் இல்லத்தின்கண் வந்துசேரும். வெற்றிலை விருந்தினர்க்கும் விலைமகளிர் ஆடல்பாடல் முதலியவைகட்கும் சேர்தல் மரபு. விண்டிடுவாம் - கூறுவாய்.* (கூ)

இதுவும் அது

75. தொட்டுப் பயிறலால் சொன்னவிலை தந்திடலால்
கட்டுக்குள் ஆகும் கணக்காலே—கிட்டப்
பலகையிடும் பண்பால் பகர்முருகப் பாவெற்
றிலையுமெழில் வேசிக் கிணை.

(அ - ரை.) *தொட்டுப் பயிறலால் - தொட்டுப் பழகுதலால்; சுண்ணும்பு தடவத் தொடுதலால். கட்டுக்குள் ஆகும் கணக்கால் - கட்டாகக் கட்டப்படுங் கணக்கினுக்குள்ளாவதால்; கட்டியணைக்கப்பெறும் தன்மைக்குள்ளாவதால். பலகையிடும்*

பண்பால் - பலபேர் கையை விடுந்தன்மையினுல்; பலகைமேல் வைக்கப்பெறும் இயற்கையால். (௧0)

கண்ணுடிக்கும் புனுகுபூனைக்கும்

76 கூட்டில் வருந்தாது கொள்ள அணைதலினுல்
காட்டின் முகமருவக் காணலால்— நாட்டிலதைக்
கிட்டியுற்றுக் கொள்ளலால் கேள்புனுகு பூனைக்கே
அட்டியென்ன கண்ணுடி யாம்.

(அ - ரை.) கூட்டில் வருந்தாது - கூட்டிலே வருந்தமாட்டாது. கூட்டிலே தாது என்னும் வீரியம் வரும். கிட்டியுற்றுக் கொள்ளலால் - நெருங்கிப் பார்த்துக்கொள்ளலால்; கிட்டிகட்டிப் பெறுதலால். அட்டி - தடை. (௧௧)

ஆனைக்கும் வெற்றிலைக்கும்

77. கட்டி லடங்கலால் கைச்சுருள்வாய் உற்றிடலால்
மட்டிற் பிடியும் மருவலால்—இட்டமுடன்
மானைப் பொருவிழியார் மால்கொள் முருகப்பா
ஆனைக்கு வெற்றிலையொப் பாம்.

(அ - ரை.) கட்டில் அடங்கலால் - கட்டுத்தறிக்குள் அடங்குவதால்; கட்டாகக் கட்டப்பெற்று அடங்கப்பெறுவதால். கைச்சுருள்வாய் உற்றிடலால் - கையிலுள்ள வெற்றிலைச்சுருள் வாயில் சேர்வதால்; துதிக்கைச் சுருள் தீனிகொடுப்பதற்கு வாயை அடைவதால். பிடியும் மருவலால் - பெண்யானையுஞ் சேர்வதால். பிடி பிடியாகவும் அமைக்கப்படுவதால். மானைப் பொரும் - மானுக்கு ஒப்பாகவிருக்கும். (௧௨)

இதுவும் அது

78. ஓடை யணுகலால் ஒண்ணீர்மேல் தூவிடலால்
வாடைக் கொழுந்துமே வாய்விடலால்—ஓடுமத
வாரணந்தான் வெற்றிலையை மானுமுரு கப்பா
காரணந்தான் நன்றெனவே காண்.

(அ-ரை.) ஓடை அணுகலால்-ஓடைப் பக்கங்களில் பயிரிடப்படுவதால்; முகபடாம் பொருந்தப்பெறுவதால். ஒண்ணீர்மேல் தூவிடலால் - ஒள்ளிய தண்ணீரை மேலே தூவுகையால். (௧௩)

சிங்கத்திற்கும் கதிரவனுக்கும்

79. மலைவாயின் மேல்தோன்றி வல்லிருண்மாச் சாடி
அலைவாயின் உட்கொள்ள ஆர்க்குஞ்—சிலைநுதலார்
தங்கக் குடத்தனத்தைச் சாரு முருகப்பா
சிங்கத்தை வெங்கதிரராச் செப்பு.

(அ - ரை.) *மலைவாயின்மேல் தோன்றி - மலைவாயின் மேலே காணப்பட்டு. வல் இருண்மாச் சாடி - வலிய இருட்டைத் தொலைத்து; வலிய யானையைக் கொன்று. அலைவாயின் உட்கொள்ள - அசைகின்ற வாயினிடத்திலே கொள்ள; அலைவாயாகிய கடலிற் போய்மறைய.* (கச)

பருப்புக்குஞ் செருப்புக்கும்

80. தோலெடுத்துச் சேர்ப்பர் தொடுபதத்திற் காம்படியில்
காலெடுத்து வைக்கவாட் குக்கமையும்—நூலெடுத்த
ஆகனே வாணிபுரி அப்பா முருகப்பா
வேகுபருப் பேசெருப்பாய் விள்.

(அ - ரை.) *தோலெடுத்துச் சேர்ப்பர் - தோலையெடுத்து விட்டுக் கறியிலே சேர்ப்பார்கள்; தோலையெடுத்துச் செருப்பாகச் சேர்ப்பார்கள். தொடுபதத்திற்கு ஆம்படியில் - போடுங்காலுக்கு இயைந்தபடியாக. தொடுகின்ற சோற்றுக் கேற்றபடியாக.* (கரு)

கொங்கைக்குந் திங்களுக்கும்

81. வட்ட வடிவாய் வயங்கும் அமுதூறும்
திட்டமுட னேகலையும் சேருமே—மட்டவிழ்தார்
மன்னு முருகப்ப மாமணியே தூமதியை
மின்னார் தனமெனவே விள்.

(அ - ரை.) *வட்டவடிவாய் இருத்தல் இரண்டிற்கும் இயற்கை. அமுதூறும் - பால்தோன்றும்; அமுதம் தோன்றும். கலையும் சேரும் - திங்கட்கலைகள் சேரப்பெறும்; ஆடை சேரப் பெறும். தூமதி - தூயதிங்கள். மின்னார் - மின்னலைப்போன்ற இடையையுடைய பெண்கள்.* (கசு)

## ௬0. சேறைக் கவிராசர்

[இவர் சோழவளநாட்டில் திருச்சேறை என்னும் ஊரில் தோன்றியவர். கல்வி கற்றுக் கவிராசர் என்னுஞ் சிறப்புப் பெயரையடைந்தார். அதன்பிறகு இயற் பெயர் மறைந்து சிறப்புப் பெயரே நிலைபெற்றது. இவர் இயற்றிய நூல்கள், திருக்காளத்தி நாதருலா, திருக்காளத்தி நாதர் இட்டகாமியமாலை, சேயூர் முருகனுலா, திருவாட்போக்கி நாதருலா, திருவண்ணாமலையார் வண்ணம் முதலியன.]

[சீவிலிமாற பாண்டியனைக் காணச் சென்றபோது எழுதியனுப்பிய பாட்டு.]

82. தென்பா ராளும் அறிவிற் குறுமுனி
தெக்கிண கயிலையில்வாழ்
செங்குந் தக்குல வேங்கட ராயன்
திருவா சற்புலவன்
என்பேர் வண்ணக் களஞ்சிய மன்றி
எதிர்த்தவர் மார்பாணி
இந்தத் தேசப் புலவர் மனத்துக்
கிடியென வந்தேன்காண்
உன்பால் யான்வர வாசற் காரர்க்
குத்தா ரம்பண்ணி
உள்ளுக் கென்னை அழைப்பித் தாசில்
உரைக்குங் கவிதைகள்கேட்
டென்பால் வரிசைகள் பரிசில்கள் நல்கி
இரட்சித் திடவேணும்
இராமா சீவிலி மாறு பாண்டிய
ராசவ ரோதயனே.

(அ - ரை.) தென்பார் - தெற்குத் திக்கில் உள்ள இடம். தெக்கிண கயிலை - திருக்காளத்தி. உத்தாரம் - மறுமொழி. சூசில் - விரைவாக. (க)

[தம்மைப் பற்றித் தாமே பாடியது.]

83. செந்தமிழோர் தங்களிரு சீபாத தூளிபொர
வந்த புலவோர்தம் மார்பாணி—கந்தன்
அடிகையா ரப்பரவும் ஆசுகவி ராசன்
கடிகையார் கோலா கலன்.

(அ - ரை.) செந்தமிழோர் - அறிஞர்கள். அடி கையாரப் பரவும் - திருவடிகளைக் கை பொருந்தும்படியாக வணங்கும். கடிகையார் - அரசனுக்குக் கவி சொல்லுவோர். (உ)

## கக. சேறைக் கவிராசர் மாணவர்

[சேறைக்கவிராசரிடம் பலமாணவர்கள் கல்வி கற்றுக்கொண்டிருந்தனர். அவர்களில் இவர் ஒருவர். தம்முடைய ஆசிரியரின் பெயரைச் சொல்லியே எல்லாக் காரியங்களையும் முடிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார்]

[ஒருவரை நச்சுப்பாம்பு கடித்தபோது பாடி நஞ்சினை இறங்கச் செய்தது.]

84. ஆறுமுகன் ஆணை அவனடியார் தம்மாணை
ஏறு மயிலாணை என்னுணை—வீறுபுகழ்
தேறு கவிராச ராசன் திருவாணை
ஏறிய வாறே இறங்கு.

(அ - ரை.) கவிராசராசன் - சேறைக் கவிராசர். (க)

## கஉ. பூங்கோதையார்

[சங்ககிரி துர்க்கத்தில் இருந்த எம்பெருமான் என்னும் புலவருடைய மனைவியார் இவர். இவர் பிறந்த ஊர் மதுரை. அங்குக் கல்வியறிவிற் சிறந்து திகழ்ந்

திருந்தபோது எம்பெருமான்புலவர் அங்கு இவ்வம்மையாரைத் திருமணஞ் செய்துகொண்டார்.]

[எம்பெருமான்புலவர் வீட்டிற்குச் சென்ற சில புலவர்கள் தங்களுக்குள் உரையாடிக்கொண்டிருக்கும் போது, "பெண்கள் எவ்வளவு நூலைக் கற்று எவ்வளவு புலமையடைந் திருப்பினும் அவர்களுடைய அறிவு முதிர்ச்சி பெருததேயாகும்" என்றும் பேசிக்கொண்டிருந்தபோது உள்ளே கேட்டுக் கொண்டிருந்த இவ்வம்மையார் ஒரு சிறுமிழலம் எழுதியனுப்பிய பாட்டு.]

85. அறிவில் இளைஞரே ஆண்மக்கள் மாதர்
அறிவின் முதிஞரே ஆவர்—அதிகரியோ
தாம்கொண்ட சூலறிவர் தத்தையர் ஆண்மக்கள்
தாங்கொண்ட சூலறியார் தாம்.

(அ - ரை.) அறிகரி - அறிந்துகொள்வதற்குச் சான்று. தத்தையர் - பெண்கள். சூல் - கருப்பம். இளைஞர் - சிறியவர். (க)

## ருங. சிவகடாட்சம் அம்மாள்

[இவ்வம்மையார் சென்னைமாநகரத்தில் இருந்தவர். அட்டாவதானம் பூவை கலியாண சுந்தரமுதலியாரிடத்தில் இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமை பெற்ருர். இவ்வம்மையாரோடு இவருடைய கணவரும் கல்வி பயின்ருர்.]

[தம்முடைய ஆசிரியர்மீது பாடியது.]

86. கல்வியைஎன் கணவர்க்கும் எளியேற்குங்
கற்பித்துக் கயிலைக் கௌரிச்
செல்வியைஎன் இதயத்தி லேயிருத்தி
உபாசிக்கச் செய்வித் தென்றன்
வல்வினையைக் கரைத்திடவும் வரும்வினையைத்
தடுத்திடவும் வகைபு ரிந்த

பல்வினையின் உயர்பூவைக் கலியாண
சுந்தரன்தன் பாதம் போற்றி.

(அ - ரை.) கௌரிச் செல்வி - உமையவள். உபாசிக்க - வழிபட. பல்வினை - தீவினை. (க)

## கச. திருவடிக்கவிராசர்

[இவரைப்பற்றிய செய்தி யொன்றுந் தெரியவில்லை. காசிம்புலவர் என்னும் முகமதியர் இவரிடங் கற்றுச் சந்தப் பாக்கள் பாடுவதில் வல்லவரானார். தம்முடைய மாணவரைப் பாராட்டி இவர் இப்பாடலைப் பாடினார்.]

87. வடிக்கட்டுஞ் சங்கத் தமிழ்ப்புல
வீர்எழு வரைகடந்த
முடிக்கட் டழகர் திருப்புகழ்
வாரி முகந்துகொண்டு
படிக்கட் டுலகப் பரப்பையெல்
லாஞ்சுற்றிப் பார்த்து விண்மேல்
கொடிக்கட்டித் தாவுநல் காசிம்
புலவர் கொழுங்கவியே.

(அ - ரை.) வடிக்கட்டும் - தெளிவுபடுத்தப்பட்ட. முடிக்கட்டழகர் - முடியினையுடைய அழகர். (க)

## கரு. திருமயப்புலவர்

[இவர் திருமயம் என்னும் ஊரில் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். கெட்டிபொம்மு ஊமைத்துரையும் இக்காலத்தினர். இப்புலவரின் இடுகுறிப்பெயர் தெரியவில்லை.]

[புதுக்கோட்டையில்கலைமகள் விழா நடைபெற்றது. அங்குப் போய்ப் பரிசில் பெற்றுக் கொண்டு திரும்பி வந்

தார். நடுவழியில் கள்ளன் இவருடைய கையில் இருந்ததைத் தட்டிப் பறித்துக் கொண்டு சென்றான். புலவர் இல்லத்தையடைந்து செய்தியை மனைவியிடம் உரைத்தார். அவள் உள்ளம் வருந்தினாள். அப்பொழுது புலவர் பாடியது.]

88. கள்ளன் கொடுத்ததைக் கள்ளன் எடுத்தகன்றான்
உள்ளங் கடுத்தல் உறலாமோ ?—வள்ளல்
மருதரசன் உள்ளான் மடவாய் வறுமை
ஒருவ அருள்வான் உடன்.

(அ - ரை.) *கள்ளன் கொடுத்ததை: புதுக்கோட்டை யரசர் கள்ளர் மரபினராகலின் இவ்வாறு இயம்பினார். கடுத்தல் - வருந்தல். ஒருவ - நீங்க.* (௧)

## ௩௯. அம்பலவாணக் கவிராயர்

[இவரைப்பற்றிய செய்தி விளங்கவில்லை. சென்னை மயிலை தாண்டவராயக்கவிராயருடைய யமகவந்தாதியைப் பற்றிப் பாடியது.]

89. சங்கத் தமிழ்ப்பொன்னின் உரையாணி ஞானச்
சரக்கறை எதிர்ந்த கவிதைத்
தந்திக் குழாம்வென்ற கண்டீரவம்பெரிய
சைவசித் தாந்த நிபுணன்
துங்கப்ர பந்தங்கள் ஒருகோடி அனுதினம்
சொல்லினிய மதுர வாக்கி
துரைராசர் பரவும்அம் பலவாண கவிராச
துரந்தரன் அனுப்பும் ஓலை
வங்கப் பயோததியின் நிறைசெல்வன் மதியூகி
வைத்யநா தேந்த்ரன் ஈன்ற
வரதநற் குணமேரு பூம்பாவை வேலப்ப
மகிபன்எதிர் கொண்டு காண்க

கங்கைச் சடாமகுடர் மயிலையந் தாதியுரை
கனிகண்டு கண்டுகொண் டோம்
கவியரங் கேற்றியிசை நாட்டுதாண் டவராய
கவிராசர் மனம கிழவே.

(அ - ரை.) உரையாணி - உரைகல். ஞானச் சரக்கறை - மெய்ஞ்ஞானப் பொருளை வைத்திருக்குமிடம். தந்திக்குழாம் - யானைக்கூட்டம். கண்டீரவம் - சிங்கம். துங்கப்ரபந்தங்கள். உயர்ந்த நூல்கள். துரந்தரன் - சிறப்பையுடையோன். வங்கம் - பொன். பயோததி - பாற்கடல். கங்கைச் சடாமகுடர் - கங்கையைச் சடைமுடியில் தாங்கியவர். (க)

## கஎ. திருவருட்பிரகாச வள்ளலார்

[இவரே சிதம்பரம் இராமலிங்க அடிகள் என்னப் பெறுவர்.]

[அடிகளார் ஒருமுறை திருத்தணிகைக்குப் போய் முருகப்பெருமானை வழிபட்டு மீண்டுவந்துகொண்டிருந்தார். அப்பொழுது ஓர் அன்பர் தமக்குச் சில செய்யுட்கள் இயற்றித்தரவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அப்பொழுது பாடிக் கொடுத்தன இவை.]

அறுசீ ராசிரிய விருத்தம்

90. வெம்பும் உயிருக் கோர்உறவாய்
வேளை நமனும் வருவானேல்
தம்பி தமையன் துணையாமோ
தனையர் மனைவி வருவாரோ
உம்பர் பரவும் திருத் தணிகை
உயர்மா மலைமேல் இருப்பவர்க்குத்
தும்பைக் குடலை எடுக்காமல்
துக்க வுடலை எடுத்தேனே.

(அ - ரை.) வெம்பும் - வருந்தும். உம்பர் பரவும் - தேவர்கள் போற்றும். தும்பைக் குடலை-தும்பைப் பூமாலை பொருந்திய குடலை. (க)

**91.** தொல்லைக் குடும்பத் துயரதனில்
தொலைத்தேன் அந்தோ காலமெலாம்
அல்லல் அகற்றிப் பெரியோரை
அடுத்தும் அறியேன் அரும்பாவி
செல்லத் தணிகைத் திருமலைவாழ்
தேவா உன்றன் சந்நிதிக்கு
வில்வக் குடலை எடுக்காமல்
வீணுக் குடலை எடுத்தேனே.

(அ - ரை.) தொல்லைக் குடும்பத்துயர் - துன்பத்தை உண்டு செய்யும் இல்லறச் செயல்கள். செல்லத் தணிகை - செல்வம் பொருந்திய தணிகை. வில்வக்குடலை - வில்வம் பறிக்கப்பெற்ற குடலை. வீணுக்கு - பயனில்லாமல் போதலுக்கு. (உ)

**92.** அவல வயிற்றை வளர்ப்பதற்கே
அல்லும் பகலும் அதன்நினைவாய்க்
கவலைப் படுவ தன்றிச்சிவ
கனியைச் சேரக் கருதுகிலேன்
திவலை யொழிக்குந் திருத்தணிகைத்
திருமால் மருகன் திருத்தாட்குக்
குவளைக் குடலை எடுக்காமல்
கொழுத்த உடலை எடுத்தேனே.

(அ - ரை.) அவல வயிறு - எப்பொழுதும் பசிப்பிணியால் வருந்துகிற வயிறு. சிவகனி - கனியைப்போல் இன்பம் பயக்குஞ் சிவபெருமான். திவலை - துன்பம். குவளைக் குடலை - குவளை மலர் பொருந்திய குடலை. (ங)

## கஅ. வீரபத்திரக்கவிராயர்

[இவர் பாண்டிவளநாட்டில் இராமநாதபுரம் மாவட்டம் அபிராமம் என்னும் ஊரில் ஏறக்குறைய இரு

நூறு யாண்டுகட்கு முன்னே பிறந்தார். சிறந்த அறிஞராகத் திகழ்ந்த தம்முடைய தந்தையரிடமே கல்வி கற்றார். மாந்தைக் குறவஞ்சி முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டன.]

[முத்துராமலிங்க அடிகளார்க்கு எழுதியனுப்பியது.]

93. தொகுத்தமறை கடந்தமெய்ந்நூல் உணர்வறியா
உயிர்கள்பவத் தொடக்கு நீங்க
மிகுத்தகல்வி உயர்முத்து ராமலிங்க
தேசிகர்மென் முகங்கண் டேகி
அகத்தியன்கா லகத்திருந்தான் வாணியுந்தா
மரையகமே யார்ந்தாள் வேதன்
வகுத்திடுநந் தொழிலினியே தென்றுதந்தை
உந்தியினுள் வசிக்கின் றனே.

(அ - ரை.) மறைகள் தந்த மெய்ந்நூல் - மறைகளிலிருந்து தோன்றிய மெய்யறிவு நூல்கள். பவத்தொடக்கு - பிறவித் தொடர்ச்சி. கால் அகம் - தென்றற்காற்று உண்டாகின்ற இடமாகிய பொதியமலை. வாணி - கலைமகள். ஆர்ந்தாள் - பொருந்தினள். வேதன் - நான்முகன். உந்தி - கொப்பூழ். (க)

[திருக்கோளக் குடியில் புலவர்கள் விருப்பப்படி குதிரை வாகனக் காட்சியைப் பாடியது.]

94. பூவுடையார் தழுவுமணிப் புயமுடையார்
அமரர்களும் போற்றப் பூவில்
ஆவுடையான் அன்பருக்காய் அனஞ்சுமந்து
வரப்பரிவுற் றருளில் நோக்கிச்
சேவுடையார் ககனமதிச் சிரமுடையார்
திருக்கோள நாதர் தாவும்
மாவுடையா ராய்ப்பணியா ரமுஞ் சுமந்து
வீதியினில் வருகின் றரே.

(அ - ரை.) அனஞ் சுமந்துவர - அன்னவாகனத்தில் ஏறிக் கொண்டுவர. சேவுடையார் - காளையை உடையவர். ககனமதி சிரமுடையார் - வானிற் பொருந்திய திங்களைத் தலையில் உடையவர். மாவுடையார் - குதிரையையுடையார். பணி ஆரமுஞ் சுமந்து - பாம்புப்பணி முதலிய அணிகலன்களைத் தாங்கி. (உ)

[மழை பெய்யுமாறு பொய்சொல்லாமெய்யர் என்னும் ஐயனார்மீது பாடியது.]

95. தருணமிது வாகுமே தான்மாரி பெய்யக்
கருணைசெய் யாதிருக்க லாமா—வருணனிடம்
நீருரைத்துப் பொய்சொல்லா மெய்யரே இந்நிமிடம்
மாரிபெய்யச் செய்வீர் வரம்.

(அ - ரை.) தருணம் - சமயம். மாரி - மழை. நீர் உரைத்து - மழை பெய்யுமாறு நீர் எடுத்துக் கூறி. (௩)

## கக. கமுதிநாட்டுப் புலவர்

[ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்பு சேதுநாட்டில் இருந்தவர் தெளிவாகக் கல்வி கற்று அரும்பெரும்புலமையடைந்து திகழ்ந்தவர்.]

[புலவர் தம்முடைய மனைவியோடு வழிப்பயணஞ் சென்றபோது கள்ளர்கள் வழிமறித்துப் புலவர் மனைவியின் கழுத்திற் கிடந்த தாலியை அறுத்துக்கொண்டு சென்றனர். அப்பொழுது இவர் மருதுபாண்டியனிடஞ் சென்று பாடியது.]

96. மருவிருக்குங் கூந்தல் மனையாள் கணவன்
அருகிருக்கத் தாலி அறுமா—இரவுனக்குச்
செங்கோல் இலையாஇத் தேசமெங்குங் கள்ளருக்குப்
பங்கோ மருதுபூ பா.

(அ - ரை.) மரு - மணம். இலையா - இல்லையா? பங்கோ - பாகமா? (க)

## ௨௦. அட்டாவதானம் கதிர்வேற்கவிராசபண்டிதர்

[தஞ்சைமாவட்டத்தில் தரங்கம்பாடியிற் பிறந்து கல்வி கற்றுச் சிறப்புற்றவர். பின்னளிற் சென்னைமா நகரையடைந்து அங்கு வாழ்ந்திருந்தார். இவர் சில செய்யுள் நூல்கள் செய்துள்ளார்.]

[திருவிளையாடல்புராணக் கீர்த்தனை என்னும் நூலுக்கு இவர் பாடிய சாற்றுக்கவி.]

97. சந்திர சடாதர திரிநயன சொக்கேசர்
சதுரையருள் மதுரைநகரில்
தானடத் துஞ்சரிதை யானதிரு விளையாடல்
தன்னைப்பூ வலயத்தினில்
சர்வத்ர சாதார ணஞ்செயத் திருமழவை
தன்னிலே அவதரித்த
சாதுரிய உதயமூர்த் திக்குரவ னுகிவளர்
சற்குணச் சுந்தரையர்

மைந்தனென வந்தபிர பந்தமிசை சந்தமிகு
வள்ளல்சுப் பிரமணியவேள்
வளமுடைய கீர்த்தனைகள் ஆகநல் கியவதனை
வண்சுந்தர சோழபுரம்வாழ்
வணிகரில் தலைமைசேர் அழகப்ப மகிபதியின்
மாண்புள முயற்சியதனுல்
மாதிர மெலாம்புகழ் நீதிசே ராதிபுரி
மாநகரி லேயுதித்தே

அந்தகா ரந்தவிர வந்தபாற் கரனைநிகர்
அஞ்ஞான இருளகற்றி
அண்டினேர்க் குதவுநெல் மண்டிவேங் கடசாமி
அற்புதத் தபோபலத்தால்

அத்வித மகாயோகன் நித்யமதி வைபோகன்
அருந்தமிழி லேவிவேகன்
ஆதுலர்க் குபகாரன் மாதுரிய விவகாரன்
அளகைவள ருங்குபேரன்
மந்த்ரமிகு திரிபதகை மரபில்வரு பாக்கியன்
மடலெழுது போகபோக்யன்
மாருத செல்வநிறை நாராய ணச்சாமி
வள்ளலுக் கனுசனுேன்
வாசவப் பிரதாப கேசவப் பிரபுடீக
மந்திரசா லப்புயத்தான்
மனமகிழ்ந் தச்சில் பதிப்பித் தளித்தனன்
மகாகீர்த்தி நிலைநிற்கவே.

(அ - ரை.) *சந்திர சடாதர திரிநயன சொக்கேசர் - திங்களைச் சடை முடியில் அணிந்த மூன்று கண்களையுடைய சொக்கநாதக் கடவுள். சதுரையருள் - மேம்பாட்டைச் செய்கின்ற. பூவலயத்தினில் - உலகத்தில். சர்வத்ர சாதாரணஞ் செய - எல்லோரும் உணர்ந்து கொள்ளுமாறு எளிமையானதாகச் செய்ய. மழவை - மழவராயனேந்தல். மாதிரம் - திசை. அந்தகாரம் - இருள். பாற்கரனை நிகர் - கதிரவனை யொத்த. அண்டினோர்க்கு - அடுத்தவர்கட்கு. ஆதுலர்க் குபகாரன் - இரப்போர்க் குதவி செய்பவன். மாதுரிய விவகாரன் - இனிமையான செய்கைகளை யுடையவன்.* (க)

## உரு. இரண்டாவது சர்க்கரைப் புலவர்

[இவர் பொன்னெட்டிமாலைச் சர்க்கரைப்புலவரின் மைந்தரான சீனிப்புலவருக்கு மகனாகத் தோன்றினார். தந்தையாரிடத்திலும் பாட்டனாரிடத்திலும் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறினார்.]

[கம்பராமாயணச் சொற்பொழிவின் பொருட்டுப் பெற்ற தேளியூர் குறைந்த விளைவுடையதாகவும்

102. அன்பெனும் விளக்கில் அருளெனு நெய்பெய்
தாழ்ந்தசிந் தையைத்திரி ஆக்கி
மன்பெரு மானத் தீபம தேற்றி
வான்கட வுளைக்கண்டு மனிதர்க்
கென்புரு கிடநல் அறிவினைப் புகட்டும்
இரேனியூஸ் என்னும்பேர் இறைவன்
தன்பெரும் புகழை உலகினில் பரப்பிச்
சார்ந்தனன் பரகதி தன்னில்.

(அ - ரை.) *மானத்தீபம் - பெருமை பொருந்திய விளக்கு. வான் கடவுள் - வானுலகத்தில் உள்ள கடவுள்.* (௩)

103. அனைநிகர் அன்பும் இயேசுவின் அருளும்
அவனியிற் பொறையும்விண் சுடரோன்
தனைநிகர் ஒளியும் மலைநிகர் வலியும்
தழைத்திட வாழ்ந்துநன் மொழியால்
கனைகழல் வேந்தர் முதலியோர்க் கறிவு
காட்டிநற் கதியினைச் சார்ந்தான்
தினையள வையம் இன்றிநற் கலைகள்
தேர்ந்தஇ ரேனியூஸ் என்பேரன்.

(அ - ரை.) *அனை - தாய். அவனியிற் பொறையும் - நிலத்தைப் போன்ற பொறையும். கனைகழல் - ஒலிக்கின்ற வீரக்கழல்.* (௪)

## ௨௩. தி. மருதவாண தேசிகர்

[சோழவளநாட்டில் சுவாமிமலை எனவழங்கும் திருவேரகப் பதியில் தியாகராச தேசிகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தம்முடைய தந்தையாரிடமே கல்வி கற்றுப் புலவரானார்.]

[இவர் முருகக் கடவுள்மீது இயற்றிய பாடல் ஒன்றை அடியிற் காண்க.]

104. பூமகள் நடஞ்செயும் தில்லையம் பதியினில்
பொன்னம் பலத்தி லாடும்
பூரணவி லாசசர் வேசன் நடேசன்
புராந்தகன் போற்று குருவே
நாமியபி ராமிசிவ காமியிப் பூமிபுகழ்
நாரணி பரிபூ ரணி
நாரிஓங் காரிரீங் காரிசிங் காரியுமை
நல்குசெல் வப்பு தல்வனே
காமர்தரு நங்கையுயர் வள்ளிதெய் வானைதன்
கணவனே என்து ணைவனே
கர்த்தனே எங்கும்பிர சித்தனே அடியவர்
கருத்திடங் கொண்ட குகனே
நாமமணி மார்பனே சண்முகத் தெய்வமே
நயமளித் தருளை யனே
நல்லமயி லேறிவரும் உக்ரவடி வேலனே
நற்சாமி நாத குகனே !

(அ - ரை.) புராந்தகன் - முப்புரங்களையும் எரித்தவன். அபிராமி முதலியன இறைவியின் பெயர்கள். (௧)

## உச. மலையாண்டியப்பைய நாயக்கரும் மனைவியாரும்

[இவர் திருமலை நாயகர் மதுரையில் ஆட்சிசெய்து கொண்டிருந்தபோது கன்னிவாடி என்னும் ஊரில் பெருநிலக் கிழாராக விளங்கியிருந்தார். சங்கரமூர்த்திக் கவிராசர் முதலியோர் இவருடைய அவைக்களப் புலவராக இருந்தனர். நாயக்கரேயன்றி நாயக்கருடைய மனைவியாரும் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். இருவரும் அடிக்கடி செய்யுள் பாடும் வழக்கமுடையவர்கள்.]

[மனைவியார் வீட்டு விலக்கானபோது மூன்று நாள் பிரிந்திருந்த நாயக்கர் மனைவிக்கு எழுதிப் பாங்கியிடம் அனுப்பியது.]

105. நாணால் வளைத்துச் சிலைகைக்
கொடுமத னப்பயருன்
தோணா உருவம் எதிர்தோற்றி
வாளி தொடுத்தனனால்
சேணார்ந்த மைக்குழற் பெண்ணே!
உனையோர் தினமெனினும்
காணாத நாளல்ல வோவெகு
நாளெனக் காண்கின்றதே.

(அ - ரை.) நாணால் வளைத்து - நாணை வளைத்து. மதனப் பயருன் - காமன்தான். தோணா உருவம் - காணப்பெறாத வடிவம். வாளி - கணை. சேணார்ந்த மைக்குழல் பெண்ணே - விண்ணில் பொருந்திய முகிலைப்போன்ற கூந்தலையுடைய பெண்ணே! (க)

[இப்பாட்டைப் பார்த்த மனைவியார் மறுமொழியாக எழுதி யனுப்பியது.]

106. முத்தமிழ் வாணர் தமக்குப்பொன் வாரி முகிலெனவே
நித்தங் கொடுக்குந் துரைச்சிங்க மே!மதன் நேர்ந்தனனால்
இத்தரு ணத்தில் அவனுக்கு நான்வந் திருந்துகொண்டு
புத்தி சொலவந்திட் டேன்சற்று நேரம் பொறுத்திருமே.

(அ - ரை.) முத்தமிழ் வாணர் - புலவர். இப்பாட்டைக் கொண்டுபோய்க் கொடுத்ததும் பாட்டைப் படித்துப் பார்த்து மகிழ்ந்த நாயக்கர் பாட்டைக்கொண்டு வந்த பாங்கிக்குச் சிறந்த அணிகலன் ஒன்றைப் பரிசாக வழங்கினார். (உ)

## உரு. சோமசுந்தர நாயகர்

[1846ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் ஆரும் நாள் சென்னை சூளையில் வைணவக் குடும்பம் ஒன்றில்

தோன்றியவர். அரங்கசாமி என்று பிள்ளைப் பெயரிடப் பெற்ற இவர் சைவத்திற் பெரும் பற்றுக்கொண்டு சோமசுந்தர நாயகரானூர். மறைமலையடிகள் இவருடைய மாணவர்களில் ஒருவர். இவர் இயற்றிய நூல்கள் வேதபாகிய சமரச கண்டனம், சைவ சூளாமணி, பரதத்துவப் பிரகாசிகை, சித்தாந்த ரத்நாகரம், சித்தாந்த ஞானபோதம், மெய்கண்ட சிவதூடண நிக்கிரகம் முதலியன. இவர் 1901ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.]

[திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க அடிகள்மீது வணக்கமாகப் பாடியது.]

107. சீர்பூத்த மறைமுனிவர் அகம்பூத்த
நலம்பூத்த திறத்தி னளிப்
பார்பூத்த மயல்பூத்த எனதுளத்தில்
பூந்தநசை பாறப் பூத்த
ஏர்பூத்த அருள்நயன இணைபூத்த
இருந்தவனிங் கிறைமை பூத்த
பேர்பூத்த போதசிதம் பரராம
லிங்கனடி பேணி வாழ்வாம்.

(அ - ரை.) பூத்த - தோன்றிய. நசைபாற - அவா மாற. நயன இணை - இரண்டு கண்கள். போத சிதம்பரம்-மெய்யறிவை உண்டாக்குந் திருத்தில்லை. (க)

## உகூ. மதுரைச் சபாபதி முதலியார்

[இவர் திருக்குளந்தை என்னும் ஊரில் 1837ஆம் ஆண்டில் சைவ வேளாள மரபிற் பிறந்தார். புலமைக் கல்வியை நன்கு கற்ற இவர் மகா வித்துவான் என்னுஞ் சிறப்புப் பெயரையும் அடைந்தார். இருபத்திரண்டு ஆண்டுகள் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார். திருப்பரங் குன்றத்தந்தாதி, மதுரைமாலை என்பன இவரியற்றிய நூல்கள்.]

[இவர் யாழ்ப்பாணம் முத்துக் குமாரக் கவிராசர் மீது பாடியது]

108. முத்துக் குமார கவிராச சேகரன் மொய்யமரில்
தத்தித் தடக்குண்டு நாவலர் தாவச் சவிமடிந்து
சித்தங் கெடவுடல் தாமோத ரேந்த்ரன் சிதைத்நவையின்
செத்துக் கிடக்குது பார்சிவ சங்கரன் தெம்முனைக்கே.

(அ-ரை.) மொய்யமர் - நெருங்கிய போர். சவிமடிந்து - ஒளிகெட்டு. சிதைத்த நவையின் - அழித்த இழித்தவமறை. தெம்முனை - போர்முனை. (க)

## உ௮. விருதை. சிவஞான யோகிகள்

[இவர் கொங்குவள நாட்டில் திருப்புக்கொளியூர் என்னும் அவிநாசியில் கி. பி. 1840ஆம் ஆண்டில் தோன்றினார். இளம்பருவத்தில் அருளானந்த சுவாமிகள் என்னும் பெரியாருடைய அருளைப் பெற்றார். விருதுநகரில் பல ஆண்டுகள் தங்கித் திருக்கோயில் திருப்பணி முதலியன புரிந்ததன்றி வடமொழி தென்மொழி ஆகியவைகளை நன்கு கற்றுப் புலமை பெற்றார். மருத்துவத் துறையிலும் வல்லுநராய் விளங்கினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் தேவோபாசனா தீபம், தமிழ் மொழியும் சிவநெறியும், சிவஞானபோத வினாவிடை, வேதாகம உண்மை, கோவிற்புரிப் புராணம், கடவுள் மாலை, தமிழும் மருத்துவமும் முதலியன.]

[விருதுநகரில் தங்கியிருந்தபோது மழை பெய்ய முருகக் கடவுள்மீது பாடியன.]

109. பொன்னுல கரையன் பெற்ற
பூவையைப் புணர்ந்த கோனே
தன்னிணை யொன்று மில்லாத்
தமனியக் குன்ற மானும்

பன்னிரு புயத்தோய் ஞாலம்
படுதுயர் தனக்கி ரங்கி
அன்னிகர் மேக மேவி
அமுதமே பொழியச் செய்யே.

(அ - ரை.) பொன்னுலக கரையன் - இந்திரன். பூவை - தெய்வானை. தமனியக்குன்றம் - பொன்மலை. அல்லிகர் - இருளை ஒத்த. (௧)

110. செய்யவள் மருகா வேலா
தேசிகா முருகா நந்தா
துய்யவெண் மேகம் எல்லாம்
சூன்முற்றிக் கரிய தாகி
வையகம் வளம்பெற் றோங்கத்
திடமுற வரையில் தேறி
வெய்யிலின் கொடுமை போக
மிகமழை பொழியச் செய்யே.

(அ - ரை.) செய்யவள் - திருமகள். வையகம் - உலகம். (௨).

111. ஏதமில் கரிய மேகம் எங்கணும் படர்ந்து மின்னி
நாதமுஞ் செய்து நின்பால் நல்லுளம் வைத்தோர்க் கேற்ப
போதமா மாரி பெய்தல் போலவே பெய்யச் செய்வாய்
ஆதியும் அந்தம் இல்லா அறுமுகக் குமரர் கோவே.

(அ - ரை.) ஏதம் - குற்றம். நாதம் - ஒலி. போதம் - மெய்யறிவு. (௩)

112. அமரர்கள் ஏறே என்னை ஆதரித் தாளுந் தேவே
குமரனே பயிர்கள் வாடுங் கொடுமையைக் கண்டி லாயோ
திமிரமே என்ன மேகந் திசைதோறும் படர்ந்து மின்னி
அமுதமா மாரி பெய்ய அருள்வதுன் கடமை யாமே.

(அ - ரை.) அமரர்கள் - தேவர்கள். திமிரம் - இருள். (௪)

113. வடையெனும் மேகம் ஆழி
வாய்மடுத் திவர்ந்து மையாங்
கையிலில் தனுக்கொண் டோங்கிக்
கால்விடுத் திடித்து மின்விச்
செய்யெலாஞ் செழிந்து மேவத்
தேம்புனல் மாரி பெய்ய
ஐயநீ செய்ய வேண்டும்
அறுமுக அமலக் குன்றே.

(அ - ரை.) ஆழி வாய்மடுத்து-கடல் நீரை உண்டு. இவர்ந்து-மேலேறி. தனு - வில் (இந்திரவில்). செய் - வயல். (௫)

114. குன்றுறை மாரி குன்றிற் குன்றுறும் பயிர்கள் அத்தால்
குன்றுறும் பூசை நேசம் கொடைமுதற் பலவு மத்தால்
குன்றுறும் அடியார்க் காக்கம் குவலயங் குன்ரு வண்ணம்
குன்றேறி செவ்வேற் கையாய் கொண்டலைப் பொழியச்
[செய்யே.

(அ - ரை.) குன்றுறை மாரி - மலையில் உறையும் முகில். குன்றுறும் - குறைவுபடும். அத்தால் - அதனால். ஆக்கம் - செல்வம். கொண்டல் - முகில். (௬)

115. சொன்மலர் தொடுக்குங் கும்பத்
தொன்முனி அருணை நாதன்
பன்மலர் அருச்சித் தேத்தும்
பகவனக் கீரன் முன்னோர்
இன்மொழி யேற்றன் றன்னோர்
இசைப்படி செய்தாய் இந்தக்
கன்மன னெனக்கு மின்று
காட்டுவை கருணை வேலோய்.

(அ - ரை.) சொல் மலர் தொடுக்கும் - பாமாலை தொடுக்கும். கும்பத்தொன்முனி - அகத்தியர். அன்னோர் இன்மொழி - அவர்களுடைய இனிய பாடல்கள். (௭)

[அமுதத்திற்கும் நஞ்சுக்கும் சிலேடையாகப் பாடியது.]

116. உண்ணருசி யாவதனு லோதையரி தந்ததனு
லண்ணிப் புசிப்பவர்சா மாற்றலினல்—விண்ணமுதாம்
ஆலமென்றே யுண்டா யமுதிலையோ செப்பரநின்
சீலமென்றுண் மாமலரிற் சேர்.

(அ - ரை.) அமுதத்திற்கு:—உண்ணருசி ஆனதனல் - அருந்த உருசியாயிருப்பதனுல், ஓதை - ஒலிக்கின்ற, அரி - கடல். அண்ணிப் புசிப்பவர் சா மாற்றலினுல் - பொருந்தி யருந்தியவர்களுடைய சாவை நீக்குதலினுல்.

நஞ்சுக்கு:—உண் அருசியானதனுல் - உண்பதற்கு இனிமையாக இல்லாதபடியினுல். ஓது ஐ அரி தந்ததனுல் - சொல்லப்பெறுகிற அழகிய பாம்பு கொடுத்தபடியினுல். அண்ணிப் புசிப்பவர் சாம் ஆற்றலினுல் - பொருந்தி யருந்துவோரைக் கொல்லும் ஆற்றலால். (அ)

[சிவனுக்கும் மாணிக்கத்திற்குஞ் சிலேடையாகப் பாடியது.]

117. உள்ளவிருள் போக்குதலா லோதுரகந் தாங்குதலால்
தெள்ளியதீ யின்னிறமே சேர்தலினல்—வெள்ளச்
சடையானைச் செப்பறையில் தாண்டவனைச் சூலப்
படையானை மாமணியென் பாம்.

(அ - ரை.) சிவனுக்கு:—உள்ள இருள் போக்குதலால் - மனத்தின் அறிவின்மையை நீக்குவதால். ஓ துரகம் தாங்குதலால் - பிரணவமாகிய குதிரை தாங்குகிறபடியால்.

மாணிக்கத்திற்கு:—உள்ள இருள் - இருக்கிற இருள். ஓது உரகம் - சொல்லப்படுகிற பாம்பு. (க)

[பாடகருக்கும் பளிக்குமேடைக்குஞ் சிலேடையாகப் பாடியது]

118. நேசமிகும் பாடகரும் நீள்பளிக்கு மேடைகளும்
தேசங் குலவவிசை செந்திலே—பாசமெலாம்

பேரக்கிநல் ஞானம் புகட்டி உயர்தவத்தில்
ஊக்கியருள் வேள்முருக னூர்.

(அ-ரை.) பாடகர்கள் - இசைப் புலவர்கள். தேசம் குலவ - பல நாடுகளிலும் புகழ் விளங்க. தேசு அங்கு உலவ - பளிங்கின் ஒளி அங்கே விளங்க. (கo)

[இளைஞருக்கும் கள்வருக்கும் மூடருக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

119. காமமிகுங் காளையருங் கள்வரும் மூடரும்
தீமனங் கற்பொருவுஞ் செந்திலே—ஏமமிகும்
காலன் பயத்தைக் கடக்கும் வழியுணர்த்தும்
வேலன் திருமுருகன் வீடு.

(அ-ரை.) தீம் அனங்கன் பொருவும் - சிவன் நெற்றிக் கண்ணு லெரிந்த காமனை ஒத்திருக்கும். தீ மனம் கல் பொருவும்- கொடிய மனம் கல்லைப்போன்றிருக்கும். ஏமம்-காவல்; காக்க. (கக)

## உஅ. ரா. உலகநாதப் பிள்ளை

[இவர் புதுக்கோட்டையில் இருந்தவர். பள்ளிக் கூடங்களின் ஆய்வாளராகப் பணிபுரிந்தவர். இவருடைய பெயருக்கு முன்னால் பல்கலை வித்துவான் என்னுஞ் சொல்லுங் காணப்படுகிறது. இவர் புதுக்கோட்டை மன்னர்மீது பல செய்யுட்கள் பாடியுள்ளார். அவை நூல்வடிவாக வெளி வந்துள்ளன.]

[கதிரவனுக்கும் புதுக்கோட்டை மன்னருக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

120. உலகமதி லொருகோடி அண்டநா யகனுகி
உதயகிரி மேவி நாளும்
உலாவியுல கெங்கும் குணக்கடல் குடக்கடலி
னூடுசென் றுயிர்க்கு யிரதாய்

நிலவுபல நாளுக்கும் அரசாகி மாரிக்கு
நிமித்தகா ரணமு மாகி
நிலவுலக மீதிருட் பகைநிக்ர கஞ்செய்து
நேயபைங் கூழ்வ ளர்த்துக்
குலவுபல துதிகொடுல கினைத்தூய தாக்கியே
கோதிலிசை யொளிப ரப்பிக்
குலமிலகு மொருசக்ர மெங்கும் நடாத்தியே
குணசீலர் அககமல மாம்
மலர்மலர மார்த்தாண்ட னுக்குமேல் மேலென்ன
மார்த்தாண்ட பைர வப்பேர்
மன்னும்ஹிஸ் ஹைனெஸெனு மகிபனென் றென்றுமிக
வாழ்கசெங் கோல்வாழ் கவே.

(அ - ரை.) *அண்டநாயகன் – உலகத்தலைவன். குணக் கடல் – கீழ்கடல். குடக்கடல் - மேல்கடல். மாரி – மழை. நிக் ரகஞ் செய்து – போக்கி. அக கமலம் - மனத்தாமரை. மார்த் தாண்டன்-கதிரவன். ஹிஸ் ஹைனெஸ்—மேன்மை தங்கிய.* (௬)

[திங்களுக்கும் புதுக்கோட்டை மன்னருக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

121. சீர்த்திகொள் பாற்கடல் உதித்தென்று மேன்மைபெறு
தேவர்கள் குலதி லகமாய்
சீர்பரவும் இறைவற்கு நேத்திரஸ் தானமாய்
திவ்யதே சோம யமதாய்
வார்த்தைகொள் அமிர்தப்ர வாகமாய் எங்குநிறை
வயங்குகாட் சிக்கெ ளியதாய்
மருவுமிர வலர்சங் கடத்தைநீக் கிடுவதாய்
வளருமெண் ணெண்க லையதாய்
கீர்த்திகொள் தண்ணருள் முகத்திலுற் பலமலர்
கிளர்த்திநல் லிறைவர் முடியில்

கிளருமணி முடியதாய்ப் புதுக்கோட்டை யாட்சியெங்
கென்றுநிலை பெறுகேண்மையாய்
பார்த்திகழ் குடக்கடல் குணக்கடல் உலாவியே
பாரசந் தோட மேவும்
பான்மதி எனும்ஹைஹனெஸ் மார்த்தாண்ட பைரபூ
பாலனெங் கோன்வாழ் கவே.

(அ - ரை.) *இறைவர்க்கு - அரசர்க்கு; சிவபெருமானுக்கு நேத்திர ஸ்தானம் – கண். தேசோமயம் - ஒளி வடிவம். எண்ணெண்கலை - அறுபத்துநான்கு கலை; பதினாறு கலை. உற்பலம் – கருங்குவளை. பால்மதி – வெண்ணிலா. இரவலர் சங்கடம் - யாசகர் வறுமைத்துன்பம்; இரவு விரியும் இருளின் துன்பம். இறைவர் முடியில் - சிவபெருமான் முடியில்; பல அரசர்கள் கிரீடத்தில்.* (உ)

## உக. சரபம். முத்துச்சாமிக் கவிராயர்

[இவர் கோயமுத்தூர் மாவட்டம் உடுமலைப்பேட்டையில் 1863ஆம் ஆண்டிற் பிறந்தவர். நன்கு தமிழைக் கற்று மாம்பழக் கவிச்சிங்க நாவலருடைய கையேட்டுக்காரராக இருந்தார். பிறகு கன்னிவாடி பெருநிலக் கிழாருடைய அவைக்களப் புலவராக விளங்கினார். இவர் மகா லோபி நாடகம் முதலிய பல நாடகங்களை இயற்றினார்.]

[கன்னிவாடிப் பெருநிலக் கிழார்மீது பாடியது.]

122. நானியம்பும் பாடலுக்கு ஞாபகமெந் நாளுநிற்க
மானியப்பூத் தந்த மகராசன்—வானியஞ்சேர்
ஆத்தானக் கன்னிநகர் அப்பைய சாமியெனைக்
காத்தான் எனக்காத்தான் காண்.

(அ - ரை.) *மானியம்பூ-இறையிலி நிலம். ஆத்தானம்-அவை காத்தான் – காக்குங் கடவுள். வான் இயம்சேர் - பெருமையுடைய இசைக் கருவிகள் சேர்ந்த.* (க)

[பெருநிலக்கிழார் சினங்கொண்டிருந்த போது பாடியது.]

123. விண்ணிற் கம்பிக் குமுறியிடி
வீழ்த்தி வெகுபேர் உயிரையிந்த
மண்ணுக் கிரையாய்ப் பண்ணுமென்று
மழைமே கத்தை வெறுப்பதுண்டோ
தண்ணிற் பொலியுந் தடங்கன்னித்
தலத்தைப் புரக்கும் துரைப்பாண்டி
எண்ணிப் பார்க்கில் உன்கோபம்
எமக்கும் இனிய யோகமரோ.

(அ - ரை.) விண்ணில் - வானில். தண் - குளிர்ச்சி. கன்னித்தலம் - கன்னிவாடி. யோகம் - நல்வினை. (உ)

## ௩௦. அண்ணுமலை உபாத்தியாயர்

[கொங்குவள நாட்டில் பல்லடம் பிரிவில் உள்ள கேத்தனூர் என்னுஞ் சிற்றூரிலே பிறந்தவர். அம்மை நோயினல் கண் பார்வையை இழந்தும் கேள்வியினுல் கல்வியை நன்கு கற்றுக்கொண்டவர்.]

[கந்தசாமிக் கவிராயர் கூட்டிய அவையிற் பெருமாள்மீது பாடியன.]

124. ஈரி ரண்டுமுன் றென்று மேகமும்
ஏக மாகியர் பெய்யு மேல்வையில்
காரி தண்டிரண் டான பக்கமும்
கழிய நாகமுன் கையி னுலெடுத்
தாரி ரண்டுகா லத்தி னுஞ்சுரந்(து)
அமுதம் ஈயுமா னிரையளித்தவன்
ஓரி ரண்டுதாள் சென்னி வைப்பவர்க்(கு)
உற்ப விக்குமூழ் வினைக ளில்லையே.

(அ - ரை.) ஈரிரண்டு மூன்று - ௪+௩=௭ சப்த மேகங்களும். ஏகமாகி - ஒன்றாகி. அம் பெய்யும் எல்லையில் - மழையைப் பெய்கின்ற காலத்தில். நாகம் முன் கையினால் எடுத்து - மலையை முன்பு கையாலே தூக்கி. அமுதம் ஈயும் ஆன் நிரை அளித்தவன் - அமுதமாகிய பாலினைக் கொடுக்கும் பசுக் கூட்டங்களைக் காப்பாற்றியவன். சென்னி - தலை. உற்பவிக்கும் - பிறக்கும். (௧)

125. தீங்க டாவகை தூங்கிப் போய்விழும்
செல்வ வாழ்க்கையில் சீரி யோரையும்
பாங்க டாவெனும் பாவ ராய்விலைப்
பாவை மார்களாம் பரவை மூழ்கியே
தாங்க டாரமாம் பூப்பொ னுரையும்
தள்ளி யேகிடும் தடிய ராயினும்
வேங்க டாசலத் தானை யேத்துவார்
மேவி வாழ்குவா ரேவை குந்தமே.

(அ - ரை.) தீங்கு அடாவகை - தீங்கானது வருத்தாதபடி. பாங்கு - நல்லியல்பு. விலைப் பாவைமார்கள் - விலைமாதர்கள். பரவை - கடல். தாரமாம் - மனைவியாகும். பூம்பொனுரையும் - அழகிய திருமகளைப் போன்ற பெண்களையும். வேங்கடாசலத்தான் - வடவேங்கட மலையான். வைகுந்தம் - திருமால் உலகம். (௨)

## ௩௧. விசுவநாத முதலியார்

[இவர் சென்னைமாநகரில் சைதாப்பேட்டையில் வாழ்ந்திருந்தவர். ஆங்கிலத்தில் பி. ஏ. வரை கல்வி கற்றுத் தாசில்தாராக அலுவலேற்று உடுமலைப் பேட்டை முதலிய இடங்களில் வசித்திருந்தவர். சந்திரவதனை, இரண்டு சகோதரர்கள் முதலிய நூல்களை இவர் எழுதியுள்ளார்.]

[பழநியில் இருந்த மாம்பழக் கவிச்சிங்க நாவலரைப் பாராட்டிப் பாடியது.]

126. கும்பமுனி யோஒட்டக் கூத்தனே சேடனே
கம்பனே காளமே கந்தானே—பம்புவிடப்
பாம்பணியுந் தேவருளும் பாலனுற்று வாழ்பழநி
மாம்பழக்க விச்சிங்க மால்.

(அ - ரை.) கும்பமுனி-அகத்தியர். சேடன்-ஆதிசேடன். பம்பு - மிகுதியான. பாம்பணியும் தே - சிவபெருமான். பாலன் - தண்டபாணிக் கடவுள். (௧)

## ௩௨. பொன்னுச்சாமித் தேவர்

[இராமநாதபுரம் மன்னராக விளங்கிய முத்து ராமலிங்க சேதுபதி அவர்களின் உடன்பிறந்தவர்; மதுரையில் தமிழ்ச்சங்கத்தை ஏற்படுத்திய பாண்டித் துரைத் தேவரின் தந்தையார். கல்வியறிவிற் சிறந்த இவர் தனிப்பாடல்கள் பல பாடியுள்ளார்.]

[இராமலிங்கம் என்பவர் விரைவில் வீட்டிற்குச் சென்றுவிட்டதைக் கண்டு பாடியது.]

127. எட்டு மணியோ இலேநீ எனையதற்குள்
விட்டுப் பிரிந்த விதமென்னே—இட்டமனை
மாலா மயலா மடியா மமதையா
சீலா இராமலிங்கம் செப்பு.

(அ - ரை.) மனைமாலா-மனைவியின்மீது காதலா? மடியா-சோம்பேறித்தன்மையா? மமதையா - ஆணவமா? (௧)

[இராமலிங்கக் குருக்கள் என்பவர் தம்மிடம் வருதலை விரும்பிப் பாடியது.]

128. அஞ்சிரட்டி செய்வருடம் ஆளடிமை யில்திரிந்தும்
கஞ்சியன்றிக் காணுயக் காவலனல்—மிஞ்சியது
பூனு புதுமனையா பூவாசொல் புத்தியிலா
வீனு இராமலிங்க மே.

(அ - ரை) அஞ்சிராட்டி - பத்து. புன்ன - அணிகலன். பூ - மலர். (௨)

[கிருட்டிண ஐயங்கார் என்பவரின் பாட்டைப் போக்கிவிட்ட போது பாடியது.]

129. கோட்டுமலை கூவுமுனம் கூம்பா மலர்க்கரத்தைக்
காட்டு கிருட்டிணநின் காகிதத்தைப்—போட்டுவிட்ட
தன்றி அயர்த்தாம் அதனுட் பொருளை மரு(து)
இன்றுமொன் றீவாய் இசைந்து.

(அ - ரை.) அயர்த்தாம் - மறந்தாம். (௩)

[கப்பலின் அலைவால் குடற்குழப்பம் உண்டாகி வருந்தியபோது பாடியது.]

130. கரதலியெங் கேநெடிய கார்முகமெங் கேகடக்கும்
தூதுவனெங் கேஇளைய தோன்றலெங்கே—சேதுதராது
இன்றெமைப்போல் தோணிமிசை ஏறின் இரகுபதி
அன்றுபடும் பாடுமிதே யாம்

(அ - ரை.) கார்முகம் - வில்; தோன்றல் - இலட்சுமணன்.
இரகுபதி - இராமன் (௪)

[சிவகங்கையில் தங்கியிருந்தபோது பாடியது.]

131. மூட்டைப்பூச் சிக்கடியும் மொய்த்த கொசுக்கடியும்
கேட்டையே தேட்டமுறும் கேடரும்—நாட்டமிகு
கேதபுர மானசிவ கெங்கைவிட்டு மால்ராம
நாதபுரஞ் சேர்வதெந்த நாள்.

(அ - ரை.) கேடர் - தீயோர். கேதபுரம் - குற்றம் பொருந்திய ஊர். (௫)

## ௩௩. துரைசாமிக் கவிராயர்

[இவர் வாழ்ந்த இடம் முதலியன விளங்கவில்லை. முருகேசக் கவிராயரைப் பாராட்டிப் பின்வரும் பாடலைப் பாடியிருக்கிறார்.]

132. செந்தமிழில் அகத்தியனும் பெருமுனியும்
குறுமுனியாய்த் திகைக்க வந்தோன்
சந்தமலங் காரங்கற் பனைமதுர
கவிபொழியுஞ் சத்த மேகம்
பந்தமகன் முத்திதருஞ் சைவசம
யாசாரன் பழநி வேலன்
கந்தமல ரடிமறவா முருகேசக்
கவிராச கண்ய வானே.

(அ - ரை.) *சத்தமேகம் - ஏழு முகில்கள். பந்தமகல் - பாசபந்தத்தை அகலச் செய்து.* (க)

## ௩௪. அட்டாவதானம் வேலாயுதக் கவிராயர்

[பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணவர்களில் ஒருவர்.]

[இவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைப் பாராட்டிப் பாடியது.]

133. கந்தவே ளோவலது கலைமகளோ இவ்வுருக்கொண்
டாய்காண் உன்னை,
அந்தநாட் டவமிருந்து புலவோருக் கரசுசெய
அன்பாற் பெற்ற,
தந்தையே தந்தையுனைத் தான்படிக்க வைத்தவனே
தமிழுக் காசான்,
சுந்தரமா மதிவதன மீனாட்சி சுந்தரனே
துலங்கும் மாலே.

(அ - ரை.) அரசுசெய-தலைமை தாங்க. துலங்கும் மாலே-விளங்குகின்ற திருமால் போன்றவனே. (க)

## கூடு. பொம்மையபாளையம் பால சித்தானந்தர்

[பொம்மையபாளையத்தில் துறவியாக வாழ்ந்திருந்தவர்.]

[சவராயலு நாயகரைப் பாராட்டிப் பாடியது.]

134. மீனாட்சி சுந்தரப்பேர் மேவு தமிழ்க்கடலில்
தானாட்சி யாம்அமிர்தம் தானுண்டு—வானாள்
புரந்தரனை மீறுசவ ராயலுபொற் பார்மால்
புரந்தருளும் என்னுரையும் பூண்டு.

(அ - ரை.) புரந்தரனை மீறு - தேவேந்திரனும் மேம்பட்டு விளங்குகின்ற. புரந்தருளும் - காப்பாற்றுவான். (க)

## கூசா. இராமசாமி ஐயர்

[தஞ்சைமாவட்டத்தினர். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தில் புகழ்பெற்று விளங்கியவர்.]

[பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலமானபோது பாடிய இரங்கற்பா.]

135. கும்பனெனில் அன்னேன் குறியவனா வானுலகில்
கம்பனெனில் அன்னேனும் கம்பனும்—அம்புவியில்
வேறுளார் வேறுளரா மீனாட்சி சுந்தரநின்
கூறெவரென் றேயகன்றாய் கூறு.

(அ - ரை.) கும்பன் - அகத்திய முனிவர். கம்பன் ஆம் - நடுக்கம் உடையவனாவான். கம்பம் - நடுக்கம். (க)

136. எனைவைத்தி எனைவைத்தி எனப்பதங்கள்
இடையிடைநின் றிரந்து வேண்ட

இனிவைப்பாம் இனிவைப்பாம் பொறுத்திடுமின்
பொறுத்திடுமின் என்று கூறி
நினைவுற்ற வொருகடிகைக் களவில்கவித்
தொடைதொடுத்து நிமலர் பூணப்
புனைவுற்ற மீனுட்சி சுந்தரவள்
ளலைப்போல்வார் புவியில் யாரே.

(அ - ரை.) *சொற்கள் பிள்ளையவர்களிடம் குறைவின்றிக் கூத்தாடி நின்றவென இதனுல் விளக்கியவாறு.* (உ)

[தம்பியாராகிய மகாவைத்தியநாதையர் காலமான போது பாடியவை.]

அறுசீராசிரியர் விருத்தம்

137. கானநூற் கற்பகமே அறுபத்து மூவர்முதல்
கடவுட் காதை
ஆனசீர் வளந்திருசிந் த்தாமணியே அமுதடியார்க்
களிக்குங் காம
தேனுவே எனக்கிளைய சிங்கமே என்னுயிரே
சிவமெய்ஞ் ஞான
பானுவே கலைக்கடலே உனைப்பிரிந்திங் காற்றகிலேன்
பாவி யேனே.

(அ - ரை.) *கானம் - இசை. பானு - கதிரவன்.* (௩)

138. உயிரிழந்த காத்திரம்போல் ஒளியிழந்த
நேத்திரம்போல் உயர்செஞ் சாலிப்
பயிரிழந்த பண்ணையைப்போல் பதியிழந்த
மங்கையைப்போல் படர்கொள் கொம்பின்
இயலிழந்த் இளங்கொடிபோல் இறகிழந்த
பறவையைப்போல் இறைவன் காக்கும்
செயலிழந்த குடிகளைப்போல் உனையிழந்திங்
கிடருழந்தேன் தீமை யோனே.

நாரவித்த பேரவைக்கண் மகாவைத்ய நாதனெனும்
பேரவித்தாய் எங்களை விட் டெங்கொளித்தாய் பேசுகவே.

(அ - ரை.) நார் - அன்பு. (௨)

## ௩அ. அட்டாவதானம் அரங்கசாமி ஐயங்கார்

[தஞ்சைமாவட்டத்தில் உள்ள வடுவூர் என்னும் ஊரில் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியிருந்தார். அட்டாவதானஞ் செய்தலினும் வல்லவர்.]

[அரித்துவாரமங்கலம் இரகுநாதராசாளியார்மீது பாடியது.]

**141.** திருவளர் சகாத்தமோ ராயிரத் தெழுநூறு
சேர்ந்ததொண் ணூற்றிரண்டு
திகழ்கலியி னுலா யிரத்துத் தொளாயிரம்
செப்புமெழு பத்தொன்றினில்
திசைபுகழ்பி ரமோதூத வாண்டுவிர்ச் சிகமதி
யினில்தேதி பதினேழினில்
திதிநவமி நாழிகையோர் முப்பத்தெண் முக்கால்
சிறந்தமுற் பக்கமோது

பருவில்குரு வாரநாள் பன்னுபூ ரட்டாதி
பகிருபத் தொன்ப தரைமேற்
பயிலுத்தி ரட்டாதி அறுபத்து மூன்றுபரி
நாமயிரு பத்தேழரை
பாலவா கரணமோர் எட்டரையின் இரவிவில்
பங்கிலிரு பத்தேழின்மேல்
பரவமிர்த கடிகையுத யாதியைம் பத்தைந்து
பரசுநா லரையின்விசம்

கருவதில் விருச்சிகத் தோரையில் கேட்லடநாள்
கருதோன் றிலிற்சூ ரியன்
கனவுத்தி ரட்டராதி யோரிரண் டிற்றிங்கள்
கால்பூர நாலிற்குசன்
கர்பமதின் மூலமோர் றிற்புதன் காரியுங்
காசிலா மிருகசீரிடம்
கனிதிமூன் றிற்குருவும் அநுடநா லிற்பிருகு
கனியுமா திரைநாளினில்

அருகுட லிராகுபூ ராடம திரண்டினில்
ஆனதொரு கேதுசேரும்
அலகில்புகழ் சுபயோக சுபகரண நாளினில்
அரித்வார மங்கலத்திற்(கு)
அரசுசீ தரயோகி ராமாநு சதாசன்
ஆனபெயர் மேவுதூய்மை
அமையுமுயர் கோபால சாமிரகு நாதரா
சாளியவ தாரநாளே.

(அ - ரை.) இப்பாடல் இராசாளியாரின் பிறந்தநாட் குறிப்பை விளக்குகிறது. (க)

## ௩௧. அழகசுந்தரம்

[ஈழவளநாட்டில் சி. வை. தாமோதரம் பிள்ளையின் மகனாகத் தோன்றிய இவர் பி. ஏ. வரை கல்வி கற்றார். சென்னை அரசாங்கத்தார் தொகுத்த அகர வரிசை நூலின் ஆசிரியர் கூட்டத்தில் ஒருவராகப் பணிபுரிந்தார். கொழும்புப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சியாளராகவும் இருந்தார். இவருடைய பெயர் பிரான்சிங் கிங்ஸ்பெரி எனவும் வழங்கியது. கிறித்து மதச் சூறைக்காற்றினால் அடித்துச் செல்லப்பெற்ற யாழ்ப்பாணத் தமிழர்களில் இவரும் ஒருவர். இவர்

சைவசமய நூல்களையும் ஆராய்ந்தவர். இவர் இயற்றிய நூல்கள் ஏசுவரலாறு, அகப்பொருட்குறள், இராமன்கதை, பாண்டவர்கதை முதலியன.]

[பஞ்சாமிர்தம் பத்திரிகையை நடத்திய அ. மாதவையர் காலஞ் சென்றபோது பாடியன.]

142. இல்லாளும் மக்களும் ஏங்கிக்
கலங்க இனசனர்கள்
எல்லாரும் வாட இருநிலந்
தன்சுமை யால்வருந்த
நல்லார்கள் நைய நமற்கொல்லி
பாதத்தை நண்ணினன்காண்
சொல்லாமல் யாருக்கும் தோன்றல்மெய்ம்
மாதவத் தூயவனே.

(அ - ரை.) இனசனர்கள்-உறவினர்கள். இருநிலம்-பெரிய நிலம். நல்லார்கள் - நல்லவர்கள், நைய - வருந்த. நமற்கொல்லி பாதத்தை - நமனைக்கொன்ற சிவபெருமானுடைய திருவடிகளை. (க)

143. சடாயு புலம்பத் தசரதன்சென் றுற்றபோல்
புடவியிலே யான்புலம்பப் போனாய்—கடையனியான்
எப்போதும் இம்பர் இருப்பேனோ மாதவையா
தப்பாதுன் பின்வருவேன் சார்ந்து.

(அ - ரை.) புடவியிலே - இவ்வுலகத்திலே. கடையன் - கடைப்பட்டவன். இம்பர் - இவ்வுலகம். (உ)

## ௪௦. இராமலிங்கக் கவிராயர் (பேட்டை)

[பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிக்கு அண்மையிலே உள்ள பேட்டையில் வாழ்ந்திருந்தவர்]

[இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர்மீது பாடியது]

144. மணிகொண்ட பஃறலைப் பாந்தளா முடிதேவிய
மாமேரு வுந்த னிக்க
மாகமு நடுங்கபகி ரண்டமு மொடுங்கவுண்
மாயாத கதந்தி கர்ந்த
மலைமயிலின் முதுகிலெழு தாவலோற் பவகுகனை
மனமென்று மகிழ் றுமே
மதிழ்ந்ததுச் சனைசெய்து தொழுங்கருணை வள்ளலே
மாதிதியம் உதவு தருவே
தணிகொண்ட மாதவத் தோர்கள்மதம் அகலாத
தேசோம யாநத் தமாம்
சேதநா யகனுதன் விளக்கும்பு ராணத்தைத்
திறமாயச் சிறப தித்துச்
செல்வமிக் குயர்கிர்த்தி தன்மேர் விளங்கிடச்
செமமான கவிகள் பாடும்
திவ்யகவி வாணர்கட் கமிர்தபுத் தகமருள்
செழுங்கருணை பொழியு முகிலே
அணிகொண்ட கல்வியது வாக்கதன் மாண்புபொலி
அதிகமா ஞானம் வாவும்
அமைந்தசிவ ஞானமணி மன்னவரு வால்வந்த
அமிர்தகுண மான முதலே
ஆகம்போன் மதிமுகம் நாசிகுமிழ் வேய்த்தோள்
அணங்குநிகர் மின்னுரேசம்
அன்புபெற் றேங்கிவாழ் காமனென மடமெழுதி
அனுதினம் பார்க்கு மரசே!
கணிகொண்ட கல்விமாம் பயிரன்பு நீராக்
கவின்பெற வளர்த்து நாளும்
காக்கலரு யாதனு பவித்துவளர் சீவநீன்
காட்சியை உரைக்க வெளிதோ

கமலமா துறையுநல் புதுவைமா நகரில்வாழ்
கர்த்தனே பொன்னுச் சாமிக்
கன்னனே மேருபுய தீரகட் டழகமுக
கமலவசி கரநா தனே.

(அ-ரை.) பஃறலைப் பாந்தள் - பல தலைகளையுடைய பாம்பு (ஆயிரந்தலை ஆதிசேடன்) மாமேரு - மகா மேருமலை. மாகம் - விண். பகிரண்டம் - வெளியண்டம். அவுணர் மாய-அவுணர்கள் தொலைய. சரவணோற்பவ குகன் - சரவணப் பொய்கையில் தோன்றிய முருகக்கடவுள். தருவே - கற்பக தருவைப் போன்றவனே! சேதுநாயகன். அருள்விளக்கும் புராணம்-சேது புராணம். ஆகம் பொன் - உடல் பொன்னைப் போன்றது. மதிமுகம் - முகம் திங்களைப் போன்றது. நாசி குமிழ் - மூக்குக் குமிழை யொத்தது. வேய்த்தோள் - தோள் மூங்கிலை யொத்தது. அணங்கு நேர் - தெய்வப் பெண்களை யொத்த. மின்னார் - பெண்கள். கண்கொண்ட - மலராகக் கண்ணைப் பதித்தலைக்கொண்ட. கவின்பெற - அழகுபெற. கமல மாது - திருமகள். புதுவைமா நகர் - இராமநாதபுரம். (௩)

## ௪௧. பெ. உலகநாத முதலியார்

[சென்னைமா நகரில் வாழ்ந்திருந்தவர். நார்மல் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். கோமளபுரம் இராசகோபால பிள்ளையிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுணர்ந்தவர்.]

[சேது புராணம் ஒன்று வேண்டுமென்று பொன்னுச்சாமித் தேவருக்குப் பாடியனுப்பியது]

**145.** அல்லேந்தும் உருவரக்கர் குலஞ்செற்ற
அடல்வீரன் அன்பார் தோழன்
வில்லேந்து நெடுங்கரத்துக் குகப்பெருமான்
குலவிளக்காம் நங்கள்
மல்லேந்து மணிவரைத்தோட் பொன்னுச்சா
மிப்பெயர்கொள் வள்ளால் மிக்க

சொல்லேந்து சேதுபுரா னந்தனை யெற்
கருள்செய்நற் சொற்கொள் வாயே.

(அ-ரை.) அல்லேந்தும் - கருமையை மிகுதியாகக்கொண்ட. உருவ அவுணர் - உருவத்தைக் கொண்ட அரக்கர்கள். குலம் செற்ற - குலத்தையழித்த. அடல் - வலிமை. மல்லேந்து - மற்போரைக் கொண்ட. (க)

## ௫௨. வா. இராமாநுசன் கவிராயர்

[திருநெல்வேலி மாவட்டத்தில் ஆழ்வார் திருநக ரியில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் வானிளவரசு கவிராசர். இருவருஞ் சிறந்த புலவர்கள்.]

[சுப்பிரமணியர் கோவை என்னும் நூலைப் புகழ்ந்து பாடியது.]

146. நீர்மேவு செஞ்சடைக் கடவுள்வாழ் வெள்ளிவரை
நேர்திருக் கோணு சலம்
நிறைகருணை வளர்திருக் கேதீச் சரமின்னும்
நிகரில்சிவ தலம நேகம்
நிலைகொண்டு திகழீழ மண்டலத் திற்பெருமை
நிறைதனதன் வாழ்ந கரமும்
நிதிதங்கு சசிகேள்வன் அரசுசெயு நகரமும்
நிகரோ எனச்சொல் வளமும்

ஏர்கொண்ட செந்நெலும் வார்கொண்ட கன்னலும்
இளையார்கள் பந்து பயிலும்
இலகுமணி மேடையும் அவருலவு மோடையும்
எழில்கொள் சொன்னத்து வசமும்
இனியவான சாலையுங் கனிகள்மிகு சோலையும்
இரத்னகோ புரம திள்களும்

இறுகாத உரைபெறும் அதிதிபுனர் வாசவோ
டிசைசகல திருவும் ஓங்கிச்

சீர்மேவு திருவாளைக் கோட்டைமுரு கற்குநீ
செய்கவோர் கோவை யென்று
செந்தமிழ் வளர்த்திடத் தென்னவர்கோன் செல்வ
வான்கொடையில் வள்ளல் போல்வான்
தீர்க்காயு ளான்சீர்க் கொழும்புநக ரதனில்வாழ்
சீலசிவ குருநா தவேள்
சேயனென வருநமசி வாயனென் றுலகில்
சிறந்துபொன் மாரி பொழியத்

தார்மேவு மலையாள மகராச ராசசமு
கத்தில்வளர் வித்வ ரத்நம்
சகலகலை ஞாயகக் குட்டிக் கவிஞரோ
தரவிர வாகு மன்னன்
தலத்தினில் உதித்தவடி வேலெனுங் கற்பகம்
தழைவுற்று முகம லர்ந்து
தரணியெல்லாப் பரி மளித்திடக் கோவையாந்
தாரைவெய்ந் தான்த ழையவே.

(அ - ரை.) வெள்ளிவலை - வெள்ளிமலை. திரு தங்கு - செல்வம் தங்கிய. சசி கேள்வன் - இந்திரன். வார்கொண்ட கன்னலும் - நீட்சியைக் கொண்ட கரும்பும். இளையார்கள் - பெண்கள். சொன்னத் துவசமும் - பொற்கொடியும். இசை - பொருந்திய. தென்னவன்நிகர் - பாண்டியனை யொத்த. சேயனென - மகன் என்று சொல்ல. (உ)

## சஙு. ஐயாச்சாமி முதலியார்

[பெங்களூரிற் பிறந்து கல்வி கற்றுச் சிறந்து விளங்கினர். அருமையான செய்யுட்களை விரைந்து பாடுவதில் வல்லவர்.]

6

[பாம்புக்குந் தாம்புக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

147. நஞ்சிருக்கும் நீண்டிருக்கும் நாரியர்கை யாடுமே
மிஞ்சிற் குடத்திட்டல் மேவுமே—செஞ்சொல்லால்
ஆம்பல் கலையுணர்ந்த அன்னுப்பிள் ளைவேளே
பாம்புந்தாம் புஞ்சரியாம் பார்.

(அ - ரை.) நஞ்சிருக்கும் - நஞ்சு இருத்தலைப் பெற்றிருக்கும்; நீண்டுபோய் இருக்கும். நாரியர்கை - பெண்களுடைய கை. செஞ்சொல்லால் - செம்மையான சொற்களால். தாம்பும் - கயிறும். (க)

[சிவனுக்கும் மலைக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

148. கொன்றை யணிதலால் கூன்பிறை யேந்துதலால்
பின்றலிலாச் சர்ப்பங்கள் பேணுதலால்—என்றும்
குவளைவளர் சேலங் குமாரசாமி வேளே
சிவனுங் கிரியுமொப்பாந் தேர்.

(அ - ரை.) கொன்றை - கொன்றை மலர். கூன் பிறை - வளைந்த பிறை. பின்றல் - பின் தங்குதல். (உ)

## ௪௪. சாமிநாதர் (இலங்கை)

[இவர் யாழ்ப்பாணம் மானிப்பாயில் இருந்தவர். தருமபுத்திர நாடகம் முதலிய நூல்களை எழுதியுள்ளார்.]

[முருகன்மீது பாடியது.]

149. ஆண்டுகொண் டவனிமுதல் அன்றிலங் கையிலுறையும்
அரியரா வணதி சிசரன்
அழகுசெறி சீதையைச் சிறைவைக்க ராமனாய்
அவதரித் திடுமா யவன்
துண்டவநு மான்சென் றறிந்துவந் தேசொலத்
தொடுகடலை அணைகட் டியே

சுக்ரீவ னுடுசேனை சூழ்ந்திட இலங்கையிற்
தொகுதியொடு போய டைந்து
வேண்டியம ருக்குவரு தம்பியும் பிள்ளைகளும்
வெகுமூல பலமும் அழிய
விறலிரா வணன்மடிய நொடியிலே சிறைமீட்ட
வீரரா கவன்மருக னே
நீண்டவன் பிலையெனினும் ஆண்டுகொண் டிடுமடிமை
நீயரு ளெனக்குதவு வாய்
நிகரில்தோண் டமனூற்றில் நிலவுசந் நிதிமேவும்
நிமலகுரு பரமு ருகனே.

(அ - ரை.) நிசிசரன் - அரக்கன். தொகுதியொடு-படைத் தொகுதியோடு. (௭)

## ௯௫. சாமிநாதப் புலவர்

[கொங்குவள நாட்டில் விசயமங்கலம் என்னும் ஊரில் சிறந்து விளங்கி யிருந்தவர். வாக்குப் பலித முள்ளவர்.]

[புற்றிரைச்சல் என்னும் ஊரிலிருந்த முத்தான் என்பவன்மீது பாடிய வசை.]

150. பாழ்த்தவப் புற்றிரைச்சல் பாவிமுத்தான் [குன்றையொப்ப
வீழ்த்தநெற்போர் வெண்பொடியாய் வேகவின்றே— [வாழ்ந்தக்
கொடாதான் இடாதான் குறுந்துணியுந் தோய்த்தே
உடாதான் பெருந்துயருள் உற்று.

(அ - ரை.) குன்றை யொப்ப - மலையைப்போல். குறுந் துணி - சிறிய உடை. (௭)

## ௪௬. ஐ. சாமிநாத முதலியார்

[பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணவராகிய தியாகராசச் செட்டியாரிடம் தமிழ் கற்றுப் புலவரானவர். இவர் இயற்றிய நூல் சாவித்திரி வெண்பா.]

[இவரும் உ. வே. சாமிநாதையருந் தஞ்சைக்குப் புகைவண்டியில் சென்றபோது தஞ்சைக் கோபுரத்தைக் கண்டதும் ஐயர் ஒரு வெண்பாப் பாடுமாறு இவருக்குக் கட்டளையிட்டார் அப்போது பாடியது.]

151. ஊனப் பிறவி ஒழிப்பாயே நன்னெஞ்சே
கானத்தில் நட்டமிடுங் காலுடையார்—ஞானத்
திருவுடையார் அம்மைபங்கில் சேர்வுடையார் தஞ்சைப்
பெருவுடையார் தம்மைநிதம் பேசு.

(அ - ரை.) ஊனப்பிறவி - குற்றத்தையுடைய பிறப்பு. கானத்தில் - காட்டில்; தில்லைவனத்தில் அல்லது திருவாலங்காட்டில் ஊழிக்காலச் சுடுகாட்டில் எனினுமாம். (க)

## ௪௭. மு. சாமிநாதர்

[ஈழவளநாட்டில் வட்டுக் கிழக்கு என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களில் வல்லவர்.]

[நவாலியில் களையோடைக் கண்ணகையம்மன் கோவிலுக்கு இவர் சென்றபோது கோவிலுக்கு அண்மையில் ஓரிடத்தில் கீரியும் பாம்பும் எலியுங்கூடி விளையாடிக் கொண்டிருந்தன. அப்பொழுது பாடியது.]

152. மலியா ணவமலி மாயையைநீக்கி மலர்ப்பதத்தைச்
சொலியா தரவொடு தோத்திரஞ் செய்யச் சுகந்தருவாய்
எலியா டரவொடு கீரியோன் றாகி இனிதிசைந்து
கலியாண மாயுறை யுங்களை யோடையிற் கண்ணகையே.

(அ - ரை.) ஆணவம் மலி - ஆணவம் மிகுந்த. மாயையை நீக்கி - மாயையைத் தொலைத்து. சொலி-சொல்லி. ஆதரவொடு அன்போடு. கலியாணமாய் - மகிழ்ச்சியாய். (க)

## ௩அ. சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதி

[இவர் தில்லையம்பதியில் வீரசைவ மரபில் தோன்றியவர். கல்வி கற்றுச் சிறப்படைந்த இவர் திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருத் துறையூர் வீரசைவாதீனத்தில் இருபதாவது தலைவ ராக எழுந்தருளியிருந்தார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழ், குமார தேவர் அபிடேகமாலை, திரிபதார்த்த உண்மை, உப தேச விளக்கம் முதலியன.

[தாமியற்றிய பிள்ளைத்தமிழின் காலம் முதலி யவை குறித்துப் பாடியது.]

153. அத்துவித வானந்த நித்யபரி பூரண
அகண்டசின் மயவ டிவமாய்
அமர்விருந் தாம்பிகை திருவடிக் கவனடி
அடைந்துமுது கிரிய தனில்வாழ்
உற்றிடுகு மாரதே வக்குரு பரன்பொனடி
ஒண்பணி விடைசெய் தொண்டன்
ஓதுமிப் பிள்ளைத் தமிழ்சாலி வாகனத்
தறுமா யிரத்தைந் நூற்றே
டொத்தபதி னென்றான சருவ தாரிப்பெயர்
உறுவருடம் ஆனி மதியில்
ஒங்குமிரு பத்தைந்து தேதிசனி வாரமுடன்
உறுமமர பக்க மதனில்
சொற்றவைந் தானநட் சத்திரந் திதியே
தூயதிர யோதசி யிவை

சூழுமிச் சுபதினம் சொக்கலிங் கத்தவன்
சூட்டினுன் பாமா லேயே.

(அ - ரை.) விருத்தாம்பிகை - பழமலையில் எழுந்தருளிய பெரியநாயகி. முதுகிரி - பழமலை; விருத்தாசலம். சொற்ற - சொல்லிய. (க)

## சகூ. நம்புசாமி ஐயர்

[கொங்குவளநாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள சிற்றூர் ஒன்றில் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார்.]

[சேலம் பகடால நரசிம்மலு நாயுடுவைப் பாராட்டிப் பாடியது.]

154. மகராச ராசஸ்ரீ சேலம்வாழ் பகடாலு
மதியூகி நரசிம் மலு
மாநாயு டவர்களின் நாடான துமித்திரர்
மனங்களின் புறுவ தாக
வட்டமலை என்னுமா நகர்தனில் தேசாபி
மானியர்கள் சபைமத் தியில்
வருடித்த மாரியால் அறிவிலா மூடராம்
வாடுசெஞ் சாலி பலவும்

சுகமாகி வளமாகிக் கதிரோங்கி யறிவுவிளை
சொல்லாக வல்ல நிபுணர்
சொல்லரிய தமிழ்தெலுங் காங்கிலம் ஆரியம்
துலுக்குமுத லாம்பா டையில்
சொல்லியே எல்லவர்கள் அல்லல்தீ ரச்செயும்
சுந்தரக் கிருப நேயர்

சுதேசாபி மானியாம் சபைகளுள் வருடிக்கும்
  சொல்லரிய கருணை மேகம்

செகமெலாம் புகழுநல் கல்கத்தா பம்பாயில்
  சேர்ந்தகாங் கிரஸ்ச பையில்
சென்றவர்க் கறியவே மன்ருடி யாவையும்
  தெரிவித்த சீவ ரத்தினம்
சென்னைமா நகரினும் கும்பகோ ணத்தினும்
  சேர்மகா சனச பையிலும்
செய்தஉபந் நியாசமதில் தேசாபி மானமே
  தெரியவரு டித்த மேகம்

தகைமைசேர் கவர்னராம் ராபர்ட்டு பூர்க்குடன்
  தனக்கே வருத்த மாகத்
தடைசெய்து பாரஸ்டு லாக்களைத் திருத்தெனத்
  தந்திரஞ் செய்யும் நிபுணர்
சகலரும் அறியவே கலாநிதி வழங்குநல்
  சாதுகுண சங்க லோலர்
தமக்குவந் தனஞ்சொலச் சகசிரச் சென்னியுள
  சக்கிரி தனக்கும் வசமோ ?

(அ - ரை.) *மித்திரர் மனங்கள் - நண்பர்களின் உள்ளங்கள். வருடித்த மாரியால் - பெய்த மழையினால். செஞ்சாலி அலவும் - செந்நெற்கள் அல்லாதனவும். எல்லவர்கள் அல்லல் தீரச்செயும் - எல்லோருடைய துன்பமும் தீரச்செய்யும். மன்ருடி- போரிட்டு. சீவரத்தினம் - உயிர்மணி. பாரஸ்டுலாக்கள் - காட்டிலாகாச் சட்டங்கள். நிபுணர்-நல்லறிவாளி. சகசிரச் சென்னியுள சக்கிரி - ஆயிரந்தலையுள்ள ஆதிசேடன்.* (௪)

## ரு௦. நரசிம்ம பாரதி

[இவர் திருநயம் என்னும் ஊரில் தோன்றியவர். செட்டிமார்நாட்டில் பள்ளத்தூர் முதலிய இடங்களில் வாழ்ந்திருந்தவர். அங்கயற்கண்ணம்மை பிள்ளைத்

தமிழ், சோமசுந்தரேசர் பதிகம் முதலிய நூல்கள் இயற்றியவர்.]

[முற்றிலும் மோனைவரப் பாடிய ஆசிரியவிருத்தம்.]

155. கங்கையங் கமலங் கடுக்கையின் கண்ணிதிங்
கட்கலை கரந்தை காட்டும்
கடிகொளறு கம்புலும் கமழ்சடைக் கண்ணுதல்
கறைக்கந்த ரன்க லங்கள்
செங்கைசெவி சிரமார்பு சேர்ந்தகட் செவியதாச்
செய்ததே கச்சி வபிரான்
செம்பாதி சேல்விழித் தேவிசிவை திகழத்
தினந்தினஞ் சேவை திருவோர்
அங்கையில் அணிந்தகனி அடைகாயொ டன்னங்கள்
அறுசுவையின் ஆராதனை
ஆதிசைவரின் ஆற்றி அகிலமிசை யாவுமாம்
ஆலவா யாதி அகம்
துங்கம துறும்படி தொண்டராற் றும்பூசை
துய்த்துஞற் றுந்தோ மெலாம்
சுடர்முனந் துகினமாச் சுந்தரேச் சுரரருள்வர்
தூயபள் ளத்தூ ரினே.

(அ - ரை.) கடுக்கையின் கண்ணி—கொன்றை மாலை. கடிகொள்-மணத்தைக் கொள்ளும். கண்ணுதல்-சிவபிரான். கறைக்கந்தரன் - நஞ்சுக்கறை யமைந்த கழுத்தையுடையவன். கட்செவி - பாம்பு. செம்பாதி - சரிபாதி. ஆலவாயாய் - திருவாலவாயை உடையவனே! சுடர்முனம் துகினமா - கதிரவன் முன் பனியாய். (க)

[காலில்லா வெண்பாவாகப் பாடியது.]

156. கரவு தவிர்வர் கனத ளவணி
கரவிர்பள் ளத்தூர் கருதி—மருவு

கயல்வி ழியைமெய் கலவு மழக
அயல வரிலை யருள்.

(அ - ரை.) கரவு-களவு. கனதன வணிகர் அவிர்-மிகுந்த செல்வமுடைய தனவணிகர்கள் விளங்குகின்ற. கயல்விழியை - அங்கயற்கண்ணம்மையை. கலவு - கலக்கும். அழக - சொக்கனே! (உ)

## ருக. நாராயணசாமி நாயகர்

[இவர் சிங்கப்பூர் வெள்ளையப்பு நாயகர் என்பவருடைய அருமைப் புதல்வராகத் தோன்றினர். நாகூரில் இருந்த முகமதுப்புலவர் என்பவரை ஆசிரியராகக்கொண்டு இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலவரானர்.]

[இவர் மூக்குத்தூளைக் குறித்துப் பாடியது.]

157. ஓசைக்குக் கேடு ஒருகுலைப்பூப் பூத்தாலோ
ஊசிக்குக் கேடு நுனியொடித்தால் — நாசிக்குக்
கேடாகும் ஐயையோ கெட்டதூள் அஃதைநீ
நாடாதே சொன்னேன் நலம்.

(அ - ரை.) வாரி - கடல். துலக்கமாய் - விளக்கமாய். பழமையான நூல். (க)

[ஆசிரியர்மீது வணக்கமாகப் பாடியது.]

158. இலக்கண இலக்கிய வாரியின் நீருண்
டிறைத்திடுங் காள மேகம்
இருநாழி வேளையில் நாகபந் தக்கவி
இசைக்கவே வல்ல தீரன்
துலக்கமாய்ச் சௌமிய சாகர நூற்குரை
சொல்லவே கற்ற தீரன்
சுகிர்தமிகு முகமது நபிபண் பிசைத்திடும்
சுத்தகவிப் பிரசங்க னும்

விளக்கமாய் முகமது கவுதெனும் காப்பியம்
விடங்கமாய்ச் சொன்ன சீலன்
வேதாந்த சித்தாந்த நூல்களும் மிக்கவே
விளங்கிய ஞான சொரூபன்
கலக்கமாய் என்னெஞ்சம் உழல்கின்ற நாளிலே
காரிகை தொன்னூல் முதல்
கனவவிழ்தம் ஈந்தெனைக் காத்திட்ட முகமதின்
காலையாம் துதிசெய் வோமே.

## ௫௨. மு. தெய்வநாயகம் பிள்ளை

[பாண்டிவள நாட்டில் முதுகுளத்தூரிலே பிறந்தவர். தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலவரான இவர் கோடைக்கானல் ஆங்கிலக்கிளப்பின் தலைமை எழுத்தாளராக விருந்தார். வசன கவிதை பாடுவதில் வல்லவர்.]

[புவனேந்திர காவியம் என்னும் நூலுக்குச் சாற்றுக் கவியாகப் பின்வரும் நான்கு வசனகவிதைகளையும் பாடினார்.]

159. சேதுசமஸ் தானத்தைச் சேர்ந்த முதுகுளத்தூ
ராதிக்கி ராமரந் தரங்களின் வாதங்
களைத்தீர்க்கா நின்றதர்ம கர்த்தா விருத்தங்
களைப்பா டுவதிற் கவி. (க)

160. சக்ரவர்த்தி யானகம்ப னுக்குச்ச மானங்கொத்
துக்கணக்குப் பாத்ய சுபயோகி—முக்கணனை
யேசிவன்பிர் மாவிஷ்ணு யேசுமக முதெனும்
தாசம்ப்ர தாயச்ச மா. (உ)

161. தானநிர்மா ணந்தெரிந்த தத்துவவி சாரியெனம்
மானருமை யாய்ப்பெற்ற மைத்துனர்ந—வினகற்பி

தாலங்கா ரப்ப்ரசங்கி சற்சனர்சி னேகரிந்த்ர
சாலவல்ல வர்மகரா ச. (௩)

162. ராசஸ்ரீ சுப்பையா பிள்ளையவர் கள்ராச
ராசன் புவனேந்த்ர ராசனது—வீசுபுகழ்
பெற்றகதை யைப்ரபந்த மாயியற்றி னூர்களதைக்
கற்றவர்கண் ணென்று சொன்னூர்கள். (௪)

*(அ - ரை.) இந்த நான்கு வெண்பாக்களையுந் தனித்தனியே பாட்டாகப் படிப்பதோடு உரைநடையாகவும் படிக்கலாம். இத்தகைய உரைநடைப் பாடல்களைத்தான் முன்னோர்கள் வசன கவிதை யென்றனர். இவ்வாறு வேறு சிலரும் வசன கவிதைகள் செய்துள்ளனர். (௪)*

## ௫௩. செகராவு முதலியார்

*[சென்னை இராயபுரத்தில் வாழ்ந்திருந்தவர். சிறந்த தமிழ்ப் புலவராகிய இவர் செயிண்ட் மேரீஸ் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். இவர் பொன்னுச்சாமி உலா என்னும் நூலைப் பாடியுள்ளார்.]*

*[பொன்னுச்சாமிக் கிராமணியாருக்கு எழுதிய சீட்டுக்கவி.]*

163. உலகமுதல் அத்தனையும் செய்துகாத் தழிப்பதே
உரியதிரு விளையாட்டெனு
உணரும்எம் பெருமான் உலகில்மனு வடிவமாய்
ஒதுங்குபூங் கொடியு யர்த்த
உம்பர்பணி வளனென்னும் திருநாம மாதவனை
ஒருநாளும் மறவா தவன்
உத்தமர்வாழ் திருராய புரவாசன் செந்தமிழின்
உவரியள விட்ட நேசன்

பல்கலையோர் விசுவாசன் சேகராவு கவிராசன்
பட்சமுடன் எழுது கவிதை
பழனவயல் தோறுமூர்வளைகள் பெறுமுத்தம் பரலாகிப்
பாவுசீ றடிவ ருந்தப்
பசியமலர்க் குழலவியை ஆற்றாமல் இடையேங்கப்
பாவைநடை பெற்ற தென்னப்
பச்சைமயில் பின்தொடரச் சென்றுகளை கொய்மாதர்
பண்புசெறி தண்டை நகரான்

கலைகவிஞர் யார்மனமு மொன்றுபட லெழுதழகன்
கற்பகம்பின் விட்ட கொடையான்
கதிரவன் குலோத்தமன் ஆத்திமலர் மார்பினன்
கருதுவோர்க் கினிய நண்பன்
கந்தப்பன் செய்தவப் பயனுருவாய் வந்ததெனக்
காசினியில் அவதரித்தோன்
கல்வியொடு செல்வநிறை பொன்னுச்சா மிக்குமணன்
கருணைமுகங் கொண்டு காண்க

இலகுமுத் தமிழ்வல்ல வீரமா முனிவன்முன்
இயற்றுதேம் பாவணிக்கு
எழுதிய விருத்தியுரைக் கேற்பநீ செய்தபோல்
இவ்விரண் டாங்காண் டமும்
இனிதுநடை பெறவுதவி செய்கவென நின்மீதில்
இயல்உலா ஒன்றெழுதினேன்
என்கருத் திசைவித்து மங்களப் புலவரால்
இசைபெற்று வாழ்க மாதோ.

(அ - ரை.) *வளன்-கிறித்து மார்க்கவளன். செந்தமிழின் உவரியளவிட்ட - செந்தமிழ்க் கடலின் எல்லையை உணர்ந்த பலகலையோர் - பல கலைகளை உணர்ந்த. பழனவயல் - நெல்வயல்கள். வளைகள் - சங்குகள். பரல் - பருக்கைக் கற்கள். பங்கயச் சீறடி - தாமரை மலரைப்போன்ற சிறிய அடி. பசிய மலர்க்*

குழல் அளியை ஆற்ருமல் - பசிய கூந்தலில் அணிந்த மலரில் தங்கிய வண்டின் சுமையைத் தாங்க முடியாமல். இடையேங்க - இடை வருந்த. பாவைநடை பெற்றதென்ன - பாவையானது நடக்கத் தொடங்கினற்போல. பச்சைமயில் - பசிய சிறகுகளையுடைய மயில்கள். களைகொய் மாதர் - களையெடுக்கிற பெண்கள். தண்டை நகரான் - தண்டையார்ப்பேட்டையில் இருப்பவன். கற்பகம் பின்னிட்ட கொடையான் - கற்பக தருவும் பின்னிடத்தக்க கொடையை உடையவன். கதிரவன் குலோத்தமன் - சூரியனுடைய வழி முறையிற் பிறந்தவன். காசினியில் அவதரித்தோன் - உலகத்திற் பிறந்தவன். குமணன் - குமணனைப்போன்ற கொடையை உடையவன். தேம்பாவணி-கிறிஸ்துவின் வரலாற்றைக் கூறும் நூல். (௧)

## ௫௨. தாசி பெரியகுப்பு

[சோழவள நாட்டில் மாயூரத்தில் பத்தொன்பதாம் நூற்ருண்டின் இடையில் வாழ்ந்திருந்தவள். நூல்கள் பலவற்றைக் கற்றுச் சிறந்த புலமை பெற்றிருந்தாள். கம்பர் தமது இராமாயணத்திற்குத் தாசி யொருத்தியிடஞ் சாற்றுக்கவி பெற்றதுபோல் இவளிடமும் பலர் சாற்றுக்கவி பெற்றனர்.]

[மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா என்னும் நூலுக்கு இவள் கொடுத்த சிறப்புப்பாயிரம்.]

164. மீயூரும் முகிற்குலங்கள் பொங்கரில்வாழ்
புதுவைநகர் மேலோன் நல்ல
தாயாரும் புகழ்நாரா யணசாமி
மனுச்சோழன் சரிதப்பாவை
வேயூரு முத்தனடி யவர்படிக்கப்
பார்க்கவதை விரும்பிக் கேட்க
வாயூருங் கண்ணுடும் செவிதேடும்
மேலினியாம் வழுத்தல் என்னே.

(அ - ரை.) மீயூரும் - மேலே உயரும். பொ[illegible] - [illegible] வேயூரும் முத்தன் - சிவபெருமான். வழுத்தல் - [illegible] ([illegible])

## ௫௩. ரா. சுப்பிரமணிய ஐயர்

[சோழவள நாட்டில் வையை என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தஞ்சையிலுள்ள செயின்ட் பீட்டர்ஸ் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர்.]

[அரித்துவாரமங்கலம் கோபாலசாமி இரகுநாத ராசாளியார் மேல் பாடியது]

165. பணிகொண்ட கடலாடை உலகத் துயிர்க்கெலாம்
பாருமல் உருகும் உளமும்
மன்னவன் குடைநிழல் வைகிவாழ் நன்றியினை
மறவாமல் உருகும் உளமும்

பணிகொண்ட பாயலான் பாதார விந்தத்தில்
பத்தியாய் உருகும் உளமும்
பண்டைநம் பெரியோர்கள் பார்த்ததென உள்ளொளி
பரிந்துபார்த் துருகு முளமும்

கனிகொண்ட ஓர்வடி வெடுத்ததென உலகில்வரு
காருண்ய சீல லோலன்
கார்பொழி வளஞ்செறி அரித்வார மங்கலம்
கவின்பெற விளங்கும் வள்ளல்

அணிகொண்ட கோபால சாமிரகு நாததுரை
ஆயுளோடு செல்வம் நீடி
அரிமருகன் முருகனெனும் அழகுபெறு மகவுடன்
அநிசமிசை வாழி வாழி.

(அ - ரை.) பணிகொண்ட பாயலான் - படத்தையுடைய ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்ட திருமால். பாதாரவிந்தம் - திருவடித்தாமரை. கனிகொண்ட - கனிந்தலைக்கொண்ட

## ருசு. சுந்தரராச ஐயர்

[மதுரைநகரில் இருந்தவர்: ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்றவர். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் உதவிக் காரியதரிசியாக வேலை பார்த்தார்.]

[உ. வே. சுவாமிநாதையரைப் புகழ்ந்து பாடியன.]

166. உத்தம தானபுரம் ஒங்கத் தமிழாய்ந்து
புத்தக தானம் புரிந்தோம்பி—முத்தமிழ்நூல்
ஆய்வோர்க் கமுதிங் கருள்சாமி நாதப்பேர்த்
தூயோனை நெஞ்சே துதி.

(அ - ரை.) *உத்தமதானபுரம் - உ. வே. சாமிநாதையருடைய ஊர். புரிந்தோம்பி - செய்து பாதுகாத்து.* (க)

167. மன்னர் மதிப்ப மகாமண் டலமதிப்பப்
பன்னருமகாமகோ பாத்யாயர்—என்னவரும்
உத்தமப்பேர் பூண்டிங் கொளிர்சாமி நாதனைப்போல்
முத்தமிழ்க்கார் தொண்டுசெய்தார் முன்.

(அ - ரை.) *மகாமண்டலம் பெரிய நிலவுலகம். பன்னரும்- கூறுதற்கரிய. ஒளிர் - விளங்குகின்ற.* (உ)

## ருஎ. சையது முகியித்தீன் கவிராயர்

[கோட்டாறு என்னும் ஊரில் முகமதிய சமயத்தில் தோன்றியவர். இளம்பருவத்திலேயே தமிழ்மொழியை நன்கு கற்றுப் புலவரானவர். மலையாள நாட்டையடைந்து அரசனுடைய அவைக்களப் புலவராக விளங்கியிருந்தவர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் முகியித்தீன் ஆண்டவர் திருப்புகழ் முதலியன.]

[இஃதிபார்கான் என்னும் அரசன், "நீர்யார் உம்மீது என்ன வழக்கு?" என்று கேட்டபோது பாடியது.]

168\. ஆதிநாள் முவ்வேழு தலைமுறையின் முதலாக
அதிமதுர கவிதை வண்ணம்
அழகார் உலாமடல் குறவஞ்சி அம்மானை
அவையோடு சந்த மாலை

நீதிசெறி பலபனுவல் செய்தலங் காரமொடு
நீடுபல பாவு ரைப்போன்
நேசமுடன் எக்கவிக ளுக்கும்ப்ர சங்கமே
நிகழ்த்திடு நயத்த புலவன்

தூதுதெரி யாதிந்த வெள்ளோலை ஒப்பம்
தொடங்கியான் பிணைபட் டதால்
சொற்சோர்வி னுக்குமே பிணையதாய் வலையிலே
துயர்பட்ட பிணையா கினேன்

தாதுசெறி மாதுவாழ் நீதிபெறும் யோகனே
தயவதிக மான சீலா
தனமங்கை நகராளு கின்றஇஃ திபார்கான்
சாகிபே கீர்த்தி அரசே.

(அ - ரை.) முவ்வேழு - இருபத்தொன்று. பாவுரைப்பேன் - செய்யுட்கள் பாடுவேன். நயத்தபுலவன் - நன்மையான புலமையையுடையவன். வெள்ளோலை ஒப்பம் - பிணையாவதாக ஓலையில் இட்ட கையெழுத்து. துயர்பட்ட - துன்புடைய. தாது செறி மாது - திருமகள். மங்கைநகர் - பாளையங்கோட்டை. (௧)

## ௫௮. சோணாசலம் பிள்ளை

[இவர் திருநெல்வேலி கீழைத்தெருவில் வசித்திருந்தார். இவருடைய தந்தையார் பெயர் காந்திமதிநாத பிள்ளை.]

[சேதுபுராணம், தனிப்பாடல்திரட்டு, திருக்கோவையார் உரை முதலிய நூல்கள் அனுப்பவேண்டு

மென்று இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர்க்கு எழுதியன.]

169. தேவாதி பன்தொழுஞ் சண்முக வேலனைச் சிந்தித்துநன்
மாவாழ்வு பெற்றநம் பொன்னுச் சுவாமி மகிபதியே
பாவாண ரைப்புரந் தேநிதி நல்குநின் பான்மைசொல
நாவா யிரம்படைத் தானிலை யேயந்த நான்முகனே.

(அ - ரை.) *தேவாதிபன் இந்திரன். மாவாழ்வு - சிறந்த வாழ்வு.* (க)

170. மன்னர் புகழ்பொன்னுச் சாமிவள்ள லேமிக்க
நன்னயஞ்சேர் சேது புராணமுடன்—மன்னு
திருக்கோவை யாருரையுஞ் சீர்தனிப் பாட்டும்
செருக்காகத் தந்தருளச் செய்.

(அ - ரை.) *நன்னயம்-நல்லதன்மை. செருக்காக-மகிழ்ச்சியாக.* (உ)

## ரு௧. சொக்கலிங்க பெத்தண்ணற் பூபதி

[இவர் ஆற்றங்கரைச் சமத்தானம் என்னும் ஊருக்குத் தலைவராக இருந்தவர். அறிஞர்களிடம் நூல்களைக் கற்றுப் புலமையுடையவராகத் திகழ்ந்தார். இவர், இருசொல் அலங்காரம், விடுகதைச் செய்யுட்கள் முதலியன இயற்றியுள்ளார்.]

[விடுகதையாகப் பாடியது.]

171. காய்கனியும் அருந்தாது நீருண் ணாது
கனத்தவுயிர் தனக்குமொரு சலன மில்லை
தேய்வான மேனியெல்லாம் புகுந்து கொள்ளும்
சீதரன்றன் புரியிலிது முதன்மை யாகும்
ஆய்ந்துரைக்கில் வலுத்தவூர் இதுவே யாகும்
அரியேறே சிவயோகர் யாவ ரேனும்

வாய்திறக்கில் பொருள்தனியே வந்து சேரும்
மற்றவர்கள் இதையறிய வழுத்து வாயே.

(அ - ரை.) (அ) (சு)

## கூ0. வி. தண்டபாணி தேசிகர்

[சோழவளநாட்டில் மாயூரத்திலே இருந்தவர். அந்நாளில் அங்குச் சிறந்த புலவராக விளங்கியிருந்த கிருட்டிணாநந்த யோகி என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார்.]

[தம் ஆசிரியர் இயற்றிய மயிலைச்சிலேடை வெண்பா வெளிவந்தபோது பாடியன.]

172. காவிரி நதியால் பலவள மோங்கும்
கவின்பெறு மயிலைவாழ் பரற்கு
மாவிர தங்கொள் அடியவர் தம்பால்
மனமுற மகிழ்ந்திருந் தருள்வோன்
பாவியல் இசைநா டகமெனுந் தமிழைப்
பண்புறத் தெரிந்தெடுத் துரைப்போன்
பூவிய லுறுவே தாந்தசித் தாந்தப்
பொருளுணர் சமரச நிலையோன்.

(அ - ரை.) மயிலை—மாயூரம். மாவிரதம் – சிறந்த நோன்பு. பாவியல் – பரந்த இலக்கணம். (க)

173. ஓதுமா மயிலைக் கிருட்டிணா நந்த
யோகியென் றுறுபெயர் கொண்டோன்
காதலி னெனக்கும் இயற்றமிழ் உணர்த்திக்
காட்டிய நற்குரு வானோன்
மாதுபா தியனே பரமெனக் கொண்ட
மனமுறு வேதியர் குலத்தோன்

தீதிலா மயிலைச் சிலேடைவெண் பாவைச்
சிறப்புற வனைந்தனன் அதனை.

(அ - ரை.) காதலில் - அன்பில். மாதுபாதியன் - சிவ பெருமான். (௨)

174. கருணையின் மகிழ்ந்தொன் ருயிர மாக்கிக்
காணிய விழைவினச் சிடுவித்
தருளினன் துறைசைப் பெரியவா தீனத்
தன்பமர் அடியரின் மிக்கோன்
பொருவின்மா யூர நாதர்கட் டளையில்
பொலிவுறு புனிதன்மா லயனுந்
துருவுசே வடிகள் திருவுளத் தகலாச்
சுந்தர லிங்கமா தவனே.

(அ - ரை.) காணிய - காணும்படி. துறைசை - திருவா வடுதுறை. பொருவின் - ஒப்பில்லாத. துருவு - தேடுகிற. (௩)

## ௬௧. தருமலிங்கம் பிள்ளை

[தஞ்சைமாவட்டத்திலேயுள்ள பூண்டி என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமைபெற்றிருந்த இவர் பள்ளிக்கூடம் ஒன்று வைத்து அதில் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக் கொண்டிருந்தார்.]

[தஞ்சையிற் பால்சுவாமிகள் வீடுபேற்றை யடைந்தபோது பாடியது.]

175. காசினியில் வாழுயிர்கள் யாவையுங் காத்திடக்
கடவுளே அவத ரித்துக்
கற்பகத் தருவென்ன அடிமைகட் குரியநல்
கதிகள்மேன் மேலும் உதவி

மாசிலா யோகியர் வசிக்குந் திருத்தஞ்சை
மாநகர் எனுந்த லத்தில்
வாசமிகு பூமரஞ் சூழ்சதா சிவராயர்
மகிழுநந் தனவ னமதில்

ஆசில்கலி நாலாயி ரத்துத்தொ ளாயிரத்
ததனுடேன் பத்து மூன்றில்
ஆண்டுவிஜய மதித்தனுசு தேதிபதி னொன்றுபங்
காம்பட்சம் முதல்ச துர்த்தி

தேசுவளர் திருவோண நாழிபகல் பதினொன்றில்
தேவர்க ளெலாம கிழ்ந்து
தேன்மாரி பொழியநா ராயணப் பிரமஞ்
சிவத்துடன் உகந்துற்றதே.

(அ - ரை.) சாசினியில் - உலகத்தில். நந்தனவனம்-பூம்பொழில். ஆசில் - குற்றமற்ற. (க)

### ௩௰௨. சேடகிரிராயர்

[இராமநாதபுரத்தில் கோட்டைச்சாமித் தேவர் காலத்தில் வாழ்ந்திருந்த தமிழறிஞர். தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.]

[வியாசர்பாடியில் இருந்த விநாயக முதலியார் மேல் பாடியது.]

176. விசுபுகழ் கொண்டநற் சேதுபதி மானேசர்
விண்மணி குலத்து தித்த
மேன்மைசே ரிராகவனை அனையகோட் டைச்சாமி
வேந்தர்க்கு நேச ரத்நம்

தேசத்தில் உயர்சென்னை மாநகரில் வாழ்கின்ற
செல்வன்மா தர்க்கு மாரன்

செப்புநிச வசனத்தி லேயரிச் சந்திரன்
செங்கோல்த வாத சுமுகன்
தேசுபெறு செவ்வருச் சுனவிநா யகராச
சேகரனை வசமாக் கினேன்
தீக்கலிய னெனுமிந்த்ர சித்தன் புரிந்திட்ட
தீவினைகள் என்னும் நாக
பாசபந் தந்தனைப் பஞ்சுபஞ் சாகப்
பறந்தோட வேய றுத்துப்
பலதூத னனின்மேன்மை பெறுவனேல் அன்னவன்
பான்மைபுக லற்கெ ளியதோ?

(அ - ரை.) *விண்மணி குலத்துதித்த - கதிரவன் குலத்தில் தோன்றிய. இராகவன் - இராமபிரான். மாதர்க்கு மாரன் - பெண்கட்குக் காமன். நிசவசனத்திலே அரிச்சந்திரன் - உண்மை பேசுவதில் அரிச்சந்திரன். செங்கோல் தவாத சுமுகன் - ஆட்சிமுறை தவறாத நல்ல இயல்புடையவன்.* (க)

[கடலை வருணித்துப் பாடியது]

177. நன்னீர் எழிலிக்கு நல்கி அறுசுவையோ
டன்னம் உலகோர்க் களித்தலால் — மன்னிச்
சுரர்க்கமுதம் ஈதலால் தொல்லுலகைக் காக்கும்
நரலையே நாராய ணன்.

(அ - ரை.) *எழிலி - முகில். சுரர்க்கு அமுதம் - தேவர்கட் கமுதவுணவு. நரலை - கடல்.* (உ)

## ௩௩. ச. குருநாத முதலியார்

[இவர் தொண்டை வளநாட்டில் காஞ்சிமா நகரில் சபாபதி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். காமாட்சியம்மன் பஞ்சரத்தினம் முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[அப்பாசாமி முதலியார் என்பவருக்குப் பாடிய சீட்டுக்கவி.]

178. வளுவிலுயர் மணியிலகு கணபணு டவிகிரண
மணிமகுட சேடன் நெளிய
மதிபருதி கதிசிதற திக்கிறைவ ருட்பதற
வடகனல் அவிந்து புகைய
வார்கடல் பகீரதி வறண்டிடவும் அட்டதிசை
மதவா ரணங்கள் கதற
வானமுக டிடியக்கிர வுஞ்சம்நிர்த் தூளிபட
வைவேல் விடுத்த முருகன்

சலசமலர் அடியிணைக் கடிமைசூர சங்கீத
சாயுச்ய கணித நிபுணன்
தண்டமிழ் உணர்ந்தகுரு நாதன்நாற் கவிராச
சக்ரபதி விட்டச னது
சகமெலாம் புகழ்பெற்றி லங்குசென் றம்பாகை
தன்னில்திரு அடியர் கோத்ரன்
சகன்மோக னுங்கனங் குவளையின் அலங்கலன்
சர்வசாம்பிராச்ய நகுலன்

நிலைமைசெறி வாசகன் தலைமைபெறு தேசிகன்
நேயசற் பாத்ர ரசிகன்
நிக்கிரகா னுக்கிரகப் பாண்டியன் உதாரத்வ
நிட்கள மனப்பு ரவலன்
நிகிலசன ரட்சகன் நயகுணக் குமரவேல்
நிதிபரன் அளித்த புத்ரன்
நிகரிலாச் செல்வக்கு பேரன்அப் பாசாமி
நீதன்எதிர் கொண்டு காண்க

கலைவல்ல ருக்குதவு தியாகிநீ ஆகையால்
கருதுமொழி ஒன்று கேண்மோ
கனபோச ராசன்நீ யாகவும் யானுமக்
காளிதா சனேயா கவும்
கருதிச் சிநேகம் பெரும்புவியில் வாழக்
கருத்தாயி னேன்ஆ கையால்
கனவுதனி லீயுமப் படியாக எண்ணியென்
கவிதைக் கிரங்கி யருளே.

(அ - ரை.) உயர்மணி இலகு-உயர்ந்த மணி விளங்குகின்ற. கணபணுடவி - கூட்டமான படக்காடு. மதி - திங்கள். பருதி-கதிரவன். கதிசிதற - செல்வழி மாறுபடவும். வடகனல் - வடவைத்தீ. வார்கடல் - நீண்டகடல். பகீரதி - கங்கை. வறண்டிடவும் - வற்றவும். வைவேல் - கூரியவேல். சலசமலர்-தாமரை மலர். சகன்மோகன் - உலகத்தை மயக்குபவன். அலங்கலன்-மாலையை உடையவன். உதாரத்வம் - கொடைப்பண்பு. நிகில சன ரட்சகன் - எல்லா மனிதர்களையும் காப்பாற்றுபவன். கலைவலவர் - கல்வியிலே வல்லவர்கள். (க)

## ௬௪. சுந்தரேச ஐயர்

[இவர் மதுரைமா நகரில் புலவராகத் திகழ்ந்திருந்தார். இவரைப் பற்றிய விவரந் தெரியவில்லை.]

[சிக்கற் சிங்காரவேலவர்மீது பாடியது.]

179. சீர்கொண்ட நின்திருத் தாதையடி பரவுமொரு
சிறியமறை முனிதன் உயிர்மேல்
சீறிவரும் மறலியை விலக்கிநிறை ஆயுளருள்
செய்தனன தன்றியு மதிக்
கூர்கொண்ட கயநோயும் வருணன்கொள் குன்மமாம்
கொடியபிணி யும்போக்கி னன்
குவலயம தில்தாதை செயல்மைந்தர் செயலெனக்
கூறுமறை மெய்யா கவே

பேர்கொண்ட நின்பொற் றலத்திருப் பணிசெயப்
பெரிதுபொருள் உதவி செய்தும்
பெருமைபெறு சன்மார்க்க சபைநிறுவி யும்நினைப்
பேணுமுயர் பழநி யப்பன்
ஏர்கொண்ட உடலிலுறு பிணிநீக்கி நெடிதாயுள்
ஈந்தருள் செய்சிக்க லென்னும்
எழிற்பதி விளங்குசிங் காரவே லவஉன்றன்
இணையடி வழுத்து வோமே.

(அ - ரை.) தாதையடி - சிவபிரானடி. சிறியமறை முனி-மார்க்கண்டேயர். மறலி - நமன். மதிக்கு - திங்களுக்கு. கய நோய் - இருமல் நோய். (௪)

## ௬௫. வாங்கல் ஐயாச்சாமி முதலியார்

[இவர் வாங்கல் என்னும் ஊரில் தோன்றியவர். பூந்துறையில் பெரும்புலவராக விளங்கியிருந்த காளியண்ணப் புலவரின் புதல்வராகிய சுந்தரம் பிள்ளையிடத்தில் கல்வி கற்றுப் புலமை பெற்றார்.]

[கஞ்சகிரிச் சித்தேசர் சதகம் பாடிய அனந்த நாராயண சர்மா என்பவரைப் பாராட்டிப் பாடியது.]

180. தடமருவு குமரேசர் உபயசர ணம்புயம்
தனையனு தினம்ப ரவுவோன்
சாதுசன சங்கப்ர சங்கத் துகந்தசெந்
தமிழ்வாண ருக்கு ரியவன்
சங்கீத சாகித்ய வித்வசன நேசன்
சரோருக மடந்தை வாசன்
தலைமையொடு பெருமையம் புவிதனில் பரிவுடன்
சஞ்சரிக் கின்ற நிபுணன்

படவரவு புனைவிமலர் அடிபுகழும் எசுர்வேத
பாரக குலத்து தித்தோன்
பவுரோகி தன்தரும ராசமறை யோர்பெற்ற
பண்புளகு மார சீலன்
பைந்தமிழ் உகந்துரை அநந்தநா ராயணன்
பதுமவதி மேவு ஞான
பத்தியொடு கஞ்சகிரி சித்தேசர் மீதினில்
பாமாரி பொழியும் மேகம்

சுடருல்வு கடலுலகில் தமிழ்வா ரிதிக்குளே
சுமங்கல எழுத்தெ டுத்துச்
சுகந்தரு சுரஞ்சித மிகுந்தமது ரந்தரும்
சொற்கள்மரு வப்பு ணைந்தே
சுதையெனுஞ் சதகமிதை இதயங் களிக்கவே
தூயவர் தமக்க ளித்தான்
சுபகர தயாரச சரஸ்வதிவி லாச
சொருபலா வண்ய துல்யன்

இடபமிசை வருபரம சிவகுமரன் அருளினல்
எல்லோர்க ளுஞ்ச ரியென
இயல்பான சமயோசி தத்தினுக் குறுகவி
இயற்றியிந் நூலில் வைத்தான்
இணையிலா வரமுதவு காங்கேயன் அடிதொழு
திறைஞ்சும்ப்ர பந்த வாக்கி
எக்காலு மேலான தக்கோர் சபாசென்
றியம்புந் தமிழ்ப்பு லவனே.

(அ - ரை.) தடமருவு - பெருமை பொருந்திய. உபயசர ணம்புயம்-இரு திருவடித் தாமரை மலர்களை. சரோருகமடந்தை வாசன் – திருமகள் வசிக்கப்பெற்றவன். படவரவு புனைவிமலர் - படத்தையுடைய பாம்பை யணிகின்ற சிவபெருமான். சுமங்கல

எழுத்து - நன்மையைத்தரும் மங்கல எழுத்து. சுதையெனும் — அமுதமென்று சொல்லக்கூடிய. இடபமிசை - காளையின்மேல். காங்கேயன் - கங்கை மைந்தனாகிய முருகக்கடவுள். (௧)

## ௬௯. கையேட்டுத் தம்பான்

[இவருடைய இயற்பெயர் தம்பான். கொங்குவள நாட்டில் இருந்தவர். அந்நாளில் இருந்த இலட்சுமண பாரதியார் என்பவரிடங் கல்வி கற்று அவரிடமே கையேடு எழுதிக்கொண்டு இருந்தார்.]

[''மாணிக்கவாசகர் மடத்தில் சாப்பிட்ட சாப்பாடு எப்படி?'' என்று இலட்சுமண பாரதியார் கேட்ட போது பாடியது.]

181. மொட்டைச்சோ ளச்சோற்றின் மொத்தையிட்டுக் [கத்தரிக்காய்ந்
தட்டைச்சாற் றைத்தூக்கித் தானிட்டார்—பட்டமுறும்
மாணிக்க வாசகர்ம டாலயத்தார் ஐயாஉள்
நாணிக் கடிந்துவந்தேன் நான்.

(அ - ரை.) மொத்தை-பெரிய உருண்டை. தட்டைச்சாறு-குழம்பு. (௧)

[இதனைக் கேட்ட மடத்தார் இவருடைய தன்மையை அறிந்துகொண்டு மீண்டும் அழைத்துப்போய் நல்ல உணவிட்டபோது பாடியது.]

182. துவையல் வறுவல் துவட்டல் கறியும்
அவியல் குழம்பிரசம் அப்பம்—அவல்வடகம்
பேணிவடை பாயசநெய் பேணி அமுதளிக்கும்
மாணிக்க வாசர் மடம்.

(அ - ரை.) அவல் வடகம் - அவலைக்கொண்டு இடப்பட்ட வடகம். பேணி - ஒருவகைச் சிற்றுணவு. (௨)

## ௬௭. கண்ணுவையர்

[இவர் தரும தானபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். பாரதத்தைச் சொற்பொழிவு செய்வதில் இவர் சிறந்த திறமையுடையவராக இருந்தபடியால் இவருக்குப் பாரதப் பிரசங்கி என்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டாயிருந்தது.]

[நாராயணசாமிப் புலவரைப் பாராட்டிப் பாடியது.]

183. மணிகொண்ட வாரியரு காம்புதுவை
வாழ்வோர் மதித்தகௌ ரிக்குலத்தே
வந்ததொரு பெரியதம் பிக்குரிசில் மைந்தராம்
மகிமைபெறு சீநி வாச
மாதா மனுக்கிசைய நாரா யணசாமி
மதியூகி யான புலவன்
மறைநாலொ டைந்தென்ன ஓதுமிதி காசமா
மாபா ரதத்தொ டைந்தாய்த்

துணிகொண்ட நீதியினை உள்ளபடி காட்டியே
துய்யதெய் வத்தரு ளையும்
சோர்விலா வகைசொற்றி டும்பெரிய கரியதாய்த்
தொன்றுதொட் டேவருவ தாய்ச்
சுமங்கல மிகுந்ததமிழ்ச் சொன்மணிக் கோவையாச்
சுரோத்திரா நந்த நலமாய்த்
துன்பகன் றுய்த்தசா ரங்கதர ஞர்புகழ்ச்
சொற்சரித மாப்பு னைந்தான்

பணிகொண்ட சயனனுங் கருணை நிதிக்குரிய
பக்தர்பால் பத்தி செய்த
பாக்கியவி சேடமொரு நற்குணங் குடிகொண்ட
பரிபக்வ மான மனமும்

பரசமய நிந்தனை செயுந்தீக் குணத்தரொடு
பற்றிலாச் சமர சமுமே
படிமிசை உருக்கொண்ட தென்னலா மிங்கிதன்
பணிவுறுந் தன்மை கண்டால்
அணிகொண்ட பேரவைக் கிடையொரு விளக்கோ
வலர்சொல்மலர் மணமா லையோ
அரியவித் துவசெனர்கள் கொண்டாடு மணியோதென்
அலையுதவ வருத ரளமோ
அவனியிடை யொன்றுநிலை யானபுக ழாட்சியோ
அதிமதிஞர் கண்காட் சியோ
அம்மம்ம இச்சரிதம் என்றிடச் செய்தவிவன்
ஆயுள்நீ டூழி வாழி.

(அ - ரை.) *வாரி அருகாம் - கடலுக்குப் பக்கமாகவுள்ள. கரியதாய் - சாட்சியாய். சுரோத்திராநந்தம் - காதுக்கு இனிமை பயப்பது. பணிகொண்ட சயனன் - திருமால். அலையுதவ வரு தரளமோ - கடல் உதவ வருகின்ற முத்தோ.* (க)

## ரு அ. குமாரசாமிக் கவிஞர்

[இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்கவில்லை. குழந்தைக் கவிராயர் என்பவர் காலமானபோது பின்வரும் பாடலைப் பாடியிருக்கிறார்.]

**184.** பாதக் குறட்டின் அடிஅழகும்
பண்பாய் உரைக்கும் மொழியழகும்
படிக்குஞ் சந்தப் பாவழகும்
பகுத்துப் பகரும் பொருளழகும்
நீத மாக ஞாயபதம்
நிலைக்க உரைக்குஞ் சொல்லழகும்

நிமல பூசை நியமமொடு
நிதமுஞ் செய்யுங் கையழகும்

வேத மொழியால் மூவர்களும்
விளங்க உரைத்த அடங்கன்முறை
விதியின் படியாய்ப் பகரழகும்
விளம்பல் என்னல் அழகாமோ ?

ஓதல் எவர்க்கும் ஓதுவித்தல்
உயர்ந்த தரம்போல் காண்பதென்றோ ?
உயிருக் குயிரே உடல்துணையே
உயர்ந்த அரன்தாள் உற்றனையே.

(அ - ரை.) பாதக்குறடு - மிதியடி. நீதமாக-நேர்மையாக. நிமலபூசை - இறைவன் வழிபாடு. அரன்தாள் - சிவபெருமானுடைய திருவடி. (க)

## ௬௯. ச. இரத்தினவேலுப் பாண்டியர்

[இவர் தொண்டைவளநாட்டில் சென்னைமாநகரை யொட்டியுள்ள சுங்குவாரபுரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர். "கனையோக மனமோகன நாடகச் சிங்கம்'' என்று சிறப்புப் பெயர் பெற்றவர்.]

[பெ. மா. மதுரைப் பிள்ளை என்பவர் மீது பாடியது.]

185. நறைபூத்த நிலவுதமிழ் மணிமாடக் கதிர்கூட
நலமோங்கு சென்னை நகரில்
நாவலர் குழுக்களெவ் வேளையிலும் இயலுமிசை
நாடகத் தமிழ்மூன் றையும்
நல்லிசையி லுரைசெயஃ தோர்ந்துநா கணசுகம்
நயந்தொலி முழங்கு பொழில்சூழ்

நன்னகர மந்நகரில் நாற்கவியின் மிக்கவரு
நாடகச் சிங்க மென்பர்

மறைபூத்த கலைவிசித மதுமாந்தி முத்தமிழை
மழையெனப் பொழியு மேகம்
மாகரையின் மோதுதிரை சூழ்புவியி லெங்கணும்
மன்னர்புகழ் இரத்ன வேலன்
மன்னுபல ஆங்கிலயர் கலனுல வைராதி
வளந்தரும் இரங்கோ னில்வாழ்
மாதரும துரைமதுரை துரைவள்ள லெனவுலகில்
வளர்கீர்த்தி யாவர் பெற்றார்

தறைபூத்த பொன்னகர்த் தருவனைய ஈகையும்
தருபுலவர் பாமாலையும்
தங்குமெழின் மணிமார்ப ராயபக தூரெனத்
தகுந்தகு மெனத்து திக்கச்
சகமெலாந் துதிதருநல் நீதிதனி லேவழாத்
தருமதுரை நீயென் னவே
சாற்றரிய பிள்ளைமது ரைப்பிள்ளை நின்னிடம்
தமியன் விண் ணப்ப முளதால்

கறைபூத்த கண்டன்மகன் மாதுலன் அருட்பேறு
காணவரும் ஒருகு சேலன்
கவிதைசொலும் இளவல்மிகு சிறுவர்பலர் சூழ்இவளர்
கதியிதென அறைதல் மிகையோ
காதலர்த் தந்துதவ வள்ளல்நீ என்றுனது
கருணைசெய இதுவே ததி
கனகமழை பெய்தெனது மனதிலுறு மிடிதவிர்
கருணைசெய இதுதரு ணமே.

(அ-ரை.) *நறை-இனிமை. மதுமாந்தி - தேனைக்குடித்து. மாகரை - பெரியகரை. மோதுதிரை - மோதுகின்ற அலைகளை*

புடைய கடல். கலன் - கப்பல். ஐராவதி - ஐராவதியாறு. பொன்னகர்த்தரு - கற்பகதரு. கறைபூத்த கண்டன் - சிவபிரான். மகன் மாதுலன் - திருமால். குசேலன் - குசேலனைப் போன்ற வறுமையுடையவன். இதுவேததி - இதுவே சமயம். மிடிதவிர் - வறுமையைத் தீர்ப்பாயாக. (க)

## எ௦. பாலூர் இராமசாமி முதலியார்

[தொண்டை வளநாட்டில் பாலூர் வடபாதி என்னும் ஊரில் இருந்தவர். இவர் பரமவிலாசம் என்னும் நூலை இயற்றியிருக்கிருர்.]

[கடவுளைப் போற்றவேண்டு மென்று பாடியது.]

186. தந்தைதாய் ஒன்ருன தருணத்தில் சற்குரு
தவழ்ந்துவிளை யாடி யங்கே
தன்னிச்சை யாய்ப்புகுந் துதரத்தில் கெர்ப்பமாய்த்
தப்பிநாம் உதித்து வந்தோம்
சந்ததி விளங்கவே சதாசிவப் பிரமமும்
சரியைகிரியைக் குன் னையே
தவருது செய்யவைத் தென்னைமெய்ஞ் ஞானத்தில்
தங்கும் படிக்க ருளினர்
சந்தேக மில்லையது சரியாக நம்புவாய்
சத்தியம் இதுசத் தியம்
சகலமும் உணர்ந்தநீ சஞ்சலம் அகற்றியிரு
சர்வமும் பிரம சொருபம்
சிந்தைதனில் அப்பரன் இருந்தாட்டு கின்றனன்
தேகம நநித்த மென்பார்
செகமென்ப தியாவையும் கானலில்புன லரன்
திருவடியில் மனம்வைப் பையே.

(அ - ரை.) உதரத்தில் - வயிற்றில். சந்ததி - வழிமுறை. அசித்தம் - பொய். கானலில் புனல் - கானலில் தண்ணீர். அரன் திருவடியில் - இறைவனுடைய திருவடிகளில். (க)

## எக. முகமது பதியுதீன் சாகேப்

[பழநியில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் வெள்ளைச் சாகேப் என்றும் வழங்கியது. சிறந்த தமிழ்ப்புலமை அமையப் பெற்றவர்.]

[முத்தையன் என்பவருடைய நூலைப் புகழ்ந்து பாடியது.]

187. விண்மதியி னுடுகதிர்த் தேர்தவழ வோங்கியுயர்
விறுதிரு மதில்கள் கோட்டை
மேடமா ளிகைகூட கோபுரம் விமானம்
விளங்குதென் பழநி வாழும்
விற்பனகு மாரதண் டாயுதக் கடவுளிரு
மெல்லடி வணங்கு நேமன்
வித்வவிஸ் வப்பிரம குலதிலகம் எண்டிசையும்
மேய்புகழ் படைத்த சுகுணன்

கண்ணெனும் இலக்கண இலக்கியச் சூத்திரக்
கடல்மடை திறந்த வெள்ளம்
கலைவலோ ரெவருஞ்ச பாசெனும் படியமிர்த
கவிமாரி பொழியும் மேகம்
காவிய புராணசட் சாத்திர மனைத்தின்
கருத்தையறி கின்ற யூகி
கலைவாணி நடனமிட் டனவரத காலம்
களித்திருக் கின்ற பீடம்

தண்டரள மணிமாலி காபரண புயவீர
  தாட்டீக கோலா கலன்
சந்ததங் காயத்ரி மந்த்ரசந்த் யாவந்தன
  சன்மார்க்க புனித சீலன்
தனமாது செறிமாந்தை யம்பதி தழைக்கவரு
  தானகர் ஞவ தாரன்
சம்பத்கு பேரசந் தனவேள் சுவிகார
  தனயபாஞ் சால தேகன்

செண்டினை நிகர்த்ததன மங்கையர்கள் மடலெழுது
  திவ்யமன் மதவ சீரன்
செந்தமிழ்வ லன்முத்தை யன்சொல்லு மனோஞ்
  சிதத்தினது நாட கத்தைச்
செல்வமோங் கும்பேரம் பூரில்வள ராறுமுக
  செம்மல்மகிழ் கூர்ந்து சென்னைச்
சித்ரவா ணிவிலாச அச்சிலிட் டெங்குநற்
  சீர்த்திநிலை நாட்டின னரோ.

(அ - ரை.) *விண்மதி - வானிலுள்ள திங்கள். நேமன் - நியமன்; வழக்கத்தையுடையவன். மேய்புகழ் - பரவியபுகழ் - கலைவலோர் எவரும் - புலவர்கள் யாவரும். சட்சாத்திரம்—அறுவகை நூல்கள். அனவரத காலம் - எப்பொழுதும்.* (௧)

## ௪௨. பழநி நாவலர்

[கொங்குவள நாட்டில் ஏரகாம்பட்டி என்னும் ஊரில் தோன்றியவர். கல்வி கற்றுப் புலவராகிய இவர் திருக்கோயில் திருப்பணி செய்துகொண்டிருந்ததோடு நூல்களும் இயற்றினார்.]

[திம்மநகர் ஊரார்களுக் கெழுதிய சீட்டுக்கவி.]

188. கருதரிய பஞ்சலட் சணமெனுங் கடலினுட்
கனிவுடன் உலாவு கப்பல்
கலைமங்கை குடிகொண்டு விளையாடு கூடமிது
கவிசொல்ல வருமெய்ப் புலி
அருமையென வரிசைமணி மகுடமுடி தானசைய
அசைக்கப்ர சங்கஞ் செயும்
அவனிமுக நறையூரு வருபழநி நாவலர்
அகமகிழ்ந் தெழுதும் ஓலை
திருவிளங் கியதிம்ம நகர்மேவு செகராசர்
முத்துமா லாதி யோரும்
செயவேங்கட டாசலம் அதிபரும் வரிசையாய்ச்
செனமெலா மகிழ்ந்து காண்க
மருவளரும் வண்ணப்ர பந்தமது பாடியே
வந்தே னுமைநா டியே
வளமேவு முபசார வெகுமான மதுசெய்து
வரிசையாய் அனுப்பு வீரே.

(அ - ரை.) *கலைமங்கை - கலைமகள். அவனிமகள் - நில மகள். நறையூர் - ஊரின் பெயர்.* (௪)

## ௪௩. முத்துக் குமாரசாமிப் பாண்டியர்

[பாண்டிவள நாட்டில் கல்போது என்னும் ஊரில் பெருநிலக் கிழாராக விளங்கியிருந்தவர். சிறந்த புலமைத் திறமும் அமையப்பெற்றவர்.]

[எட்டையபுரம் பேரையூர் ஆகிய இரண்டூர்ப் பெரு நிலக் கிழார்களும் கடன் கொடுக்க மறுத்தபோது ஆற்றங்கரைக் குறுநில மன்னரிடம் போய்ப் பாடியது.]

189. எட்டையா பேரையா என்துரையே என்றுரைத்தேன்
எட்டையா பேரையா என்றுரைத்தார்—கட்டக்

குரைகடற்குள் ஈர்த்துக் கொடுபோகா தாற்றங்
கரையதனிற் சேர்த்தெனைநீ கா.

(அ-ரை.) எட்டையா எட்டையபுரத் தலைவரே! பேரையா—பேரையூர்த் தலைவரே! எட்டையா-எட்டப்போ ஐயா. பேரையா—இவ்விடத்தை விட்டுப் போ ஐயா. கட்டம் - துன்பம். குரை கடல்-ஒலிக்கின்ற கடல். ஈர்த்து-இழுத்து. கா-காப்பாற்று. (க)

## எச. முகமது இபுருகிம் சாகிபு புலவர்

[இவர் தொண்டி யென்னும் ஊரில் முகமதிய சமயத்தில் தோன்றியவர்; கல்வி கற்றுப் புலவரானார். இவருடைய வாக்குப் பலிதமுடையதாக விளங்கியது. தெரிந்தோ தெரியாமலோ வாக்கினால் எதனைக் கூறி னும் அது பலித்தே தீரும்.]

[வேங்கடசாமி நாயக்கர் என்பவர்மீது பாடியது.]

190\. சொல்லரிச் சந்திரன் படிப்புக் ககத்தியன்
சுகமதுக் கோமன் மதன்
துணிவுக் கருச்சுனன் மனநட்பி னிற்றருமன்
சுலோகங் களுக்கோ திலோ
வெல்லரிய வான்மீகி ஈகையிற் கர்ணன்
விளங்குங் கணக்கில் நிபுணன்
வெற்றிக்கு வேலனும் புத்திக்கு வீடணன்
விவேகந் தனில்வ சிட்டன்
வல்லரில் கிருட்ணன் வசிக்கும்நக ரோசெல்வம்
மல்குமேற் படியார் புரம்
வதியுஞ்சௌ பாக்யசம் பன்னயோ காதிபன்
வருண குலோத்துங் கனும்
நல்லறிவு தங்கும்நம் தொண்டியூர் சீகஸ்டம்ஸ்
நலமான கலெக்டர் துரை

நம்புவேங் கடசாமி நாயக்கர் எமர்கட்கு
நன்றியுறு விசுவா சனே.

(அ - ரை. சொல்லரிச்சந்திரன் - உண்மை சொல்வதில் அரிச்சந்திரன். வல்லரில் - வல்லவர்களில். எமர்கட்கு என்னு மிடத்தில் அறம் விழுந்து விட்டதென்றும் இதனுல் பாடல் பெற் றவர் சின்னுட்களில் இறந்துவிட்டார் எனவுங் கூறுவர். (க)

## எடு. வீரபத்திர சிவாநந்த யோகி

[பாண்டிவள நாட்டில் திருமங்கலத்தில் காமாட்சி செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய வர். புலவராக விளங்கியதோடு சோதிட சித்தாந்தி யாகவும் விளங்கினுர். சில்லரை நூல்கள் பல செய் துள்ளார்.]

[இவர் முருகக் கடவுள்மீது பாடியது.]

191. மவுனசன காதியர்கள் பரவுமெய்ஞ் ஞானவெளி
மார்க்கமே வியநிட் கள
மந்திரச டாட்சர விபூதியணி மார்பனே
வடிவேல் பிடித்த கரனே
வள்ளிக் கிசைந்தாறு முகமான தெய்வமே
மயில்வா கனக்க டவுளே
மைந்தன்நான் உன்னடிமை நின்சமுகம் அதனில்யான்
வழங்குவிண் ணப்ப மதுகேள்
அவனிமிசை நரசென்ம மாயுதித் தின்றுவரை
ஆசைக்கா ளாகி நின்று
அருமையா கியஅடியர் பாதந் தனைப்போற்றி
அருள்பெறு ஏழை யானேன்
ஆனதா லினியா கிலுமன திரங்கியெனை
அன்பர்தமில் ஒருவ னுக்கி

அகமகிழ முன்செய்த பாவஇருள் போக்கியே
ஆதரித் தமுதூட் டியும்
கவனமொடு நின்புகழ் படிக்கவும் பாடிமிகக்
கருத்தாய்த் துதித்திடவும்
கன்னியர்கள் மோகவலை நீக்கவும் சோதிடம்
கணக்காய் அறிந்து கொளவும்
காரிகையி லக்கணம் இலக்கியக் கவிகளைக்
கற்றுணர்ந் தேதே றவும்
கமலமலர் அடிகளை நித்தியம் துதிக்கவும்
களவுபொய் மறுத்து விடவும்
தவமகிமை யுறுமோன சச்சிதா நந்தம்
தழைத்தோங்கி முத்திநிலைமை
தன்னிலே நிற்கும் படிக்கிரு தயந்தனைத்
தன்னிலையி லேநி றுத்திச்
சகலமும் நிறைந்தபரி பூரணப் பதியாகும்
சமாதியோ கத்தி ருத்தித்
தடையின்றி வரமுதவ வந்தருள்குணு நயன
சண்முகப் பரம குருவே.

(அ - ரை.) *மவுனசனகாதியர் - மவுனமாக இருக்கும் சனகாதியர் முதலானவர்கள். நிட்களம் - களங்கமற்றது. புகழ் - திருப்புகழ். இருதயம் - உள்ளம்.* (க)

## எஅ. செய்கப்துல் காதிர் நயினர் லெப்பை

[முன்னாளிற் சிறந்து விளங்கியிருந்த முசுமதியப் புலவர்களில் இவர் ஒருவர். இவர் சென்னைப் பட்டணத்தையா என்பவருக்கு எழுதிய பாடல்.]

**192.** சுருதிமறை நாலுசாத் திரமுமுயர் கலைகளும்
துதிதருபு ராண மெவையும்

சோதித் தறிந்திடற் கமையுமோ குறிபடாச்
சுயமாய்ச் சுயம்பா கியே
சொல்லுக் கடங்காது தன்னுயர்வு தன்னைத்
துலக்கிக் கலக்க மில்லாச்
சோதிக்கு ளாநந்த மாடுமொரு பொருளையே
தொழுகின்ற மதிசிந் தையான்
திருதியென அறிவையுட் கொண்டபேர் மகிழ்கொளச்
செல்வநற் கவிதை பொழியும்
செய்குஅப் துல்காதிர் லப்பையா லிம்புலவர்
செஞ்சொலான் எழுதும் நிருபம்
சித்திரைப் பேறுபிர பவவருட மீரைந்து
தேதியள வும்ப ரிவுடன்
திருமகளு மருமகனு மெனயானு மனைவியுமென்
சேர்ந்தவுற முறையா ளரும்
கருதுமன நன்மையால் சுகமோ டிருந்தனம்
கனவான்கள் அருளு தவியால்
கருணையுள தேவரீர் தாமுமா னுக்கரும்
கருமமுயல் பவர்க ளெவரும்
களிகூர்ந்து சேமமோ டுறுபவை யனைத்தையும்
காணவுள் ளன்பு கொண்டேன்
கனிவுபெற எழுதிவர விடுகமனம் வேண்டினன்
காட்சியால் ஒருமை பெறலாம்
பருதியென வருகீர்த்தி உடையவா! அவ்வாய்வு
பலகாலு முளது முனமே
பண்பா யளித்தலே கியமுண்டு மகலாது
படர்குற்ற தாத லாலே
பலநெடு பயன்பெறற் கின்னமோர் அவிழ்தமெம்
பாலனுப் பிடுக சென்னை

பட்டணத் தையாவெ னையா வெனப்பெயர்
படைத்தகுரு பரநாத னே.

(அ - ரை.) *துதிதரு - போற்றப்படுகிற. சோதித்து - ஆராய்ந்து. துலக்கி - விளக்கி. திருதியென-உறுதியாக. பருதி-கதிரவன். உடையவா - உடையவனே!* (க)

## எஎ. முத்துச்சாமி ஐயர் சி. எஸ்.

[சோழவள நாட்டில் நாகப்பட்டினத்தில் வெஸ்லியன் மிஷன் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர்.]

[அரித்துவார மங்கலம் கோபாலசாமி ரகுநாத ராசாளியார் மகள் திருமணத்தில் பாடிய வாழ்த்துப்பா.]

**193.** இந்திரனும் புலோமசையும் எழில்மாலும்
இலக்குமியும் ஏற்றம் மிக்க
சந்திரனும் உரோகணியும் தாமென்னச்
சந்ததமும் சகத்தில் இந்தச்
சுந்தரனும் சுந்தரியும் சுகக்கடலில்
திளைத்தென்றுஞ் சுகுண மான
மைந்தர்களைப் பெற்றெடுத்து மலர்மணம்போல்
நீடூழி வாழ்க மாதோ.

(அ - ரை.) *புலோமசை - இந்திராணி. மலர் மணம்போல்· மலரையும் மணத்தையும் போல்.* (க)

## எஅ. நெ. வேலாயுதம் பிள்ளை

[பாளையங்கோட்டையில் நெல்லையப்ப பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். நன்கு

அகண்டபரி பூரணச தாநந்த சிற்சொரூபம்
ஆகினன் அறிக மாதோ.

(அ - ரை.) கழனியம்பதி - கோயிலூர். கொண்டலென - முகிலைப்போல. பணியவல்லோன் - பணியச் செய்தலுக்கேற்ற ஞானவலியுடையோன். கொற்றவாளீசன் - கோயிலூரில் எழுந்தருளிய இறைவன் பெயர். திருநெல்லைமாது - இறைவியின் பெயர். மதிமன்னர் - அறிஞர். நிதிமன்னர் - செல்வர். கவிமன்னர் - புலவர். தீரன் - ஞானவலிமையை உடையவன். அரவனுக்கூற முடியா - ஆதிசேடனாலும் எடுத்துச் சொல்ல முடியாது. (க)

## அ0. நெல்லை துரைசாமிப் பிள்ளை

[இவர் திருநெல்வேலியில் வாழ்ந்திருந்தவர். தமிழாராய்ச்சியில் சிறந்து விளங்கியவர்.]

[சுப்பிரமணியப் பிள்ளை என்பவருக்குத் திருமணம் நடந்தபோது பாடிய ஊசல் பாட்டு.]

196. சொல்லருஞ்சீர் செம்பவளக் கால்கள் நாட்டித்
துகளிலா வயிரவிட்டம் தொகுத்து நல்ல
சொர்ணமர் டகச்சங் கிலிகள் நாற்றிச்
சுடர்செய்மர கதப்பலகை ஊசல் மேவி
மல்லிரும் புயமணிந்த மாலை யாட
மதுவிரும்பி ஒருபால்வண் டினங்க ளாட
மதிபோலும் எழின்முகத்தில் குறுவேர் வாட
மார்பிலணிந் திலகுமணிப் பதக்கம் ஆடச்
செல்வமலர்த் திருவுடையாய் என்று வாணர்
திரன்தி ரளாய்க்கவிபாடித் தினங்கொண் டாடச்
சென்றூசல் வருமளவில் நங்கை மீது
செங்கமல மலர்போலுங் கண்க ளாடத்

தொல்லமுதம் அனையமொழிக் குயிலை நேராச்
சொலத்தகுமுத் தம்மாள்பங் கினிலே சேர்ந்து
சுந்தரஞ்சேர் வடிவமதன் ஆடீ ரூசல்
சுப்ரமண்ய மகிபாலா ஆடீ ரூசல்.

(அ – ரை.) *துகளிலா - குற்றமற்ற. சொர்ணம் ஆடகச் சங்கிலிகள் - பொற்சங்கிலிகள். நாற்றி - தொங்கவிட்டு. குறு வேர்வு - சிறிதாக அரும்பிய வேர்வை. மல்லல் இரும்புயம்-வலி தங்கிய பெரிய தோள்.* (க)

## அகூ. செ. க. கந்தசாமிக் கவிராயர்

[இவர் சிவகாசியில் பல ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். இவருடைய வாழ்க்கைக் குறிப்புக்கள் கிடைக்கவில்லை.]

[திருச்சி திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் தாயார் காலமானபோது பாடியன.]

197. பூவுலகி லோங்குசிவ தலமெனுந் திரிசிர
புரப்பதியில் வாழ்வோங் கிடும்
புண்யனுங் கங்கைகுலன் ஆறுமுக மால்தவப்
புத்ரநவ ரத்ந மணியாம்

காவலர்கள் பாவலர்கள் வர்த்தகர்கள் தேடிடுங்
கனகமுயர் சீமா னெனுங்
கண்யமுயர் தெற்குவா சல்தெருப் புகையிலைக்
கம்பெனி நடத்து சீரோன்

தேவரொடு முனிவர்துதி செய்யுமம் பிகையருள்
தேவிசக தம்மை பங்கில்
திவ்யமுடன் வளருபூ லோகநா தக்கடவுள்
தேவதல மானேச ராம்

சேவலங் கொடியினன் திருவடியை மறவாத
செம்மல்வரு டந்தோ றுநல்
திருவணு மலையுயர் அருணுச லீச்சுரர்
செழுமலர்ப் பாத மதையே;

(அ - ரை.) *கனகம் உயர் - செல்வம் உயர்ந்து விளங்கும். சேவலங் கொடியினன் - முருகக் கடவுள்.* (க)

198. சிந்தையொடு வந்துதெரி சனைசெய்து வந்திடு
திருக்கூட்டம் யாவும் ஒன்ருய்ச்
சேர்ந்துவர கரமகா தேவசம் போவெனத்
திரிசிர புரத்தின் வழியாய்க்
கந்தமுயர் தென்பழநி மாமலையில் வளர்திருக்
கருணையுயர் தண்டா யுதக்
கடவுளடி யைத்தொழத் தைப்பூச மேகிடும்
கனபத்த ரடியார் களுக்(கு)
அந்தமதி யாமதில் அமாவாசை சென்றநான்
காநாட் சதுர்த்தி யதனில்
அன்புடன் திருவமு தளித்துதவி வருகின்ற
அற்புதப் பிரகா சனும்
சுந்தரன் பக்திவிசு வாசமுயர் பெரியணத்
தோன்றல்மனை யாள்சுப் பமாள்
தொல்லுல கினைத்துறந் தேகின பெருங்கவலை
சொல்லமுடி யாது மாதோ.

(அ - ரை.) *சேர்ந்து அரகர மகாதேவ சம்போ; என்று பிரிக்க. அந்தமதி - அந்த மாதம். தொல்லுலகு - பழமையான உலகம்.* (உ)

## அஉ. வ. த சுப்பிரமணிய பிள்ளை

[இவர் தொண்டைவள நாட்டில் செங்கற்பட்டில் 1846ஆம் ஆண்டிற் பிறந்தார். திருத்தணி முருகக்

கடவுளிடத்தில் பேரன்புடையவர். அக் கடவுளுடைய திருவருளால் முன்னுக்கு வந்தவர். தமிழ் உணர்ச்சியையும் நன்கு பெற்றார். மூலைக்குமூலை மறைந்து ஓலைச் சுவடியில் இருந்த திருப்புகழ்ப் பாக்களைத் தேடித் தொகுத்து மூன்று பாகங்களாக அச்சிட்டு வெளிப்படுத்தினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் திருத்தருப்பூண்டிப் புராண உரைநடை, சிவஸ்தல மஞ்சரி, பிரமோத்ர காண்ட வசனம் முதலியன.]

[ஆனைமுகக் கடவுள்மீது பாடியன.]

199. யாதியற்றும் போதுமுதல் தொழப்படுநம்
மிறையவனை எழிலார் பாதப்
போதகத்து மறவாமல் பத்தியுடன்
பூசனைகள் புரியுந் தொண்டர்
தீதகற்றும் பெருமானைச் சிவபெருமான்
சிவகாமிச் செல்வன் தன்னைத்
தாதுகுக்கும் பொழில்தணிகைச் சண்முகற்கு
முத்தவனைச் சார்ந்து வாழ்வாம்.

(அ - ரை.) யாதியற்றும் போதும் - எக்காரியங்களைச் செய்யத் தொடங்கும்பொழுதும். பாதப்போது - அடிமலர்கள். அகத்து மறவாமல் - உள்ளத்திலே மறவாமல். தாது உகுக்கும் - மகரந்தப் பொடிகளைச் சிந்தும். (௧)

200. எந்தக்கா ரியத்தை எவர்களே எனினும்
எடுப்பரேல் இனிததை முடிக்க
முந்தவுன் செந்தா மரைப்பதம் பணிந்தே
முயலுக என்றற னூர்தாம்
சிந்தையில் மகிழ்ந்து செப்பின தால்நின்
சேவடி என்றும்நான் மறவேன்
வெந்துயர் தீர்த்து வீடுபே றருள்செய்
வேழமா முகப்பெரு மானே.

(அ - ரை.) அரனார் - சிவபெருமான். வேழம் - யானை. (உ)

[முருகக் கடவுள், கனவில் தாயாரைப்போல் வந்து, "அப்பா கோயிலுக்குப் போக மறந்தாயோ?" என்று சொல்லக் கண்டு விழித்துக்கொண்டு இது முருகக் கடவுளின் திருவிளையாடல் என்று மகிழ்ந்து பாடியன.]

201. போகமரு ளுந்தணிகைப் புண்ணியனே போற்றுந்தாய்
ஆகவந்து கோயிலுக் கப்பனே—போக
மறந்தாயோ என்றுதிரு வாய்மலர்ந்தாய் ஈது
துறந்தார்க்கு மேயுண்டோ சொல்.

(அ - ரை.) ஈது - இவ்வாறு கனவில் வந்து அருள் செய்த தன்மை. துறந்தார்க்குமே உண்டோ - துறவிகளுக்காவது கிடைக்குமா? (ந)

202. தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லையென் னுந்தரணி
நீயப் பழமொழிக் கேற்பஎன் னண்டையிந் நீளிரவில்
தாயிற் செறிந்து தணிகா சலதண்ணரு ளொடப்பா
கோயிற்குப் போக மறந்தனை யோஎன்று கூறினையே.

(அ - ரை.) தாயில் செறிந்து - தாய்போல வந்து. தண்ணருளொடு - இனிய திருவருளோடு. (ச)

203. அறந்தா ளியற்றுமெய் யன்ப ரிருக்கநல் லாக்கமுதல்
துறந்தா ரிருக்கநின் தூயடிக் கேயென்றுந் தொண்டு
[செய்து
சிறந்தா ரிருக்கச் சிறியே னிடத்தருள் வைத்துச்செல்ல
மறந்தாயோ என்னல் தணிகா சலஎன்ன மாதவமே.

(அ - ரை.) அறந்தான் இயற்றும் - தருமங்களைத்தான் மிகுதியாகப் புரிகின்ற. ஆக்கமுதல் துறந்தார் - செல்வம் முதலியவைகளைத் துறந்தவர்கள். தூயடி - தூய்மையமைந்த திரு

வடி. என்னல் - என்று கூறுதல். தணிகாசல!-திருத்தணிகை மலையில் எழுந்தருளியவனே. (ஙி)

204. சுளித்தே முகத்தைத் திரிகின்ற
தோகைச் சுகமெனுமோர்
துளித்தேன் பருகத் துவளுமித்
தொல்வினைத் துட்டனிடம்
அளித்தோ யுவந்துவந் தப்பா
மறந்தனை யோவெனலும்
களித்தேன் உடலுஞ் சிலிர்த்தது
காண்தணி காசலனே.

(அ - ரை.) சுளித்து - வெறுப்புக் குறியால் கோணலாக்கி. தோகைச் சுகம் எனும் ஓர் துளித் தேன் - தோகையை உடைய மயில் போலும் பெண்களின் சிற்றின்பத்தை. துவளும் - வாடும். தொல்வினைத் துட்டன் - பழமையான தீவினையை உடைய பொல்லாதவன். அளித்தோய் - அருள் செய்தோய். (சு)

[தணிகை முருகன்மீது பாடியன.]

205. வாராத வல்வினை அந்தோ எனதிடம் வந்துமிகப்
போராடு கின்றது போகேனென் கின்றது புண்ணியனே
தீராத இவ்வினை தீர்ந்துய்யு மாறுன் திருவடியைத்
தாரா யருள்புரி யாய்தணி காசல சண்முகனே.

(அ - ரை.) வல்வினை - கொடிய தீவினை. தாராய் - தருவாயாக. (எ)

206. நோயால் முழுதும் நிறைந்த
சரீரமும் நுன்திருத்தாள்
தோயாத நெஞ்சமுங் கொண்டுழல்
வேனிந்தத் தொல்லுலகில்
மாயா முனமுன் தனைவந்
தடையுநன் மார்க்கமதைத்

தாயாய் அருள்புரி வாய்தணி
காசல சண்முகனே.

(அ - ரை.) தோயாத நெஞ்சம் - படியாத மனம். தொல் உலகு - பழமையான உலகு. (அ)

207. மனையாளை மக்களை மாநிதி தன்னை மதித்துநின்தாள்
நினையாமல் என்சிறு வாழ்நாளை வினில் நிதங்கழிப்பேன்
தினையா மளவன்பும் இல்லேனெனினுந் திருவருள்கொண்
டெனையாள நீநினை யாய்தணி காசல வீசுரனே.

(அ - ரை.) மதித்து - பொருளாக எண்ணி. நீ நினையாய் - நீ நினைந்தருள்வாயாக. (௯)

208. ஆதார மிந்த அகிலந் தனிலெனக் குன்றனப்பொற்
பாதார விந்தம தல்லாமல் வேறில்லை பத்தர்நெஞ்ச
மேதான மாக்கொண்டு விற்றிருப் பாய்வினை யால்விளைந்த
தீதா னதையொழித் தாள்வாய் திருத்தணித் தேசிகனே!

(அ - ரை.) அகிலம் - உலகம். பாதாரவிந்தம் - திருவடித் தாமரை. தானமாக்கொண்டு - இருக்குமிடமாகக் கொண்டு. (௧0)

209. கஞ்சனைச் சிறையில் போட்டாய் கடவுளர்
சிறையை மீட்டாய்
செஞ்சுடர் வேலி னலே தீயசூர்
முதலைச் செற்ருய்
அஞ்சலென் பாரைக் காணு தல்லலில்
உழல்வே னுக்குத்
தஞ்சம்நீ அருள வேண்டும் தணிகைமா
மலையு ளானே.

(அ - ரை.) கஞ்சன் - நான்முகன். கடவுளர் - தேவர்கள். செம்சுடர்வேல் - செம்மையான ஒளியையுடைய வேல். சூர் முதல் - சூரபன்மன். செற்ருய் - அழித்தாய். அஞ்சல் - அஞ்சாதே. தஞ்சம் - அடைக்கலம். (௧௧)

210. ஆற்றொணாத் துயர்கொண் டேழை
அலைகின்றேன் அவனி தன்னில்
தேற்றுவார் ஒருவ ரேனுந்
தேடியுங் காண கில்லேன்
போற்றுவேன் பத்தி யோடுன்
பொன்னடி களையே என்றும்
சாற்றுவாய் உய்யு மாற்றைத்
தணிகைமா மலையு ளானே.

(அ - ரை.) அவனி - உலகம். தேற்றுவார் - தெளிவிப்பவர். காணகில்லேன் - பார்க்கவில்லை. உய்யும் ஆற்றை-கடைத்தேறும் வழியை. (கஉ)

## அ௲. பாலகிருட்டிணக் கவிராயர்

[பாண்டிவள நாட்டில் மதுரை மாவட்டத்திலேயுள்ள முறையூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தக்கவர்களிடம் தமிழ் மொழியையும் வடமொழியையுங் கற்றுப் புலவரானார். கோவிலில் மறையோதுதல் இவருடைய தொழில். பிறந்த நாட் குறிப்பெழுதுவதினும் வல்லவர். இவர் இயற்றிய நூல்கள் காதல் பிரபந்தம், விசயக் கும்மி முதலியன.]

[இராமன் செட்டியார் என்பவர் சத்துரு சங்கார நகரிலே அறச்சாலை ஒன்று அமைத்து வழிச்செல்வோரின் பசி போக்குதற்கு ஏற்பாடு செய்தார். அப்பொழுது இவர் பாடியது.]

211. திருமருவு முறைசைவளர் மீனலோ சனவல்லி
சேவடி வணங்கி யேத்தித்
திகழ்பழநி யப்பவணி கேந்திரசு தாசுரன்
செய்தவத் தால்உ தித்த

செல்வனுஞ் சுப்ரமண் யக்குரிசில் சின்னையா
சீலமுறு பழநி யப்பன்
சீரான மூவர்க்கும் அனுசனென வோங்கியாண்
சிங்கடா கைகள் செலுத்தி
பருவரலில் மதனமார்க் கண்டசிவ பத்திப்ர
தாபசெய துங்கன் என்னப்
பாருலகு ளோர்துதித் தகமகிழ நற்கீர்த்தி
பாலனஞ் செய்து நாளும்
பணிலங்கள் அடர்சத்ரு சங்கார நகர்மீது
பரிதிமதி உளவ ரையிலும்
பண்புமிகும் அனசத்ரு தர்மப்ர திட்டையும்
பண்ணிமனு விற்சி றந்து
தருவைந்தும் நாணமுற எக்கால வேளையும்
சந்தோட கரமா கவே
தாதா எனப்பகரும் ஆதுலர்க் குதவிபுரி
தனயனும் கர்ன சமுகம்
தன்னுயிர் எனப்புவன மன்னுயிரை ரட்சணைசெய்
தர்மரா சேந்திர சமுகம்
சத்யமொழி நிறைவுறப் பாலித்த குணவரிச்
சந்த்ரபூ பதியின் சமுகம்
கருணைதவ ருமலே சரணடைந் தோர்களைக்
காக்குமக ராச சமுகம்
காதலெனு நற்றமிழ்ப் பாமாலை சூடியெக்
காலுமகிழ் பால கிருட்ண
கவிராச னுக்குநவ நிதியாதி ஈந்துகுடி
காக்கின்ற வள்ளல் சமுகம்
கனகன்ஒப் பனையசெய ராமசா மிப்பிரபு
காண்டீபன் சமுகம் இதுவே.

(அ - ரை.) முறைசை - முறையூர். மீனலோசனவல்லி - அங்கயற்கண்ணி. சுதாசுரன் - மகன். அனுசன் - தம்பி. பருவரல் - துன்பம். துங்கன் - மேன்மையை உடையவன். பாலனம் - ஆட்சி. மணிலங்கள் - முத்துக்கள். பரிதிமதி - கதிரவன் திங்கள். அனசத்ர தர்மப்ரதிட்டை-உணவிடும் அறச்சாலைத் தர்மம் ஏற்படுத்தல். தருவைந்தும் - விண்ணுலகத்தில் உள்ள தெய்வதருக்கள் ஐந்தும். ஆதுலர் - இரப்போர். ரவிதனயனும் கர்னன் - கதிரவன் மகனாகிய கன்னன். நவநிதியாதி - ஒன்பான்வகைச் செல்வம் முதலியன. கனகன் - பொன்னுலகத்தவனாகிய இந்திரன். (க)

[சரியாக மழை பெய்யாதபடியால் தண்ணீர்ப் பஞ்சம் உண்டாயிற்று. பலர் பலவிடங்களில் கிணறு தோண்டினார்கள். தண்ணீர் ஊறவில்லை. இப்புலவர் சண்முகஞ் செட்டியாருடைய உதவிபெற்று ஒரு கிணறு வெட்டினார். இவருடைய கிணற்றில் இருந்துமட்டும் மிகுதியாகத் தண்ணீர் ஊறிற்று. அப்பொழுது மகிழ்ச்சியடைந்து பாடியது.]

212. விண்முகத்தில் நின்றீசர் சடையின் மீது
விளங்கிவரு கின்றகங்கா நதியைப் போலும்
பண்முகப்பா வலர்இன்சொல் சுவையைப் போலும்
பங்கயமின் உலவுமுறைப் பதியின் மேவி
எண்முகத்துங் கீர்த்திபுனை ராம சாமி
எனும்வணிகப் பூமான்தன் இதயம் போலும்
சண்முகப்பேர் வாய்ந்தசய தீரன் செம்பொற்
றனிநிதியால் சலதிநிதி தனைக்கண் டோமே.

(அ ரை.) விண்முகத்தில் - வானிடத்தில். பங்கயமின் - செந்தாமரை மலரில் எழுந்தருளிய திருமகள். முறைப்பதி - முறையூர். எண்முகத்தும் - எட்டுத் திக்குகளினும். தனி நிதியால் - ஒப்பற்ற பொருளுதவியால் - சலதிநிதி - கடற்செல்வம் போன்ற தண்ணீர். (உ)

[மகனுடைய திருமணத்திற்குப் பொருள்வேண்டி இராமசாமிச் செட்டியார் என்பவரிடம் பாடியது.]

213. நற்புகழ்சே ரும்முறைசை ராமநா தேந்திரனும்
கற்பகம்பார்த் தாலென் கலிதீரும்—அற்புதஞ்சேர்
கற்றகவி ஞோரைக் கனவினிலும் எண்ணுத
மற்றவர்பார்த் தால்தீரு மா ?

(அ - ரை.) முறைசை - முறையூர். கலி - வறுமை. (ரு)

[பொருள் பெற்றபொழுது பாடியது.]

214. நந்துலவுந் தென்முறைசை ராமநா தேந்திரநின்
சந்ததிகள் யாவுந் தழைத்திடவென்—மைந்தனுக்குப்
பூதானம் மேலாய்ப் புகலுகின்ற பூண்கன்னி
காதானஞ் செய்தாய் கனிந்து.

(அ - ரை.) நந்து - சங்கு. தென் முறைசை - அழகிய முறையூர். சந்ததிகள் - வழி முறைகள். (சு)

[வீடு ஒன்று வேண்டிச் சண்முகஞ் செட்டியாரிடம் பாடியது.]

215. மன்னு திருமக ளார்வணி காமணி யேதுதிமா
தென்னு கவிக்கு மகிழ்நிதி யேசெழுங் காருலவும்
பொன்னு கதிக்கும் மதனுபூ மாமுறைக் கண்ணிலகு
கன்னு மதிமனை தாதாநீ சண்முக காநிதியே.

(அ - ரை.) மன்னு - அரசனைப் போன்றவனே! திருமகளார் வணிகா - செல்வம் பொருந்திய வணிகனே. மணியே - மணியைப் போன்றவனே! செழுங்கார்-செழியமுகில். பொன்னு- பொன்னையுடையவனே. கதிக்கும் மதனு!-விளங்குகின்ற காமனைப் போன்றவனே! பூமா - பூமானே. முறைக்கண் இலகு - முறையூரின் கண் விளங்குகின்ற. கன்னு - கன்னன் போல்பவனே! மதிமனை - மதிக்கத்தக்க வீடு. (எ)

[தமக்கு ஓர் ஆ வழங்கியபோது பாடியது.]

216. மீனவளார் முறைசைநக ரத்தில் மேவி
விளங்குவணி கோத்தமரில் விசயன் நேராம்

தானகர்னன் எனும்ராம நாத வள்ளல்
தவசுதன்அம் மால்கருப்பன் செட்டி பூமான்
மானபரன் பாலகிருட்ண கவிக்கிந் நாளில்
வசிட்டசுர பிக்குமேல் எனவ ழுத்த
வானவர்கோன் அகமகிழத் தந்து சிந்தா
மணியெனவே வாழ்வுற்று வளர்கின் றனே.

(அ - ரை.) *மீனவள் - அங்கயற்கண்ணி. வணிகோத்தமர் - வணிகர்களிற் சிறந்தவர்கள். விசயன் - அருச்சுனன். தான கர்னன் - தானஞ் செய்வதில் கர்னன். தவசுதன் - தவத்தால் தோன்றிய மகன். வசிட்ட சுரபிக்குமேல் என வழுத்த-வசிட்ட ரிடத்தில் உள்ள காமதேனுக்கு மேலானது என்று கூறுமாறு. சிந்தாமணி - வேண்டுவார் வேண்டுவதை ஈயுமொரு தெய்வ மணி.* (௧)

[*தாய்கூற்றாகப் பாடியது*]

217. முறையூர் என்னும் வளம்பதியில்
முகிலாய் வளர்சின் னையாவணிகன்
முதிருந் தவத்தின் பலன்தானே
முதன்மைப் புதல்வன் ஆகிவந் தோன்
மறையோர் புகழிச் சண்முகவேள்
தயவுங் கிசைந்தா யடிமகளே
சரசம் புரிந்து நயம்பேசிச்
சந்தக் களபங் கற்பூரம்

மிறையே அகலப் பூசிமலர்
வேய்ந்து வெள்வெற் றிலைதுவர்க்காய்
விரைந்து கொடுத்துக் குளிர்மகர
வீணை வர்ணங் கலைமீட்டிக்
குறைவு தீர்க்குங் கற்பகத்தில்
கூறும்வல்லி சாதமெனக்

குன்றும் இரண்டு புயங்களேனும்
தொழுதோம் பேறி வாழியவே.

(அ - ரை.) முகிலாய் - கொடை முகிலாய். தரையோர் - உலகத்தவர். சரசம் புரிந்து - இன்ப விளையாடல் செய்து. மிடியே அகல - வருத்தம் நீங்க. கற்பகத்தில் வல்லி சாதமென - கற்பகத்தில் படரும் வல்லிசாதக்கொடியைப்போல. (எ)

## ௮௪. முகமது அப்துல் காதர் புலவர்

[இவர் பாலக்காடு மேட்டுப்பாளையம் கானுத் தம்பிப் புலவர் என்பவருக்கு மகனாகத் தோன்றினார். இவருடைய பெயர் தம்பிப் புலவர் எனவும் வழங்கியது.]

[இவர் நபிநாயகத்தின்மீது பாடிய பாடல்களில் ஒன்று.]

218. அவனிதனில் உண்டான இசுலாமெ லாம்பெருகி
ஆக்கம் பெருக வேண்டும்
அறதேசி பரதேசி பசியாற எந்நாளும்
அன்னம் பருக வேண்டும்
கவனமொன் றில்லாத தம்பிரான் தன்னையே
கருத்தில் துதிக்க வேண்டும்
காவலது அணுகியே வயதுநூ றிருக்கவே
காத்துரட் சிக்க வேண்டும்
பவமொன்றும் அணுகாமல் ஐந்துநே ரமுந்தொழுது
பலகலைகள் அறிய வேண்டும்
பற்றறுச் செல்வமும் நித்யகல் யாணமும்
பண்பாய்ப் பெருக வேண்டும்
நவநிதியம் மேல்விளங் கும்பெருமை மக்கமா
நகரினுக் கரச தாகி

நாமூன்று சமயமும் தானென்ற தாய்நின்ற
நபிநா யகக்கு ரிசிலே.

(அ - ரை.) இசுலாம் - முகமதியர். அறதேசி பரதேசி - துறவிகள். தம்பிரான் - இறைவன். பவம் - தீவினை. (க)

## அடு. தொண்டைமான் முத்தையா

[இவர் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் 1879ஆம் ஆண்டில் பிறந்தார். ஓவியக் கலையில் தேர்ச்சி பெற்றார். இந்துக் கல்லூரியில் உதவி ஓவிய ஆசிரியராக அமர்ந்து முப்பதாண்டுகள் வேலை பார்த்தார். தமிழ் மொழியையும் நன்கு கற்றுத் தமிழ்ப் புலமை பெற்றார்.]

[தம் மனைவி காலமானபோது பாடியன.]

219. மண்ணமைந்த விடுகட்டும் சிறுபருவத் திருந்தே
மங்கைநீ மணவாளன் நானெனவே யுற்றோர்
பண்ணமைந்த கீதவொலிக் கருவியாய் உனையும்
பாடகனாய் எனையுமவர் பாவித்தே வளர்த்தார்
கண்ணமைந்த காரிகையாய் நீயானாய் நானும்
காளையாய் உனைமணந்து களிப்புற்றிங் கிருந்தேன்
விண்ணமைந்த பரம்பொருளுன் விதியேட்டைக் கிழிக்க
விண்புகுந்தாய் நானிங்கு வீணில்அல மரவே.

(அ - ரை.) பண்ணமைந்த - இசைபொருந்திய. பாவித்து - எண்ணி. கண்ணமைந்த - அழகுபொருந்திய. காரிகை பெண். விண்ணமைந்த - வானிற் பொருந்திய. அலமர - சுழற்சியடைய. (க)

220. பன்னெடுநாள் வாழ்கவெனப் பெரியரெலாம் நம்மைப்
பட்சமுடன் மணவிழவிற் பரிவாக ஆசிச்
சொன்னெடுகச் சரம்போலப் பெய்தனர்நாம் மகிழ்ந்தோம்
சொற்படியே ஆகாது தொன்மைவினைப் பயனால்

பின்னெடுநாள் நீயிருக்க ஆற்றாது பிரிந்தாய்
பித்துற்று நான்புலம்பப் பெரியநகை அளித்த
என்னெடுநெஞ் சினிலிருக்கும் இறைவர்திருச் செயலை
என்னென்பேன் என்னென்பேன் ஏதுமறி யேனே.

(அ - ரை.) பட்சமுடன் - அன்போடு. மணவிழவில் - திருமணத்தில். பரிவாக - அன்பாக. ஆசிச்சொல் - வாழ்த்துரை. நெடுகச் சரம்போலப் பெய்தனர் - நெடுகிலும் அம்பு போலப் பொழிந்தார்கள். இறைவர் திருச்செயலை - கடவுளின் செயலை. (உ)

221. உடலுயிரும் பூமணமும் ஒன்றையொன்று பிரிவுற்(று)
உலகியலில் காண்பதில்லா உண்மைபொய்க்கு மாறு
மிடலுறச்சின் னுளிருந்து நீமறைந்தாய் நாறே
மிதமற்ற உடல்போலும் மிதித்தமலர் போலும்
விடலையெனத் திரிகின்றேன் நீயோவிண் ணகரில்
விளையாட விழைகின்றாய் விருப்பமிது வானால்
கடலுலகில் காதலுரம் வைத்தபெருங் கருணைக்
கடவு ளெண்ணம் எவ்வாறும் கணிக்குமியல்
[பிலனே.

(அ - ரை.) மிடலுற - வலிமை பொருந்த. விடலை - இளைஞன். விண்ணகரில் - தேவருலகில். காதலுரம் - காதல் வலிமை. கணிக்கும் - எடுத்துரைக்கும். (ங)

222. மணக்கின்ற அந்நாளில் ஒருநாளும் உமையே
மறந்துநான் பிரிந்திருக்கேன் மறையோரே சாட்சி
பிணக்குறநீர் நடந்தாலப் பிணக்கதனைக் காதல் [றே
பெருநெகிழ்ச்சிக் குறிப்பாகப் பேணுவன்நான் என்
இணக்கமுற உரைத்தமொழி தனைமறந்திட் டென்னை
ஏக்கமுறச் செய்தெனைநீ ஏகிமறைந் தொளித்தாய்
குணக்குமுதல் நாற்றிசையும் தேடியலைந் தலறக்
கொண்டனையே நின்குறிப்புக் குறிக்குமியல்
[பிலனே.

(அ-ரை.) மறையோர் - அந்தணர். பிணக்குற - பிணக்குதல் பொருந்த. போற்றலன் - போற்றுவேன். எவண் - எவ்விடத்திருந்து. தொக்குழுமல் - நிறைந்து குழுமலாக. (௪)

[இராசாராம் மோகனர் மீது பாடிய வாழ்த்துப் பாடல்.]

223. கடல்புடை உடுத்த நாரினி தனிலே
கவின்மிக விளங்குமிந் நாட்டில்
உடல்பொரு ளாவி அனைத்தையும் பரக்கே
உதவிடும் உத்தம சீலர்
மிடல்பெறு மனத்தர் பலபல வினைந்தர்
மேவினர் அவர்தமுள் விசேட
அடலுறு பெரியோன் ராசாராம் மோகன்
அவனடி பரவுதும் மகிழ்ந்தே.

(அ-ரை.) பரக்கே - பரந்தவர்களுக்கே. மிடல்பெறு மனத்தர் - வலிமை பொருந்திய மனத்தையுடையவர். (௫)

## ௩௫. அ. வரதநஞ்சைய பிள்ளை

[இவர் கொங்குமண்டலத்தில் சேலம் மாவட்டத்திலுள்ள உள்ள பெருமாள் பாளையம் என்னுஞ் சிற்றூரில் 1877ஆம் ஆண்டிற் பிறந்தார். தம்முடைய தந்தையாராகிய அப்பாச்சாமிப் பிள்ளையிடந் தமிழ் மொழியைக் கற்றுணர்ந்தார். வாழ்நாள் முழுவதும் ஆசிரியராகப் பணிபுரிந்தார். துருவோபாக்கியானம், மனவாசியமாலை, நாரி விநாயகர் மும்மணிமாலை, நயனகிரி வரதராசர் பதிகம், தமிழரசி குறவஞ்சி என்பன இவர் இயற்றிய நூல்கள்.]

[தம் நண்பர் விரும்பியவாறு முருகக் கடவுள்மீது பாடியது.]

224. மட்டுத் தளையவிழ் குல்லையந் தாம மணிநிறத்தோன்
இட்டப் படுமரு கன்கதிர் வேற்கை இளையவன்வாழ்
செட்டிக் குளம்வந்து சேவிக்கின் றேம்அச் சிவனருளுஞ்
செட்டிக் குளம்வரு மோபுன்கண் யாவையுந்
[தீர்த்திடற்கே.

(அ - ரை.) மட்டு - தேன், மணம். தளை - கட்டு. குல்லையந்தாமம் - துளசிமாலை. செட்டிக்குளம் - ஓர் ஊர். செட்டிக்கு - முருகக் கடவுளுக்கு. உளம் வருமோ - திருவுளம் உண்டாகுமோ? புன்கண் யாவையுந் தீர்த்திடற்கு - துன்பங்கள் எல்லாவற்றையும் போக்குதற்கு. (க)

[காங்கேயம் சேடாசலக் கவிராயரின் அறிவுத் திறமையை ஆராய்ந்து பார்க்கத் திருமாலைக் குறித்துப் பாடியது.]

225 கார்நிறமாம் பத்துக்கால் காணும்பார் வாயெட்டுச்
சீர்நிற்கும் நல்லாரைச் சேருமே—ஏர்நிற்க
ஆடும் பணமென்றால் அஞ்சக்கை மூடுமிதை
நாடியுரைப் பீர்புலவீர் நன்கு.

(அ - ரை.) கார்நிறமாம் - கரியநிறமுடையதாக இருக்கும். பத்துக்கால் காணும் பார்வாய் - பத்துமுறை இவ்வுலகிலே பிறப்பு எடுக்கும். எட்டுச் சீர்நிற்கும் நல்லாரைச் சேரும் - எண்வகைச் சிறப்புக்களும் பொருந்திய எட்டுத் திருமகளிரையுந் தழுவும். ஆடும் பணம் என்றால் - ஆடுகின்ற படத்தையுடைய பாம்பை (அஃதாவது சேஷசயனம்) கண்டால். அம் சக்கை மூடும் - அழகிய கண்களை மூடிக்கொண்டு உறங்கத் தொடங்கிவிடும். (உ)

[காட்டுப் பாளையம் மிட்டாதார் வேல் என்று தொடங்கி வேல் என்று முடியுமாறு முருகக் கடவுள் மீது ஒரு செய்யுள் இயற்றவேண்டும் என்றபொழுது பாடியது.]

226. வேலேந்துங் கையுடைய வித்தகனே மாதுரியப்
பாலேந்தி ஊட்டியவாம் பல்வாயா—மாலேந்தும்

பூஞ்சோலைக் காளிநகர்ப் புண்ணியனே நின்னைமற
வேஞ்சால நீயுமற வேல்.

(அ - ரை.) மாதுரியப்பால் எந்தி - இனியபாலை எந்தி. ஆம்பல்வாயா - செவ்வல்லியைப் போன்ற வாயை உடையவனே; நீயும் மறவேல் - நீயும் மறக்காதே. (௩)

[கோயமுத்தூரில் பொடிக் கடைக்காரர் ஒருவர் பொடியின்மீது சில பாடல்கள் பாடவேண்டும் என்று வேண்டிக்கொண்டபோது பாடியதில் ஒன்று.]

227. மலையைப் பெரிய மத்தாக்கி
வளரோ டதியை இடைப்பெய்தே
அலையைக் கடைந்து தான்பொன்கொண்
டன்று தேவர் வாய்க்கமுதம்
மலியத் தந்த கோபால
சாமி பின்னும் வந்துபுகை
இலையைக் கடைந்து பொன்கொண்டெம்
மூக்குக் கமுதம் ஈந்தானே.

(அ - ரை.) ஓடதி - மருந்து. அலையைக் கடைந்து - பாற்கடலைக் கடைந்து. மலியத் தந்த - மிகுதியாகத் தந்த. (௪)

[ஞானியாரடிகளின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவின்போது இவர் பாடிய அம்மானைப் பாட்டு.]

228. சீரார் புலிசைச் சிவஞான சண்முகனார்
ஏராரோர் வேளைமுனிந் திருப்பவர்காண் அம்மானை
ஏராரோர் வேளைமுனிந் திருப்பவரே யாமாயின்
நேராயெவ் வேளையவர் நேசிப்பார் அம்மானை
நேசிப்பார் செவ்வேளை நித்தமுங்காண் அம்மானை.

(அ - ரை.) புலிசை - திருப்பாதிரிப்புலியூர். வேளை - காமனை. முனிந்திருப்பவர் - சினந்திருப்பவர். செவ்வேளை - முருகக்கடவுளை. (௫)

## ௮௭. அ. நாராயணசாமி ஐயர்

[தஞ்சை மாவட்டத்தில் திருத்தருப்பூண்டிப் பிரிவில் உள்ள பின்னத்தூர் என்னுஞ் சிற்றூரிலே வாழ்ந்திருந்தவர். இவர் இயற்றிய நூல்கள் நற்றிணை உரை, திருக்களர்ப் புராணம், திருக்கோட்டூர்ப் புராணம், பின்னத்தூர்க் கலம்பகம், செருப்பு விடுதூது முதலியன.]

[நற்றிணை பதித்தற்குப் பொருள் கொடாத குசைதாங்கித் தேவர் என்பவரை இழித்துப் பாடியது.]

229. இசைதாங்கி நற்றிணைக் கிவரென்
 றேயெண்ணி யேற்றவுடன்
குசைதாங்கித் தேவரைப் பற்றியந்
 தோவுளங் கொண்டுசொன்னேன்
வசைதாங்கி நிற்பவ ராமென்ப
 தென்றும் அறிந்திலன்யான்
நசைதாங்கி ஊன்நுகர் தன்மைய
 ராகுமந் நாய்ந்தவரே.

(அ - ரை.) இசைதாங்கி - புகழைப்பெற்று. நற்றிணை - நற்றிணையென்னும் நூல். வசை - பழி. நசை - இறைச்சி. (க)

## ௮௮. கு. குமாரசாமிப் பிள்ளை

[சோழவள நாட்டில் மூவராற் பாடப்பெற்ற சிவப்பதியாகிய மருதவனத்தில் தோன்றியவர். அதிவீரராமன்பட்டினத்தில் இருந்த புலிக்குட்டிக் கவிராயர் என்பவரிடம் இலக்கிய இலக்கணங் கற்றுத் தேறியவர். மருதவனத் தலபுராண உரைநடை, திருக்களர்த் தோத்திரத் திரட்டு, திரௌபதியம்மன் பதிகம், சுப்பிரமணியர் பாமாலை முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[காளையார் கோவில் இராமபத்திர சர்மா என்பவருக்கு எழுதிய பாடல்கள்.]

230. கெட்ட நாவினன் கெடுமதி மிக்குளன் கேள்வி
மட்ட மாயுளன் வழிதனில் தாழ்ந்தவன் மதித்து
இட்ட னுவதற் கிவனல யோக்கியன் என்றே
விட்டொழித்தலை யோவஃ தினதென விளம்பாய்.

(அ-ரை.) கெட்ட நாவினன் - தீயமொழிகளைப் பேசுபவன். கெடுமதி - தீய அறிவு. கேள்வி மட்டமாயுளன் - அறிவினில் தாழ்ந்தவனாக இருக்கிறான். வழிதனில் தாழ்ந்தவன் - கீழ்க்குலத்தான். இட்டன் - நண்பன். இனதென - இன்னது என்று. (க)

231. பழுதின் மூன்றுபைக் காரடு பட்சமாய் எனக்கு
எழுத வெண்ணலை யாமுமக் கிதுவரை கிறுக்க
முழுவி லாசமுந் தெரிந்தில தாகலின் முதலாம்
தொழுகு லத்தநின் னெஞ்சிரும் போகலோ சொலுமே.

(அ-ரை.) மூன்று பைக் கார்டு - அக்காலில் காலணுக் கார்டு என்னும் பெயரோடு விற்ற அஞ்சலட்டை. கலோ - கல்லோ? (உ)

[காரைக்குடி சொக்கலிங்கச் செட்டியார் என்பவரிடம் மருதவனப் புராணத்திற்குச் சாற்றுக்கவி கேட்டு எழுதியது.]

232. காமதனு நான்கொடியுங் கரிபரியுங்
காளமொடு கலந்து வாழும்
தேமருவு தடஞ்சோலை சூழ்காரைக்
குடியதனில் திகழ்ஒப் பில்லா
நாமருவு சிவசிவவென் றனுதினமோ
தாதாரை நாங்கா ணேமேல்
பூமருவந் நகர்வளத்தைச் சொலப்பலநா
விருந்தாலும் போதா தன்றோ.

(அ - ரை.) காமதனு - காமன்வில் (கரும்பு). நாண் - வண்டு. கொடி - மீன். கரி - இருள். பரி - கிளி. காளம் - குயில். (௩)

233. அவிவேண்டித் தக்கன்மகச் சாலையுற்றான்
அதுபோலும் ஐவர்க்கான
புவிவேண்டித் திருமாலுஞ் சுயோதனன்றன்
இடமுற்றான் புலோமைநாதன்
பவிவேண்டித் ததீசியிடம் உற்றானிப்
புராணமது பரவச்சாற்றுக்
கவிவேண்டி நினையுற்றேன் சித்தாந்த
சரபமெனுங்கலைஞர் ஏறே.

(அ - ரை.) அவி - தேவருணவு. புலோமைநாதன் - இந்திரன். பவி - இடியேறு போன்ற வச்சிரம். (௪)

[பட்டுக்கோட்டை நாடிமுத்துப்பிள்ளை மேற் பாடியது.]

234. ஒளிமணியார் இனவளையும் ஒதுக்கலையார்
கலியுலகில் உள்ளோர் உள்ளம்
களிமணிமா டங்களும்பைங் காக்கயமும்
கவினோங்கக் கங்கை யான்மால்
தளிமிகுபட் டுக்கோட்டை தனிலுறைவோன்
வயித்திலிங்கத் தக்கோன் தந்த
நளிமிகுநன் னாடிமுத்துக் குரிசிலென
வெளிவந்தாய் நல்லோன் என்றே.

(அ - ரை.) இனவளை - கூட்டமான சங்குகள். ஒதுக்கலை ஆர் - ஒதுக்குதலைப் பொருந்திய. கலியுலகில் - கடலாற் சூழப்பெற்ற உலகத்தில். பைங்கா - பசியசோலை. கயம் - தடாகம். தளிமிகு - கோயில்கள் மிகுந்த. (௫)

## ௯௯. பிச்சையா நாவலர்

[பாண்டிவள நாட்டில் பொதிய மலையை அடுத்த மலையடிக் குறிச்சி என்னுஞ் சிற்றூரில் சைவ வேளாளர் குலத்தில் அருணசலம் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தாருகாபுரப் புராணம் என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிருர்.]

[திருவாரூர்க்குச் சென்ற சமயத்தில் கந்தசட்டி விழா நடைபெற்றுக்கொண்டிருந்தது. அப்பொழுது முருகக் கடவுள் பவனி வந்துகொண்டிருந்தார். அந் நாளில் அவ்வூரில் இருந்த துடிசைகிழார் அ. சிதம்பரனூர் முருகக்கடவுள்மீது ஒரு செய்யுள் பாடவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்; அப்பொழுது பாடியது.]

**235.** திருத்த மனத்தின் கௌரியம்மை
சிந்தைமகிழத் தந்தை கொண்ட
விருத்த வடிவைத் தாமெடுத்து
விளங்கும் உலகோர் வியப்புறவே
பொருத்த குறத்தி வள்ளிமணம்
புரிவான் கருதி ஆரூரில்
கருத்தன் முருகன் பவனிவரக்
கண்டோம் பிறவி விண்டோமே.

(அ - ரை.) *திருத்த மனம் - செவ்வையாக அமைந்த மனம். பொருத்த குறத்தி-பொருத்தமுள்ள குறத்தி. கருத்தன் முருகன் - எப்பொருட்குந் தலைவனுகிய முருகக்கடவுள்.* (க)

## ௧௦௦. இராமாநுசலு நாயுடு

[இவர் திரிசிரபுரத்திற்கு அண்மையில் உள்ள திருவரங்கத்தில் தோன்றியவர். அமிர்தகுணபோதினி, பிரசானுகூலன் முதலிய திங்கள் இதழ்களை நடத்திய

வர். ஆநந்த கதா கல்பகம், வித்தியா நவநீதம், சுகுமார திலகம் முதலியன இவரியற்றிய புதினங்கள்.]

[நாட்டுப்புறத்தான் ஒருவன் நகரவாசத்தை மேற்கொண்டதைக் குறித்துப் பாடியது.]

236. உலகிலே மிகுபிரக் கியாதியுடன் வாழவாய்
ஊறுவோர் வெகுபேர்கள்தாம்
உற்றிடும் பிரசித்தி யாற்செலவு மிகுந்திட
உறுதொல்லை இவர்க ளுணரார்
நலமிகுங் கிராமத்தில் சுகிர்தநிலை தன்னிலே
நல்வாழ்வு வாழ்ந்த ஒருவன்
நாளுமே புதுநாக ரீகமோ கத்தினுல்
நலமில்வீண் டம்பத்தினுல்

பலருமே தற்புகழ வேண்டுமென் றும்மிகு
கவுரவம் அமைந்த வான
பட்டங்கள் பெறவேண்டு மென்றுமே பொருளெலாம்
பாராது செலவு செய்து
நிலமதனில் நகரவா சத்தினை விரும்பியே
நிலையிலா ஆரவாரம்
நிகழ்த்திருன் உலகியலும் கீர்த்திநிலை யாமையும்
நெஞ்சிலுண ராமை யாலே.

(அ - ரை.) *பிரக்கியாதி - புகழ்மிகுந்து. உறுதொல்லை - வருகின்ற துன்பம். சுகிர்தநிலை - சுகநிலை. டம்பம் - வெளிப்பகட்டு.* (க)

## கூக. சாமி சகசாநந்தர்

வடாற்காடு மாவட்டத்தில் மேல் புதுப்பாக்கம் என்னுஞ் சிற்றூரில் 1840ஆம் ஆண்டில் இவர் பிறந்-

தார். தமது முயற்சியால் கல்வி கற்று முன்னுக்கு வந்தார். திருத்தில்லையில் நந்தனார் கல்விக் கழகத்தை அமைத்துச் சிறந்த தொண்டு செய்தார்.]

[இராமசாமி ஐயர் விருப்பப்படி தாசில்தார்மீது பாடியன.]

237. சீர்பூத்த தில்லைச் சிதம்பரத்துத் தாசிலெனும்
பேர்பூத்த காமர் பெருந்தகையே—பார்பூத்த
சீதை கொழுநன் சிறப்புப் பெயருடையோய்
ஆதரவில் எங்கட் கருள்.

(அ - ரை.) காமர் - அழகிய. சீதைகொழுநன் - இராமன் ஆதரவு இல் - ஆதரவு இல்லாத. (௧)

238. துன்பச்சா திக்குநல் தோழியாய் நின்றருளும்
இன்பப் பெயருடைய எந்தையே—நின்பக்கம்
சேர்ந்தவர்க்கு நல்குரவு சேருமோ கற்பகத்தைச்
சேர்ந்தவர்க்கு என்னகுறை செப்பு

(அ - ரை.) துன்பச் சாதிக்கு - துன்பமுடைய குலத்தினருக்கு. நல்குரவு - வறுமை. (௨)

239. விரர்க் கழகுதருங் காயம் மெலிந்திடுதல்
மாதர்க் கழகுதரும் மாநோன்பால்—ஈவோர்
கொடுத்ததனுல் நல்குரவைக் கொண்டால் அழகே
அடுத்தவெமைக் காப்ப தழகு

(அ - ரை.) காயம் மெலிந்திடுதல் - உடலிளைத்தல். மாநோன்பு - சிறந்த விரதம். (௩)

## ௯௨. வா. மகாதேவ முதலியார்

[சென்னைமா நகரில் இருந்தவர். இலக்கண இலக்கிய நூல்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவர். கிறித்தவக் கல்லூரி உயர்

நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். இவர் திருமயிலம் இரட்டை மணிமாலை, சொக்கலிங்க சுவாமிகள் வெண்பா, பழநி நான்மணிமாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.]

[ஒரு போலித் துறவியைப் பார்த்துப் பாடியது.]

240. செந்நீர் தசையிரண்டும் சேர்ந்தான துன்னுடம்பும்
எந்நாளும் மும்முறைநீ என்னினுண்பாய்—இந்நாளில்
எற்றோபெண் ணாசை இகந்தாய் இசைத்திடுநீ
வற்றாந் துறவொழுக்கு வாய்ந்து.

(அ - ரை.) *செந்நீர் - இரத்தம். தசை - ஊன். எற்றோ பெண்ணாசை இகந்தாய் - எப்படிப் பெண்ணாசையை நீக்கிவிட்டாயோ?* (௧)

[சென்னைமா நகரைக் குறித்துப் பாடியது.]

241. வானாடும் வந்துபுகக் காதலிக்கும்
செவ்வியதாய் மலர்க்கரத்து
மானாடுஞ் சம்புமகிழ் திருப்பதிகள்
அகந்தழீஇ மாக்கள் மொய்த்துத்
தேனாடுங் குழல்நல்லார் பொற்பானுங்
கற்பானுந் திகழ்ந்து நின்றார்
கோனாடுங் கலவியினில் புலவியினில்
கலனெறியுங் குவளைச் சென்னை.

(அ - ரை.) *வானாடும் விண்ணுலகமும். செவ்வியதாய் - சிறப்பினையுடையதாய். மலர்க்கரத்து - மலர்போன்ற கையில். மான் நாடும் - மானை விரும்பும். சம்புமகிழ் - சிவபிரான் மகிழ்கின்ற. அகந்தழீஇ - உள்ளடக்கி. மாக்கள் - விலங்குகள். தேன் நாடுங் குழல் நல்லார் - வண்டுகள் விரும்புங் கூந்தலையுடைய பெண்கள். பொற்பு - அழகு. கோன் நாடுங் கலவியினில் - தலைவன் விரும்புஞ் சேர்க்கையில். புலவியினில் - ஊடலிடத்தில். கலன் எறியும் - அணிகலன்களைக் கழற்றிவீசும். குவளைச் சென்னை - குவளைமலர் பொருந்திய தடாகமுடைய சென்னை.* (௨)

## ௬௩. சதாவதானம் கிருட்டிணசாமிப் பாவலர்

[சென்னை சிந்தாத்திரிப்பேட்டையில் இவர் பிறந்தார். கோ. வடிவேலுச் செட்டியாரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார். நூறு அவதானங்கள்வரை செய்தார். கலைசைச் சிலேடை வெண்பா உரை, தேசிங்குராசன் கதை, பிரகலாதன் கதை முதலியன இவர் எழுதிய நூல்கள்.]

[முருகேசச் செட்டியார் என்பவருக்குக் கூறிய திருமண வாழ்த்துப் பாடல்.]

242. செந்தமி ழறிவும் ஒழுக்கமுந் தெய்வச்
சிந்தையும் ஓங்கிடுஞ் செல்வன்
எந்தமக் கன்பன் மாமுரு கேசன்
எழில்சிவ காமியை மணந்தே
கந்தனும் வள்ளி அம்மையும் போலக்
கண்ணனும் செல்வியும் போலச்
சந்ததங் குலவிச் சந்ததி பெருகித்
தரணியில் ஓங்கிவா ழியவே.

(அ - ரை.) சந்ததங் குலவி - எப்பொழுதும் இன்புற்று. தரணியில் - உலகத்தில். (க)

## ௬௪. பெரியபிள்ளை

[காவிரியாற்றின் தென்கரையில் உள்ள சிவபுரம் என்னும் ஊரில் சைவவேளாளர் குலத்தில் தோன்றியவர். திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்த அம்பலவாண தேசிகரிடம் அறிவுரை பெற்றுச் சிறப்படைந்தவர்.]

[தம்முடைய ஆசிரியர்மீது பாடியது.]

243. அந்தனே தென்றுறைசை அம்பலவா ணாஅமைந்த
சித்தம் உருவிரண்டுந் தீயமென்றாய்—சுத்தத்தில்

ஒன்று பதார்த்தமாம் ஒன்றுநின் றேயொன்றும்
ஒன்றுமதெவ் வாறோ உரை.

(அ-ரை.) அத்தனே! தலைவனே! தென்துறையை - அழகிய திருவாவடுதுறை. (௪)

## ௧௫. வேலுமயிலும் புலவர்

[இவர் எப்பொழுதும் "வேலும் மயிலும் வேலும் மயிலும்" என்று கூறிக்கொண்டிருந்தபடியால் வேலு மயிலும் புலவர் என்று காரணப் பெயர் பெற்றார். இவருடைய இடுகுறிப் பெயர் மறைந்துவிட்டது.]

[சிலர் இவரைப் பிடித்துச் சுடுமணல்மேல் தள்ளியபோது பாடியது.]

244. அடிக்கினும் வேலும் மயிலுமென்
பேன்வல் லரவுவந்து
கடிக்கினும் வேலு மயிலுமென்
பேன்கடுங் காலனென்னைப்
பிடிக்கினும் வேலு மயிலுமென்
பேன்பின் மணல்மேன்மண்டை
வெடிக்கினும் வேலு மயிலுமென்
பேன்செந்தில் வேலவனே.

(அ-ரை) அரவுவந்து - பாம்புவந்து. காலன் - நமன். (௧)

## ௧௬. இராசராசேசுவர சேதுபதி

[இராமநாதபுரத்தில் அரசர் வழிமுறையில் தோன்றியவர். இளமைப் பருவத்திலேயே கல்வியை நன்கு கற்றுச் சிறப்படைந்தார். இவர் சில நூல்களையும் இயற்றியிருக்கிறார்.]

[ரா. இராகவ ஐயங்காருக்குக் கொடுத்த நாட் குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொடுத்த பாட்டு.]

245. வரும்வருடஞ் சென்ற வருடம் அதிலும்
அரிய நலங்கள் அளிக்க—உரிமையுடன்
மந்தமிலாச் செந்தமிழ்தேர் மாலித்து வாறுக்குத்
தந்ததிந் தப்புத் தகம்.

(அ-ரை.) வரும் வருடம் - வருகிற ஆண்டு. மந்தம் அறிவுக்குறைவு. இந்தப் புத்தகம் - இந்நாட் குறிப்புநூல். (௪)

## ௫௭. மறைமலையடிகள்

[சோழவள நாட்டில் நாகையை அடுத்த சிற்றூர் ஒன்றில் தோன்றியவர். தனித்தமிழில் உரைநடை எழுதுவதில் புகழ்பெற்றுத் தமிழ் உரைநடையைச் சீரிய நிலைக்குக் கொண்டுவந்தவர். மாணிக்க வாசகர் வரலாறுங் கால ஆராய்ச்சியும், மக்கள் நூறாண்டு உயிர் வாழ்தல் எப்படி முதலிய பல நூல்களை இயற்றியவர்.]

[வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம் சோம சுந்தர நாயகர்மேல் இயற்றியது.]

246. நாயி னிழிந்தவெம் புன்மைகளைந்து
நலந்தர வந்தனையோ
நல்லது தீயது நன்றுபகுத்து
நவின்றிட வந்தனையோ
தாயினும் என்உயிர் தந்தையி னும்முயர்
தன்மையில் வந்தனையோ
தண்டமி ழிற்படு வண்டுறை நன்றுநீ
தந்திட வந்தனையோ
காயினும் அல்ல துவப்பினும் அன்பது
காட்டிட வந்தனையோ

கன்மன மியாவுமோர் நன்மன மாயெமைக்
காத்திட வந்தனையோ
தூய உளத்தினர் சாம்பவ ரென்பது
தோன்றிட வந்தனையோ
சோமசுந் தரனெனு நாமமோ டிங்குநீ
தோன்றிய தெங்குருவே.

(அ - ரை.) புன்மை - கீழான தன்மை. வண்துறை-நல்ல பகுப்புக்கள். காயினும் - சினந்தாலும். உவப்பினும் - மகிழ்ந்தாலும். கன்மனம் - கொடிய மனம். சாம்பவர் - சிவநட்பமைந்த தூயோர். (௪)

[தண்டலம் பாலசுந்தர முதலியார் மறைந்த போது பாடியன.]

கலி விருத்தம்

247. மணிநிறக் கடல்சூழ் மாநில மாந்தர்
பிணியற வாழ்நாள் பெரிதென எண்ணித்
திணியிருள் வானில் திடுமெனத் தோன்றித்
தணிமினின் மாய்வது சாற்றினை ஐயா!

(அ - ரை.) திணியிருள் - மிக்கவிருள். மினின் - மின்னலைப்போல். (௨)

248. ஆங்கிலம் உணர்ந்தாய் அருந்தமிழ் உணர்ந்தாய்
மேங்கிளர் சைவமும் மேதக உணர்ந்தாய்
ஈங்கிவை உணரினும் இறப்பினை நழுவி
நீங்குவ துணராய் நீத்தது முறையோ.

(அ - ரை.) மேம்-மேன்மை. மேதக-மேன்மை பொருந்த. (௩)

249. கல்வியும் பெறுவார் கனநிலை பெறுவார்
செல்வமும் பெறுவார் சீர்பல பெறுவார்
பல்புகழ் பெறுவார் பலர்உளர் நின்போல்
நல்லியல் புடையார் நனிசிலர் ஐயா.

(அ - ரை.) கனவிலே - மேன்மையிலே. நனிசிலர் - மிகச் சிலர். (௫)

250. மண்மேற் பிரிந்தால் மறித்தும் பெறலாம்
விண்மேற் பிரிந்தால் மீண்டது வருமோ
கண்போல் இனியாய்க் கருதற் கினியாய்
நண்பா இனிநீ நண்ணுவ திலையே.

(அ - ரை.) மறித்தும் - மீண்டும். நண்ணுவது - திரும்பி வருவது. (௬)

251. அந்தர மதியினை அடைந்ததுன் முகமே
இந்திய நாட்டிடை இயைந்ததுன் பெயரே
மைந்தநின் குணம்பலர் மனத்தது பால
சுந்தர பிரிந்ததாச் சொல்லவும் படுமோ.

(அ - ரை.) அந்தரம் - விண். மதி - திங்கள். இயைந்தது - பொருந்தியது. நீ எம்மிடையே கலந்துள்ளாய் என்க. (௭)

[திருச்சி மதுரைநாயகம் பிள்ளையவர்கள் கால மானபோது பாடியன.]

252. மணியொளிபோல் எனக்குயிராய் மன்னுசிவம் அருள் [சுரந்து
துணிவுடைய பிள்ளைமையாம் பருவத்தே துணையாகப்
பணிவுடைய நினைத்தந்தென் பரிசின்கட் டுரிசகற்றி
அணிசெய்த பான்மையெலாம் அறிந்தறிந்து நைவேனால்.

(அ - ரை.) மன்னுசிவம் - நிலைபெற்ற சிவம். துரிசு அகற்றி - குற்றத்தைப் போக்கி. அணிசெய்த - அழகிய செயல் களைப் புரிந்த. (௮)

253. ஆராத அன்பினுடன் அடிபணித்து நீகற்ற
நாரா யணகுரவன் திருவடியை நான்நணுகிச்
சாராது போயினனேல் சான்றோய்நின் பெருங்கேண்மை
சேராது பலவாருய்ச் சென்றிருப்பேன் சிறியேனே.

(அ-ரை.) ஆராத - அமையாத. ஈண்டி - அடைந்து. சாராது - சேராமல். பெருமிதன்மை - பெருமை. (௮)

254. திருவாருஞ் சேவடிதந்தைச் சேவடிக்கே [ஒப்புவித்தாய்
உருவாரும் எழிலுடம்பை உருத்திரற்கே உவந்தளித்தாய்
இருமையவர் புகழுடம்பை எந்தையடி சார்த்தளித்தாய்
அருமையாம் துயர்கூர அளித்ததுவும் அழகாமோ?

(அ-ரை.) உருவாரும் - அழகுபொருந்திய. இருமை யவர் - இரண்டு பிறப்பிலும் உள்ளவர். கூர - மிக்க. (௯)

255. இம்மைதனிற் பிரிந்தாலும் இனிபொருகால் [இணைந்திடலாம்
அம்மைதனிற் பிரிந்தால் அணைகுவதும் உண்டாமோ?
எம்மையினும் இவைபோன்ற இடர்சேராவகை [நேயமதால்
நம்மையாள் அருள்வழியில் நடத்துவது நன்றாமே.

(அ-ரை.) இம்மை - இப்பிறப்பு. அம்மை - அப்பிறப்பு. அணைகுவது - சேர்வது. எம்மையினும் - எப்பிறப்பிலும். (௧௦)

## ௩௦௮. விபுலானந்த அடிகள்

[ஈழவள நாட்டில் உள்ள மட்டக்களப்பு என்னும் ஊரில் 1892ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருக்கு இடப் பட்ட பிள்ளைப் பெயர் மயில்வாகனன் என்பது. ஆங் கிலப் புலமையோடு தமிழ்ப் புலமையையும் பெற்ருர். வடமொழியையுங் கற்று அதிலுந் தேர்ந்து விளங்கி ஞர். இல்லறம் புகாமல் துறவறம் புகுந்து விபுலானந்த அடிகள் என்னும் பேரோடு விளங்கினுர். கொழும்பு பல்கலைக் கழகத்திலும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத் திலும் தமிழ்த் துறைத் தலைவராகப் பணிபுரிந்தார்.

## ௯௯. கே. வி. இராமச்சந்திர ஐயர்

[இவரைப்பற்றிய செய்தி தெரியவில்லை.]

[ஞானியாரடிகளின் சொற்பொழிவைக் கேட்டு வியந்து பாடியது.]

259. முத்தியெங்கே ஞான முறையெங்கே முன்னோர்பால்
பத்தியெங்கே ஓதும் பனுவலெங்கே—இத்தரையில்
சான்றோர் பரவுகின்ற சண்முகமெய்ஞ் ஞானிநீ
தோன்று திருப்பாயேற் சொல்.

(அ - ரை.) *முத்தி - வீடுபேறு. ஓதும் பனுவல் - படிக்கிற நூல்கள். சான்றோர் பரவுகின்ற - பெரியோர்கள் புகழ்ந்து போற்றுகின்ற.* (௧)

## ௧௦௦. சி. மு. சாமிநாத ஐயர்

[*இவர் திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ் ஞான சிவாச்சாரிய சுவாமிகட்குத் தமிழாசிரியராக அமைந்திருந்தவர்.*]

[*சீர், தளை பிரித்து அலகிட்டு இலக்கணக் குறிப்பும் எழுதி வைக்குமாறு பின்வரும் செய்யுளை ஞானியாரடிகள் கல்வி கற்றுக்கொண்டிருக்குங் காலத்தில் ஒரு நாள் எழுதிக்கொடுத்தார். இப்பாட்டின் பொருளை யுணர்ந்த அடிகள் ஆசிரியர்க்கு வெண்பொற் காசுகள் பத்தை வழங்கினர்.*]

260. நற்பா டலிபுரத்து நாதனே நாயினேன்
பொற்பாம் நினதடியைப் போற்றினேன்—தற்போது
வேண்டுஞ் செலவிற்கு வெண்பொற்கா சுப்பத்து
ஈண்டு தருக இசைந்து.

(அ - ரை.) *பாடலிபுரம் - திருப்பாதிரிப்புலியூர். பொற்பாம் - அழகியதாம். வெண்பொற்காசு - வெள்ளி ரூபாய்.* (௧)

## ௧0௬. ச. வையாபுரிப் பிள்ளை

[தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள சிக்கநரசய்யன் கிராமம் என்னுஞ் சிற்றூரில் 1888ஆம் ஆண்டிற் பிறந்தவர். தமிழ் மொழியை நன்கு கற்றுப் புலமைபெற்ற இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தாருடைய அகராதிக் குழுவில் பதிப்பாசிரியராக இருந்ததன்றி, இலக்கியச் சிந்தனைகள், தமிழின் மறுமலர்ச்சி, இலக்கிய தீபம், இலக்கிய உதயம், இலக்கிய உலகம், இலக்கிய மணிமாலை முதலிய பல நூல்களை எழுதியுள்ளார். 1956ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்]

[திரு. வி. உலகநாத முதலியாரின் மணிவிழாவின் போது அவரை வாழ்த்திப் பாடியது.]

**261.** சைவ சமயத் தனித்தொண்டன் தாங்கருஞ்சீர்த்
தெய்வத் தமிழின் திருத்தொண்டன்—வையத்(து)
இறைவனெனும் பேரான் இனியான் இனிதே
உறைகநெடி தூழி உவந்து.

*(அ - ரை.) வையத்து இறைவன் எனும்பேரான் - உலகநாதன் என்னும் பெயரையுடையவன். இனியான் - இனிய பண்புகளை உடையவன். நெடிது ஊழி - பல ஊழிக்காலங்கள்.*
(௪)

[கோ. வடிவேலுச் செட்டியாரைப் பாராட்டிப் பாடியது.]

**262.** பல்லாண்டு தமிழணங்கின் பாங்காகி
உளமகிழ்ந்து பணிகள் செய்தான்
பல்லாண்டு மாணவர்க்குப் பயன்சிறக்கும்
ஆசானுய்ப் பதவி பெற்முன்
பல்லாண்டு மன்னுயிர்க்குப் பரகதிசெய்
வேதாந்தம் பயிற்று வித்தான்

பல்லாண்டு வாழ்ந்திடுக பாரின்மிசை
வடிவேலப் பனுவ லோனே.

(அ - ரை.) *தமிழணங்கின் பாங்காகி - தமிழ்த் தெய்வத்தின் பக்கத் துறைவோனாகி. பல்லாண்டு - பல ஆண்டுக் காலங்கள். பரகதிசெய் - மேலான கதியைக் கூட்டுவிக்கிற. பனுவலோன் - நூலாசிரியன்.* (உ)

[மதுரைத் தமிழ்ச்சங்கத் துணைத்தலைவர் சீநிவாச ஐயங்கார் காலமானபோது பாடியன.]

263. தமிழனையைப் போற்றுவதில் தான்வாழ் மதுரைத்
தமிழ்ச்சங்கம் போற்றுவதில் சாலும்—அமிழ்தனைய
சொல்லால் வசீகரித்தே இன்பில் துவக்குவதில்
வல்லாரார் டீசியைப்போல் மற்று.

(அ - ரை.) *சாலும் - நிரம்பும். வசீகரித்து - தன்வழிப் படுத்தி. இன்பில் துவக்குவதில் - இனிமையோடு தொடங்குவதில்.* (ங)

264. உடலிருக்க உயிர்நீத்தார் எனஉரைப்பார்
உலகத்தார் ஓங்கு சீலக்
கடலிருக்கும் டீசிஇன்றக் கட்டுரையைப்
பழுதாகக் கண்டான் அன்றே
அடலிருக்கும் தீந்தமிழாம் ஆருயிரை
அகலிடத்துக் கணியாய் வைத்து
விடலிருக்கும் உடல்மறைய விண்ணுலகஞ்
சென்றனனல் விதியால் அந்தோ.

(அ - ரை.) *அடல் இருக்கும் - வெற்றியிருக்கும். அகலிடம் - உலகம். விடல் - குற்றம்.* (ச)

[ஞானியாரடிகள் காலமானபோது பாடியன.]

265. அன்பொழுகு கண்ணும் அருளொழுகு நன்னெஞ்சும்
இன்பொழுக விள்ளும் இதமொழியும்—என்றும்

இனியுண்டோ உண்டோ எமதுசிவ ஞானத்
தனியரசு வீழ்ந்ததன்பின் தான்.

(அ - ரை.) விள்ளும் - மொழியும். வீழ்ந்ததன் பின் — மறைந்த பிறகு. (ரு)

266. எண்ணுதற்கொன் றுண்டோ இயம்புவீர் ஏய்ந்தசிவ
சண்முக ஞானத் தயாநிதியைப்—பண்பிற்கு
அரியானை அன்பர் அகத்தானை எங்கள்
பெரியானை யாம்பிரிந்த பின்.

(அ - ரை.) தயாநிதி - அருட்செல்வன். அரியான் - அருமையானவன். (சு)

267. சைவத் தனிச்சுடரைச் சார்வற்ற மக்கடமக்
குய்வைத் தருஞான ஒண்ணிதியைத்—தெய்வச்
சிவசண் முகஞான தேசிகனை என்றும்
பவங்கழல நெஞ்சே பணி.

(அ - ரை.) உய்வை - பிழைக்கும் வழியை. பவம் கழல — பிறவித் துன்பமானது அற்றுப்போக. (எ)

## கூ02. திரு. வி. உலகநாத முதலியார்

[திரு. வி. கலியாணசுந்தரனாரின் தமையனாராகிய இவர் 1881ஆம் ஆண்டில் துள்ளம் என்னுஞ் சிற்றூரிலே பிறந்தார். யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளை முதலிய அறிஞர்களிடங் கல்விகற்றுச் சிறந்த தமிழ்ப்புலமையடைந்து விளங்கினார். தம் இளவலாகிய திரு. வி. கலியாணசுந்தரனார் எழுதிய நூல்களையெல்லாம் நன்முறையில் வெளியிட்டார். பாம்பன் குமரகுருதாச அடிகளிடம் அருளுரையும் பெற்றார். 1945ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.]

[பாம்பன் சுவாமிகள் என்னும் குமரகுரு தாச அடிகள்மீது பாடியன.]

268. சங்கு நித்திலம் ஈன்றிடுந் தண்கடற் சாரல்
பொங்கு சீரொடு புண்ணியர் வாழ்தரு பாம்பன்
தங்கு தாரணி உய்ந்திடத் தோன்றிய தலைவா
செங்கை வேலவன் அருள்சிறந் தோங்கிடச் செய்வாய்.

(அ - ரை.) *நித்திலம் - முத்து. தாரணி - உலகம்.* (௧)

269. சந்த மார்தருஞ் சொல்வளம் நிரம்பிய தமிழால்
முந்தை ஞானம் உணர்த்திய அருணையின் முனிபோல்
சிந்தை யார்குகக் கடவுளை ஏத்திய செல்வா
எந்தை யேயெனை ஆட்கொள வேண்டுவல் இனியே.

(அ - ரை.) *சந்தம் - இனிமை. ஆர்தரும் - பொருந்தி விளங்கும். அருணையின்முனி - அருணகிரிநாதர்.* (௨)

270. ஞான நூலினர் தெளிவுறக் காண்பொருள் நயந்தே
மான மாணவர்க் கருளிய தேசிக மணியே
கான மார்பொழில் வான்மியூர் கருதிய மணியே
ஊன மார்பிற விப்பிணிக் கொருமருந் துரையாய்.

(அ - ரை.) *தெளிவுறக்காண்பொருள் - மெய்யறிவு. மான மாணவர் - பெருமையினையுடைய மாணவர்கள். கானம் ஆர் பொழில் அழகுபொருந்திய சோலைகள்.* (௩)

## ௬0௫. திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

[சென்னைக்கு அண்மையில் உள்ள துள்ளம் என்னுஞ் சிற்றூரில் 1883ஆம் ஆண்டிற் பிறந்தார். பள்ளிக் கல்வி முடிந்தபின் யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளையிடம் தமிழ் மொழியைக் கற்றார். பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு உழைத்தார். தமிழ்ச் சோலை, தமிழ்த் தென்றல், மனித வாழ்க்கையுங் காந்தியடிகளும், பெண்ணின் பெருமை, முருகன் அல்லது அழகு முதலிய முப்பத்தெட்டிற்கு மேற்பட்ட நூல்களை இவர் எழுதியுள்ளார்.]

[ஆலாலசுந்தரம் பிள்ளை என்பவர் காலமான போது பாடியது.]

271\. ஆலால சுந்தரனே அகன்றுன் அம்மா
அருள்நெறிக்குப் பலியிலையே அந்தோ இங்கே
பாலாறு வளஞ்சுரக்கும் பதியில் வாழ்ந்தோய்
பாழான நாத்திகமே பரவும் இந்நாள்
மாலாலும் உலகமென மதிக்க லாலோ
மாதேவன் திருவடியே மனத்திற்கொண்டு
நூலாயும் பெரியோனே நோக்கி நின்றோர்
நோயுணர்ந்தும் பிரிவுற்றாய் நுவல்வ தென்னே.

(அ - ரை.) அருள்நெறிக்கு - தெய்வத் திருவருள் நெறியிற் செல்வதற்கு. பாலாறு வளஞ்சுரக்கும் பதி - காஞ்சி. மால் ஆலும் - மயக்கமே தலைவிரித்தாடும். நுவல்வதென்னே - சொல் வரியாது? (க)

[பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியாரின் நூலை பாராட்டிப் பாடியது.]

272\. பாரிப்பாக்கம் எழுசைவப்
பரிதி பசுமைத் தமிழ்த்திங்கள்
வேரி அருவிக் கலைச்சோலை
வேதத் தென்றல் குணக்குன்று
மாரி என்னக் கண்ணப்ப
வள்ளல் பொழிந்த மலர்மணிகள்
வாரி ஒற்றித் தாயணிந்தாள்
வாழ்த்திக் காண்க மாநிலமே.

(அ - ரை.) பாரிப்பாக்கம் - ஓர் ஊர். பரிதி - கதிரவன். வேரிஅருவி-தேனருவி. மாரி - மழை. வாரி - அள்ளி. ஒற்றித் தாய் - திருவொற்றியூரில் எழுந்தருளிய அம்பிகை. (உ)

## கoச. பொன்னம்பல சிவம்

[பாண்டிவள நாட்டில் கொம்பாடி என்னும் ஊரில் தோன்றியவர். அகராதிமாலை முதலிய நூல்கள் பாடியுள்ளார்.]

[திருவாசக மடம் முதலியவைகளைக் குறித்துப் பாடியது.]

273. திருவாவி ஒக்கும் வளப்பல வான்குடி சீர்கொள்தடம்
தருபூவை ஒக்குமவ் வூர்சேர் திருவா சகமடம்பூ
விரிதேனை ஒக்கும் மடம்வாழ் குமார விநாயகன்தன்
உருவாரத் தேனுண்வண் டொக்கும் சிவநேசர்
[ஒண்சங்கமே.

(அ - ரை.) *திருவாவி - அழகியகுளம். தடம் - தடாகம். உருவு - வடிவம். ஆர - பொருந்த. சிவநேசர் ஒண்சங்கம் - சிவநேசர் திருக்கூட்டம்.* (க)

[கூத்தப்பிரான் வணக்கம்]

274. கடத்தானை உரியனைச்சங் கடத்தானை
யாதடியார் களைநன் கோம்பும்
திடத்தானைப் பனிவரைமா திடத்தானைத்
திரைசெறிநீர் உறைச டாம
குடத்தானை ஒருதிருக்குக் குடத்தானை
யனைக்கொடிய வழியில் என்னை
நடத்தானை மணிமன்றில் நடத்தானைக்
கண்டுதொழு துய்ந்தேன் நானே.

(அ - ரை.) *கடத்து ஆனையுரியனை - மதம்பொருந்திய யானைத் தோலணிந்தவனை. சங்கடத்தால் நையாது - துன்பத்தால் வருந்தாமல். பனிவரை மாது - இமையமலையில் தோன்றிய இறைவி. சடாமகுடத்தானை - சடாமகுடம் உடையவனை. குக்குடத்தான் - கோழிக்கொடியை உடையவன். ஐயன் - தந்தை. மணிமன்று - பொன்னம்பலம். நடத்தான் - கூத்தாடுபவன்.* (உ)

[பழநித் தண்டபாணிக் கடவுள்மீது நடுவெழுத்து அலங்காரமாகப் பாடியது]

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

275. ஒருவிதநோய் ஒருகருவி உறுங்காமர்
சுகமில்லான் அக்க தேவி
உலகீன்றாள் இவ்வறுசொல் நடுவெழுத்தா
றெனக்கருள்வாய் உடனும் பன்னீர்
உருவெழுத்தைக் கரத்தமைத்தும் சிரத்தமைத்தும்
திருக்கழுத்தில் ஓங்கச் சேர்த்தும்
ஒளிரிழையா கத்தரித்தும் மேற்போர்த்தும்
பிறப்பிடமா ஒருகாற் கொண்டும்
பெருமையுடன் விளங்குமுக்கட் பெருஞ்சோதி
பெற்றெடுத்த பெரிய வாழ்வே
பேசருமைந் தருநிகர்த்து மாசில்வளம்
பலகொடுத்துப் பிறங்கா நின்ற
தருநிறையும் பழநிவரை உறைதண்ட
பாணியே சகசா நந்தத்
தடங்கடலே மடங்கலந்தார் இடம்பொருந்தக்
கடம்பணிந்த தனிச்செவ் வேளே.

| | | | | |
|---|---|---|---|---|
| ஒருவித நோய் | க | ப | ம் | கம் —தலை |
| ஒரு கருவி | அ | ர | ம் | அம் —கங்கை |
| காமர் | கா | ம | ர் | கார் —கருமை |
| சுகமில்லான் | அ | சு | கி | அகி —பாம்பு |
| அக்கதேவி | தோ | க | ல் | தோல்—யானைத்தோல் |
| உலகீன்றாள் | அ | ம் | மை | அமை —மூங்கில் |

மேற் காட்டப்பெற்றிருக்கும் ஆறு சொற்களின் நடுவெழுத்துக்களைக் கூட்டிப் படிக்க "பரம சுகம்" என்று வருதல் காண்க. பரமசுகம் எனக்கருள்வாய் என வேண்டிக் கொண்டவாறு. அக்கதேவி என்பது ஒருவகைப்புல். அதற்குத் தோகல் என்றும் பெயர்.

(ரு)

[பலவான் குடியில் எழுந்தருளிய குமர விநாயகர் மீது பாடியன.]

கட்டளைக் கலிப்பா

276. உலகெ லாமுணர்ந் தோதற் கரியதோர்
உம்ப னேயும்பர் கும்பிடு நம்பனே
சொலவொ ணுத்திரு யானைமு கத்தனே
தூய னேமறை பாடிடும் வாயனே
கலக மாமிப் பிறவிக் கடலைநான்
கடப்ப தற்குன் னடிப்புணை யீகுவாய்
வலமை யார்செல்வர் சேர்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

*(அ - ரை.) உம்பன் - தேவன். உம்பர் - தேவர். நம்பன் - கடவுள். புணை - மரக்கலம். வலமை - வல்லமை, இடைக்குறையாக நின்றது.* (ச)

277. பாரத் தந்தி தலைபொரு கொங்கையைப்
பகிர்ந்த தந்தியனேரு மிடையினைச்
சேரத் தந்தி கழுமுணர் வானது
சிதையத் தந்தி ரமதுசெய் தீயர்பால்
நாரைத் தந்தி னலைப்புரி யாமலே
நலத்தர் தந்தி ரமாநண்பை நல்குவாய்
வாரத் தந்தி கழும்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

*(அ - ரை.) பாரத்தந்தி - கனத்தயானை. பொரு - ஒத்த. பகிர்ந்த - பிளக்கப்பட்ட. தந்து - நூல். இயல் - தன்மை. நேரும் - ஒக்கும். சேர - தழுவ. தம் - தங்கள். தந்திரம் - சூழ்ச்சி. நார் - அன்பு. இனலை - இன்னலை, துன்பத்தை. நலத்தர் - நல்லவர். திரம் - உறுதி. நலத்தர்தம் - நல்லவர்களுடைய. திரம் - நிலைபெற்ற. வார் - பெரிய. அத்தம் - செல்வம்.* (ரு)

278. பாட்டி லேயென்றன் நாவும் நினதிரு
பதத்தி லேயென்றன் நெஞ்சும் அறிஞர்தம்

கூட்டி லேயென்றன் கூடும் இருந்திடக்
குளத்தி லேகண் படைத்தி யருள்புரி
ஆட்டி லேஉளங் கொண்டவன் தோன்றலே
ஆகி லேமனங் கொண்டம ரேந்தலே
மாட்டி லேமிகும் அம்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) *கூட்டு - கூட்டம். கூடு - உடல் குளம் - நெற்றி. படைத்தி - படைத்தவனே. ஆட்டிலே - திருக்கூத்திலே. தோன்றல் - மகன். ஆகு - பெருச்சாளி. மாடு செல்வம்.* (சு)

279 அரைப்ப ணந்தனைக் காட்டிம யக்கியே
ஆயி ரம்பணத் தைக்கவர் மாதரைத்
தரைக்கண் தோன்றெம தூதரென் றுஞ்சற்றுந்
தயவி லாக்கொடும் பேய்களென் றுந்தள்ளி
வரைப்பெண் தந்தஎன் நாயக நின்னையே
மகிழ்ந்த னைந்தின்பங் கொள்ள அருளுவாய்
மரைக்கு ளங்கள் மலிபல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) *அரைப்பணம் - அல்குல். தரைக்கண் - நிலவுலகத்தில். வரைப்பெண் - உமாதேவி. மரை - தாமரை.* (எ)

280. விறு கொண்டவே தாந்த நெறியையும்
விளங்கு கின்றசித் தாந்தத் துறையையும்
நீறு கொண்டசெம் மேனிய னேஇந்த
நீச னேனுக்குங் காட்டினை யேஇன்னம்
கூறு கொண்டஇக் கூடு விழுமுனம்
கோதி லானந்த நிட்டையுந் தந்தருள்
நாறு கொண்ட வயற்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) வீறு-மேன்மை. நீறு-திருநீறு. கூறுகொண்ட-எழுவகைத் தாதுக்களாலாகிய கூறுபாட்டைக் கொண்ட. கூடு - உடல். கோதில் - குற்றமற்ற. நாறு – நெல்நாற்று. (அ)

281. பிணத்தைக் காத்திட்ட பேயென வாழ்ந்தின்பம்
பெருகு செந்தமிழ்ச் சீர்மை அறிந்திடாப்
பணத்தைக் காத்திட்ட லோபர்கள் மேற்கவி
பாடிக் காலத்தைப் பாழாக்கி டாமலெண்
குணத்தைக் காத்திட்ட கோனின் புகழையே
கூடிப் பாடிமெய்ந் நாடிடச் செய்குவாய்
மணத்தைக் காத்திட்ட மாபல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) எண்குணத்தைக் காத்திட்டகோன் – இறைவன். மணம் – திருமணம் மலர்மணம் முதலிய பலவகை மணங்களும். (கூ)

282. ஊனைத் தின்றுதம் ஊனினை ஓம்பிடும்
உணர்வி லாத கயவர் உறவகன்(று)
ஆனைக் கன்றருள் செய்தோன் மருகனின்
அன்பர் கூட்டத்தில் தங்க அருளுவாய்
ஏனற் செந்நெல்கள் கன்னல்கள் என்னவும்
இலங்குங் கன்னல்கள் தென்னைகள் என்னவும்
வானத் தோங்கி வளர்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ – ரை.) ஓம்பிடும் – பாதுகாக்கும். உணர்விலாத கயவர் - அறிவற்ற மூடர். ஆனை – கசேந்திரன். ஏனல் – ஏல் – பொருந்திய. நல் - நல்ல. கன்னல் – கரும்பு. (கo)

283. ஈனத் தொண்டர் கடற்குண்டன் அன்னவர்க்(கு)
இழுக்குத் தொண்டுசெய் தேமாந்தி டாமல்நன்
மோனத் தொண்டர்க்குத் தொண்டு செயவிந்த
மூடத் தொண்டற்கு நீயருள் செய்வையோ

ஞானத் தொண்டர் நவயோகத் தொண்டர்கள்
நவிலுஞ் சற்கிரி யைத்தொண்ட ராதிய
வானத் தொண்டர்கள் சூழ்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) கடறு - காடு. ஒண்டன் - நரி. மோனத் தொண்டர் - மெய்த் தொண்டர். (கக)

284. ஊனுண் போர்கள் உறுந்தவம் என்னவும்
உயிர்கொ லாதவர் ஒண்தவம் என்னவும்
தேனுண் டோங்கு மொழிச்சியர் தங்களின்
தேய்நு சுப்பைத் திரளந் தனத்தினை
மானென் றேங்க மருட்டுங்கண் ணைக்கண்டு
மயங்கி டாமல்நன் ஞான மருந்தருள்
வானின் றுருந் துதிபல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) நுசுப்பு - இடை. ஊன் உண்போர்கள் தவம் போல் தேய்நு சுப்பு. உயிர்கொலாதவர் ஒண்தவம் என்னத் திரள் அம் தனம் என்க. (கஉ)

285. ஔவை யந்தமிழ் மாலைகொள் தாளிலே
அறுகம் புல்லும் அணிந்தனை ஆதலால்
பௌவ மார்குவி னுன்சொலும் பாடல்கள்
பத்து மேற்றுச்சம் பத்தும் விரைந்தருள்
குவ்வு ளோர்களும் கோவி லுளோர்களும்
கூடிவந்து பணிந்தருட் செல்வத்தை
வெளவி யேக வளப்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே.

(அ - ரை.) ஔவை அந்தமிழ்மாலை - விநாயகர் அகவல். பௌவம் - கடல். கு - உலகம். சம்பத்து - செல்வம். குவ்வுளோர்கள் - மண்ணுலகத்தார். கோவில் உள்ளோர்கள் - விண்ணுலகத்தார். (கங)

[குன்றையம்பதியில் எழுந்தருளிய திரு முருகப் பெருமான்மீது பாடியன.]

அறுசீர்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

286. உலகோர்கள் தொழும்இமயப் பிடியீன்ற
மதகரியின் உதித்த வீரப்
பலமாரும் அசுரஇபத் திரளையழி
ஆறுமுகப் பரசிங் கேற்றை
நலதேவர் தருமானைக் குறமானைக்
கலந்துமகிழ் நமதம் மானை
மலைமேவு கிழவனைக்குன் றக்குடிவாழ்
குமரனைநாம் வாழ்த்தி வாழ்வாம்.

(அ - ரை.) இமயப்பிடி - இமயமலையில் தோன்றிய பெண் யானையைப் போன்ற உமாதேவியார். மதகரி - விநாயகக்கடவுள். அசுர இபத்திரள் - அசுரர்களாகிய யானைக்கூட்டம். (கசு)

287. பிடிப்பானை வேல்தெய்வப் பிடியானைக்
கீரனுக்காப் பெலத்த குன்றம்
இடிப்பானை நமைத்துயரால் இடியானைக்
கடம்பலரால் இயன்ற தாரை
முடிப்பானைக் கயவர்நண முடியானை
அறுமீன்கள் முலைத்தீம் பாலைக்
குடிப்பானை உயர்குன்றக் குடியானை
நமதுளத்தில் குடிவைத் துய்வாம்.

(அ - ரை.) வேல் பிடிப்பானை எனமாற்றுக. தெய்வப்பிடி - தெய்வயானை. கீரன் - நக்கீரர். குன்றம் - சிறுமலை. இயன்ற தார் - அமைந்தமாலை. நண - சேர. அறுமீன்கள் - கார்த்திகைப் பெண்கள். பிடிப்பானை, பிடியானை; இடிப்பானை, இடியானை; முடிப்பானை, முடியானை; குடிப்பானை, குடியானை என்று எதிர் மறையணி காண்க. (கரு)

288. அடியானை அருணகிரிக் கடிப்பானை
யாதவின்பம் அளித்த தெய்வப்

பிடியானைக் குறமகளைப் பிடிப்பானைக்
கதிர்மணிகள் பிறங்குமாறு
முடியானை எச்செயலும் முடிப்பானை
முனிவர்தொழும் மோலிக் குன்றக்
குடியானை உமைதனப்பால் குடிப்பானை
உளமனையில் கூடி வாழ்வாம்.

(அ - ரை.) *அடியான் ஐ அருணகிரிக்கு - அடியாராகிய அழகிய அருணகிரிநாதருக்கு. அடிப்பால் - திருவடியிடத்து. நையாத - கெடாத. கதிர்மணிகள் - ஒளிதங்கிய மணிகள். பிறங்கும் - விளங்கும். மோலி - மௌலி, முடி. உளமனை - நெஞ்சம். இதிலும் எதிர்மறையணி காண்க.* (கசு)

289. ஞாயிறென மிளிர்முடியான் திங்களெனத்
திகழ்முகத்தான் நகுசெவ் வாயா(று)
ஏயுமொரற் புதனவ்வி யாழனிகர்
திருக்குமொழி ஏலக் கூந்தல்
தோயுமுமை மகன்வெள்ளி டபத்தனருட்
குருசனியாத் தூயன் என்றும்
மாய்தலிலாக் குகன்குன்றக் குடிக்குமரன்
எனதுளத்தில் வதிவான் மன்னே

(அ - ரை.) *ஞாயிறு - கதிரவன். திங்கள் - சந்திரன். நகு செவ்வாய் - விளங்குகின்ற சிவந்தவாய் நவ்வி - மான். யாழ் அல். நிகர். நவ்வி திருக்கு யாழ் மொழி, அல் ஏலக்கூந்தல். இடபம் - காளை. இதில் ஏழு கிழமைகளும் அமைந்திருத்தல் காண்க.* (கஎ)

290. திருச்செந்தின் முதலான தலம்போலென்
உளத்தலத்தும் சிறப்பாத் தங்கி
அருட்செல்வந் தனைக்கொடுத்துன் னடிபோற்றும்
பெருவாழ்வில் அமைத்தாள் ஐயா
உருச்செந்நெல் வாழையென வாழையெலாம்
தென்னையென ஓங்குஞ் செல்வம்

இருக்கின்ற திருக்குன்றக் குடிக்கந்த
கடுக்கண்டர்க் கினிய தேவே.

(அ - ரை.) உருச் செந்நெல் - அழகிய சிவந்த செந்நெல். கடுக்கண்டர் - நஞ்சு தங்கிய கழுத்தையுடையவர். (கஅ)

## கoடு. உ. ரா. சாமிநாதபிள்ளை

[சோழவள நாட்டில் உமையாள்புரம் என்னும் ஊரில் தோன்றியவர்.]

[எள்ளின் கூற்ருகப் பாடியது.]

291. முத்த பிள்ளை யார்க்குணவின்
முந்தி யிருப்பேன் மனிதர்கள்தம்
முடியில் ஏறிச் சுகங்கொடுப்பேன்
முன்னோர் பிதிரர்க் கடன்கணிக்க
நீத்தென் றன்னை நடந்தார்கள்
நியாய வாதி பதிநிலைக்கு
நேய முடனே சாட்சியதாய்
நிற்பேன் உண்மை நிலைமாறேன்
பூத்த பொழுதில் எனைப்புகழப்
புலவர் பலபேர் வந்திடுவார்
புவியில் இருளை நீக்கவந்த
புண்ய சாலி யானுவேன்
பார்த்தோர் என்னை நக்கியுண்பர்
பலநோய் தீர்ப்பேன் கடனடையேன்
பயனில் கொள்ளே ஔவைமொழி
பாரில் தெரியும் பகட்டாதே.

(அ - ரை.) எள்ளுக்குங் கொள்ளுக்கும் நிகழ்ந்த சொற் போரில் எள் இவ்வாறு இயம்பியது. மனிதர்கள் முடியில் ஏறிச் சுகங்கொடுத்தல்-எண்ணெயாகத் தேய்க்கப்பெற்று நலங்கொடுத்

தல். எள்ளுக்காய் பிளந்தாற்போல வழக்குத் தீர்த்தான் என்பது உலக வழக்கு. இருளை நீக்குதல் எண்ணெயாக எரிக்கப்படும் போது. ஔவை மொழி 'சனிநீராடு' என்பது. (க)

[கொள் மறுமொழி கூறுதல்.]

292. ஆடுங் காணத் திடையுனைப்போல்
அவதி யடையேன் பளுவாவேன்
அரிசியுடனே கூடியமு
தாகப் பசிநோய் தணித்திடுவேன்
ஓடு நதிக்கா விரியடங்கா
உதக மடங்கும் இடமாவேன்
உலகோர் எதையுங் கூறவென்பேர்
உரையா திருக்கார் எனையறுக்கார்
நாடும் ஆல வாயுடையார்
நடத்தும் பரிகட் குணவாவேன்
நாட்டிற் பட்டி மாடுகளை
நல்ல மாடாய்ச் செய்திடயான்
கூடும் அதனல் அறிஞரெனைக்
கொள்ளென் றுருனை எள்ளென்றுர்
குலத்திற் பெரியேன் எள்ளேஉன்
குலுக்கு மலுக்குங் காட்டாதே.

(அ - ரை.) காணம் - செக்கு. அவதி - துன்பம். உதகம் - நீர். "நான் சொல்வதைக் கொள்" என்பது உலகவழக்கு. ஆலவாயுடையார் - மதுரைக்கடவுள். பரிகள் - குதிரைகள். எள் - இகழ். குலுக்குமலுக்கு - வெளிப்பகட்டு. (உ)

[''கணம்பூ நிகராகுங் கண்'' என்று அன்பர் ஒருவர் கொடுத்த ஈற்றடியை நிறைத்துப் பாடியது.]

நேரிசை வெண்பா

293. உள்ளத்தூர் அன்பின் உயர்கவிதை யாற்பாடிப்
பள்ளத்தூர் மேவும் பரனைமகிழ்—கிள்ளைக்

குணம்பூ நிகராகும் கொங்கை குரும்பைக்காக்
கணம்பூ நிகராகுங் கண்.

(அ - ரை.) *உள்ளத்தூர் - உள்ளத்திலே பொருந்திய இள்ளைக்குணம் பூ நிகராகும்: கொங்கை குரும்பை: காக்கணம் பூ நிகராகுங் கண்.* (ங)

## கo௬. சொ. முருகப்பா

[பாண்டி மண்டலத்தில் செட்டிமார் நாட்டில் காரைக்குடியில் 1893ஆம் ஆண்டில் சொ. முருகப்பா பிறந்தார். பொதுநலத் தொண்டில் ஈடுபட்டுப் பல வேலைகள் செய்தார். குமரன் என்னும் இதழைப் பல ஆண்டுகள் நடத்தினர். அமராவதிபுதூரில் மகளிர் இல்லம் ஒன்று அமைத்தார். இறுதி நாளில் இராமாயணத்திற்கு உரையெழுதத் தொடங்கிச் சில காண்டங்கட்கு எழுதினர்.]

[குன்றக்குடிக்குப் போய் இராமாயண உரை எழுதத் தொடங்கி அமைதியாக எழுத முடியாமற் போனதைக் குறித்துப் பாடியது.]

294. குன்றக் குடியில் குமராநீ கேட்கிலேயோ
அன்றிச் செவிடோ அறியேனே—இன்றொலியைத்
தட்டாற் பெருக்கித் தலைவலியைக் கூட்டிவந்து
விட்டார்ஊர் சென்றேன் விரைந்து.

(அ - ரை.) *தட்டால் - கிராமபோன் தட்டினால்.* (க)

[இராமாயணத்திற்கு உரையெழுதத் தொடங்கிய போது பாடியன.]

295. செம்மை பெறவேண்டிச் சென்று திரிந்தலைந்தேன்
இம்மை இருபேறும் எய்தினேன்—அம்மையெங்கள்
சீதை மணவாளன் தெய்வத் திருக்கதையை
ஓதி உணர்ந்தேன் உரை.

(அ - ரை.) இம்மை இருபேறும் - இப்பிறப்பில் அடைய வேண்டிய இருவகையான பேறுகளையும். (உ)

296. கம்பர்க் கடிமையென்று கைச்சாத்துச் செய்துவிட்டேன்
இம்பர்வே றென்றற் கிடமுண்டோ ?—கம்பரும்
காதைக் குரையெழுதிக் காலம் மிகுந்திருந்தால்
ஏதுமொன்று செய்தற் கிடம்.

(அ - ரை.) கைச்சாத்து - கையெழுத்து. இம்பர் – இவ்வுலகத்தில். ஏதும் ஒன்று - வேறேதேனும் ஒன்று. (ங)

297. கம்பர் எனையறிந்து கையாண்டு கொண்டுவிட்டார்
உம்பர் உவப்ப உரைகாண்பேன்—இம்பரினி
வாழ்வார்க் கிராமகதை வான்மருந்து கேட்போரின்
ஊழ்போக்கும் என்றே உவந்து.

(அ - ரை.) உம்பர் உவப்ப - தேவர்கள் மகிழுமாறு. வான் மருந்து - தேவரமுது. (ச)

298. உரைராம காதைக் குரைப்பனென நின்றேன்
வரையாதென் ஆயுள் வகுப்பாய்—வரையுளதேல்
வரைக்குள் உரைமுடிய வன்மை அருள்வாய்
தரைக்குள் புகழ்பெருகத் தான்.

(அ - ரை.) வரையாது – எல்லைசெய்யாமல். வரை – எல்லை. வரைக்குள் - எல்லைக்குள். தரைக்குள் இவ்வுலகத்திற்குள். (ரு)

## கoஎ. மு. சிவப்பிரகாசம் பிள்ளை

[இவர் சோழவள நாட்டில் திருத்தில்லைக்கு மேற்கேயுள்ள இடையன்பாற்சொரி என்னுஞ் சிற்றூரில் 1875ஆம் ஆண்டிற் பிறந்தார். பி. ஏ. வரை கல்வி கற்றார். நன்னெறி யொழுகலை மேற்கொண்டு விளங்கினார். இரமண சரித அகவல், நானார், இரமண சற்குரு

மாலை, இரமண தேவமாலை, இரமண பாதமாலை, விசார சங்கிரகம் முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[இரமண முனிவரைக் கனவிற் கண்டபோது பாடியது.]

299. அன்றுநன விற்காட்டி ஆட்கொண்ட கோலத்தை
இன்றுகன விற்காட்டி இன்பளித்தாய்—உன்றன்
ஒளியெறி மின்னின் ஒளிமேனி யெங்கும்
ஒளிர்ந்தது பானீற் றொளி.

(அ - ரை.) *நனவு - கனவற்றநிலை. பால் நீற்று ஒளி-வெள்ளிய திருநீற்றின் விளக்கம்.* (க)

[நீதி மன்றத்தில் சூரராக வேலை யேற்பட்டபோது பாடியன.]

300. மஞ்சக்குப் பத்தில் வழக்குரைக்கும் மாமன்றம்
அஞ்சுமெனைச் சூரராய் ஆழ்ந்திழுக்கும்—வஞ்சக்
கருத்தென்னே யானறியேன் காப்புக் கடன்காண்
ஒருதனி வேந்தே உணர்.

(அ - ரை.) *வழக்குரைக்கும் மாமன்றம் - நீதிமன்றம். காப்பு - காப்பது.* (உ)

301. கையிற் பணமில்லை காயத் துரனில்லை
ஐயவெனை ஆதரிப்பார் அங்கில்லை—மெய்யே
படுக்க இடமில்லை பாரா திழுத்தல்
அடுக்குமோ நீதிக் கறை.

(அ - ரை.) *காயத்து - உடலில். உரன் - வலிமை. அடுக்குமோ - பொருந்துமோ?* (௩)

302. கட்டத் துகிலின்றிக் கட்டமுறும் நாயேனை
துட்டரைத் தண்டிக்கும் தொல்சபையில்—சட்டமறி
நீதிக் கதிபதி நீவருக என்றிழுத்துக்
கேதம் புரிவதென் கேள்.

(அ - ரை.) துகில் - ஆடை. கட்டமுறும் - துன்பப்படும். கேதம் - துன்பம். (௭)

303. என்னிதயத் துள்ளிருக்கும் என்னிறைவ! என்ரமண!
உன்னிதயம் எப்படியோ ஓர்கிலேன்—என்னை
நியாய சபைக்குச் செலுத்த நினைத்தல்
நியாயமோ நீயே நினை.

(அ - ரை.) ஓர்கிலேன் - உணரவில்லை. நியாயமோ - நேர்மையோ? (௫)

௧௦௮. ஞானியார் அடிகள்

[இப் பெரியாருடைய பெயர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் என்பது. இவர் திருப்பாதிரிப் புலியூரில் உள்ள திருக்கோவலூர் ஆதீன மடாலயத்தில் தலைவராக எழுந்தருளியிருந்து சைவத்திற்குந் தமிழிற்கும் அரும்பெருந் தொண்டு செய்தவர்.]

[சென்னையில் இருந்த ஆதிசேட முதலியார் என்பவருக்கு எழுதியது.]

304. நல்லாதி சேடப்பேர் நண்ப இதுகாண்க
எல்லா நலனுமினி எய்துக—பொல்லாத
சூரற் றடிந்து சுரருக் கருள்புரிந்தோன்
பேரருளைப் பெற்றநலத் தால்.

(அ - ரை.) சூரற்றடிந்து - சூரபதுமனைக் கொன்று. சுரர் - தேவர். (க)

[கந்தசாமி முதலியார் என்பவரைப் பாராட்டிப் பாடியன.]

305. விண்முக அமரர்க் காத்த வேற்படை விமலன் செவ்வேள்
கண்ணிரா றுடைய சேந்தன் கந்தன தருளால் என்றும்
கண்ணிடு நலங்கள் பெற்ற கந்தமா வாசம் வாழ்க
வண்மைசேர் கந்த சாமி மகிபனும் வாழ்க நன்றே.

(அ - ரை.) விண்முகை யோமார் - விண்ணுலகத்தில் உள்ள தேவர்கள். (௨)

306. வள்ளிம ணாளன் மயிலா கனப்பெருமான்
ஒள்ளயில்வேற் சண்முகவேள் ஓங்கருளால் - எள்ளலிலா
நல்வளம் எய்துகவே நங்கந்த சாமிவேள்
பல்லவரும் போற்றிட வே.

(அ - ரை.) ஒள் அயில் - ஒளிதங்கிய வேல். எள்ளல் இலா - இகழ்ச்சியில்லாத. பல்லவரும் - பலரும். (௩)

307. கன்னல் மொழிவள்ளி காந்தன் அருட்பெருக்கால்
மன்னுகந்த சாமிமிக வாழ்கவே—துன்னியுள
சுற்றமுடன் சேய்வாழ்க சூழ்நட் பினர்வாழ்க
குற்றங்கள் இன்றிநன் கு.

(அ - ரை.) கன்னல்மொழி - கரும்புபோலும் இனியசொல். துன்னியுள - நெருங்கியுள்ள. சேய் - மகவு. (௪)

## ௧0௫. ஆ. முத்துசிவன்

[காரைக்குடி அழகப்பா கல்லூரியில் பேராசிரியராக விளங்கியிருந்த இவர் 1910ஆம் ஆண்டில் திருநெல்வேலியிற் பிறந்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கல்விகற்றுத் தேறினார். பலவிடங்களில் ஆசிரியராகப் பணிபுரிந்து இறுதியில் காரைக்குடி அழகப்பா கல்லூரியில் ஆசிரியராக இருந்தார். இவர் இயற்றிய நூல்கள் அசோக வனம், கவிதையும் வாழ்க்கையும், அசலும் நகலும், மின்னற்கீற்று, மேடைக்கலை, கவிதை, அமரகவி பாரதி, மதம் வேண்டுமா? நடராச தத்துவம் முதலியன.]

[இவர் மழையைக் குறித்துப் பாடியன.]

308. பன்னரு நலங்கள் கோடி உலகிடைப் பரப்பி னாலும்
உன்னிடங் குறைகள் உண்டு உரைக்குவன் அவற்றைக் [கேட்டி

நன்னயமான சேவை நலத்தினில் ஆர்வம் மிக்காய்
இன்னமுஞ் சேவைக் குற்ற இரகசியம் தெரிய கில்லாய்.

(அ - ரை.) பன்னரு - கூறுதற்கரிய. உரைக்குவன் - கூறுவேன். தெரியகில்லாய் - அறிந்துகொள்ளவில்லை. (க)

309. வேண்டிய இடத்தும் பெய்யாய் விரும்பிய போதும் [பெய்யாய்
யாண்டும்நீ மாந்தர் நாட்டம் ஏற்றிடுந் தன்மை இல்லாய்
ஆண்டுதோ றுன்னா லுற்றஅவத்தைகள் கொஞ்சம் அல்ல
பூண்டநின் நெறியில் உள்ள புரையினைப் புகலக் [கேளாய்

(அ - ரை.) யாண்டும் - எப்பொழுதும். நாட்டம் - நோக்கம். ஏற்றிடும் - ஏற்றுக்கொள்ளும். அவத்தைகள் - துன்பங்கள். புரையினை - குற்றங்களை. (உ)

310. பெய்வது போதும் என்றால் மேலும்நீ பெய்து தீர்ப்பாய்
செய்வதன் அளவு தேராய் சித்தம்போல் கடமை [செய்வாய்
நெய்தலில் உன்னை நாடின் முல்லையை நாடிச் செல்வாய்
செய்ந்நிறை மருதம் நாடின் தீயுமிழ் பாலை செல்வாய்.

(அ - ரை.) சித்தம் - மனம். செய்ந்நிறை - வயல்கள் நிறைந்த. (ங)

311. பாதியைக் கடலில் தீர்ப்பாய் எஞ்சிய பகுதி தன்னுள்
பாதியை மலையில் தீர்ப்பாய் மீத்துள பங்கில் இன்னும்
பாதியைக் காட்டில் தீர்ப்பாய் இன்னமும் உள்ள தாய
பாதியை நிலத்தில் தீர்ப்பாய் என்னதான் பரிவோ [அம்மா !

(அ - ரை.) எஞ்சிய - மிஞ்சிய. மீத்துள - மீந்துள்ள. என்னதான் பரிவோ - என்னதான் அன்போ ? (ச)

## கக0. டி. சாம்பசிவன்

[இவர் திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளிடம் மிகுந்த பற்றுடையவர். சமரச சன்மார்க்கக் கொள்கையினர். ஆத்மாநுபவம், சுவாமி இராமலிங்கம், அருட்பிரகாசம், அருளாநந்தம், சிதாகாசம் அருட்சோதி முதலிய நூல்களை எழுதியுள்ளார்.]

[பரம்பொருள் வணக்கமாகப் பாடியது.]

312. ஒருமுதலில் உணர்வுகலை உபயசிவ உளமகிழ
ஓங்குநிலை உண்மை யொளியே
உருவநிலை அருவநிலை ஓதுநிலை ஞானநிலை
உண்மையோ டுற்ற குருவே
உதயசுடர் உதயமகிழ் ஒருகலையே பலகலையாய்
உண்மைநிறை வான குருவே
ஓதுமதின் உணர்வுகொடு உலகதனில் ஒளியாகி
உயர்வுநிலை உற்ற தேவே
ஒப்புயர்வி லாதநெடு உண்மைநிறை வானசிவ
ஓதுதற் கரிய பொருளே
உலகதனில் ஒளியாகி வெளியாகி உண்மைசால்
உரிமைநிறை வான போது
உயர்நிலையுஞ் சிவநிலையும் ஒன்றுன ஒன்றதாம்
உதயகிரி ஓங்கு சுடரே
உத்தமர்தம் உளநின்ற உருவதனில் அருவாகி
ஒப்பரிய பெரிய பொருளாய்ப்

பருவமதில் பரனுகிப் பகர்குணமும் தானுகிப்
பக்குவவி சேட மாகிப்
பகர்கின்ற மெய்ஞ்ஞான பதிபசுவே பாசமெனப்
பார்க்குமிடம் எங்கும் நிறைவாய்ப்

பண்ணிலே முத்திருக் குர்பக்கு வத்தினில்
பார்க்கின்ற ஒன்றின் உருவே
பாராததைப் பார்த்துப் பண்பாய் உகந்தவொரு
பற்றற்று வந்த குருவே
பாரதனில் நின்றசிவ யோகமுரு வாகவே
பகர்கின்ற உயர்வா சகம்
பண்பினெடு பாடாமல் பாடியே மெய்ஞ்ஞான
பக்குவம திற்கா ணவே
பல்லோருஞ் சில்லோரும் பாடுபடுந் தெய்வமே
பார்த்தவிடம் எங்கும் உருவாய்ப்
பக்தியே சிவமாகிச் சாந்தமே வடிவாகிப்
பார்க்கின்ற பெரிய பொருளாய்க்

கருவறை நீக்கியே காணசிவ மயமாகக்
காண்கின்ற பெரிய வெளியே
கற்பனையெ லாம்நீக்கிக் காட்டுமருள் உருவான
காரணம் உவந்த சோதி
காதல்சிவ பசுவாகிக் காரணமெ லாந்தாண்டிக்
கடவுளாய் நின்ற உருவே
காதல்சிவ யோகிகட் கருவான உருவமே
காட்சியே யொளிரு மதனில்
காணுத காட்சியைக் கண்டுற்ற ஆனந்த
கதிர்போல் விளங்கு மதியே
காட்டுமறி ஊட்டுங்க லக்கமது தீர்க்கவரு
கற்பனை கடந்த சோதி
காணுமது வாகியே தானுமது வாகநீ
காற்றற்று நின்ற விடமே
காணலாம் அருட்சோதி காணலாஞ் சிவசோதி
கரணங்கள் ஒய்ந்த யர்ந்து

அருகுண மறந்தநிலை யானபடி நின்றநிலை
ஆநந்த மான நிலையே
அதிபகவ னென்றுரைத் தன்பர்சிவ வாக்கினில்
அருமையாய்த் தோய்ந்த அறிவே
அலகில்சுடர் சோதியாய் அன்பா யுகந்தவர்க்
கறிவாக வறிவி னூடே
ஐயமற நிற்கின்ற அண்ணலே எனையுகந்
தாருமறி யாம லிங்கே
ஆண்டதே நின்கருணை ஆனதால் இதுவோம்பி
ஆரவா ரித்து நின்றேன்
அருமையாய்த் தோன்றியே தோன்றுமல் ஒன்றிலே
ஆனபடி யான தாகி
ஆண்டாண்டு தோறுமே ஆருயிர்க் குயிராகி
அங்கிங்கு மெங்கு முளதாய்
அண்ணலே சிவயோகி யாய்வந்த அன்பனே
அருட்சோதி தேவ தேவே.

(அ - ரை.) *பல்லோருஞ் சில்லோரும் - பலரும் சிலரும். இப்பாட்டில் இறைவனுடைய உருவநிலை தன்மை முதலியவைகளை உரைக்கிறார். இதனால் இறைவன் எங்கும் நிறைந்தவன் என்னும் உண்மை விளக்கப்படுகிறது.* (க)

## கககக. ஆ. மா. சிவஞானம்

[இவர் சாகீர் ஆரணியில் மாசிலாமணி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத்தோன்றி அகவை பதினாறு நிரம்புவதற்குள் தமிழ்ப் புலமையை நன்கு பெற்று விளங்கினார். உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்றுக் கொண்டிருக்கும் பாலப் பருவத்திலேயே செய்யுள் பாடத் தொடங்கியபடியால் இவருக்குப் "பாலகவி" என்னுஞ் சிறப்புப் பெயரும் வழங்கியது. திருவருணை

வெண்பா வந்தாதி, காமநகர்ப் புராணம் முதலிய பல செய்யுள் நூல்களை இவர் இயற்றியுள்ளார்.]

[தமிழ்க்கடவுள் வாழ்த்தாகப் பாடியன.]

313. நிலைவான் புலவர்க் கமுதருத்தி
நிறைவாழ் வொடுபன் னலனல்கி
நிமிர்வா னவரும் முடிதாழ்ப்ப
நிறுத்துந் திறத்தாய் நெடிதந்நாள்
அலைமே லிடுமாற் றெதிரேறி
அடங்கார் மிடல்சாய்த் தகிலமெலாம்
அடிவந் திறைஞ்ச நடந்திடுமென்
அன்னாய் இந்நாள் உறுபயமாம்
அலைமே லிடுமாற் றெதிரேறி
அடர்வெங் கலியின் இடர்வீட்டி
அவனி தலத்துன் தாண்மலர்கள்
அலர்தற் கரிதோ அருள்கண்டாய்
மலைவா ருலகக் கலகமலி
மம்மர் தெறுஞ்செம் மனத்தர்கவி
வாணர் கணஞ்சூழ் தமிழரணம்
வாழ மணங்கூர் தமிழணங்கே.

(அ - ரை.) *அலைமேல் இடும் ஆற்று - வையையாற்றில். இடர் - இடையூறு. மம்மர் தெறும் - மயக்கத்தைப் போக்கும்.* (க)

314. பன்னூற் கலைபா சடைமிடையப்
படருஞ் சாகைக் கவடோங்கிப்
பணைக்கும் வேதப் பாதபத்தைப்
பழிதீர்த் தளித்த பழம்வித்தே
கன்னேர் மனமுங் கனியெனவே
கவினக் கவிபன் னிருதொடரில்

கல்லா னிழல்வாழ் கற்பகமே
கல்லே னுறுபொல் லாங்கெல்லாம்
பொன்னே நிகர்போ தகப்பதத்தால்
போக்கிப் புகல்பன் னலந்தேக்குஞ்
புகழின் மகிழ்கூர் மணவாழ்வே
புவியெங் கனுமன் னுறப்புரிவாய்
தன்னே ருமைமா கேசனிரந்
தரம்வேய் கரந்தைத் தமிழ்ப்பொழில்வாய்த்
தவழ்மஞ் சரியே தமிழரணம்
தழையுங் குழவித் தமிழணங்கே.

(அ - ரை.) உமைமாகேசன் - சிவபெருமான். நிரந்தரம் - எப்பொழுதும். வேய் - தலையில் அணியும். கரந்தை - கரந்தை என்னும் பூவினைத் தன்னகத்திற்கொண்ட. தமிழ் - இனிய. பொழில்வாய் - சோலையில். தவழ் - படர்கின்ற. மஞ்சரியே - பூங்கொத்தே. தமிழ் அரணம் - தமிழ்ப் பாதுகாப்பிற்கென. தழையும் - தழைக்கும். குழவி - இயமரக்கன்று. தமிழணங்கே- தமிழ்மகளே.

மற்றுமொரு பொருள்

உமைமாகேசன் - த. வே. உமாமகேசுரன்பிள்ளை. நிரந்தரம் வேய் - என்றும் நிலைபெறும்படி அமைத்து அணிபெறுத்திய. கரந்தை - தஞ்சை கருந்திட்டைக்குடி. தமிழ்ப்பொழில்வாய் - தமிழ்ப்பொழில் என்னுந் திங்கள் வெளியீட்டில். தவழ் - விளங் கும். மஞ்சரியே - மஞ்சரி என்னும் நூல் வடிவானவளே. (உ)

**315.** மலைவாழ் கோலக் கலைமயிலே
மதிநீ டியவாண் மதிநுதலாய்
மலைவாய் வளர்கல் லேனெனது
மனக்கல் லுனக்கோ ரியலிடங்காண்
உலையா தழல்போந் திளந்தளிராம்
உருவாய்ந் தொளிர்பைந் தமிழ்ப்பாவாய்
உன்பால் என்தீ வினையனலால்
ஊறென் றுறலும் உளதாமோ

உலேவா ரையம் சிறிதேனும்
உன்று தன்னே இன்னேஎன்
உளத்திற் களிப்போ டமர்ந்தருளி
உன்ருள் பரவும் வாழ்வருள்வாய்
அலேயா ருலகத் திடரனேத்தும்
அடர்க்குந் திடநீ டுரம்பெருகும்
ஆழ்நீர் வேலித் தமிழரணம்
அமருங் குமரித் தமிழணங்கே.

(அ - ரை) *மலே - பொதியமலே. மதி - அறிவு; பிறைத் திங்கள். மலேவாய் - மலேயில்; மயக்கமாக. கல்லேன் - படிக் காதவன்; கல்லானவன். மனக்கல் - மனமாகிய மலே. உலே யாது - கெடாமல். உலேவு - அச்சம். அழல்போந்து - நெருப் பிற் புகுந்து. அழல் - நெருப்பில். போந்து - பனேயேடு. பைந் தமிழ்ப் பாவாய் - செழிப்பமைந்த இனிய பதுமை போன்ற வளே; பைந்தமிழ்ப் பாவடிவானவளே. ஒன்று உறல் - ஒன் றேனும் உறுதல். ஒன்றுறல் - பொருந்துதல்.* (ரு)

## ககஉ. செகவீரபாண்டியக் கவிராச பண்டிதர்

[இவர் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒட்டநத்தம் என்னும் ஊரில் 1886ஆம் ஆண்டில் பிறந்தவர். இலக்கண முத்தையா என்பவ ரிடங் கல்வி கற்றவர். தற்காலம் உள்ள தமிழறிஞர் கட்குத் தலேமை நிலேயில் போற்றப் பெறத்தக்கவர். திருக்குறட் குமரேச வெண்பா, புலவர் உலகம், தரும தீபிகை, பாஞ்சாலங் குறிச்சி வீரச் சரித்திரம், வீர பாண்டியம் முதலியன இப்புலவர் பெருமான் இயற்றிய நூல்கள். இவர் தமது தனிப்பாடல்களே இந்தியத் தாய்நிலே என்னும் பெயரோடு புத்தக வடிவில் வெளி யிட்டுள்ளனர். அந்நூலில் இருந்து கீழ்வருந் தனிப் பாடல்கள் தரப்பெறுகின்றன.]

[பொய் கூறுபவர்களைப்பற்றிப் பாடியது.]

**316.** ஒருபொய்யை உரைத்திடமுன் உளங்கூசி
உரியபேர் அரசை விட்டுத்
திருமலிந்த மனைவியையும் தேசுமிகு
புதல்வனையுஞ் சேர விற்று
வருபுலையன் இடம்விலையாய் மருவிநின்றோர்
மன்னன்முனம் வாய்மை காத்தான்
தரும்ஒருகா சுக்கேழு பொய்யுரைக்கும்
மெய்யரின்று தழைத்தா ரம்மா.

(அ - ரை.) *உளம்கூசி - மனம் நாணி. திருமலிந்த-அழகு மிகுந்த. சேரவிற்று-ஒருங்கே விற்று. மருவிநின்று-பொருந்தியிருந்து. ஓர்மன்னன் - அரிச்சந்திரன். வாய்மை காத்தான் - உண்மையைக் காப்பாற்றினான். மெய்யர் - உடலையுடையவர்கள். தழைத்தார் - மிகுதிப்பட்டார்.* (க)

[போலிப் புலமை பாராட்டுவோரைக் குறித்துப் பாடியது.]

**317.** மூன்றேநாள் தமிழ்படித்து முடிந்தவுடன்
முழுப்புலமை வந்த தாக
ஆன்றகடுஞ் செருக்கேறி ஆயுள்வரை
படித்தவரை அவங்கள் பேசி
ஊன்றியஓர் உணர்வுமின்றி உரைகள்பல
பிதற்றுகின்றார் ஊனம் எல்லாம்
தோன்றிவெளி வருகின்ற தோற்றத்தை
அறிகில்லார் தொல்லை யம்மா.

(அ - ரை.) *ஆன்றகடுஞ் செருக்கேறி - நிரம்பிய கடுமையான செருக்கடைந்து. அவங்கள் - வீணான இழிமொழிகள்.* (உ)

[பொடிப் போடுவோரைக் குறித்துப் பாடியது.]

**318.** மூக்கிலே பொடியேற்றி மூளையிலே
மிடியேற்றி மூட மாக

வாக்கிலே புகையேற்றி வழியெல்லாம்
நகையேற்றி வசையே ஏறி
நாக்கிலே பொய்யேற்றி நாண்ஒன்றும்
ஏருமல் நாச மான
போக்கிலே போகின்ற புலையாட்டம்
ஒழிவதென்ருே புகல்வாய் அம்மா.

(அ - ரை.) மிடி - வறுமை. வசை - பழி. நாண் - வெட்கம். புலையாட்டம் - இழிந்த செய்கை. (ரு)

[பாலில் தண்ணீர் கலந்து விற்றலைக் குறித்துப் பாடியது.]

319. படிக்குநேர் படியாகப் பாலிலே
நீர்கலந்து பயன்ஒன் றின்றி
அடிக்குநேர் அடியாக அளவிலுமே
களவாகி ஆர்ந்து விற்பார்
பிடிக்குநேர் பிடியாக அதைவாங்கிக்
காபியெனும் மதுவுள் பெய்து
குடிக்குநேர் குடியாகக் குடிக்கின்ருர்
குடிகேடு குறியார் கூர்ந்தே.

(அ - ரை.) படிக்கு நேர் படியாக - சரிக்குச் சரியாக. குடிக்கு நேர் குடியாக - கட் குடிக்கு ஒப்பான குடியாக. குடிகேடு - குடும்பம் கெடுதலை. (சு)

[அடிக்கடி கட்சி மாறுவோர்களைக் குறித்துப் பாடியது.]

320. காலையிலே ஒருகட்சி கடும்பகலில்
ஒருகட்சி கதிரோன் சாயும்
மாலையிலே ஒருகட்சி மறுநாளில்
ஒருகட்சி மாறி மாறி

ஆலையிலே சுழன்றுவரும் அடலெருதின்
தொடர்போல அவமா யிந்த
வேலையிலே திரிந்துவரும் வித்தகர்தம்
சித்தநிலை வியப்பே யம்மா.

(அ - ரை.) *அடல் எருதின் - வலிமையுள்ள எருதைப் போல. அவமாய் - வீணாக. வேலையில் - காரியத்தில். வித்தகர் - புதுமையான போக்கையுடையவர்கள்.* (ரு)

[சில ஆண்டுகட்கு முன்வரை நாட்டில் நடந்து கொண்டிருந்த போட்டிப் பந்தயம் என்ற மோசடியைக் குறித்துப் பாடியது.]

321. போட்டிஎன்னும் பொல்லாத புலைச்சூதை
எவ்வழியும் பொறித்து நீட்டிக்
காட்டிலுறு விலங்குகளைக் கவர்கின்ற
வலைகளெனக் கனமா நாட்டி
நீட்டியெழு பொருள்நசையை விசையாக
எவரிடமும் நேரே ஊட்டி
நாட்டிலொரு பகற்கொள்ளை நவமாக
இந்நாளில் நடப்ப தென்னே.

(அ - ரை.) *புலைச்சூது-இழிந்த சூது. பொறித்து - எழுதி. பொருள்நசை-பொருளில் விருப்பம். நவமாக - புதுமையாக.* (சு)

[புகையிலையைக் குறித்துப் பாடியது.]

322. புகையிலையே! நீயிங்கே எத்தனையோ
வகையுருவில் புகுந்து கொண்டு
தொகையாக எவ்வழியும் துயரமே
செய்கின்றாய் தூயோர்க் கெல்லாம்
நகையாக மக்களிடம் நசையூட்டி
வசைநீட்டி நவையே காட்டிப்

புகையாகச் சுடுகாடு போகுமட்டும்
அவரைநீ புகைக்கின் றூயே.

(அ - ரை.) *தொகையாக - ஒருங்கே. நகையாக - எள்ளி நகையாடுதலாக. நசை - விருப்பம். நவை - குற்றம்.* (எ)

[போலித் துறவிகளைக் குறித்துப் பாடியது.]

323. பூமியார் போகங்கள் புல்லிதென
அறவெறுத்துப் போதம் மேவி
நாமியார் என ஆய்ந்து நவையகன்று
தவமுயன்று நண்ணுவார் போல்
சாமியார் வேடங்கள் சதுருடனே
தரித்தவரும் சார்புள் ஓங்கி
மாமியார் பலரடைய மாலடைந்து
மடிகின்றூர் மதிஎன் அம்மா!

(அ - ரை.) *பூமி ஆர் போகங்கள் - நிலவுலகில் பொருந்திய போகங்கள். புல்லிது - இழிந்தது. சார்புள் - ஒரு பற்றுக் கோட்டுக்குள். மாலடைந்து - மயக்கமடைந்து.* (அ)

[காந்தியடிகள் மாண்டபோது பாடிய இரங்கற் பாக்கள்.]

324. காந்தியெனும் பெயரோடு கதிரவன்போல்
உலகமெல்லாம் கனிந்து காணச்
சாந்திஒளி வீசிஎங்கும் தண்ணளியே
புரிந்துவந்த தரும மூர்த்தி
மாந்தரினம் மறுகியழ மன்னுயிரெல்
லாம்கதற வானி லேறிப்
போந்தனையே இனியுனது புனிதமொழி
கேட்பதென்றூே புகல்வாய் அந்தோ.

(அ - ரை.) *தண்ணளி - குளிர்ந்த அருள். மாந்தரினம் - மனித வகுப்பு. மறுகி - வருந்தி. மன்னுயிர் - நிலைபெற்ற உயிர்.* (க)

325. தோன்றிநின்ற உயிர்களெல்லாம் தோன்றுமல்
ஒழிகின்ற தொழிலே ஓங்கி
ஊன்றியுள்ள இவ்வுலகில் ஒருமனிதன்
உண்மையருள் உடைய னுகி
ஆன்றபெருந் தன்மையுடன் ஆருயிர்கட்
காதரவு புரியின் அன்னுன்
வான்றிகழும் புகழோடு வயங்குவான்
என்பதுன்பால் வயங்கிற் றன்றே.

(அ - ரை.) *தோன்றிநின்ற - பிறந்திறந்த. ஊன்றியுள்ள - நிலைபெற்றுள்ள. ஆன்ற - நிறைந்த. ஆதரவு - அன்பு. வான் திகழும் - விண்ணில் விளங்கும். வயங்குவான் - விளங்குவான்.* (க0)

## கசுரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை

[இவர் வ. த. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் இரண்டாவது புதல்வராக 1883ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் பதினைந்தாம் நாள் மஞ்சக்குப்பத்திற் பிறந்தார். சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் பயின்று தமிழில் எம். ஏ. பட்டம் பெற்ருர். தமிழ்நூற் புலமையும் சைவசமய நூற்பயிற்சியும் சிறப்பாக அமையப் பெற்றவர். அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும், முருகவேள் பன்னிரு திருமுறை உரை, தேவார ஒளிநெறிக் கட்டுரை முதலியன இவர் எழுதிய நூல்கள்.]

[முருகக் கடவுள் கனவிற் ருேன்றி அருள்செய்தபொழுது பாடியன.]

326. சந்நிதியில் நின்றுபுகழ் அந்தாதி பாடுந்
தருணத்தில் அந்தாதியில்
தணிமலைக் குரியதாம் சேர்ப்பது மாலெனத்
துவக்குந் தனிப்பாடலை

அந்நிலையில் ஓதுதற் கடியேன் மறந்திடலும்
அன்றிரவில் என்கனவிலே
அண்டியொரு விப்பிரச் சிறுவனுய்த் தோன்றியுடை
அங்கம்ப்ர காசமாக
நன்னிறத் தேகத்தில் வெண்ணிறத் திருநீறும்
நன்ருெளிர எதிரில்நின்று
நல்லஎலு மிச்சம் பழமொன்று கந்தரந்
தாதியில் மறந்தனையென
என்னெதிரில் நின்றநீ சிறுவனல முருகனே
என்றுரைத் தியான்பிடிக்க
எழுமுனே சிறிதோடித் திருவுரு மறைந்தமுரு
கேசதணி கேசஇறையே.

(அ - ரை.) *அந்தாதி - கந்தரந்தாதி. சேர்ப்பது மாலென — சேர்ப்பதுமாலயம் என்று தொடங்கும். அந்நிலையில் - பாதி மறந்து போனநிலையில். விப்பிரச்சிறுவன் - அந்தணச் சிறுவன்.* (க)

327. ஓடி மறைந்த உடனேஎன்
உடலஞ் சிலிர்க்க விழித்தெழுந்தேன்
நாடி யெனையும் ஒருபொருளா
நயந்த கருணை என்னென்பேன்
வாடி வாடி முருகேசா
வாவா என்றே அலறுவேன்
தேடி உனையான் பிடிக்குமொரு
திறமே தென்றே திகைப்புற்றேன்.

(அ - ரை.) *சிலிர்க்க - மயிர்க்கூச்சிட. நயந்த - விரும்பிய.* (உ)

328. திகைக்கும் என்னையும் தேற்றுதல் வேண்டுமேல்
துகைக்கும் எந்தைக்கும் ஓம்பொருள் சொற்றனை

நகைக்கும் நானிலம் கைவிடின் நன்னெஞ்சக்
குகைக்குந் தங்கு குழந்தைக் குமரனே.

(அ - ரை.) திகைக்கும் - மயங்கும். ஏறு உகைக்கும் - காளையைச் செலுத்தும். எந்தைக்கும் - எம் தந்தையாகிய சிவபெருமானுக்கும். ஓம்பொருள் - பிரணவப்பொருள். சொற்றனை - கூறினாய். நகைக்கும் நானிலம் - உலகத்தார்கள் எள்ளி நகையாடுவார்கள். (ரு)

## கக௩. வெ. இராமலிங்கம் பிள்ளை

[இவர் சேலம் மாவட்டத்தில் உள்ள மோகனூரில் 1888ஆம் ஆண்டில் பிறந்தார். தமிழன் இதயம், அவளும் அவனும், மலைக்கள்ளன், மாமன் மகள், என் கதை முதலிய இருபத்தைந்துக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். அரசவைக் கவிஞராக இருந்தவர்.]

[திருச்சி திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் அறுபதாண்டு நிறைவிற் பாடியது.]

329. என்றுமுள தென்தமிழின் சிறப்பைக் காத்து
ஏற்றமிகும் தமிழினத்தின் நலத்தைக் கோரி
சென்றவிடம் எங்கெங்கும் அதுவே பேச்சாய்ச்
செய்துவருந் திருப்பணியின் திறத்தா லுற்ற
வென்றிமிகும் கி.ஆ.பெ. விசுவ நாதம்
மேவியுள்ள அறுபதாம் வயது முற்றி
மன்றல்பெறும் மகிழ்ச்சியுடன் நெடுநாள் வாழ
மனமாரத் திருவருளை வழுத்து கின்றோம்.

(அ - ரை.) நலத்தைக் கோரி - நன்மையை நாடி. வென்றி மிகும் - வெற்றி மிகுந்த. மன்றல்பெறும் - அறுபதாண்டு மணம் பெறும். வழுத்துகின்றோம் - போற்றுகின்றோம். (க)

## ௧௧௫. கு. கோதண்டபாணிப் பிள்ளை

[இவர் 1896ஆம் ஆண்டிற் பிறந்தார். பி. ஏ. வரை ஆங்கிலக் கல்வி கற்றதோடு தமிழ் மொழியையும் நன்கு கற்றுத் தமிழ்ப் புலமையும் பெற்றார். மங்கையர்க்கரசி, பங்கயச் செல்வி, நெடுநல் வாடை (திறனாய்வு) முதற்குறள் உவமை, ஏரடி இருநூறு என்பன இவர் இயற்றிய நூல்கள்.]

[திருச்செந்தூர் முருகக் கடவுளைக் குறித்து வினா விடையாகப் பாடியன.

வினா

330. குன்றே இருப்பாகக் கொண்டுங் குறக்கொடிபின்
சென்றும் இருமையறச் சேர்ந்திருந்தும்—குன்றைவிட்டு
நந்தூரும் நெய்தல் நயந்தே றலைவாயில்
செந்தூரன் சேர்ந்ததேன் செப்பு.

(அ - ரை.) *குன்றே - சிறுமலைகளையே. இருமையற - இரண்டற. நந்து ஊரும் - சங்குகள் ஊருகிற. அலைவாயில் - அலைபொருந்திய இடம்.* (௧)

விடை

331. போற்றும் அடியார் புரியும் பவங்கழுவும்
ஆற்றல் சுனைநீருக் கற்றதென்றே—போற்றக்
கடல்தேடி வந்தடைந்து காண்பெளிதாய்ச் செந்தூர்
இடந்தேடிக் கொண்ட இயல்.

(அ - ரை) *பவம் கழுவும் - தீவினையைப் போக்கும். காண்பு எளிதாய் - காண்பதற் கெளியநிலையில்.* (௨)

## ௧௧௬. சுத்தாநந்த பாரதியார்

[கவி யோகி சுத்தாநந்த பாரதியார் என்னும் இவர் பாண்டிநாட்டில் சிவகங்கையில் 1897ஆம் ஆண்டிற் பிறந்தார். தமிழ், ஆங்கிலம், பிரெஞ்சு, இந்தி,

தெலுங்கு, வடமொழி முதலிய பல மொழிகளைக் கற்றுணர்ந்தார். சிறு வயதிலேயே துறவு பூண்டார். பராசத்தியருளால் பாட்டியற்றுந் திறமை பெற்றார். தற்காலத்தில் விளங்கிய பல பெரியார்களோடுந் தொடர்புகொண்டார். பள்ளியாசிரியராக இருந்து கல்வித் தொண்டு செய்தார். பால பாரதி, சமரச போதினி, சுயராச்சியா முதலிய பல இதழ்களை நடத்தினார். இவர் பாரதசக்தி மகா காவியம், யோகசித்தி, ஆத்ம சோதனை, சுத்தானந்த கீர்த்தனாஞ்சலி, நடனாஞ்சலி, கவியரங்கம், உலகப் பாட்டு, சிங்கநாதம், முன்னேற்ற முழக்கம், குழந்தையின்பம், ஆத்மநாதம், மந்திர மாலை, காலத்தேர், கலைக் கோயில், ஏழைபடும் பாடு, இதுதான் உலகம், இளிச்சவாயன், திருமந்திர விளக்கம், சிலம்புச் செல்வம் முதலிய ஆயிரத்திற்கு மேற்பட்ட நூல்களை இயற்றியுள்ளார்.]

[தன்னந் தனியாக நிட்டைகூடி இருள்பொருந்திய மூலையில் அமர்ந்திருந்தார். அப்போது தேவேந்திர பட்டர் என்பவர் வந்து கோவில் உணா (பிரசாதம்) வழங்கினார். அந்தச் சமயத்தில் பாடியது.]

332. போவென்று மாமன் புறமொதுக்க மீனாட்சி
வாவென் றறிய வரமீந்தான்—பாவளர
ஊட்டினாள் உள்ளம் உருக்கினாள் உய்திபெறக்
காட்டினாள் அன்புக் கலை.

(அ - ரை.) புறமொதுக்க - வெளியே விரட்ட. உய்திபெற - உய்தலையடைய. (க)

[சுத்தாநந்தருக்குத் தெய்வசிகாமணிப் புலவர் என்பவர் தொல்காப்பியம் முதலிய நூல்களைக் கற்பித்தார். அவர் இராமலிங்க அடிகளோடு வாழ்ந்தவர். பொறாமைகொண்ட பகைவரால் வெட்டுண்டு குளத்தில் விழுந்து இறந்தார். அப்பொழுது பாடியன.]

333. தெய்வ சிகாமணியே தீந்தமிழ்க் கற்பகமே
செய்யபழ நூல்சொன்ன தேன்வாயா—வையத்தில்
ஏடுபல நானும் எழுதிக் குவித்ததுநீ
பாடுபா டென்ற பரிசு.

(அ - ரை.) பழநூல் - பழமையான நூல்கள். பாடுபாடு என்ற பரிசு "பாடு பாடு" என்று ஊக்கிவிட்டதனுல். (உ)

334. கன்னித் தமிழமுதைக் கம்பர் சமாதியிலே
உன்னிப் புடனளித்த உத்தமனே—மின்னுடலம்
வெட்டுண் டிறந்தாயோ வித்தகனே என்னுளூனே
இட்டுண்டு வாழ்ந்தாய் இனிது.

(அ - ரை.) உன்னிப்புடன் - கருத்தோடு. (ங)

[சுத்தாநந்தர் பெண்ணைப் பராசத்தி என்று வழங்குந் தூயர். யோகசித்தி பெற்றவர். இவருக்குத் திருமணம் புரியப் பெண் பேசியபோது பாடியது.]

335. பெண்ணாக வந்த பெரியதவக் குண்டலியே
பண்ணாலே பாடிப் பணிகின்றேன்—புண்ணாகும்
ஆசை வலைப்பட் டழியாது சுத்த சத்தி
பூசையென வாழ்வைப் புரி.

(அ - ரை.) குண்டலி - குண்டலிசத்தி. பண்-இசை. (ச)

[திருமணத்தை வெறுத்து இல்லத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்றபொழுது பாடியன.]

336. பெண்டாட்டி கட்டிப் பெரிய புலவர்படுந்
திண்டாட்டங் கண்டோந் தெருவெல்லாம்—தொண்டர்
துணைவா துணைநீயித் தொல்லைசெயுங் காமக்
கணைவாரா தென்னருகே கா.

(அ - ரை.) பெரிய புலவர் படும் - பெரிய புலவர்களெல்லாம் படுகின்ற. திண்டாட்டம் - துன்பம். (டு)

337. என்னை வளர்த்தநல் இல்லமே செல்கின்றேன்
பின்னை உலகுன் பெயர்சொல்ல—மன்னுதவம்
செய்வேன் சிவகதியே சேர்வேன் அருள்பாடி
உய்வேன் உறவினருக் கோது.

(அ - ரை.) பின்னை உலகு - பிற்கால உலகம். மன்னுதவம்- நிலைபெற்றதவம். (௬)

338 வெள்ளி மலையப்பா வெள்ளக் கடலப்பா
வள்ளி முருகப்பா வானப்பா—துள்ளுமனந்
தீதப்பா வாதப்பா சாதப்பா நீயன்றி
ஏதப்பா ஒதுபுக லே.

(அ - ரை.) சாதப்பா - சாது அப்பா - சாதுவாக விளங்குகிற அப்பனே. ஒதுபுகல் - சொல்லப்படுகிற அடைக்கலம். (எ)

339. குடும்பக் கலக்கத்தில் குண்டடிகள் வாங்கி
இடும்பைபடு மண்ணுளன் னிப்பார்—கடுஞ்சிறையாம்
கூட்டுக் கிளிக்குண்டோ கூடியா டித்திரியும்
காட்டுக் கிளியின் களிப்பு.

(அ - ரை.) இடும்பை - துன்பம். (அ)

340. மொத்துண்டு கட்டுண்டு மோகப் படுகுழியில்
பித்துண்டு வாழப் பிறந்தேனே—சொத்துண்டு
பட்டுண்டு கொட்டுண்டு பங்கயக் கையாலே
குட்டுண்டு சோகக் குலம்.

(அ - ரை.) மொத்துண்டு - அடிபட்டு. கட்டுண்டு - கட்டப்பற்று. பங்கயக் கையால் - தாமரை மலர்போன்ற கையினுல். (௯)

[அலுவலை மறுத்துப் பாடியன.]

341. வேலைப் பிடித்திசைக்கும் வீரக் கவிமற்றோர்
காலைப் பிடிக்கக் கடவேனே—ஞாலத்தே
அன்பும் அறிவும் அருட்பணியுங் கொண்டென்றும்
இன்புறுத லேயென் னியல்பு.

(அ - ரை.) ஞாலத்தே - உலகத்தே. இயல்பு - இயற்கை. (கo)

342. அன்னை பரதேவி! ஆறுப் பசியெடுத்தால்
உன்னையுங் கேளேன் உழைத்துண்பேன்—என்னைநீ
பெற்ற பயனே பிறவாத பேறுபெறும்
நற்றவமே யாகுமதை நல்கு.

(அ - ரை.) ஆறுப்பசி - அடங்காப்பசி. நல்கு-கொடு. (கக)

[கவிகள் பலவற்றைக் கரையான் தின்றுவிட்ட போது பாடியது.]

343. புவியினர் அவைக்கு முன்னே புற்றெழு கரையா னுண்ட
கவியின மூட்டை போன கதியினைப் பாராய் நெஞ்சே
செவிமனங் குளிரப் பாடித் திருவாத வூரர் போலே
சிவசிவா என்று நன்று செல்லுவோஞ் செயலி லோமே

(அ - ரை.) புவியினர் - உலகத்தோர். கவியினமூட்டை- பாடல்களின்கட்டு. திருவாதவூரர் - மாணிக்கவாசகர். (கஉ)

[தம் நண்பரான சுப்பிரமணிய பாரதியாரைக் கண்டபோது பாடியது.]

344. வீரங் கனலும் விழிக்கனலும் பிள்ளைபோல்
ஈரந் திகழும் இளநெஞ்சம்—பாரதியின்
சொல்லும் பொருளும் சுதந்திரப் பேரிகையும்
வெல்லும் உலகை விரைந்து.

(அ - ரை.) வீரம் கனலும் - வீரத்தன்மை மிகுதிப்படும். ஈரம் - அன்பு. (கங)

[தருமசிந்தனை இல்லாத செல்வன் ஒருவனைப் பார்த்துப் பாடியது.]

345. ஆட்டுக்கும் பாட்டுக்கும் ஆசைக் கிழத்திக்கும்
கோட்டுக்கும் ஓட்டுக்கும் கொட்டுவார்—வாட்டமாம்

ஏழை தருமமெனிற் எச்சிற்கை யும்உதவார்
பாழும் பணமே பதர்.

(அ - ரை.) ஆட்டுக்கும் - நாட்டியத்திற்கும். பாட்டுக்கும் - இசைக் கச்சேரிக்கும். கோட்டுக்கும் - நீதிமன்றத்துக்கும். ஓட்டுக்கும் - மக்களுடைய வோட் (Vote) டைப் பெறுதற்கும். (கச)

[தம் நண்பர் வ. வே. சு. ஐயரைப் பாராட்டிப் பாடியது.]

346. வீரத் திருவுடையான் வேதாந்த நாவுடையான்
ஈரத் தமிழன் பினிதுடையான்—போரென்றால்
விம்முகின்ற தோளுடையான் வேல்முருகன் பேருடையான்
நம்முடைய நண்பனென நாட்டு.

(அ - ரை.) வீரத்திரு - ஆண்மைச் செல்வம். ஈரத்தமிழ் - இனிய செந்தமிழ். விம்முகின்ற - பருக்கின்ற. (கரு)

[தம் பொருள்கள் களவுபோனபோது பாடியன.]

347. கள்வராய் வந்து கனிமொழிகள் பேசியே
கொள்ளை யடித்த குறைபேசேன்—வெள்ளிமலை
அப்பா உனதருளே ஆனந்தச் செல்வமெனில்
இப்பாரே போனாலும் என்.

(அ - ரை.) இனிமொழிகள் - இனியமொழிகள். வெள்ளிமலை அப்பா - சிவபெருமானே. இப்பாரே - இவ்வுலகமே. (கசு)

[அரவிந்தரைக் குறித்துப் பாடியது.]

348. யாராருங் காணா அரவிந்தா நின்னுடலைப்
பாராருங் காணப் பறந்தாயோ—சீராரும்
போகத்தால் யோகம் புசித்தபரி பூரணனே
ஏகத்தால் என்னுள் இரு.

(அ - ரை.) யாராரும் - எத்தகையோரும். பரிபூரணன் - நிறைந்த மெய்யறிவுடையவன். (கஎ)

## கக௭. கி. ஆ. பெ. விசுவநாதம்

[இவர் திரிசிரபுரத்தில் 1899ஆம் ஆண்டிற் பிறந்தார். தமிழினிடத்திற் சிறந்த பற்றுக்கொண்டு அதனை ஓதியுணர்ந்தவர். இவர் எழுதிய நூல்கள், ஐந்து செல்வங்கள், அறிவுக்கு உணவு, தமிழ் மருந்துகள், திருக்குறட் புதைபொருள், தமிழ்ச் செல்வம் முதலியன. முதலிடை கடையெனும் முச்சங்கங்களைப்போல் இந்நாளிலும் ஒரு சங்கத்தை அமைக்க வேண்டுமென எண்ணித் தமிழகத்தில் தற்காலமுள்ள தமிழ்ப் புலவர்களில் தக்கவர்களைத் தேர்ந்தெடுத்துத் தமிழகப் புலவர் குழுவை அமைத்து அதனைப் பாதுகாத்து வருகிறார்.]

[ஆநந்தபோதினி ஆசிரியராக இருந்த ஆரணி குப்புச்சாமி முதலியாரவர்கள் காலமானபோது பாடியன.]

**349.** அந்தோ!வந் தோஎன்ன அநியாயம்
அநியாயம் அந்தகன்தான்
முந்தோமுக் குரைவிரித்த முருகனிகர்
கட்டழகன்முதல்வன் தானே
தந்தோதுந் திருவுளத்தான் ஆரணியூர்த்
தமிழ்ப்புலவன் தரணிபோற்ற
வந்தோங்கு நலக்குப்புச் சாமிதனை
வாய்மடுத்தவண்ணந் தானே.

(அ - ரை.) *அந்தகன் - நமன். முந்து - முன்னாளில் - ஓமுக்கு உரைவிரித்த - ஓமென்னும் பிரணவத்திற்குரை கூறியருளிய. வாய்மடுத்த - வாயிலிட்டுக்கொண்ட.* (க)

**350.** ஆங்கிலம்நல் தமிழென்னும் அருங்கடல்கள்
இரண்டினையும் ஆழங் கண்டே
ஓங்குதிரு யோகமுதல் ஞானமெலாம்
குவித்தெடுத்திவ் வுலகுக் கீந்து

பாங்குமிகு புகழ்படைத்த நல்குப்புச்
சாமியெனும் பாவ லோனே
ஈங்கெவரும் போற்றுபுகழ் அண்ணுவோ
எங்கொளித்தாய் இயம்பு வாயே.

(அ - ரை.) பாங்குமிகு - நன்மை மிகுந்த. பாவலோன் - பாக்கள் பாடுவதில் வல்லவன். (உ)

351. நம்பெரிய திருநாடு முன்னேற
உளத்தெண்ணி நாளும் நாளும்
உம்பரமு தனையதிருத் தமிழ்நாவல்
பலவெழுதி உலகுக் கீந்தோய்
செம்பொருளைக் காண்புலவ திருக்குப்புச்
சாமியெனும் எங்கள் அண்ணு!
கம்பமத வெண்களிற்ருேன் கதைசொலவோ
எடுத்தகன்ருன் கழறு வாயே.

(அ - ரை) உம்பர் அமுது - தேவர்களுடைய அமுதம். செம்பொருளை - மெய்ப்பொருளை. கம்பமத வெண்களிற்ருேன் - கம்பத்திற் கட்டப்படுகிற மதம் பொருந்திய வெள்ளையானையை உடைய தேவேந்திரன். கழறுவாய் - கூறுவாய். (ங)

352. ஞானநிலம் எனும்பெரிய நாவலந்தீ
வத்துதித்த நமது மாதர்
மானமிகு நாணமுதல் நாற்குணமுங்
கற்பும்நனி வதியப் பெற்றே
ஈனமிலா திருக்கவுழைத் தருள்குப்புச்
சாமியெனும் எங்கள் அண்ணு!
வானுலகம் நீயேகி மண்ணுலகோர்
மிகவேங்க வைத்தல் நன்ருே?

(அ - ரை.) நாவலந்தீவு - பரதகண்டம். வதியப்பெற்று - அமையப்பெற்று. ஈனம் இலாது - குறைவில்லாமல். (ச)

353. அவனியெலாங் கொண்டாடும் ஆனந்த
போதினிக்கண் ஆய்ந்து தேர்ந்து
கவனமொடு கட்டுரைகள் பலதந்து
பலப்படுத்திக் கவினச் செய்த
புவனமுரை திருக்குப்புச் சாமியெனும்
புலவாவோ புலவர் நாடு
தவநினைந்து நடந்தனையே ஈதழகோ
இதுமுறையோ சாற்று வாயே.

(அ - ரை.) *அவனி - உலகம். கவனமொடு - கருத்தோடு. கவினச்செய்த - அழகுண்டாகச்செய்த. புவனம் உரை-உலகத்தார்கள் புகழ்ந்து பேசுகிற. தவநினைந்து - மிகுதியாக எண்ணி; தவத்தினை எண்ணி எனலுமாம்.* (ரு)

354. சிவவேடப் பொலிவுழ் கோய்! சிவனடியே
சிந்திக்குஞ் சீரி யோனே!
தவமாகும் நினதுநெறி கண்டுநமன்
நின்பாலுஞ் சாரு வானே?
அவமாமுன் பட்டவுதை மறப்பானே?
கைவல்ய அருநூற் கிங்கு
நவமாக உரைதருகுப் புச்சாமி
சென்றதுநீ நம்பன் நாடே.

(அ - ரை.) *தவமாகும் - தவத்தைச் செய்வதாக அமைந்து நிற்கும். சாருவானே - அடைவானோ? அவமா - வீணாக. நவமாக- புதிதாக. நம்பன்நாடே - சிவபெருமானுடைய உலகமே.* (சு)

## கக௮. வீ. எஸ். வீரநாதக் கோனார்

[இவர் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த அம்பலத்தாடி என்னுஞ் சிற்றூரில் 1906ஆம் ஆண்டிற் பிறந்தார். தமிழ் மொழியை நன்கு கற்றதோடு பொதுநல

வாழ்விலும் ஈடுபட்டு நாட்டு நன்மைக்காக உழைத்துச் சிறையுஞ் சென்றார். இவர் இயற்றிய நூல்கள், தேசிய பாடியம், தேசீய திலகம், தளபதி, பாரத வீரன், அற நெறி வெண்பா முதலியன.]

[காங்கிரசின் வைர விழா வாழ்த்துப் பாடல்களாகப் பாடியன.]

355. மாரத விரர்கள் மல்குநம் தாயகத்துப்
பாரத நாடெனும் பண்டைய—பேரதனைக்
கொண்ட குடியரசு கோலோச்சி என்ஞான்றும்
மண்டலமேல் வாழி மகிழ்ந்து.

(அ - ரை.) *மாரத வீரர்கள் - சிறந்த தேர்வீரர்கள். மல்கும் - மிகுதியாகவிருக்கும். கோல்ஓச்சி - செங்கோல் செலுத்தி.* (க)

356. தேசத்திற் காகத் தியாகம் பலபுரிந்த
மாசற்ற பாரத மக்களைப்—பாசமாய்
உள்ளத்துட் போற்றி உறவுபா ராட்டிமிக
விள்ளுவேம் வாழ்த்து விழைந்து.

(அ - ரை.) *வாசமாய் - அன்பாய். மிக விள்ளுவேம்-மிகுதியாகப் புகழ்ந்து பேசுவோம். விழைந்து - விரும்பி.* (உ)

[காந்தி யடிகள்மீது வாழ்த்தாகப் பாடியன.]

357. ஆடம் பரமற்ற தானநல் வாழ்வியற்ற
நீடன் புடனுரைத்த நீதிமுறைப்—பீடம்
அகிம்சையின் மெய்யாசான் ஆம்காந்தி நாமம்
மகிமிசைநேர் வாழிவென்றி வாய்த்து.

(அ - ரை.) *ஆடம்பரம் அற்ற - வெளிப்பகட்டில்லாத. நீதிமுறைப்பீடம் - அறநெறி அமர்ந்திருக்கும் இருக்கையைப் போன்றவன். மகிமிசை - உலகத்தில். வென்றிவாய்த்து - வெற்றி அமைந்து. அகிம்சை - எவ்வுயிருக்குந் துன்பஞ்செய்யாமை.* (ங)

358. தொல்லையென் னென்னவந் துற்றாலும் அல்லாத் துறை
[பொருந்து
சொல்லொன்று சொல்லிச் செயலொன்று செய்திடுஞ்
[சூழ்ச்சியெனும்
புல்லறி வாண்மை கடையென் றறைந்த புனிதமதி
வல்ல குணமேவு காந்தி மகான்பெயர் வாழ்குகவே.

(அ - ரை.) *தொல்லை-துன்பம். அல்லாத்துறை பொருந்து-நன்மையல்லாத வழியிலமைந்த. புல்லறிவாண்மை - இழிந்த அறிவுடைமை. கடை - தீயது.* (௪)

## ௧௧௯. புலவர் குழந்தை

[இவர் ஈரோட்டிற்குத் தெற்கேயுள்ள ஓலவலசு என்னுஞ் சிற்றூரில் 1906ஆம் ஆண்டிற் பிறந்தார். இலக்கண இலக்கியங்களைத் தாமே கற்றார். 1936ஆம் ஆண்டிற் புலவர் தேர்வில் தேறினார். இராவண காவியம், தொல்காப்பியத் தமிழர், யாப்பதிகாரம், இன்னூல், நெருஞ்சிப்பழம், திருநணாச்சிலேடை வெண்பா, கொங்குநாடுந் தமிழும், கொங்குக் குலமணிகள், தீரன் சின்னமலை முதலியன இவருடைய நூல்கள்.]

["உங்களூர் எது?" என்று ஒருவர் கேட்ட பொழுது பாடியது.]

359. என்னை அலாதார் எழுதப் படிக்கறியார்
தன்னை எழுத்தறியத் தான்செய்தேன்—என்னைகொல்
சால வலசியன்னூர் சங்கத் தமிழ்பாடும்
ஓலவல செங்க ளூர்.

(அ - ரை.) *சால - மிகவும். அலசி - ஆராய்ந்து. ஓலவலசு-ஒலியினையுடைய ஊர்.* (௧)

["கொங்கு என்று எடுத்துச் சங்கு என்று முடியுமாறு ஒரு செய்யுள் இயற்றவேண்டும்" என்று ஒருவர் கூறியபோது பாடியது.]

360. கொங்கிலா ஞூருடையான் கோடாக் கொடையுடையான்
செங்குவளை மாலைத் திருவுடையான்—பைங்கூழ்
உழக்கொட்டு மெங்கோன் உயிர்போலும் ஆக்கள்
கொழுக்கட்டை மேயமஞ் சங்கு.

(அ - ரை.) *கொங்கில் - கொங்குநாட்டில். ஆனூர் - ஓர் ஊர். கோடா - மாறுபடாத. பைங்கூழ் - பசியபயிர். உழக் கொட்டும் - உழுமாறு பொழியும். கொழுக்கட்டை - ஒருவகைப் புல். மேய மஞ்சு அங்கு - அவ்விடத்தில் பொருந்திய முகில்கள். முகில்கள் உழுமாறு மழைபொழியும் என்று கூட்டுக.* (உ)

[ஒரு கரும்பாலைக்குச் சென்றபொழுது வேடிக்கையாகப் பாடியது.]

361. ஆலை யடுப்பிற் கனிதரும் சாறுமவ் வாறுதரும்
பாலை யடுப்பிற் சுடச்செயும் மேனியில் பாய்ந்துசுடும்
சேலை யடுப்பின் உடுத்துவக் குங்கொத்தித் தின்றுவக்கும்
வேலை யடுப்பின் உடற்படும் ஈரமும் வீரமுமே!

(அ - ரை.) *ஆல் ஐ அடுப்பின் - ஆலமரத்தை அடுத்தால். கனிதரும் - பழத்தைக் கொடுக்கும். ஆலை அடுப்பின் - கரும்பாலையை அடுத்தால், சாறுதரும் - சாற்றைக்கொடுக்கும். பாலை அடுப்பில் சுடச்செய்யும் - பாலை அடுப்பின்மீது வைத்தெரித்தால் சுடுமாறு செய்யும். பாலை அடுப்பின் - பாலை நிலத்தை அடுத்தால் மேனியிற்பாய்ந்து சுடும். வெப்பம் உடலிற்பாய்ந்து சுடுதலைச்செய்யும். சேலை அடுப்பின் - சேலையைக்கொண்டு வந்தால். உடுத்துவக்கும் - கட்டிமகிழும். சேலை அடுப்பின் - சேல் மீனையடுத்தால். கொத்தித்தின்றுவக்கும் - கொத்தித்தின்று மகிழும். வேலை அடுப்பின் ஈரம் உடற்படும் - கடற்கரையை நெருங்கினல் அலைவீச்சால் ஈரமானது உடலிற்படும். வேலை அடுப்பின் - வேற்படையைக் கையில் எடுத்தால். வீரம் உடற்படும் - உடலில் வீரத்தன்மை உண்டாகும்.* (ங)

## கூ௨௦. தே. ப. பெருமாள்

[இவர் குமரி மாவட்டத்தில் நாகர் கோவிலைச் சேர்ந்த கோட்டாறு என்னும் ஊரில் 1916ஆம் ஆண்

டிற் பிறந்தார். தமிழ் மொழியை நன்கு கற்றுச் சிறந்த தமிழ்ப் புலமை பெற்ருர். தமிழ்ச்சுளை, இயற்கையின் நடனம், குழந்தை அரங்கு, சிறுவர் அமுது, சிற்பியின் கனவு, தளவாய் வேலுத்தம்பி என்பன இவருடைய நூல்கள். இவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை யவர்களோடு நெருங்கிய தொடர்புடையவர். தமிழ்ப் பணிபுரிதலே இவருடைய வேலை.]

[கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் கால மானபோது பாடியன.]

362. கன்னல் மொழிச்சிறுவர் கன்னியர்கள் நீர்சொரிய
மன்னு தமிழ்மரபின் வாய்புலம்ப—இன்னமுதத்
தீந்தமிழ் வானகத்தில் தேவியெனும் வெண்சுடரும்
மாய்ந்ததுவோ மங்கி மறைந்து.

(அ - ரை.) *கன்னல்மொழிச் சிறுவர் - கரும்பைப்போல் இனிமையாகப் பேசுஞ் சிறுவர்கள். தே. வி. தேசிகவிநாயகம்.* (௧)

363. பாடும் மணிக்குயிலே பாவாணர் நித்தநித்தம்
தேடுங் கவிமணியே தேசிகனே—நீடுலகில்
பொங்கிவரும் நின்சிரிப்பைப் போதனையாம் நித்திலத்தை
எங்குயாம் காண்போம் இனி.

(அ - ரை.) *மணிக்குயில் - அழகிய குயிலைப்போன்றவன். பாவாணர் - கவிஞர்கள். நித்திலம் - முத்து.* (உ)

364. விண்ணிற் கவியமுதம் வேண்டும் புலவர்களை
எண்ணிநீ அவ்வுலகம் ஏகினையோ—அண்ணலே
செந்தமிழ்த் தாயின் சிதைகொண்ட நெஞ்சினனல்
எந்தவழி தீரும் இனி.

(அ - ரை.) *விண்ணில் - தேவருலகில். புலவர்களை-தேவர் களை. நெஞ்சின் அனல் - உள்ளத்தில் பற்றிய நெருப்பு.* (௩)

[மறைமலையடிகள் மறைந்தபோது பாடியன.]

365. பொன்னி உலர்ந்ததுவோ பூம்பொருநை வற்றியதோ
உன்னும் பொதிகை உருண்டதுவோ—என்னென்பேன்
மாத்தமிழ ராற்றல் மறைமலையார் வையமதை
நீத்த துயரில் நிலைத்து.

(அ - ரை.) *பொன்னி - காவிரி. பொருநை - தாம்பிரவர்ணி. வையமதை - உலகத்தை.* (சு)

366. குற்றலத் தேனருவி கொட்டும் இசையின்பம்
பெற்றோமே நீதந்த பேருரையில்—கற்றோர்கள்
கைகூப்பும் மாமறையே கன்னித் தமிழன்னை
மெய்சோர்ந்தாள் நின்பிரிவால் வெந்து.

(அ - ரை.) *பேருரையில் - சொற்பொழிவிலும் நூல் உரையிலும். மெய் - உடல்.* (ரு)

367. செந்தமிழர் நின்வழியில் சேரார் எனவுள்ளம்
நொந்தேநீ விண்ணுடு நோக்கினையோ—அந்தோயாம்
பெற்ற பெருநிதியைப் பீடுபெறச் செய்யாது
தெற்றினேம் சிந்தை சிதைந்து.

(அ - ரை.) *நின் வழியில் - நின்கொள்கைப்படி. பீடுபெறச் செய்யாது - பெருமையடையச் செய்யாமல். தெற்றினேம் - இழந்தோம்.* (சா)

## கஉக. மொ. அ. துரை. அரங்கசாமிப் பிள்ளை

[இவர் தொண்டைவள நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் மொறப்பாக்கம் என்னும் ஊரில் 1908-ஆம் ஆண்டில் பிறந்தார். தம் முயற்சியால் எம். ஏ. எம். ஓ. எல்., பி. எச். டி., முதலிய பட்டம் பெற்றவர். கல்லூரிகளில் ஆசிரியராகப் பணிபுரிபவர். பண்டைத் தமிழ் நெறி, இலக்கியக் கட்டுரைகள், தென்றலிலே

தேன்மொழி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், அன்பு நெறியே தமிழ் முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[இராசா அண்ணுமலைச் செட்டியார் காலமான போது பாடிய இரங்கற்பாக்கள்.]

**368.** மண்ணினிற் பிறந்தார் பெறுபயன் நல்ல
மக்களைப் பெற்றறி வுடையோர்
எண்ணுமா றினிய கலையறி வுடனே
எழில்மிகும் ஒழுக்கினர் ஆக்கல்
நண்ணுவார் தம்மை ஆதர வுடனே
நகைமுகங் காட்டிநல் லுதவி
விண்ணவர் தாமும் வியந்திட அளித்தல்
விருந்துதந் துபசரித் திடுதல்.

(அ - ரை.) *எண்ணுமாறு - மதிக்கும்படி. ஒழுக்கினர் - நல்லொழுக்கம் உடையவர்கள். நண்ணுவார் - தம்மிடம் வருபவர்கள். நகைமுகம் - மகிழ்ச்சியைப் புலப்படுத்தும் முகம்.* (க)

**369.** நாட்டவர் யாரும் கலைபல பயில
நற்கலைக் கோயில்கள் சமைத்தல்
வேட்டவர் பயிலப் பொருளில ரேனும்
விடுதியும் உணவுடன் உடையும்
நாட்டவர் வியக்க அளித்தவர் மேன்மை
நண்ணிடக் கண்டுளம் உவத்தல்
ஆட்டவன் ஆன நடனச பேசன்
அவன்டி கனவினும் போற்றல்

(அ - ரை.) *நாட்டவர் - நாட்டிலே வாழ்பவர்கள். கலைக் கோயில்கள் சமைத்தல் - கலைபயிலிடங்களாகிய கழகங்களை நிறுவுதல். வேட்டவர் - கல்வியை விரும்பியவர்கள். ஆட்டவன் ஆன - திருக்கூத்தினைச் செய்பவனாக விளங்கும். நடனசபேசன் - கூத்தப்பிரான்.* (உ)

370. அன்னலே மணிக ளாம்என மூவர்
அறிவுசால் மக்களைப் பெற்ருய்
மன்னவர் அறிவார் அருமைமுத் தையா
மறுவிலா ராமநா தன்சீர்க்
கண்மணி உனக்கே கடைமணி ஆன
கவின்மணி சிதம்பரம் என்பார்
கண்ணியம் மிக்கோய் இவர்களைப் பிரியக்
கருத்தினில் கருதிய தென்னே ?

(அ – ரை.) அறிவுசால் - அறிவு நிறைந்த. மறுஇலா-குற்ற மில்லாத. கண்ணியம் – பெருமை. (௩)

371. நேசம்மிக் குடையோய் நின்பெயர் உலகில்
நிலைபெற வழிவழி விளங்க
மாசிலாப் பெயரர் வாய்ந்துளார் அவர்கள்
மாணிக்க மணிகளாய்த் துலங்கும்
பாசிளங் குழவித் தன்மைமிக் குடையார்
பல்கலை பயில்பண்பும் உடையார்
ஓசையில் இனிய தமிழ்மொழி என்பால்
ஓதுதல் ஒருமனம் உடையார்.

(அ – ரை.) மாசிலா - குற்றமில்லாத. பெயரர் - பேரர் கள். பாட்டனாரின் பெயரைப் பெறுகிறபடியினால் பெயரர் அல் லது பேரர் என்று கூறப்பெறுகின்றனர். பாசிளங்குழவி – பச் சிளம் பருவத்தையுடையவர்கள். (௪)

372. ஓலமிட் டவரும் உலகவர் எவரும்
ஓய்ந்திடா தழுகுரல் உன்றன்
சீலமோர்ந் துணர்த்தும் தமிழ்மறை ஒலிசேர்
செவிகளில் நுழைந்தில தந்தேர்
காலனும் நினைக்கண் டஞ்சுவான் தொடவும்
கலங்குவான் அவன்உனைக் கவர

ஏலவே நினையான் எமபுரி அதனுல்
எய்தினுய் அல்லைநீ எந்தாய்.

(அ - ரை.) ஓலமிட்டவரும் - கதறுதலைச்செய்து அந்தப் பெயரார்களும். தமிழ்மறை ஒலிசேர் - தமிழ்மறையின் ஒலிகளைக் கேட்கிற. (௫)

373. ஆதரம் பெருகி அவ்விறை கோயில்
ஆக்கினுய் செட்டிநா டதனில்
காதலோ டிறையின் பொன்னடி கலக்கக்
கருதினுய் பணிமுடிந் திடலும்
போதமா ருணர்வால் பொருளிலா வுடலைப்
புதுவழி விடுத்துநீ விரைந்து
சாதலில் லாத தனிப்பெருந் தலைவன்
தளிரடி கலந்தனை மகிழ்ந்தே.

(அ - ரை.) ஆதரம் - அன்பு. போதமார் உணர்வு - மெய்யறிவு. தனிப்பெருந்தலைவன் - இறைவன். (௬)

## ௧௨௨. செ. வேங்கடராமச் செட்டியார்

[இவர் போளூர் தாலுகாவிலுள்ள வில்வாரணியில் 1913ஆம் ஆண்டிற் பிறந்தார். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றுத் தேறினுர். தமிழாசிரியராகப் பணிபுரிகிருர். புனையா ஓவியம், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், நக்கீரர் வாக்கும் நோக்கும் என்பன இவர் எழுதிய நூல்கள்.]

[மு. மாணிக்கம் என்பவர் காலமானபோது பாடியன.]

374. அமைதியை எங்குக் காண்பேன்
அன்பினை யாண்டுக் காண்பேன்
அமைவுறப் பன்னுல் ஆயும்
ஆர்வத்தை எங்குக் காண்பேன்

தமிழ்என துயிர்என் றுன்னும்
தகுதியை யார்பால் காண்பேன்
தமிழ்மனம் உறுமா ணிக்கம்
தரையிடை மறைந்த தாலோ.

(அ - ரை.) பன்னூல் - பல நூல்கள். ஆர்வம் - பேரன்பு. உன்னும் - என்னும். (க)

375. யாண்டுதான் ஒளித்த தோநின்
இணையிலாத் தமிழ்மேல் ஆர்வம்
யாண்டுசென் றொளித்த தோநின்
இனியசொற் பொழிவின் ஆற்றல்
யாண்டுசென் றுற்ற தோநின்
இன்னிசைப் பாட லோசை
யாண்டுசென் றுற்ற தோநின்
இன்தமிழ் ஆடல் ஆசை.

(அ - ரை.) யாண்டு - எவ்விடம்? இன்தமிழ் - இனியதமிழ். (உ)

## கஉ௫. ம. அரங்கநாதன்

[இவர் சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலேயுள்ள உரத்த நாட்டில் 1918ஆம் ஆண்டிற் பிறந்தார். ந. மு. வேங்கடசாமி நாட்டார் முதலிய நல்லறிஞர்களோடு பழகித் தமிழ்ப்புலமை பெற்றுர். ஆசிரியராகப் பணிபுரிந்துகொண் டிருக்கிருர். ஈத்துவக்கும் இன்பம், முத்தையனுக்கு வழிபிறந்தது, வள்ளுவர் பேசுகிருர் முதலியன இவர் எழுதிய நூல்கள்.]

[ந. மு. வேங்கடசாமி நாட்டாரைப் போற்றிப் பாடியன.]

376. கண்ணுடித் தனியழகு கச்சைபுனே
கவின்திலகம் களிக்குஞ் செம்மை

வெண்ணீற்றின் நுதலழகு விரலுருட்டும்
மணியழகு விதிர்த்து நால்வர்
பண்மிழற்றும் நாவழகு பார்த்திருந்தேம்
பவந்தீர்த்த பண்பன் எங்கள்
நன்மைவேங் கடசாமி நாட்டாரெம்
மையர்திரு நறுந்தாள் போற்றி

(அ - ரை.) *கண்ணடித் தனியழகு - மூக்கிலணிந்துள்ள கண்ணடியின் அழகு. விதிர்த்து - அசைத்து. மிழற்றும்-பாடும். பவம் - பிறப்பு.* (க)

377. தேவாரம் வாசகம்நல் திருவருட்பா
அநுபூதித் தேனை மாந்திப்
பூவாரும் பொழில்சூழப் பொன்னிதரு
குடமுருட்டிப் புறத்தே சான்றோர்
நாவாரப் புகழ்பாட நம்முருகன்
அருளுருவாய் நயந்தான் கோயில்
பாவாரும் வேங்கடப்பேர் நாட்டாரெம்
ஐயர்திருப் பாதம் போற்றி.

(அ - ரை.) *அநுபூதி - கந்தரநுபூதி. மாந்தி - உண்டு பொன்னி - காவிரி. பாவாரும் - பாக்களைப் பாடும்.* (உ)

[செந்தமிழைப் பற்றிப் பாடியது.]

378. செந்தமிழே உயிர்ப்பாகும் செந்தமிழே
வாழ்க்கைநெறிச் செம்மை காட்டும்
செந்தமிழே தமிழ்க்குடியைச் சீராக்கும்
கலப்பில்லா தியங்க வல்ல
செந்தமிழே தன்மதிப்பும் தனிச்சிறப்பும்
தமிழ்நாட்டில் செழிக்கச் செய்யும்
செந்தமிழே நலமெல்லாம் உலகையதன்
வழியிழுத்துத் திருத்து வோமே.

*(அ - ரை.) உயிர்ப்பு - மூக்சுக்காற்று. கலப்பில்லாது - பிறமொழியின் சேர்க்கையில்லாமல். இயங்கவல்ல - வழங்கக் கூடிய.* (ரு)

[திருக்குறளைப் பற்றிப் பாடியது.]

**379.** சாதியெனும் புயல்வென்று சமயமெனும்
பாறையினைத் தாண்டி முட்டி
மோதுகின்ற இனச்சுரு முதுகரிந்து
நாட்டெல்லைச் சுழியில் தப்பித்
தீதகன்ற அமைதிநிலை கொள்ளவுளங்
கொண்டீரே உலகீர் வம்மின்
கோதகன்ற தமிழர்திருக் குறட்கப்பல்
ஏறுங்கள் குறைவி ராதே.

*(அ - ரை.) இனச்சுறு - கூட்டமான சுறுமீன். வம்மின் - வாருங்கள். கோதகன்ற - குற்றமற்ற. குறட்கப்பல் - திருக்குறளாகிய கப்பலில்.* (ச)

## கஉச. க. ரா. கலியாணராமன், *பி. ஏ.*, ('மகரம்')

[இவர் வடாற்காடு மாவட்டத்தில் உள்ள கேட்டவரம்பாளையம் என்னும் ஊரில் இராதாகிருட்டிண சாத்திரியார் என்பவருடைய அருமைப் புதல்வராக 1919-ஆம் ஆண்டிற் பிறந்தார். லயோலா கல்லூரியில் கல்வி கற்றுப் பி. ஏ. பட்டம் பெற்றார். தமிழினிடத்தும் ஆர்வங் கொண்டு தமிழ்ப் புலமையும் பெற்றார். 'தாழம்பூ', 'ஆதியும் அந்தமும்', 'வெற்றிதரும் வெளி நாட்டுக் கொள்கை', 'யார் அவர்?', 'எங்கும் இருப்பவர்' என்பன இவர் எழுதிய நூல்கள்.]

["புற்றில் வாளரவு மஞ்சேன்" என்னுந் திருவாசகப் பாடலைப்போல் அண்ணாமலையார்மீது பாடியன.]

**380.** வாளொடு வேலு மஞ்சேன் வார்சிலை வாளி அஞ்சேன்
தேளொடு பாம்பு மஞ்சேன் தீயொடு ஆழி அஞ்சேன்

ஆளுடை அண்ணல் அன்று மலையன்பால் அன்புசூழாக்
கேளிலா தவரைக் காணில் கிடுகிடுத் தஞ்சு வேனே.

(அ - ரை.) வார்சிலை - நீண்டவில். வாளி - கணை. கேள் - உறவு. (க)

381. இடியொடு புயலை யஞ்சேன் ஏறுடன் கரியை அஞ்சேன்
துடியிடை மகளிர் வீசும் துணைவிழி வாளுக் கஞ்சேன்
கடிகமழ் கொன்றை சூடும் கருணையான் அருணை நாதன்
அடியிணை போற்று தாரை அனுதினம் அஞ்சு வேனே.

(அ - ரை.) ஏறு - காளை. கரி - யானை. துடியிடை - உடுக்கையைப் போன்ற இடை. கடிகமழ் - மணம் வீசும். (உ)

[தலைவி கூற்றாகப் பாடியன.]

382. பாலுங் கசந்து படுக்கையும் நொந்துறுத்தத்
தோலும் எலும்புமாய்த் தோன்றுநான்—ஆலந்தை
உண்டுயிரை ஓட்டலர்ம் என்றால் அதுவுமவர்
கண்டத் தடைக்கலமாங் காண்.

(அ - ரை.) ஆலத்தை - நஞ்சை. கண்டத்தடைக்கலமாம் - கழுத்தினிடத்திலே அடைக்கப்பட்டதாயிற்று. (ங)

383. இடந்தருவார் என்றும் இனியதலை ஏற்றி
நடம்புரிவார் என்றும்நான் நம்பி—மடம்புகுதக்
காதலித்தேன் இன்றெனது காதல் கருகமனம்
பேதலித்தேன் என்செய்வேன் பேசு.

(அ - ரை.) இடந்தருவார் - இடப்பாகத்தைக் கொடுப்பார். தலையேற்றி - கங்கையைத் தலைமீது கொண்டாற்போற்கொண்டு. நடம்புரிவார் - கூத்தாடுவார். மடம்புகுத - அறியாமையுண்டாக. பேதலித்தேன் - மாறுபட்டேன். (ச)

[அம்மானைப் பாட்டாகப் பாடியது.]

384. நிலவுதவழ் நீள்சடையில் நீரணிந்த சோணேசர்
அலைகடலில் அன்றுவந்த ஆலுண்டார் அம்மானை

அலைகடலில் அன்றுவந்த ஆலுண்டா ராமாயின்
தலைமயங்கி யேசற்றுத் தளர்ந்தாரோ அம்மானை
மலைமருந்து வலமுள்ளார் மயங்குவரோ அம்மானை.

(அ - ரை.) நிலவு - திங்கள். நீர்அணிந்த - கங்கையை அணிந்த. சோணேசர் - சிவபெருமான். ஆல் - நஞ்சு. மலை மருந்து - இமயமலையில் தோன்றிய அமுதத்தை யொத்த மலை மகள். (௫)

[கூடந்தாழ்வாரம் என்று அமையக் கொண்டு கூட்டாகப் பாடியது.]

385. புள்ளினங்கள் வாழுமிடம் பூச்சி களிலொன்று
பள்ளிகொண்டான் பாற்கடல்மேல் பாருண்டான்—
[உள்ளிநைந்
தாடுவார் ஐஞ்சிரனுர் ஆனனத்து மேலுளதும்
கூடந்தாழ் வாரமெனக் கூறு.

(அ - ரை.) புள்ளினங்கள் வாழுமிடம் கூடு. பூச்சிகளில் ஒன்று அந்து. பாருண்டான் - ஆழ்வார். ஆனனத்து மேலுளது, அம்; எனப் பிரித்துக் கூட்டுக. (௬)

386. காலன் வருங்காலம் கண்டத்துக் காட்டுவதும்
மேலிருந்து வீழ்வதுவும் மேதினியில்—வேலோவென்
ஐயமுறுங் கண்ணுய் குறும்பாதை அம்புதலை
ஐயஞ்சந் தேகமென ஆற்று.

(அ - ரை.) காலன் வருங்காலம் கண்டத்துக்கட்டுவது, ஐ - கோழை. மேலிருந்து வீழ்வது அம்-நீர். குறும்பாதை-சந்து. அம்பு - ஏ. தலை - கம். (௭)

## ௩௨௫. நல்லை. அ. இளங்கோவன்

[இவர் பாண்டிவள நாட்டில் சாத்தூர் வட்டத்தில் நல்லை என வழங்கும் நல்லமுத்தன் பட்டியில் 1920ஆம் ஆண்டிற் பிறந்தார். ஆசிரியப் பயிற்சி பெற்று ஆசிரியராகத் தொழில் புரிந்துகொண் டிருக்கிருர். தமி

ழிடத்தில் மிகுந்த பற்றுக்கொண்டு நன்ருகத் தமிழ் பயின்று புலமைத் திறம்பெற்று விளங்குகிருர். "குழந்தை உள்ளம்", "மலராத வாழ்வு" என்பன இவருடைய நூல்கள். அறிஞர்கள் இவருக்குத் "தமிழ்ப் பேரன்பன்" என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கியிருக்கிருர்கள்.]

[மறைமலை யடிகள் மறைந்த காலத்தில் பாடிய இரங்கற் பாக்கள்.]

387. தமிழ்மொழியின் கொழுகொம்பே தமிழ்மக்கள் தம்புகழே
தமிழ்நாட்டின் பேரொளியே தாரணியின் தமிழ்ச்சுடரே
தமிழ்மொழிதன் கொழுகொம்பும் தமிழ்மக்கள் தம்புகழும்
தமிழ்நாடு தன்னெளியும் தாமிழக்க மறைந்தாயே.

(அ - ரை.) *தாரணி - உலகம். தமிழ்ச்சுடர் - தமிழ்ஒளி.* (க)

388. மறைமலையே மறைமலையே மதிமலையே மாத்தமிழின்
நிறைமலையே நெறிமலையே நீண்டபுகழ்ப் பெருமலையே
தறைமீது தமிழ்மொழிதன் தனிவளர்ச்சி காணுத
குறைதவிர்த்துக் காத்ததமிழ்க் கொண்டலே
[குளிர்மலையே.

(அ - ரை.) *மறைமலையே - மறைமலையென்னும் பெயரையுடையவனே! மறைமலையே - மறைநூல்களை மிகுதியாக உணர்ந்தவனே! தறைமீது - உலகத்தின்மீது. கொண்டல்-முகில்.* (உ)

389. தனித்தமிழை வளர்த்துயர்த்தித் தமிழ்மொழியும்
[தமிழகமும்
இனித்தரையில் எந்நாளும் இழிவெய்தா வகைசெய்தாய்
கனித்தமிழின் காவலனே களஞ்சியமே கலைமலையே
இனித்தமிழர் உன்னிழப்பை ஈடுசெய்வ தெப்படியோ?

(அ - ரை.) *கனித்தமிழ் - கன்னித்தமிழ்; அழியாத தமிழ். களஞ்சியமே - தமிழ்க் களஞ்சியமே.* (௩)

390. தந்தைதனைத் தாமிழந்த தனயர்தமைப் போலானேம்
சந்திரனைச் சூரியனைத் தாமிழந்த வானுனேம்
சொந்தவுயிர் இழந்துவிட்ட துரிசுடலே யாகிவிட்டோம்
எந்தவிதம் இனிநாங்கள் இறுமாந்து வாழ்ந்திடுவோம்.

(அ - ரை.) *துரிசுடல் - குற்றம் பொருந்திய உடல்.* (ச)

[சோமசுந்தர பாரதியார் காலமானபோது பாடிய பாடல்கள்.]

391. கன்னித் தமிழ்மொழியின் காவலே நாவலனே
பன்னுந் தமிழ்க்கினிய பாவலனே பாரதியே
கன்னற் கவிச்சோம சுந்தரனே காலனுக்குத்
தின்னத் தெவிட்டாத தெள்ளமுத மானுயோ?

(அ - ரை.) *பன்னும் - ஆராய்ச்சி செய்யும். தெள்ளமுதம்- தெளிந்த அமுது.* (ரு)

392. தன்னுணர்வு பெற்றுள்ளோம் தந்தையே தாயகத்தில்
இன்னுமயல் மொழியாட்சி எப்படியும் ஏறவிடோம்
இன்னுயிரும் தந்துதமிழ் காத்திருப்போம் எந்தையே
உன்னருமை மக்களெமை ஊக்குவிக்க வாராயே.

(அ - ரை.) *அயல்மொழியாட்சி-பிறமொழிகளின் ஆளுகை.* (சா)

393. வாராயோ வந்துனது வண்ணமுகக் காட்சிதனைத்
தாராயோ தந்தெம்மைத் தாவியணைத் தின்னருட்கண்
பாராயோ பார்த்தெமக்குப் பாவமுதம் ஊட்டாயோ
தீராயோ வெந்துயரம் தீர்த்துய்வு காட்டாயோ?

(அ - ரை.) *வண்ணமுகக்காட்சி-அழகிய திருமுகக்காட்சி. உய்வுகாட்டாயோ-உய்யும் நெறியைக் காட்டமாட்டாயோ?* (எ)

[ஆசிரியத் தொழிலின் அவலநிலை குறித்துப் பாடியன ]

394. அறிவிருக்கும் அதைவிருத்தி ஆக்கித் தேக்கி
அண்டிவரும் மாணவருக் களிக்கும் நல்ல
திறமிருக்குஞ் சிறுவர்களை அன்பால் ஈர்க்கும்
செயலிருக்கும் சிந்தையெலாம் அன்பி ருக்கும்
மறமிருக்கும் மடக்கியினை யாரை யாள
மனமிருக்கும் வருமிடைஞ்சல் மறந்து வாழ
அறமிருக்கும் அருளிருக்கும் இருளி ருக்கும்
ஆசிரியர் வாழ்க்கையிலே வளர்ந்தானில்லை.

(அ - ரை.) *ஈர்க்கும் - இழுக்கும். மறம் - வீரம்.* (அ)

395. விடுயர விளக்குகிற விளையி ருக்கும்
வியன்கலைகள் விளைத்துவிட விளைவி ருக்கும்
நாடுயர நகருயரச் செய்யுஞ் சேவை
நடந்திருக்கும் படிந்திருக்கும் வறுமை வாழ்வில்
பாடுயரப் பலன்சிறுக இருக்கும் இங்கே
பாராள்வோர் தங்கள்பரா முகமி ருக்கும்
வாடுமுடல் எலும்பிருக்கும் தோலி ருக்கும்
வளர்ச்சிமட்டும் ஆசிரியர் வாழ்வில் இல்லை.

(அ - ரை.) *வியன்கலைகள் - வியக்கத்தக்க கலைகள். பாடு உயர - உழைப்பு மிகுதியாக. பராமுகம்-பார்க்காத தன்மை.* (கூ)

## கஉஈ. அம்பை. இரா. சங்கரனூர்

[இவர் பாண்டிவள நாட்டில் அம்பாசமுத்திரம் என்னும் ஊரில் 1920ஆம் ஆண்டிற் பிறந்தவர். தமிழ்க் கல்வியை நன்கு கற்றுப் புலமை பெற்றவர். அம்பா சமுத்திரம் மயிலம் முதலிய இடங்களில் தமிழ்த் தொண்டு செய்து, இப்பொழுது சென்னை பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் தமிழ்த் தொண்டு செய்பவர்.]

[வினைப்பயனைக் குறித்துப் பாடியது.]

396. அம்மை வினையின் அமைபவாம் எவ்வினையும்
இம்மை முயற்சியின் எய்தொணு—தம்மின்
இயற்கைப் புலமை இயைவதலா தேலா
செயற்கைப் புலமைத் திறம்.

(அ - ரை) *அம்மை வினையில் - முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகளினல். அமைபவாம் - பொருந்துவனவாம். எவ்வினையும் - எச்செயலும். இம்மை முயற்சியில் - இப்பிறப்பிற் செய்கிற முயற்சியினல். புலமைத்திறம் இயற்கையாக அமைந்திருத்தல்தான் சிறந்தது. கல்வியறிவுச் செயற்கையால் அமைவது அவ்வளவு சிறப்புடைய தன்றென்பது பின்னிரண்டடிக் கருத்து.* (௧)

[தமிழ் மொழிக்குஞ் சிவஞானபாலைய சுவாமிகட்குஞ் சிலேடையாகப் பாடியது]

397. மாணவரை மேவுதலில் மாறுபடாத் தொன்மையதில்
ஆணவமும் அண்டுவதற் கஞ்சுவதில்—நாணும்
நற்றமிழே நந்தமுடை நல்ஞானி தண்ணருளுக்
கொற்றுமையே உள்ளதனை ஓர்.

(அ-ரை) *மாணவரை-கற்கும் பிள்ளைகளை; மாண் அ வரை-மாட்சிமைப்பட்ட அழகிய மலை. தொன்மை - பழமை.* (௨)

[நான்முகனுக்குஞ் சிவஞானபாலைய சுவாமிகட்குஞ் சிலேடையாகப் பாடியது.]

398. நான்முகமும் ஏத்துதலில் நான்மறையைப் போற்றுதலில்
மேன்மைமிகு மின்றமிழை மேவுதலில்—பான்மையுறெப்
பாலவரும் மேலாகப் பண்புடனே ஏத்திவரும்
பாலயனை மாலயனைப் பார்.

(அ - ரை.) *நான்முகமும்-நான்முகங்களும்; நான்கு திக்குகளும். ஏத்துதலில் - வணங்குதலால். எப்பாலவரும் - எத்திறத்தினரும். பாலயனை - பாலைய சுவாமிகளை. மாலயனை - மால்மகனகிய நான்முகனை.* (௩)

## கஉஎ. மே. நா. முத்துவீரப்பமுடிராச பாவலர்

[இவர் கோவையைச் சேர்ந்த உடுமலைக் கடத்தூரில் 1909ஆம் ஆண்டிற் பிறந்தார். உயர்நிலைப் பள்ளியிற் கல்வி கற்றார். சிறிது காலம் தொடக்கப் பள்ளியில் ஆசிரியராக இருந்தார். பிறகு பற்பல தொழில்களில் ஈடுபட்டார். சமயங் கிடைத்தபோதெல்லாம் தமிழ் மொழியையுங் கற்றுப் புலமை பெற்றார். பசனைப் பாடல்கள், முன்னேற்றப் பாடல்கள், இராமாயண ஒயில் கும்மிப் பாடல்கள், நாட்டுப் பாடல்கள், மதுபானக் கெடுதிப் பாடல்கள் முதலியன இயற்றியுள்ளார்.]

[அன்னக்காவடிச் சாமியார் ஒருவருக்குக் காவடி செய்து கொடுத்தவர்களே உணவு இடாததைப் பார்த்துவிட்டுப் பாடியது.]

**399.** சந்யாசிக் கோரன்னக் காவடிதான் செய்தீந்தார்
அன்னதனி லேமணிகள் ஆர்க்கவே—மின்னுமணிச்
சத்தங்கேட் டுக்கதவைச் சார்த்திக்கொள் வோமென்று
வைத்துத்தந் தாரோ மணி.

(அ - ரை.) *ஆர்க்க - அடித்தொலிக்க. சத்தங்கேட்டு - அன்னக்காவடி வரும்போது அதனில் கட்டியுள்ள மணிகள் ஒலிப்பதைக் கேட்டு.* (க)

[மதுர காளிமீது பாடியது.]

**400.** காடில்லை நன்செய்க் கரையில்லை ஏரினைக் கட்டியுழ
மாடில்லை பாலுக்கோ ராடில்லை மைந்தர் மகிழ்ந்திருக்க
வீடில்லை காய்ச்ச விறகில்லை மாமிடி விட்டிருக்க
நாடில்லை யோமதுர காளீ எனக்கு நனியருளே.

(அ - ரை.) *நன்செய்க்கரை - நல்லவயல். மாமிடி-மிகுந்த வறுமை.* (உ)

## கஉஅ. ஆ. சிவலிங்கனார்

[இவர் திருப்பாதிரிப்புலியூருக்கடுத்த புதுவண்டிப் பாளையத்தில் 1922ஆம் ஆண்டில் பிறந்தார். திருப்பா திரிப்புலியூர் ஞானியாரடிகளின் மாணவர். திருவை யாறு அரசர் கல்லூரியிற் கல்விபயின்று புலமைப் பட் டம் பெற்றார். திருநெல்வேலி முதலிய விடங்களில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து, 1942 முதல் மயிலம் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளராகத் தொண்டாற்றி வருகின்றார். அகத்தியர்கள், கட்டுரைப் பூங்கா, பெரிய புராணப் பெண்மணிகள், புறநானூற்றுக் கட்டுரைகள், சிலம்பு மணிகள் முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[செல்லாக் காசை நல்ல காசுகளோடு சேர்த்துச் செல்ல வைத்தபோது பாடியது.]

401. செல்லாக் காசுஞ் செலுமன்றே
செல்லும் அவைக ளுடன்சேர்ந்தால்
செல்லா அடியே னும்நலமே
சேரப் பெறுவேன் உயர்வுறுவேன்
நல்லார் அடியார் உடன்கலந்தே
நாடி நின்னை வலம்வருவேன்
பொல்லா வினைதீர் குளங்களமை
புகழ்மா மயில இளங்கோவே.

(அ - ரை.) *செல்லா அடியேன் - பெரியோர்கள் கூட்டத் திலே செல்லப்பெறாத அடியேன். பொல்லா வினைதீர் குளங் கள் - புனிதநீர்த் தடாகங்கள். இளங்கோ - இளங்கடவுளாகிய முருகன்.* (க)

[பசியால் அழுத குழந்தை வாயில் விரலை வைத் துச் சுவைத்துப் பசியை மறந்திருந்ததைக் கண்டு பாடியது.]

402. வாயில் விரலைச் சுவைத்ததனுல்
வயிற்றுப் பசியை மறந்திட்ட

சேயின் நிலையில் எந்நாளும்
சிறிய இன்பந் துணையாக
நோயை மறந்து திரிவேனை
நொடியா வண்ணம் அருளுகவே
வாயை வாழ்த்த வைத்தவனே
வளமார் மயிலைப் பெருமானே.

(அ - ரை.) சேயின் நிலையில் - குழந்தையின் நிலைமையில். நோயை - பிறவிப்பிணியை. நொடியா வண்ணம் - அழிந்து போகாதபடி. (உ)

[தழை என்னும் அகப்பொருள் துறையில் பல காய்கள் வருமாறு பாடப்பட்டது.]

403. கடலைக் காய்தரு மாதுளங்காய்
காம னார்மலர்ச் சீர்விளங்காய்
உடலைச் சேர்வே லங்காயோன்
ஒருவ வேப்பங் காயோடு
படலை தந்தாய் தேங்காய்நீ
பயனார் மயிலை மாங்காயா
நடலைத் தோகை நகர்வாழும்
நாதன் அருளார் நல்லோனே.

(அ - ரை.) கடலைக்காய்தரு - கடலைச்சினக்கின்ற. மாதுளங்காய் - மாதின் உள்ளத்தை வருத்துகின்ற. மலர்ச்சீர் விளங்காய் - மலர்க்கணையின் தன்மையை அறியாய். படலை - பூமாலை. தேங்காய் - தங்கமாட்டாய். தோகைநகர் - மயிலமலை. (௩)

[அப்பத்தின் பொருட்டுப் போரிட்ட மக்களை முதுகிற் புடைத்த தாயின் கூற்றாகப் பாடியது.]

404. கேளப்பா இன்றுநிகழ் கேலிக்கூத் தாமதைச்செவ்
வேளப்பா! என்மக்கள் வேண்டியுண—நாளப்பம்
வாங்கியன போதாமல் வம்பிட்டார் தம்முதுகில்
வாங்கினவே என்கைகள் வந்து.

(அ - ரை.) செவ்வேள் அப்பா - முருகனுகிய தந்தையே! வம்பு - சண்டை. வாங்கின - அடித்தன. (௪)

[மயிலம் முருகன் கோயிலில் இருந்த பெண் மயில் ஒன்று ஆண் மயில் இல்லாமலே முட்டையிட அதனைக் கண்டு மக்கள் பலவாறு பேசியபோது பாடியது.]

**405.** நின்கோயிற் கெனவிடுத்த நீலமயிற்
பெடையொன்று நினைவாண் இன்றித்
தன்பாலே மிகவருந்தித் தானிடுமத்
தனிமுட்டை தனைப்போல் நாளும்
நின்பாலே பெறுமருளும் நீள்நிலத்தார்
நிகழ்த்துவரே நினைந்த வாறே
அன்பாலே பலர்வணங்கி நல்லருள்சேர்
அணிமயிலம் அமர்ந்த வாழ்வே.

(அ - ரை.) நீலமயில் பெடை-நீலநிறம் பொருந்திய பெண் மயில். அணிமயிலம் - அழகிய மயிலமலை. (ரு)

## கஉக. வி. துரைசாமி

[இவர் திருச்சி மாவட்டத்தில் உள்ள சோபன புரம் என்னும் ஊரில் 1923ஆம் ஆண்டிற் பிறந்தார். ஆங்கிலத்தில் பி. ஏ., வரை கல்வி கற்ற இவர் தமிழ் மொழியையும் நன்கு கற்றுப் புலமைப் பட்டம் பெற்றுத் தமிழாசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறுர். கண்ணகி விருத்தம், சம்பந்தர் வெண்பா, முருகாஞ்சலி, முதற்காதல், அமுத கலசம் முதலியன இவரியற்றிய நூல்கள்.]

[கதிரவன் மறையுங் காட்சியைக் குறித்துப் பாடியன.]

**406.** அந்தி மாமகள் உமிழுஞ் செங்கனி
அதர நீர்பரந் தெங்கணும்

சிந்து ரச்சிவப் பாய வானகச்
சேற்றி லேயொளி யூற்றியே
பந்தெ னும்படி வந்து மேற்றிசை
பாயுஞ் செங்கதிர்ப் பரிதியே
இந்த வேளையில் ஆழி மூழ்கிடும்
எண்ணந் தோன்றிய தேன்சொலாய்?

(அ - ரை.) *அந்திமாமகள் - மாலைக்காலமாகிய பெண். அதரநீர் - செவ்விதழ்நீர். சிந்துரச்சிவப்பு - வெண்மை கலந்த சிவப்பு. வானகச் சேற்றில் - விண்ணகமாகிய சேற்றிடத்தில். ஆழி - கடல்.* (௧)

407. பொழுதுக் கோருடை களையுங் காலமாம்
பொற்பின் செல்வி உமிழ்ந்திடும்
பழுது பட்டவாய் எச்சில் பட்டுடற்
பாக மெங்குஞ் சிவந்ததால்
முழுகி ஆழியில் தூய்மை பெற்றிட
முணுமு ணுப்புடன் விழ்கிருய்
கழுவி நீரினில் களைய லாவதோ
கதிர வாகருத் தென்னவோ?

(அ - ரை.) *பொற்பின் செல்வி - அழகுப்பெண். முழுகி ஆழியில் - கடலில் முழுகி.* (உ)

408. வைக றைப்பொழு தென்னும் நங்கையின்
வண்ண மேனி தழுவியே
மெய்க லந்திடு வேளை நின்னுடல்
மேய செந்நிறம் மாயுமோ?
செய்க லாமதிச் செல்வன் வானிலே
செம்மை யாட்சி செலுத்தியே
நையும் மீனின நாய கிக்குழு
வோடு நாடிட விழ்வையோ?

(அ - ரை.) வைகறைப் பொழுதென்னும் நங்கை - விடியற் காலம் என்னும் பெண். வண்ணமேனி - அழகிய வுடல். மெய் கலந்திடு - உடலைத் தழுவுகிற. மேய - பொருந்திய. கலாமதிச் செல்வன் - கலைகளையுடைய திங்கட்செல்வன். மீன் இன நாய கிச்குழு - உடுக்குலங்களாகிய தலைவிக் கூட்டம். (௩)

## கருO. கண்ணதாசன்

[இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள சிறுகூடற் பட்டியில் 1926ஆம் ஆண்டிற் பிறந்தவர். ஈழத்து ராணி, ஆயிரம் தீவு அங்கயற்கண்ணி, கண்ணதாசன் கவிதைகள் முதலியன இவருடைய நூல்கள்.]

[திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் அறுப தாண்டு நிறைவின்போது பாடியது.]

**409.** அறுபதைப் பிடிக்க வந்த
 அண்ணலே! தமிழர் வாழ்க்கை
அறுவதைத் தடுக்க உங்கள்
 அறுபது வயதுந் தந்தீர்
உறுவது பெருமை செல்வம்
 உலகெலாம் புகழும் பேறு
பெறுவது சுவைக ளாகப்
 பெருகிநீர் வாழ்க பன்னுள்.

(அ - ரை.) அறுபதை - அறுபதாண்டுகளை. அறுவதை - ஒழிவதை. (க)

## கருக. சே. கனகசபை பி. ஏ.

[இவர் பாண்டிவள நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தில் கண்டவராயன்பட்டி என்னும் ஊரில் 1934ஆம் ஆண்டிற் பிறந்தவர். மதுரைத் தியாகராயர் கல்லூரி, காரைசகுடி அழகப்பா கல்லூரி ஆகியவை களில் பி. ஏ.வரை கல்வி கற்றவர். தமிழில் மிகுந்த

பற்றும் உறுதியுங் கொண்டு அதனை நன்கு கற்றுத் தமிழ்க் கவிஞராக விளங்குபவர். "கவிதைக் குமரி," "நாளைய உலகம்" முதலியன இவருடைய நூல்கள்.]

[திருமணம் ஒன்றில் மணமகனுக்கு அறிவுரையாகக் கூறிய வாழ்த்துரைப் பாடல்கள்.]

410. திருமணம் என்னுஞ் செய்தி
சிந்தையில் யார்க்கும் இன்பம்
தருவதும் உண்டாம் ஈது
தரணியில் இயற்கை யாகும்
இருவுளம் ஒன்று பட்டே
இப்புவி அறங்க ளெல்லாம்
அருமையாய்ப் பேணி இன்பம்
அடைவதே இதனின் நோக்காம்.

(அ - ரை.) *தரணியில் - உலகத்தில். இருஉளம்-இரண்டு உள்ளங்கள்.* (க)

411. பூவையா அட்டா இன்பப்
பொருளெனக் கருதி மெத்த
ஆவலோ டவளை இந்நாள்
அணைத்திடத் துடிக்கும் நண்ப
பூவையுன் நினைப்புப் போலப்
பொருள்மட்டும் அல்லள் அன்புப்
பாவையும் ஆவாள் வாழ்க்கைப்
பாதையில் துணையும் ஆவாள்.

(அ - ரை.) *பூவை - பெண். மெத்த - மிகுந்த. அன்புப் பாவை - அன்பு செய்தற்குரிய பாவை போன்ற பெண்.* (உ)

412. வாழ்வினில் தனிய னாக
வந்தநீ இற்றை நாளில்
வேல்விழி கரத்தைப் பற்றி
மெத்தவும் மகிழு கின்றாய்

வாழ்விலும் தாழ்வி லும்உன்
மனத்தகத் துணர்வில் அந்த
ஆழ்கடல் முத்தே அல்லால்
யாவரே பங்கு கொள்வார் ?

(அ - ரை.) தனியன்-தனிமையுடையவன். இற்றை நாளில்-இன்றைக்கு. வேல்விழி - வேலைப்போன்ற விழியை உடைய பெண்; (கூ)

413. சிற்றின்பப் பதுமை என்று
சிற்றிடை யாளை எண்ணில்
மற்றுன்றன் வாழ்க்கை வெம்மை
வழங்கிடும் பாலை யொக்கும்
குற்றம்நீ புரிந்தாய் அன்புக்
கொடியுனைக் கொழுகொம் பாகப்
பற்றினும் பின்னிப் பின்னிப்
பரவசங் கொள்ள மாட்டாள்.

(அ - ரை.) பதுமை - பொம்மை. வெம்மை - சூடு. பாலை யொக்கும் - பாலை நிலத்தைப் போன்றதாகும். கொழுகொம்பு - கொடிகள் பற்றிப்படருதற்குக் காரணமாக உள்ள கொம்பு. பரவசம் - மகிழ்ச்சி. (சு)

414. ஆதலால் அவளை நீயே
அன்பினல் ஆள்க நண்ப
தீதிலா அன்பில் இன்பத்
தேனமு தூறிப் பொங்கும்
கோதுள வனப்பு மாய்ந்து
கோல்கொண்டு நடக்கும் நாளும்
மாதுக்கும் உனக்கும் இந்த
வையகம் வானுய்த் தோன்றும்.

(அ - ரை.) கோதுள - குற்றம் பொருந்தியதான. வனப்பு-அழகு. கோல்கொண்டு - கையில் தடிபிடித்து. வையகம் - மண்ணுலகம். வான் - விண்ணுலகம். (எ)

## ௯௰௨. தனபால பதுமாவதி அம்மையார்

[சென்னைமா நகரில் 1896ஆம் ஆண்டிற் பிறந்தவர். கிருட்டிணவேணி யம்மையார்க்குத் தங்கையார். தம் தமக்கையாரோடு தமிழ்கற்றுப் புலமைபெற்றார். ஊதியமில்லாமல் தமிழாசிரியையாகப் பணிபுரிந்தார். பெரியாழ்வார் பிள்ளைத் தமிழ், வசந்தையார், மாதவியார், மலையா நாடு, இசைச் செல்வியார், அறச் செல்வியார், ஆண்டாள் முதலியன அம்மையாருடைய நூல்கள்.

[தந்தையார் காலமானபோது பாடியன.]

415. கல்விபொறை அருளடக்கம் கருணையுடன் ஈகைதயை
நல்லொழுக்கம் இவைபொதிந்து நல்வழியில் யாமொழுக
பல்கலைகள் எமக்களித்த பண்புடைய எந்தாயோ! [ப்
வல்வினையேம் உமைப்பிரிந்து வாழ்ந்திடுதல் எவ்வாறே?

(அ - ரை.) *பல்கலைகள் - பலவகையான நூற்பயிற்சிகள். வல்வினையேம் - கொடிய வினையை உடையேம்.* (௧)

416. உயர்கல்வி பௌத்திரர்க்கிங் குதவியவர் கீர்த்தியுடன்
உயர்பட்ட மேற்கநிதம் ஊக்கமுடன் உழைத்திட்ட
அயர்வில்லா எந்தாய்நீ அவர்உயர்வைப் பாராமுன்
மயர்வில்லா நின்மதியை மயக்கினரோ வானோர்கள்.

(அ - ரை.) *பௌத்திரர் - பேரர்கள். அயர்வு - காரியத் தளர்ச்சி. மயர்வு - மயங்குதல்.* (௨)

417. நற்பொருளைத் தேடியடை நாட்டவர்தஞ் செயல்போன்று
அற்புதநற் குணக்குன்றே அண்டினரோ தேவருனை
நற்பதங்கள் ஈந்தருள நாரணனும் உமையழைத்துக்
கற்பகத்தின் நிழலிருத்திக் கனபணிகள் இயற்றினனோ?

(அ - ரை.) *அண்டினரோ - நெருங்கினார்களோ. கனபணிகள் - சிறப்பான பணிவிடைகள்.* (௩)

418. என்னுயிரும் உன்னுடலும் ஒன்றெனவே பல்பகலும்
பன்னியநீர் இன்னுயிரைப் பரித்தகன்ற தென்கருதி
என்னன்னை உமைப்பிரிந்து உயிர்வாழ்வ தெங்ஙனமோ
அன்னைநிதம் அரற்றிடுதல் அறியாயோ ஐயாவே.

(அ - ரை.) பன்னிய - கூறிய. பரித்தகன்றது - பிரித்துக்கொண்டு சென்றது. அரற்றிடுதல் - அலறுதல். (ச)

## கஙங. கிருட்டிணவேணி அம்மையார்

[சென்னைமா நகரில் 1888ஆம் ஆண்டில் பிறந்தவர். லோயர் செகண்டரிவரை கல்விகற்று இல்லறத்தில் புகுந்த அம்மையார் சில ஆண்டுகளில் கணவரையிழந்து கைம்மையானார். பிறகு தமிழை நன்கு கற்கத் தொடங்கித் தமிழ்ப்புலமை பெற்றார். இருபத்தாறு ஆண்டுகள்வரை தமிழாசிரியையாகப் பணிபுரிந்தார். கோதையார், வைதேகியார், வீரக் கற்பின் வெற்றி, பறம்பு நாடும் பாரி மகளிரும், பெரியாழ்வார் பெண்கொடி முதலியன அம்மையார் இயற்றிய நூல்கள்.]

[தந்தையார் காலமானபோது பாடியன.]

419. கருணையுடன் ஈன்றென்னைக் கண்ணிமைபோல் வளர்த்
[தெடுத்தென்
இருளகலக் கல்விநலன் இசைவுடனே தந்துண்மைப்
பொருளு ணர்ந்து நல்வழியான் புகவேண்டிப் பன்முறை
தெருளீயுந் தந்தாய்நீ தேவரூர் சென்றனையே. [யும்

(அ - ரை.) இருள் - மனவிருளாகிய அறிவின்மை. தெருள் ஈயும் - அறிவுடைமையைக் கொடுக்கும். (க)

420. தருமமுடன் கருணைபொறை தண்ணளிநல்
[லொழுக்கமுமே
உருவெடுத்து வந்தவென உயர்ந்தோர்கள் புகழ்ந்தேத்த

திருவனைய மனைவியுடன் தேடிப்பல் விருந்தோம்பித்
தருமனெனப் பேர்படைத்துத் தாரணியில்
[வாழ்ந்தனையே.

(அ - ரை.) தண்ணளி - குளிர்ந்த அருள். திருவனைய - திருமகளைப்போன்ற. தருமன் - அறத்தைப் புரிபவன். (உ)

421. தாங்கரிய துயரில்யான் தவித்திடுநாள் நுண்ணறிவோய்
தீங்கின்றி என்வாழ்க்கை சீர்பெறற்கு வழிதேடிப்
பாங்குடனே உலகிற்குப் பணிபுரியும் பெட்பெனக்கே
ஓங்கிடுமா றுணர்வளித்த உனைப்போன்றார் யாருளரே.

(அ - ரை.) பெட்பு - தகுதி. ஓங்கிடுமாறு உணர்வளித்த - ஓங்குமாறு கல்வியறிவைக் கொடுத்த. (௩)

422. உறவோர்கள் குழுவதனில் உயர்விளக்காய் நின்றதுபோல்
மறமறுத்த சூரிகளுள் மணிவிளக்காய் இலங்குதற்குத்
திறமுடனே வைகுந்தம் சென்றனையே தந்தாய்நீ
அறவுரைகள் எமக்குரைப்பார் ஆருளரே இவ்வுலகில்.

(அ - ரை.) உறவோர்கள் - உறவினர்கள். குழு-கூட்டம் மறம் - தீவினை. சூரிகள் - வைணவ சமயவீடு பேற்றையடைந்தவர்கள். (௪)

## கடச. சொ. சிங்காரவேலன்

[இவர் தஞ்சை மாவட்டத்தில் திருச்சிற்றம்பலம் என்னுஞ் சிற்றூரில் 1933ஆம் ஆண்டிற் பிறந்தார். புலவர் வகுப்பில் முதன்மையாகத் தேறி ஆயிர ரூபா பரிசு பெற்றவர். தருமையாதீனப் பல்கலைக் கழகக் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றுகிறார். எட்டிகுடி முருகன்அந்தாதி, மருதநாட்டுமங்கை, அன்பின் வெற்றி, புதுமைக்கு, தமிழ்விருந்து முதலியன இவருடைய நூல்கள்.]

15

[கிருபானந்தவாரியாரைப் பாராட்டிப் பாடியது.]

423. முருகா எனமொழிந்தே மூதுலக மெங்கும்
தருபா விரிவுரைகள் தம்மைக்—கிருபானந்
தப்பெரியோன் போலே தருவாரார் அன்னேன்சீர்
செப்புதலு மாமோ சிறந்து.

(அ - ரை.) *மூதுலகம் - பழமையானவுலகம். தருபா விரிவுரைகள் - நன்மையைத் தருகிற பாடல்களுக்கு விளக்கமான சொற்பொழிவுகள்.* (க)

[காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளிடம் திருக்கோவையார் கேட்டு எழுதியது.]

424. திருக்கோவை யாரோர்நூல் தேவையடி யேற்கு
மருக்கிளருங் கொன்றை மலரோய்—உருக்கிளரும்
தேவே அருணந்தித் தேசிகனே நின்தாளிற்
பாவே புனைந்தேனைப் பார்.

(அ - ரை.) *மருக்கிளரும் - மணம் வெளிப்பட்டு வீசும். கொன்றைமலரோய்-கொன்றை மலரையணிந்த சிவபெருமானைப் போன்றவனே! உருக்கிளரும்-வடிவஞ்சிறந்து விளங்கும்.* (உ)

[கயிலைக் குருமணியின் கனகாபிடேக சமயத்திற் பாடியது.]

425. பொற்கா சநனல் அபிடேகம்
பொருந்தக் கொண்ட புண்ணியனே
அற்கா வியல்பிற் புவியிதனுள்
அன்பே பூண்ட அருங்குரவ
சொற்கா முற்றுத் துதிபாடித்
துலங்க அருளிங் கீகுதியால்
முற்கா லத்தும் முன்னுகும்
முதல்வா கயிலைக் குருமணியே.

(அ - ரை.) அற்கா இயல்பு - குறையாத்தன்மை. சொல்கா முற்று - சொல்லே விரும்பி. துலங்க - விளங்க. (ரு)

[சில ஊர்ப்பெயர்களின் காரணத்தைக் கூறிப் பாடியன.]

மதுரை

426. மருத மரங்கூடும் மாணிழலில் வாழ்ந்தோர்
மருதை எனமொழிந்தார் மாதே—மருதை
மதுரையென இந்நாள் மாறியதா மீதே
மதுரைப் பெயர்பிறந்த மாண்பு.

(அ - ரை.) மருதை - மருதமரங்கள் நிறைந்த இடம். (சு)

திருவல்லிக்கேணி

427. அல்லி எனிற்குமுதம் ஆகுமே கேணியெனும்
சொல்லேக் குளத்துக்குஞ் சொல்வாரே—நல்லறிஞர்
சென்னேச் செழுநகரில் சீர்த்திருவல் லிக்கேணி
பின்னேயித ஞற்பெற்ற பேர்.

(அ - ரை.) கேணி - கிணறு. அல்லிகள் மிகுதியாக இருந்த குளமிருந்த விடம் அல்லிக்கேணி யென்ருயதென்பது கருத்து. (எ)

திருநெல்வேலி

428. நெல்லுங் கரும்பும் நிலத்துக் கணியென்பர்
நெல்விளேவு மிக்க நிலேயுயர்ந்து—பல்விதத்தும்
நற்பொருநை யாற்சிறக்கும் நற்பதியை நெல்வேலிச்
சொற்பெயராச் சொன்னுர் துணிந்து.

(அ - ரை.) பொருநை - தாம்பிரவன்னியாறு. "நெல் லுங்கரும்பும் நிலத்துக் கணியென்ப" என்பது நான் மணிக் கடிகை. (அ)

[இந்தி யெதிர்ப்பைப்பற்றிப் பாடியது.]

429. தமிழுணர்ச்சி யில்லாத் தறுகணரைச் சாடித்
தமிழுணர்ச்சி யாக்கித் தமிழில்—அமிழ்தான

பாட்டுக்கள் பாடிப் படையெடுப்பின் வந்திடுமோ
நாட்டுக்குள் இந்தியென்று நஞ்சு.

(அ - ரை.) நாணார்-வெல்லாதவர். இந்தி-இந்திமொழி.

[எட்டிக்குடி முருகன்மீது பாடியது.]

430. சொற்போர் புரியலாம் சோர்வின்றி யென்றுஞ் [சுகஞ்செழிக்கும்
பொற்போர் குவிக்கலாம் போரெதிர்ந் தோரைப் [புறந்தொலைக்கும்
மற்போர் இயற்றலாம் மன்னனெட் டிக்குடி மாமுருகன்
பொற்பாத பங்கயம் புந்தியெந் நாளும் பொருந்திடினே.

(அ - ரை.) பொற்போர்-பொற்குவியல்; மிகுந்த செல்வம். புறந்தொலைக்கும்-புறமுதுகாட்டி ஓடச் செய்யும். (அ)

## கஉ௫. கி. வா. சகந்நாதன்

[கிருட்டினராயபுரம் என்னும் ஊரில் 1906ஆம் ஆண்டில் பிறந்தவர். பெரும்புலவர். பல நூல்களின் ஆசிரியர்.]

[உ. வே. சா. ஐயரவர்கள் கொடுத்த, "தரனை நினைநெஞ்சம்" என்னும் ஈற்றடியைப் பாடியது.]

431. கொன்றை மலர்மறைத்துக் கோடுயர்ந்த வேம்பலரைத்
துன்ற முடித்த துரையைவெள்ளி—மன்றில்
பரனைஅங் கயற்கண்ணி பங்கனைக்கூ டற்சுந்
தரனை நினைநெஞ் சம்.

(உ - ரை.) கோடு - கிளை. துன்ற - பொருந்த. வெள்ளி மன்றில் பரன் - வெள்ளியம்பலவாணன். கூடல் - மதுரை. (க)

[முருகக் கடவுள் வணக்கமாகப் பாடியது.]

432 சுற்றும் பிறவித் துயர்அறிவாய் நீஅதனை
முற்றும் உணர்ந்தவருள் முன்னவன்யான்—சிற்றுயிர்

செந்தூர் வனமுதலாய்ச் சென்மித் ததுபோதும்
செந்தூர் முருகஅருள் செய்.

(அ - ரை.) *சுற்றும் - மாறி மாறிவரும். சிற்றுயிர் கொள் செந்து - சிறிய உயிர்களாகிய பூச்சி புழு முதலியன. சென் மித்தது - பிறந்தது. செந்தூர் - திருச்செந்தூர்.* (உ)

[''முல்லை என்று எடுத்துச் சண்பகம் என்று முடிக்க வேண்டும் பல பூக்களின் பெயர் வரவேண்டும்'' என்று கூறிச் சுப்பிரமணிய ஐயர் என்பவர் விரும்பியவாறு பாடியது.]

433. முல்லை முறுவல் முளரி திருவதனம்
அல்லில் அலரும் அருங்குவளை—நல்லவிழி
நாடற் கரிய நலத்தாள் இவட்குடலம்
பாடற் பெறுசண் பகம்.

(அ - ரை.) *முறுவல் - பல். முளரி - தாமரை. வதனம் - முகம். அல்லில் - இரவில். நலத்தாள் அழகுடையவள். உடல் - உடல்.* (௩)

[திருநெல்வேலி இலக்கிய சங்கத்தில் பாடிய பாடல்களில் ஒன்று.]

அறுசீராசிரிய விருத்தம்

434. காவியங்கம் பொலிகருணைக் கடல்விளையாட்
டினைச்சுவைகள் கவினப் பெய்தோர்
காவியங்கம் பனைப்போல யாரளித்தார்
அக்கவியைக் காதல் செய்தார்
காவியங்கம் மயிலாடக் கருங்குயில்கள்
இசைபாடக் கவிவண் டார்மங்
காவியங்கம் பலைசெய்யும் பொழில்நெல்லை
இலக்கியசங் கத்தார் அம்மா.

(அ - ரை.) 1. *காவி - நீலோற்பலம். அங்கம் - உடல். கருணைக்கடல் - திருமாலின் கூறுகத்தோன்றிய இராமன்* 2.

சாலேயம் - நூல். பி. சாலியக்கு அம்மயில் - பொழிலில் திரிகின்ற அழகிய மயில். வண்டர் - வண்டு. மங்கா - குறையாத. இயம் - இசைக்கருவியைப்போல. சம்பலே - ஒலி. (௪)

[தனிப்பாடல் கேட்டு எழுதியதற்கு மறுமொழியாக எழுதிய கடிதப்பா.]

435. இனிப்பான மொழிவள்ளி தோள்புணரும்
எழில்முருகன் இருதாள் ஏத்தும்
தனிப்பான்மை உளபுலவீர் வணக்கம்இவண்
நலமஃது சாற்றல் வேண்டும்
தனிப்பாடல் பலஉண்டேல் லாம்எழுதி
விடக்காலம் சாலா தைய
நுனிப்பாகச் சிலஎழுதிச் சின்னாளில்
விடுக்கின்றேன் நோக்கு வீரே.

(அ-ரை.) சாலாது - போதாது. நுனிப்பு - கூர்ந் தறிவை. (௫)

## ௯௩. பண்டித இராமசுப்பிரமணிய நாவலர்

[திருவாங்கூரில் தக்கலையில் சிறந்த புலவர். தனிப்பாடல்கள் பல இயற்றியிருப்பதோடு தமிழின் தற்கால நிலைமை, கைம்பெண்ணின் கையறு துயரம் முதலிய நூல்கள் எழுதியவர். செந்தமிழ் மலர், விசால இருதயம் முதலிய இதழ்களையும் இவர் நடத்தியுள்ளார்.]

['கடங்கன்ட பொன்னே கதி' என்று ஈற்றடி யமைத்துப் பாடியது.]

436. அன்றிரா மற்கோ ரருந்துணையாய் நின்றுவிசும்
போன்றுபே ராறு உயரிலங்கை — சென்று
தடங்கொண்ட சோலைத் தலத்தாங் கொருமாக்
கடங்கன்ட பொன்னே கதி.

(அ - ரை.) விசும்பு - விண். மர்க்கடம் - அநுமார். பொன்- சீதை. (க)

['கரத்தைக் கரந்தான் கரத்து' என்று ஈற்றடி யமைத்துப் பாடியது.]

**437.** வானவர் கோன்றனக்கா வண்மை அகத்தியனோர்
தானவர் கோனைத் தனிக்காட்ட—வானில்
புரத்தைத் தொலைத்த புனிதனரு ளார்சா
கரத்தைக் கரந்தான் கரத்து.

(அ - ரை.) வானவர்கோன்-இந்திரன். தானவர்கோன்- விச்சிரவாகு. வானில்புரம்-முப்புரம். சாகரம்-கடல். கரத்தைக் கரந்தான்-கையினுல் அள்ளிக்குடித்துக் கடலை மறைத்தார். (உ)

['தனந்தோய் தனத்தாள் தரும்' என்னும் ஈற்றடி யமைத்துப் பாடியது.]

**438.** கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியுங் காழின்பம்
உண்டெனக்கேட் டுள்ளம் உயங்கன்மின்—மண்டு
கனந்தோய் குழலாளிக் கான்றேய் வருசந்
தனந்தோய் தனத்தாள் தரும்.

(அ - ரை.) காழின்பம் - உறுதியுள்ள இன்பம். உயங்கன் மின் - வருந்தாதீர்கள். கனந்தோய் குழலாள் - முகிலின் தன்மையமைந்த கூந்தலையுடையவள். (௩)

['மகன் மகள்சேர் சேயை வணங்கு' என்னும் ஈற் றடியமைத்துப் பாடியது.]

**439.** வினையால் வினைகின்ற வெந்துயர மெல்லாம்
நினையா முனநீங்கி நிற்கும்—புனையார்
அகன்மதிள்வா னத்தா ரடன்மே வுசுத
மகன்மகள்சேர் சேயை வணங்கு

(அ - ரை.) சுதமகன் மகள் - தெய்வானை. சேய் - முரு கக்கடவுள். (௪)

['மதிதொடங்கு பாடல் மதித்து' என்னும் ஈற்றடி யமைத்துப் பாடியது.]

440. யாணர் மதிமிலேந்த ஈச னருள்காண்மின்
பாணன் தனக்கருளைப் பாலிப்பான்—பேணும்
மதிவிளங்கு செங்கோன் மலையனுக் குய்த்தான்
மதிதொடங்கு பாடல் மதித்து.

(அ - ரை.) *யாணர்மதி - அழகிய திங்கள்.* (ரு)

தமிழ் மொழி

441. வடமொழியும் திடமொழியும் வண்ணமொளிர்
வண்ணமொடு வயங்கி மேனு(டு)
உடையவரும் உடையவரும் அரும்பொருள்சால்
அகப்பொருள்சான் றுயர்வு தோய்ந்து
படலரிய மேகலையும் சிலம்புமணி
வளையுங்குண் டலமு மோங்கித்
தடமலியும் தமிழ்நாட்டைத் தனியாளும்
தமிழணங்கைச் சார்ந்து வாழ்வாம்.

(அ - ரை.) *திடம் ஒழியும் வண்ணம் - ஆற்றல் கெடுமாறு. மேனுடு உடையவரும் - மேலைநாட்டவர், விண்ணுலகத்தவர்.* (சு)

[மழை மிகுதியாகப் பெய்தபொழுது பாடியது.]

442. வானம் வழங்காமல் போமாயின் வையத்துத்
தானமற் றியாவும் தழைத்தோங்கா—வேனுமவ்
வானம் வரம்பின்றி வானீர் பொழிந்தக்கால்
ஈனம் வருமால் ஈங்கு.

(அ - ரை.) *வானீர் பொழிந்தக்கால் - மழை பொழிந்த விடத்து.* (எ)

[சிவபெருமான்மீது நிந்தாத் துதியாகப் பாடியது.]

443. பொற்கொன்றைச் செஞ்சடையான் பூதப் படையதனை
முற்கொண்ட பித்தன் முகிழ்முலைப்பெண்—
[பொற்கொடிக்குப்
பாதியுடம் பீந்தான் வேதப் பறையனிவன்
சாதி புகலரிது தான்.

(அ - ரை.) வேதப்பறையன் - மறைகளையே பறைகளாக உடையவன். (அ)

## ௧௩௭. பாரதிதாசன்

[புதுச்சேரியில் வாழ்ந்தவர். கனகசுப்புரத்தினம் என்னும் இயற்பெயரையுடைய இவர் சுப்பிரமணிய பாரதிமீது கொண்ட பற்றுதலால் பாரதிதாசன் என்று புனைபெயர் கொண்டார்.]

[திருவரங்கம் பிள்ளையவர்கள் காலமானபோது பாடியது.]

444. திருவரங்கம் தமிழரங்கம் துடிதுடிக்கச்
சீரியற்கை யாமரங்கம் சேர்ந்திட் டாரோ
பெருவரங்கம் தமிழ்க்கென்று பேசும் சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நாடி
வருவரங்கம் என்படுமோ வையம் வாடி
வண்தமிழ்நா டுற்றமறை மலைஎம் அண்ணல்
ஒருவரங்கம் தம்மருகர்க் காக நொந்தால்
உயர்தனிச்செந் தமிழணங்கும் உயிர்நை வாளே.

(அ - ரை.) தமிழர் அங்கம் - தமிழர் உடல். இயற்கை யாம் அரங்கம்-பரமபதம். பெருவரங்கம்-பெரிய அவை. (க)

## ௬௩௮. மி. பொன். இராமநாதன் செட்டியார்

[சென்னைக்குப் பதினான்கு கல் தொலைவில் உள்ள மாபூஸ்கான் பேட்டை என்னும் ஊரில் தோன்றியவர். சங்கத்து நாராயண சுவாமிகள் என்னும் தண்ணருட் செல்வர்பால் இலக்கண இலக்கியங்களைக் கற்று மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் புலமைத் தேர்வு பெற்றவர். பலவிடங்களில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து இப்பொழுது சென்னை வண்ணை தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப்பணி புரிந்து கொண்டிருக்கிறார். இலக்கியச் சிறுகதைகள், அம்பிகாபதிக் கோவையுரை, பழமொழி உரை, நாலடியார் உரை முதலியன இவருடைய நூல்கள்.]

[சிலேடையாகப் பாடியது.]

445. தித்தித்த தண்பனையும் சீரடியார் தங்குழுவும்
பத்தியாய் நின்றபுரி பானுவே—எத்திசையும்
போற்றுபஞ் சாக்கரனார் போரரக்கர் மாயமுவ்வேல்
ஏற்றுபஞ் சாக்கரனார் இல்.

(அ - ரை.) *தித்தித்த - இனிமையை உடைய. அடியார் தங்குழுவும் - அடியார்களுடைய கூட்டமும். பத்தியாய்-வரிசையாய், அன்பாக. நின்றபுரி - நின்றவூர். பானுபுரி - ஞாயிறு; சங்கிலியார் பிறந்தவூர்; திருவொற்றியூருக்கு வடமேற்கில் உள்ளது. பஞ்சாக்கரனார் - திருவைந்தெழுத்தை யுடையவர்; 'பஞ்சாகச் செய்கிற சிவபெருமான். முவ்வேல் - முத்தலைச்சூலம்.* (௧)

[புலமைத் தேர்விற்குப் பயிலுங்கால் பாடியது.]

குறளடி வஞ்சிப்பா

446. யான்கண்டவள் இயலேதெனில்
அயிலேவிழி குயிலேமொழி
மரையேமுகம் பிறையேநகம்
பல்லேமுலை கல்லேமுலை

நூலேயிடை தோலேநடை
எனவாங்கு,
இவ்வுரு இவ்வணம் இலங்கலின்
எவ்வயி னோரும் இழப்பர்தந் நிறையே.

(அ - ரை.) இயல் - இயல்பு. அயில் — வேல். விழி. கண் மரை - தாமரை. பிறை - திங்கள். முலே - முல்லே யரும்பு. கல்-மலே; தோல் - யானே; ஈண்டுப் பெண் யானேயை உணர்த்திற்று. இலங்கலின் - விளங்குவதால். எவ்வயினோரும் - எத்தன்மையை உடையவர்களும். தம்நிறை-தமது மனவுறுதி. (உ)

[தியாகராயர் கல்லூரி முதல்வர் ம. கி. சண்முகம் செட்டியார் காலமானபோது பாடியன.]

447. அன்பின் பெருக்கே! அறத்தின் பெருந்திருவே!
மன்பதையெல் லாம்போற்றும் மாமணியே!—இன்பம்
கொழிக்கும் எழில்விளக்கே! கூறுயோ நீசென்
ருெளிக்கும் இடந்தான் எமக்கு.

(அ - ரை.) மன்பதை - மக்கட் பரப்பு. (௩)

448 மக்கள் கதற மனேவி அழமுதுமை
மிக்கதாய் மேன்மேல் விளித்தலறத்—தொக்கபெரும்
தம்பிமார் நின்றழுங்கத் தாரணியோர் நொந்திரங்க
நம்பிஎங் குற்ருய் நவில்?

(அ - ரை.) விளித்து அலற - கூப்பிட்டு அழ. தொக்க - கூடியுள்ள. அழுங்க வருந்த. (ச)

449. பொன்னுலகம் என்றறிஞர் போற்றுகின்ற காரணத்தால்
உன்னுடைய கல்லூரிக் குற்றபெரும்—பொன்னதனே
அங்கிருந்து கொண்டுவரல் ஆமென்ருே ஐயாநீ
இங்கிருந்து சென்ருய் இயம்பு.

(அ - ரை.) பொன்னுலகம் - பொன்னேயுடைய உலகம். கொண்டுவரல் ஆம் என்று - கொண்டு வருதல் கூடுமென்று. (ரு)

450. எல்லோரும் முன்போல் இருந்தும் பயனென்ன
கல்லூரி இன்று களையிழந்து—நல்ல
கணவன் தனையிழந்த காரிகையைப் போலச்
சிணுகுவது காணாய் சிறிது.

(அ - ரை.) களை இழந்து - அழகொழிந்து. காரிகை - பெண். சிணுகுவது - வருந்துவது. (சு)

## கருகூ. தி. கி. சுந்தரமூர்த்தி

[சோழவள நாட்டில் திருக்காட்டுப் பள்ளியில் 1922ஆம் ஆண்டிற் பிறந்தவர். ந. மு. வேங்கடசாமி நாட்டாரின் உறவினர். திருவையாறு அரசர் கல்லூரியிற் பயின்று புலமைப் பட்டம் பெற்றவர். மதுரை தியாகராசர் நன்முறை உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக விளங்குபவர் மனங்கவர் மதுரை, முத்தமிழ்ச் செல்வம், தென்னாட்டுத் துறைமுகங்கள், நம்நாட்டு மலைகள், அருட்செல்வர் ஐவர், பல்சுவைக் கதைகள், அமுதவாக்கு, பன்னிரு திருமுறை விளக்கம் முதலியன இவருடைய நூல்கள்.]

[தாமரைக்கும் மதுரைக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

451. பூவில் உயர்ந்ததாய்ப் பொற்பிற் சிறந்ததாய்ப்
பாவில் புகழப் படுவதாய் — நாவினிய
தேமதுரம் மேவுதலால் தேவர் விரும்புதலால்
தாமரைக்கு நேர்மதுரை தான்.

(அ - ரை.) பூவில் - மலரில்; நிலத்தில். பொற்பு - அழகு. தேமதுரம் - மிகுந்த இனிமை. (க)

[பாவலர்க்கும் மதுரைக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

452. சங்கம் இருந்திடலால் சால்புடையார் கூடுதலால்
எங்குந் தமிழ்ஒலியே ஏலுதலால்—தங்குபுகழ்க்

காவலர்கள் தம்முயிர்போல் காத்திடலால் எஞ்ஞான்றும்
பாவலர்நேர் மாமதுரை பார்.

(அ - ரை.) *சங்கம் இருந்திடலால் - முச்சங்கங்கள் இருந்தபடியால்; சங்கமாகக் கூடியிருத்தலால். ஏலுதல் - பொருந்துதல்.* (உ)

[முருகக் கடவுளைக் குறித்துப் பாடியது.]

453. முத்தமிழின் பிழிவெல்லாஞ் சேர்த்தொன் ருக்கி
முருகனெனப் படைத்தாரோ முன்னோர் அன்றி
இத்தரையின் அழகெல்லாம் எடுத்துச் சேர்த்தே
எழின்முருகன் என்றனரோ இளமை என்னும்
சத்துடைய பருவத்தைச் சமைத்துக் காட்டித்
தமிழ்க்கடவுள் என்றனரோ தகுதி வாய்ந்தோர்
நத்திடுமென் மணமெல்லாம் குழைத்துக் கூட்டி
நங்குமர வேளுருவம் நல்கி னரோ.

(அ - ரை.) *பிழிவு - சாறு. சத்துடைய - சிறப்புடைய. சமைத்துக்காட்டி - உண்டாக்கிக் காண்பித்து. நத்திடும்-விரும்புதலைச் செய்யும்.* (௩)

## கச௦. பண்டித சித. நாராயணசாமி

[இவர் பாண்டி மண்டலத்தில் சேது நாட்டின் உள் நாடாகிய குன்னங்கோட்டை நாட்டுத் தலைவர் பட்டத் தம்பலக்காரர் குடும்பத்திற் பிறந்தவர்; பதின் மூன்றுவது அகவையில் துறவு பூண்டவர். சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடாலயத் தலைவர் காசிவாசி சிதம்பரஞான தேசிகர் மாணவர்களில் ஒருவர். கோ நகர் கற்பகவிநாயகர் கலாசாலையிலும் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் தமிழ்கற்றுப் பண்டிதப் பட்டம்பெற்றவர். சென்னையிலிருந்த திருவொற்றியூரான் சமஸ்க்ருத வித்தியாசாலையில் வடமொழி பயின்றவர். தமிழ்

நாட்டிற் பல தமிழ்ப் புலவர்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருப்பவர். இப்பொழுது திருவையாற்றில் உள்ள அறுபத்துமூவர் மடாலயத் தலைவராக இருக்கின்றார்.]

[திருத்தில்லைக் கூத்தப்பிரானுக்குத் திருவாவடுதுறை ஆதீனத்தார் செய்த திருமுழுக்கைக் கண்டு பாடியது.]

454. தில்லைத் திருமன்றில் தேவர்பிரான் எஞ்ஞான்றும்
அல்லலற ஒய்தலற ஆடலெவன்—நல்ல
திருவா வடுதுறையார் செய்தநீ ராட்டில்
அருகாக் குளிர்கொண்ட தால்

(அ - ரை.) ஆடல் எவன் - திருக்கூத்தாடுவது என்ன காரணம்? அருகாக்குளிர் - குறையாத குளிர்ச்சி. (க)

[ஐயாறப்பரை வேண்டிப் பாடியது.]

455. ஐயாரு நன்முடியில் ஐயாரு என்றைக்கும்
நையாற்றில் நின்று நலிவேனை—மெய்யாற்றில்
என்றோ அறம்வளர்த்தாள் ஏவ விடுத்திஐயா
நன்றோவா தேபெருக நன்று.

(அ - ரை.) ஐயாறு-திருவையாற்றில் எழுந்தருளியவனே! ஐஆறு - அழகிய ஆற்றையுடையவனே. நை ஆற்றில் நின்று - வருந்துகிற வழியில் நின்று- மெய்ஆற்றில் - மெய்ந்நெறியில். அறம்வளர்த்தாள் - அறம்வளர்த்த நாயகி, ஐயாற்றில் எழுந்தருளிய இறைவியின் பெயர். நன்று - இன்பம். ஓவாதே பெருக - ஒழியாமல் வளர. (உ)

[தில்லையில் வசித்திருந்த நஞ்சுண்ட சுவாமிகள் என்னும் பெரியார் காலமானபோது அடக்கஞ் செய்யச் சமாதிக் குழி தோண்டினர். அப்பொழுது நீர் மிகுதியாக ஊறியது. அந்நீரிலேயே அடக்கஞ் செய்யுமாறு நேரிட்டது. அதனைக் கண்டு பாடியது.]

456. நேற்றிருந்தார் நஞ்சுண்டார் நின்றின் றுயிர்பிரிய
ஊற்றிருக்கு மட்குழியி னுட்புகுந்தார்—கூற்றுவனூர்
எந்நேரம் என்வந் திழுப்பரோ யானறியேன்
அந்நேரம் ஈசா அருள்.

(அ - ரை.) ஊற்றிருக்கும் - நீர் ஊற்றிருக்கும். (௩)

[மதுரைத் தமிழ்ச் சங்கத்துத் தலைமையாசிரிய ராகவும் தம் ஆசிரியராகவும் இருந்த திரு. நாராயண ஐயங்கார்ச் சுவாமிகள் திருநாட்டுக் கெழுந்தருளிய போது பாடியன.]

457. கலக்கமற முகமலர்ந்து கருணைவிழி
பொழியநிதங் கற்போர் யார்க்கும்
இலக்கணநூல் உணர்த்துகினும் இறைநிலையும்
நுனித்துணர இயல்ப தாக
அலக்கணற உரைத்திடுவாய் அங்ஙனம்யார்
உரைப்பரையா அவனி மீதே
நலக்கடலே குணக்குன்றே நாரணனே
ஆரணம்வாய் நவிலுந் தேவே.

(அ - ரை.) இறைநிலை - கடவுள்நிலை. நுனித்துணர - கூர்மையாகப் பார்த்தறிந்துகொள்ள. அலக்கண் - துன்பம். ஆரணம் - மறை. (௪)

458. வள்ளுவர்நூற் கருத்துணர்ந்து வடித்துரைக்கும்
பெருமானே! வடநூ லாய்ந்து
தெள்ளுதமிழ்ப் பொருளனைத்தும் தெரித்துரைக்கும்
ஒருபுலவ! சிறந்த மாணர்
கொள்ளும்வகை நூல்பலவும் கொடுத்தருளும்
கலைவாணர் கோவே! நின்வாய்
விள்ளுமொழி போன்மொழியை யாங்கடைந்து
செவிமடுப்போம் விதியு நன்றே?

(அ - ரை.) வள்ளுவர்நூல் - திருக்குறள். மாணுர் - மாணவர். விள்ளுமொழி - கூறுகிறமொழி. செவிமடுப்போம் - காதிற் கேட்போம். (ரு)

[சிவப்பதிப் பயணஞ் செய்துகொண்டு ஈரோட்டிற்குச் சென்றபோது அவ்வூர் நிலையைக் குறித்துப் பாடியது.]

459. பாரோடு தேராப் பரிந்தவரன் கையோடே
ஈரோடாப் போனதோர் ஏதுவினுல்—ஈரோடாம்
என்னப் பெயர்வந்த திவ்வூருக் கென்னவிங்
கன்னநமக் கீந்தார் அலர்.

(அ - ரை.) பார்ஓடு தேர்ஆக பரிந்தஅரன் - பூமியை ஓடு இன்ற தேர் ஆகும்படி விரும்பிய சிவபெருமான். ஈர்ஓடு - இரண்டு ஓடுகள். ஏது - காரணம். அன்னம் - சோறு. (சு)

## ௧௪௧. அருட்கவி சேதுராமன்

[இவர் சென்னைமாநகரில் 1937ஆம் ஆண்டில் பிறந்தார். சென்னை பிராட்வே அர்ச் கபிரியேல் உயர்நிலைப் பள்ளியில் பள்ளி இறுதிவரை கல்வி கற்றவர். வள்ளிமலைத் திருப்புகழ்ச் சச்சிதாநந்த சுவாமிகளிடம் திருப்புகழ் பயின்றவர். 1952ஆம் ஆண்டில் திருப்போரூரில் கிழவடிவிலே வந்த திருமுருகப் பெருமானுல் ஆட்கொள்ளப் பெற்றவர். அவரால் அளிக்கப் பெற்ற திருமுருகன் ஹரஹரோ ஹராக் கும்மி என்ற பாடல் நூலே, இவர் பிறகு இறைவன் திருக்கோயில்களில் மெய்ம்மறந்த நிலையில் இலக்கணவரம் பிகவாத தீஞ்சுவைத் தமிழ்ப் பாக்களைப் பாடுவதற்கு ஆதாரமான அருள் வாழ்த்து நூலாக அமைந்து நின்றது. இவர் இதுவரையில் எண்ணுயிரம் பாடல்கள்வரை பாடியுள்ளார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், வரகவி சொக்கலிங்கனரின் வரலாற்றுப் புராணம், திருப்போரூர் அந்தாதி, இரமணர் பிள்ளைத் தமிழ்,

காம்கோடி சங்கராச்சாரியார் பிள்ளைத் தமிழ் முத லியன.]

[திருத்தணிகை முருகன்மீது பாடிய நான்காரைச் சக்கரப் பாடல்.]

**460.** காகு மாலிச காமுகா
காமு காவளி நாயகா
காய நானிலை யாவிகா
காவி யாதணி மாகுகா.

(அ - ரை.) கா - காப்பாற்றுவாயாக, கு - நிலத்திற்கும். மாலி - கதிரவனுக்கும், சகா-(முறையே), துணையாகிய திங்களை யும் செந்தாமரையையும் போன்ற, முகா - திருமுகமண்டலங்க ளுடையவனே! காமுகா வளி: வளி காமுகா - வள்ளியிடங் காதல் கொண்டவனே! வளிநாயகா - வள்ளியின் தலைவனே! காயம் நான் இலை - இந்த உடல் நான் அன்று, ஆவி கா - என் உயிரைக் காத்தருள்வாயாக. காவியா - கருங்குவளை மல ரணிந்தவனே! தணி - திருத்தணிகைமலையில் வீற்றிருக்கும், மா குகா - சிறந்த குகப்பெருமானே! (க)

[முருகக் கடவுளின் பெருமையைக் குறித்து இகழ் வதைப்போற் புகழ்ந்து பாடியது.]

**461.** மடைத்தொழிலன் மைத்துனன் மாமன் இடையன்
படைத்த பரனேபாம் பாட்டி—கிடைத்தவொரு
தாரமோ மைக்குறத்தி தானோர் மலையாளி
சாரமோ கந்தன் தகவு.

(அ - ரை.) மைத்துனன் மடைத்தொழிலன் - மைத்துன னாகிய நான்முகன் உலகங்களைச் சமைக்குந் தொழிலையுடை யவன். மாமன் இடையன் - மாமனாகிய திருமால் (கிருட்டிணவ தாரத்தில்) இடையனாகப் பிறந்தவன். படைத்த பரனே பாம் பாட்டி - பெற்றெடுத்த பரமசிவனே பாம்பாட்டி. (சிவபெரு மான் திருப்பாசூரில் கரிகால்வளவன் பொருட்டுப் பாம்பெடுத் தாட்டியதாகப் புராணம் கூறும்) தாரமோ மைக்குறத்தி - மனைவி யாக வாய்த்த வள்ளிநாயகியோ கரிய குறப்பெண். தான் ஓர் மலையாளி - முருகனாகிய தானோ மலைகளை ஆள்பவன். கந்தன்

தகவு சாரமோ - முருகன் பெருமை இவ்வாறிருப்பதால் நன்ருக இல்லை. (உ)

[மதுரைக் கடவுள் மண் சுமந்ததைக் குறித்துப் பாடியது.]

462. கட்டுக் கடங்கான் கசிந்தொழுகும் பக்திவெள்ள
மட்டுத் தெறித்தொழுகும் வந்தியின்—பிட்டுக்கு
நங்கையர்சேர் வைகை நதிமங்கை நல்லகங்கை
மங்கையருகேசுமந்தான் மண்.

(அ - ரை.) கட்டுக்கடங்கான் - எத்தகைய கட்டுப்பாட்டுக்கும் அடங்காதவன் (அன்புக்குக் கட்டுப்படுபவன் என்பது குறிப்பு.) மட்டு - தேன். நங்கையர் சேர் - நீராடுதற்பொருட்டு மங்கையர்கள் வந்து கூடும். நதிமங்கை - வைகையாறு. கங்கை மங்கை அருகே சுமந்தான் மண் : இறைவனுடைய திருச்சடையில் கங்கையாறிருப்பதால் இவ்வாறு கூறினர். (ங)

[வந்த பிறப்பை வாழ்த்தி வைணவிமேற் பாடியது.]

463. தாயின்றி யுண்டாகுஞ் சேயருண்டோ தாரணியில்
நீயின்றி நானிருக்க நீதியுண்டோ—நோயின்றி
நான்வாழ வைணவிநிற் பேணவந்த நற்பிறப்புத்
தான்வாழச் செய்வாய் தயை.

(அ - ரை.) சேயர் - மக்கள். தாரணியில் - உலகில். பேண வந்த - போற்றுதற்கு வந்த. தயை - அருள். (ச)

[திருப்புகழின் பெருமையைக் குறித்துப் பாடியது.]

464. சந்தம் மணக்குந் தமிழ்மணக்கும் ஞானசம்
பந்தம் மணக்குஞ்சேய் பாதார—விந்தம்
மணக்குந் திருப்புகழை வாழ்த்துதலே என்றுங்
குணக்குன்ரு வார்கொள்குறிக் கோள்.

(அ - ரை.) சந்தம் மணக்கும் - இனிய இசை வீசும். ஞானசம்பந்தம் மணக்கும் - மெய்யறிவுத் தொடர்ச்சிச் சொற்கள் அமைந்திருக்கும். குறிக்கோள் - முடிவு. (ரு)

[மாமனுக்கும் மருகனுக்கும் உள்ள ஒற்றுமை தோன்றப் பாடியது.]

465. உருவழகர் கொடியான மாப்புட்கள் கொண்டுபுகழ்
ஓங்கா யிரப்பெ யரினர்
உயர்நாத வத்துகைக் கொண்டிரு மடந்தையரை
உறுமனைவி யாக்கொள் திருடர்
மருவிசைப் பிரியர்முன் கொக்கறுத் திட்டேழு
மகரசல நிதிகாய்ந் தவர்
மரமலைத் துத்தம்ப மதில்வந் தருட்செய்த
வாரணத் தின்ர்கு ழலினர்
இருமுருப் பூதத்தை மாய்த்துத் தமிழ்ப்பின்னர்
இரவுபக லிற்றி ரிந்தோர்
இடைச்சிறுவ ராயினோர் முனிவேள்வி காத்தருளி
எனதியான் நீங்க டியரை
அருமையாய்க் காக்கஅதி விரைவாக வந்துபே
ராபத் தினிற்கை தந்தோர்
அவர்யாவ ரெனிலந்த மாலவனும் வேலவனும்
ஆயமா மன்ம ருகரே.

(அ - ரை.) உருவழகர்; - திருமாலுந் திருமேனியழகர்; முருகவேளும் உருவத்தால் அழகு படைத்தவர். கொடியான மாப்புட்கள் கொண்டு - இருவரும் பறவைக் கொடி யுடையவர் கள்; திருமாலுக்குக் கருடக்கொடி; முருகனுக்குச் சேவற் கொடி; இருவருக்கும் முறையே கருடனும் மயிலும் ஊர்திகள். ஓங்காயிரப் பெயரினர் - இருவரும் ஆயிரம் திருப்பெயர்கள் அமையப்பெற்றவர்கள். உயர்நாத வத்து கைக்கொண்டு - திரு மால் நாதப் பொருளாகிய சங்கையும், முருகவேள் நாதத்தை எழுப்புங் கோழியையுங் கையிற் கொண்டுள்ளனர். இருமடந்தை யரை உறுமனைவியாக் கொள் திருடர் - திருமாலுக்குச் ஸ்ரீதேவி பூதேவி என்று இருமனைவியர். முருகவேளுக்கு வள்ளி தெய் வானை என்று இருமனைவியர். கண்ணன் வெண்ணெய் திருடி னன்; முருகன் வள்ளியம்மையைக் களவு செய்தான். மருவு இசைப்பிரியர் - இருவரும் இசையில் விருப்பம் உள்ளவர்கள்.

முன் கொக்கு அறுத்திட்டு எழு மகரசலநிதி காய்ந்தவர் - கண்ணன் கம்சன் அனுப்பிய புள்வாயைக் கிழித்தான். முருகன் சூரனாகிய மாமரத்தைப் பிளந்து தொலைத்தான்; இராமர் இலங்கைக்குப் போகும்போது கடல்மீது சினங்கொண்டார்; முருகவேள் கடல்சுவற வேல் விட்டார். மரம் மலைத்து - இராமர் ஏழு மராமரங்களைத் தொளைத்தார்; முருகன் சூரனாகிய மாமரத்தைத் தொளைத்தான். தம்பமதில் வந்து அருள்செய்த - தூணில் வந்து திருவருளைச் செய்த; திருமால் மனித மடங்கலாகப் பிரகலாதனுக்காகத் தூணில் தோன்றினார்; முருகன் அருணகிரியாருக்காகத் திருவண்ணாமலையில் கம்பத்திளையனாராகக் காட்சியளித்தான். வாரணத்தினர்; வாரணம் - சங்கு, கோழி; திருமால் திருக்கையில் சங்கையுடையவர்; முருகன் கோழிக் கொடியை உடையவன். குழலினர் - கண்ணன் புல்லாங்குழல் ஊதுபவர்; முருகனுந் தணிகைமலையிற் குழல் பயின்றவன். இரும் உருப்பூதத்தை மாய்த்து - பெரிய வடிவுடைய பூதத்தைக் கொன்று; கண்ணன் கஞ்சன் அனுப்பின பூதனை என்னும் பெண் பூதத்தைக் கொன்றான்; முருகனும் பூதத்தைக் கொன்று நக்கீரர் முதலியவர்களைக் காத்தருளினான். தமிழ்ப்பின்னர் இரவு பகலில் திரிந்தோர்; திருமால் தமிழின் பொருட்டுத் திருமழிசையாழ்வார் பின்னே இரவில் திரிந்தார்; முருகன் தமிழுக்காகப் பொய்யாமொழிப்புலவர் பின்னே பகலில் திரிந்தான். இடைச் சிறுவராயினோர் - திருமால் கண்ணனாக மாடு மேய்த்தான்; முருகன் குணசீலருக்காகத் திருச்செங்கோட்டில் பிரதிவாதி பயங்கரப் புலவனை யச்சுறுத்த மாடு மேய்த்துக்கொண்டு நின்றான்; (முருகன் ஔவையாரிடமும் மாட்டுக்காரச் சிறுவனாக ஒருகாலத்தில் தோன்றினான்.) முனிவேள்வி காத்தருளி - திருமால் இராமனாக விசுவாமித்திரருடைய வேள்வியைக் காத்தார்; முருகன் நாரதருடைய வேள்வியைக் காத்தான். அடியரை அருமையாய்க் காக்க அதிவிரைவாக வந்து பேராபத்தினில் கைதந்தோர்; திருமால், கசேந்திரன், துருவன், பிரகலாதன், திரௌபதி முதலியோரைக் காக்க விரைவாக வந்தருளினார். முருகனும் வள்ளியம்மை, அருணகிரியார், நக்கீரர், குமரகுருபரர், முருகம்மை முதலிய அடியார்கட்கு அருள்புரிய விரைவாக வந்தருளினான். (௬)

[திருத்தில்லையைக் குறித்துப் பாடியது.]

466. பதஞ்சலிக்கும் பதஞ்சலிக்கும் படியிடப்பொன்
னடியெடுத்துப் பரத மாடி

நிதஞ்சலியாச் சிதம்பரனூர் நெற்றிக்கட்
பரம்பரனூர் நீங்காக் கோயில்
இதஞ்சலியா தடியார்கள் என்றென்றும்
இடைவிடா தேத்தி யேத்திச்
சதஞ்சலிசெய் தென்தில்லைத் தனிக்கோயில்
என்றென்றுஞ் சாற்று வோமே.

(அ - ரை.) பதஞ்சலி - பாம்புக்கால்முனிவர். பதம்சலிக் கும்படி - திருவடி சலிப்பெய்துமாறு. பரதம் - திருக்கூத்து. நிதம் - நாள்தோறும். இதம் சலியாது - இன்புறுவதில் சலிப் படையாமல். சத் அஞ்சலி - நல்ல வணக்கம். (எ)

[போரூர் முருகன்மீது பாடியது.]

467. கொள்ளேல்கொள் ளேலென்று கூறுமி
யாவையுங் கொண்டுநித்தம்
தள்ளேல்தள் ளேலென்று சாற்றும்
அனைத்தையும் தள்ளிவிட்டு
விள்ளேல்விள் ளேலென்றும் வீண்பேச்சுப்
பேசும் விழலனை நீ
எள்ளேல்எள் ளேலெங்கள் ஈசாதென்
போரி இறையவனே.

(அ - ரை.) விள்ளேல் - பேசாதே. விழலன் - வீணன். எள்ளேல் - இகழாதே. தென்போரி - அழகிய திருப்போரூர்.(அ)

[திருத்தணி முருகன் அழகை வியந்து பாடியது.]

468. துதிநாலும் ஒண்முகத் தும்பியின் தம்பியைச் சுந்தரனைப்
பதினாலு லோகமும் தேவரும் யாவரும் பத்திசெய்தே
கதிகாண நின்ற திருத்தணி கேசனைக் கண்டுதொழப்
பதினா யிரங்கண் படைத்தில னேயந்தப் பங்கயனே.

(அ - ரை) துதிநாலும் - துதிக்கை தொங்கும். தும்பி - யானை; ஈண்டு ஆனைமுகக்கடவுள். பங்கயன் - நான்முகன். (கூ)

[திருத்தணி முருகன் சந்தனக் காப்பழகை வியந்து பாடியது.]

**469.** செல்லாரும் நீள்பொழிற் றென்றணி வாழுமை
[சேயவன்றன்
மெல்லாய சந்தனக் காப்பிட்ட மேனி வியனழகைக்
கல்லாத நாயினேன் கண்டுள் ளுருகிக் கரைந்துதொழப்
பல்லா யிரங்கண் படைத்தில னேஅப் பதுமத்தனே.

(அ - ரை.) செல்லாரும் - முகிற்படியும். பொழில் - சோலை. உமைசேய் - முருகன். வியன் அழகு - பெருமை பொருந்திய அழகு. பதுமத்தன் - தாமரை மலரில் எழுந்தருளிய நான்முகன். (கo)

[அருணகிரிநாதர் பாடிய சீர்பாத வகுப்பைப்போல் பாடிய குருபரன் திருவடி வகுப்பு.]

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான தானதன
தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான தானதன.

**470.** குமரகுரு பரமுநிவர் குணநிறையும் அருணகிரி
குவியுமன முடைபுலவர் கருவூரர் கீரரெழில்
குலவினிய தமிழ்பகர்செய் பொதிகையெனு மலையிலுறை
குடமுநிவ ரனையபல அடியார்கள் நாடுவது
குவடுருக மிருகவகை அடிபணிய உலவைசெடி
கொடிகளிவை தளிர்கள்விட இசைபாடு மாயன்மகள்
குறவநிதை யிடம்வளையல் விலைபகரு மொருபரதர்
குலவணிக மகனெனவும் உருமாறி ஏகுவது
குலிசன்மகள் அணைகுளவ வடிவழக அறுமுகவ
குதலைமொழி பகர்குமர வடிவேல்வி சாககுக

குழகவென நிதமொழியு மடியவர்த முமலவினை
குமைவுபெற அடுதல்புரி அருள்ஞாந சாதனமொர்
குருகுருவி லயனிருளி வடிவிலரி இவரிருவர்
குறுகிய்டி முடியறிய முடியாத வாறுசுடர்
கொழிநெடிய கனலெனநி லரன்வருக எனமகிழ்வு
குலவஎதிர் வருகிரண ஒளிசால மேவுவதெண்

அமரநிற முளரிமண மிகுதளவு குவளைவரி
அளிமுரலு மகிழ்விளவு குரவோடு நீபமலர்
அறுகுதமை அணிதருவ தெனதுபிணி இடர்களற
அடுவதெழு புவிதனிலும் நிலையான ஓர்பொருள
தருணனெறி அடவிதனில் மகளரசி பரவையிடம்
அணுகுபரன் நுதல்விழியன் அரனே அலாதபிற
அமுதர்தமை மொழிதலிலொர் புலவரது சபதமுறி
வடையவிட அவரைமுனர் தொடர்சித வாரிசம
தவனிவள முறஉரிய கருணைநிழல் மிகுதிதரும்
அழிவிலொரு கவிகையது மறைநாலின் மாமுடிய
தலர்கள்மலி குரவடியும் அரும்விரதர் உளமதிலும்
அமர்தருவ தினியதமிழ் மணம்வீசு மேன்மையுள
தழுவியொடு கனகசபை தனில்நடனம் இடுபரமன்
அரவுநதி நிலவுபுனை சிவன்வாம நாயகியும்
அலகிலதி சயமடைய அவர்முனணி பணிகளொலி
அரவமிக நிலமதிர நடமாடு நேர்மையுள

தமரர்பதி உரககிரி வயலிகழு மலமதுரை
அடலருணை பழநிபழ முதிர்சோலை வேலைநகர்
அதிகைகுரு மலைகுடசை புலிசைசிவ புரமருகல்
அணிதணிகை வரையனைய பலஊரில் மேவியுள
தருணகிரி புகழுமயி லெதிரில்நடம் இடமகிழும்
அமலைஉமை நழுவவிட உடனேடி யாடிமுனம்

அருணைநகர் அரசனக மிகமகிழ அதிவிரைவில்
அரசவையை அடைவதருள் முநிவோர்கள் மாதனம
தமரதனில் அள்வில்தசை முடலைசெறி அயிலதுவும்
அவுணர்குல மகன்மமதை உருவான சூரனுயிர்
அழிவுசெய அசுரனுமுன் வினைதொடர மயிலுருவில்
அருகில்வர அதன்முதுகின் மிசையேறி யாடிடுவ
தமரர்பதி விதிவருணன் முதலியப லிமையவர்கள்
அவர்தமது துயர்கலிகள் அடியோடு மாய்வுபட
அபயமது தருகவென அமுதமொழி கொடுபரவி
அருள்வினவி நனிதொழுது பணிவோடு வீழுவது

வெமரவணை மிசைதுயிலும் வரதன்மலர் வனசநிகர்
விழியன்மறை கிழவனரி பெருமாள் முராரிவிபு
விணிலிரவு கரவிரவி மறையவலி திகழ்திகிரி
விடுமுதல்வன் மகிமைமிகு கதையாழி ஊரிஇவை
விரவுகரன் உவரிதுக ளெழமுனியும் ரகுவமிசன்
விமலைதிரு மகளுறையும் எழில்மார்பன் நீலவணன்
விரிகடலில் அணையதனை நிறுவியவன் வலியன்விறல்
விசயனதி ரதம்நடவும் ரிஷிகேசன் நாரணனல்
விதுரர்மனை மருவிஅவர் தருமுணவு கொளுமகிபன்
விபுதரிடை சுரஅமுது பரிமாறி மோகினியின்
மிகஅழகு நிறைவடிவில் வருநிருபன் உவணஉரு
மிளிர்கொடியன் உரைசெய்தச அவதாரன் யாவுலகும்
வியனுருவு கொடளவிடும் அடியிணையை உடைநெடியன்
விழைவினெடு குமுலிபுனை மதுசூதன் மால்மருகன்
விகடமயில் இவர்முருகன் மதகரிணி முகனிளையன்
விசுவபதி குருபரனின் மணநாறு சீரடியே.

(அ - ரை.) குவியும் மனம் - உலக போகங்களில் செல்லாமல் குவிந்திருக்கும் மனம். கீரர் - நக்கீரர். குடமுனிவர் - அகத்

தியர். குவடு - மலையுச்சி. உலவை - பட்டமரம். பரதர் - வைசியர், செட்டிகள். குலிசன் - இந்திரன். குளவ - நெற்றிக்கண்ணில் அல்லது சரவணப் பொய்கையில் தோன்றியவனே! குமைவு - அழிவு. குருகு - அன்னம். இருளி - பன்றி. அமரநிறம் - வெண்ணிறம். தளவு - முல்லை. மகிழ் - மகிழம்பூ. குரவு - குராமலர். அமுதர் - தேவர். புலவர் - பொய்யாமொழிப்புலவர். கவிகை - குடை. அழலி - நெருப்பு. அரவம் - ஒலி. அமரர்பதி - அமராவதி. உரககிரி - திருச்செங்கோடு. வேலைநகர் - திருச்செந்தூர். குடசை - குடவாயில். புலிசை - திருத்தில்லை. அருணைநகர் அரசன் - பிரபுட தேவமன்னன். அமர் - சண்டை. முடலை - துர்நாற்றம். அமரர்பதி - தேவேந்திரன். விதி - நான்முகன். வெம் அரவு அணை - விரும்பத்தக்க பாம்புப் படுக்கை. விபு - கடவுள். இரவு கரவு இரவி - இரவை மறைக்கும் கதிரவன். ஊரி - சங்கு. உவரி - கடல். ரகுவமிசன்- இராமன். கடலில் அணை - சேதுபந்தனம். சுர அமுது-தேவாமிருதம். உவணஉரு - கருடன் வடிவம். தச அவதாரன் - பத்துப் பிறப்பெடுத்தவன். வியன் உருவு - பெருவடிவம். கொடு - கொண்டு. குழலி - துளசி. மதுசூதன்; மதுசூதனன் - மது என்னும் அரக்கனை அழித்தவன். விகடமயில் - வேடிக்கை பொருந்திய மயில். இவர் - ஏறும். கரிணி - யானை. விசுவபதி - உலகிற்குத் தலைவன். சீரடி - சிறப்புப் பொருந்திய திருவடி. (கக)

## கசஉ. அருளிசை சுப்பிரமணியம்

[இவர் தஞ்சை மாவட்டம் நன்னிலத்திலுள்ள நாடாகுடி என்னுஞ் சிற்றூரில் 1933ஆம் ஆண்டிற் பிறந்தவர். இவர் அருட்கவி சேதுராமனுர்க்குத் தமையனுர். வள்ளிமலைத் திருப்புகழ்ச் சச்சிதானந்த சுவாமிகளிடம் திருப்புகழ் பயின்றவர். கல்லூரி இடைநிலை வகுப்புவரை கல்வி கற்றவர். அருட்கவி சேதுராமனுர் அவர்கள் அருள்நிலையில் பாடும் பாடல்களை இவர் அண்மையில் அமர்ந்து எழுதி வருகிருர். இவரும் அருட்கவியாருஞ் சேர்ந்து வைணவி அந்தாதி, வைணவி இரட்டைமணிமாலை முதலிய நூல்களைப் பாடியுள்ளனர்.]

[ஆனைமுகக் கடவுள்மீது பாடியது.]

471. அண்டம் பலவற்றை ஆங்கொளிரும் ஞானதொப்பைக்
கண்டங் கிடச்செய் கரிமுகவா—பண்டங்கு
பாடல்களால் உன்னருளைப் பாடவருள் நின்னுடைய
ஆடல்களை நன்றாய் அறிந்து.

(அ - ரை.) அண்டம் - உலகம். தொப்பைக்கண் - வயிற்றுக்குள். பண்தங்கு - இசையமைந்த. (க)

[நெஞ்சிற் கறிவுறுத்திப் பாடியது.]

472. நாளையெமன் நண்ணுங்கால் நம்மடியன் என்றுரைத்தவ்
வேளையெனை மீட்டருள்வான் மெய்ந்நெஞ்சே—பூளை
[யொடு
தேளைச் சடைவைத்தான் சேய்தணிகைக் கந்தப்புத்
தேளைப் பணிவாய் தினம்.

(அ - ரை.) பூளை - ஒருவகைச் செடியின் பூ. தேளைச் சடைவைத்தான் - சிவபெருமான்; சிவபெருமானுடைய சடையில் தேளும் உண்டு. கந்தப்புத்தேள் - முருகக்கடவுள். (உ)

[சிக்கற் சிவபெருமான் மீது பாடியது.]

473. விக்கலால் வாடி விடாய்தீர நீருண்டு
பக்கலே வள்ளியைப் பண்டுபெற்றான்—மக்கடம்
சிக்கலைத் தீர்த்துச் சிறப்பருள்கோன் நற்றாதை
சிக்கலிலே வாழுஞ் சிவன்.

(அ - ரை.) விக்கல் - தொண்டை யடைப்பு. விடாய் - நீர்வேட்கை. சிக்கலைத்தீர்த்து - அஞ்ஞானத்தைப் போக்கி. சிறப்பு - வீடுபேறு. (ங)

[திருவல்லிக்கேணிப் பெருமாளைப் பாடியது.]

474. அல்லிக்கே ணிக்கணமர்ந் தாரருள்செய் யும்வேத
வல்லிக்கே மாலையிடும் மாயனும்—சொல்லிக்கே

தேனேபோல் வாள்துணைவன் சீபார்த்த சாரதிஎன்
நானேபோ கச்செய்வான் நன்கு.

(அ - ரை.) *அல்லிக்கேணி-திருவல்லிக்கேணி. வேதவல்லி-திருவல்லிக்கேணித் தாயாரின் திருப்பெயர். சொல் இக்கே தேனே போல்வாள் - பேச்சுகரும்பையும் தேனையும்போல உடையவள். நானே போகச் செய்வான் - நான் என்னும் ஆணவத்தை ஒழிப்பான்.* (ச)

[முருகன்மீது பாடியன.]

475. மிடுக்குண்ட நக்கீரன் மெய்யுணர் வெய்தி மிகமகிழ
எடுக்குஞ்செ வேற்படை எம்பிரா னுகி இணையடியை
அடுக்கின்ற நல்லமெய் யன்பர்க் கருள்தனை அள்ளி
[அள்ளிக்
கொடுக்கின்ற தெய்வம் உளதுகண் டீர்பரங்
[குன்றினிலே.

(அ - ரை.) *மிடுக்குண்ட - தருக்காகவிருந்த. அடுக்கின்ற-தன்னையடைகின்ற.* (ரு)

476. நாவார உன்புகழ் நான்பாடி லேனிந்த நானிலத்தில்
பாவார உன்றனைப் பாமாலை சூட்டிப் பணியகில்லேன்
மாவார மிந்த மடையனுக் குன்பால் வரவருள்வாய்
தேவார நாயகன் ஈன்றருள் தெய்வ சிகாமணியே.

(அ - ரை.) *நாவார - நா நன்ருகப் பொருந்த. பாவார - பா மிகுதியாக அமைய. பணியகில்லேன் - வணங்கவில்லை. மாவாரம் - சிறந்த அன்பு. தேவார நாயகன் - தேவாரப் பாடல்களுக்குத் தலைவனுகிய சிவபெருமான்.* (சு)

477. கண்ணன் றிருந்து கடுந்தவஞ் செய்தோன் கருதுநுதற்
கண்ணன் தருகுக கையா ரெழுகண் ணுடையகுழற்
கண்ணன் மருக கயிலைச் சரவணத் தண்கயத்தின்
கண்ணன் றுதிந்த கடம்பநீ என்னைக் கடைக்கணியே.

(அ-ரை.) கள் அன்று இருந்து - அந்நாளில் மூங்கிலில் தங்கியிருந்து. நுதல்கண்ணன் - சிவபெருமான். கை ஆர் எழு தன் உடைய - கையிற்பொருந்திய எழு தொளைகளையுடைய. கயத்தின்கண் - தடாகத்தினிடத்தில். (எ)

478. வள்ளியை வலத்திற் கொண்டாய்
வானணங் கிடத்திற் கொண்டாய்
நள்ளயில் குக்கு டந்தாம்
நனியிரு கரத்திற் கொண்டாய்
கள்ளவிழ் நீப மாலை
கவின்மிகு நிறத்திற் கொண்டாய்
புள்ளரி பரியாக் கொண்டாய்
புலையனை ஆட்கொள் வாயே.

(அ-ரை.) வானணங்கு - தெய்வானை. அயில் - வேல். குக்குடம் - கோழி. நனி - நன்றாக. கள்ளவிழ் - தேன் வெளிப்படுகின்ற. நீபமாலை - கடப்பமாலை. கவின்மிகு நிறம் - அழகு நிறைந்த மார்பு. புள் அரி - மயிற்பறவை. புலையன் - இழிந்தவன். (அ)

[திருவிராமேச்சுரத்திற் பாடியது.]

479 ஒருமானைக் கைக்கொண்ட உத்தமனை
இமவரையன் உவந்து பெற்றுத்
தருமானைப் பங்கேற்ற தலைவனைநம்
கருமுகிலாம் தனிமால் போற்றும்
மருமானைப் பெற்றமழ விடையானை
மருவிரா மேச்சு ரத்துப்
பெருமானைப் பிஞ்ஞகனைத் தரிசித்துப்
பெருமகிழ்வு பெற்றோ மின்றே.

(அ-ரை.) இமவரையன் - மலையரசன். உவந்துபெற்றுத் தருமான் - உமையவள். தனிமால் போற்றும் மருமான் - முருகன். மழவிடையான் - இளமை தங்கிய காளையூர்தியை உடையவன். (௯)

[இராமநாதபுரத்து முருகக் கடவுள்மீது பாடியது.]

சந்தப் பாடல்

தான தானதனத் தான தானதனத் தனதான

480. பாவ மோகமதப் பூசல் வாழ்விதனிற் குலைவாகிப்-
பாவி யேனுநினைப் பாடி டாதுமயக் குறலாமோ;
காவ லாகமயிற் றேரி லேறிஅயிற் படையேவிக்-
கால தூதர்கையிற் பாடு றுவணமெற் கருள்வாயே;
சேவ லானதிருக் கேத னகுறவிக் கினியோனே-
தேவ சேனைவலப் பாக மேவுசிறப் புடையோனே;
ராவ ணாதியரைக் காயு மால்மருகப் பெருமானே-
ராம நாதபுரச் சாமி நாதகுகப் பெருமானே.

(அ - ரை.) உலைவு ஆகி - வருத்தத்தை அடைந்து. அயிற் படை - வேற்படை. பாடுறுவணம் - துன்பப்படாதபடி. சேவலான திருக் கேதன! - சேவற் கொடியை உடையவனே! (௧0)

௧௪௩. பெருமழைப் புலவர், பொ. வே. சோமசுந்தரனார்

["சோழவளநாடு சோறுடைத்து" என்று ஔவையார் என்னும் நல்லியற் புலவராற் புகழப்பட்ட சோழவளநாட்டில் தஞ்சை மாவட்டம் திருத்தருப்பூண்டி வட்டத்தைச் சார்ந்த மேலைப் பெருமழை யென்னும் சிற்றூரில் வாழ்ந்த வேலுத்தேவர் என்பவருக்கு மைந்தனாகப் பிறந்தார் சோமசுந்தரனார். இவர் பிறந்த நாள் கி. பி. 1909ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் ஐந்தாம் நாள். இவர் திண்ணைப்பள்ளியிற் கற்கும் போதே தமிழ்மொழியார்வம் உள்ளத்தெழத் தெள்ளிய தமிழ்நூல் பல கற்றார். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்க் கல்லூரியில் முறையே பயின்று புலவர் வகுப்புத் தேர்ந்து நற்சான்றிதழும் பெற்றார். பின்னர்த் தம்மூர் வந்துசேர்ந்து உழவுத் தொழிலையே விழைந்து புரிந்து வாழ்ந்தார். தமிழாசிரியர் வேலை

பார்க்குந் தகுதிபெற்றும் அவ்வேலைக்கு முயலாது தம் வாழ்வு நடத்தினுர். இவரது செந்தமிழ்ப் புலமையைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் உணர்ந்து பல நூல்களுக்கு உரை யெழுதுமாறு வேண்டினர். அதற்கியைந்து சூளாமணி, குறுந்தொகை, பரிபாடல், ஐங்குறுநூறு, பத்துப்பாட்டு முதலிய நூல்களுக்கு உரை யெழுதி யுதவினுர். இரண்டொரு நாடக நூல்களும் உரைநடை நூல்களும் எழுதியிருக்கின்ருர்.]

[தஞ்சை மாவட்டத்தில் புயற்காற்று வீசியபோது பாடியன.]

481. பித்தேறி னிறைவன் நல்லருளைக்
கைவிட்டான் பெருங்காற் ருறுன்
மத்தேறி யுடைதயிர்போல் மன்னுயிர்கள்
உடைந்தொழிய மயக்கஞ் செய்தே
செத்தேயிங் கொழிகவெனச் சினந்திட்டான்
பேய்போலச் சீறு நின்ருன்
கொத்தேறு குழலுமையும் முகிலாயங்
கவனேடே கூடி னுளால்!

(அ - ரை.) *கொத்து - பூங்கொத்து. முகில் - மேகம்.* (க)

482. திடுதிடென உலகதிரத் திசைநடுங்க
வானிருளத் தெய்வ மஞ்சச்
சடசடவென் ருெலிபடத்தீந் தருவெல்லாம்
வேரோடே சாய்ந்து வீழக்
கடகடவென் றேநகைத்தான்! கடல்பெருகித்
திடரேறிக் கலகஞ் செய்யப்
படபடவென் றேமாந்தர் பயத்தாலே
குலைநடுங்கிப் பதைத்து வீழ்ந்தார்!

(அ - ரை.) *வான் இருள - விண் இருளையடைய. தீந்தரு - கல்லமரங்கள்.* (உ)

483. எளியோர்கள் சிறுகுடிலும் எழிலோங்கு
மாளிகையும் இரைந்து சீறித்
துளியோங்கு மழையோடே சூறைவளி
சாடுதலால் சுவர்கள் சாயப்
புளியோங்கு மாமரமே தென்னைமரம்
வாழைமரம் புதல்பூண் டோடே
களியோங்கு பைங்கூழும் கரும்புகளும்
பாழாகிக் கழிந்த வாலோ!

(அ - ரை.) *சூறைவளி - சூறுவளி என்னும் பெருங்காற்று. கழிந்த - அழிந்தொழிந்தன.* (ந)

484. காற்றென்றே யிருந்திட்டார் காலையிலே
மாலையிலே கடுங்காற் றாகிக்
கூற்றென்றே உருக்கொண்டு கூ! கூ! வென்
றேயார்த்துக் குமைத்தல் கண்டார்
மாற்றொன்றும் அறியாதே மாந்தரெலாந்
திகைத்திட்டார் மகார்கள் தம்மைப்
போற்றும்வகை அறியாதே தாயரழப்
புதல்வர்களும் பொருமி னூரால்.

(அ - ரை.) *கூற்று - நமன். ஆர்த்து - ஆரவாரித்து. மகார் - மக்கள்.* (ச)

485. பட்டினியால் வாடுகின்ற ஏழைகுடில்
பெரும்பொருளே படைத்து வாழ்வோர்
கட்டியுயர் நீண்மாடம் சிறுர்பயிலும்
கூடங்கள் சிதைந்து யாவும்
குட்டிநெடுஞ் சுவராகப் பாழ்படுப்ப
அச்சுவரைக் குறுகி நின்றே

ஒட்டியுயிர் ஓம்பினரால் மானிடவர்
சுவரின்றேல் ஒருவ ருய்யார்!

(அ - ரை.) குட்டி நெடுஞ்சுவர் - நீண்ட குட்டிச்சுவர். ஓம்பினர் - பாதுகாத்தார். (ரு)

486. ஆடிழந்தேம்! என்றழுதார்! ஆனிழந்தேம்!
என்றழுதார்! அந்தோ! வாழும்
வீடிழந்தேம்! என்றழுதார்! மேதையிலா
மானிடவர்! விண்ணிற் றோயுங்
கோடிருந்தே வாழ்குரங்குங் குதித்தாடும்
அணிற் குழுவும் பிறவுங் கீதம்
பாடிமகிழ் பறவைகளும் இழந்தேமென்
றழுவாரைப் பார்த்தி லேமால்.

(அ - ரை.) மேதை - பேரறிவு. கோடு - கொம்பு. (சு)

487. 'நில்லாது பொருளுலகின் நில்லாது
யாக்கையிவை நிலையென் றெண்ணி
ஒல்லாத தீவினைசெய் துழலாதீர்!
அறஞ்செய்ம்மின்! உலகீர்!' என்றே
சொல்லாலே மெய்ந்நூல்கள் சொல்வனவும்
கேளாராய்ச் சுகித்து வாழும்
கல்லாத புல்லருநேர் கண்டுணர
வகைசெய்தான் காற்றுத் தேவன்.

(அ - ரை.) ஒல்லாத - செய்யக்கூடாத. யாக்கை - உடல். (எ)

488. 'சிற்றுயிரும் சிற்றுடலும் சின்னாளும்
உடையீரே! செருக்கேன் மின்னே!
உற்றுயிர்வாழ் உலகெல்லாம் ஒருநொடியின்
நீருக்கி ஊதித் தீர்ப்பேம்!

பெற்றவுயிர் யாக்கையினுற் பெறுபயனும்
பெறிர்தெய்வம் பேணிர்! வீணிர்!
உற்றநும வாழ்க்கையிஃதிங் குறுஞ்சிறுமை
கண்டிருமென்' றுணர்த்தி னுஅல் !

(அ - ரை) *செருக்கு - களிப்பு. பேணீர் - போற்ற மாட்டீர்.* (அ)

489. காற்ருகி உயிர்க்குயிராய்க் காப்பானும்
நீயொருநாட் கருணை மாறிக்
கூற்ருகிச் சினஞ்சிறந்து கொல்வானும்
நீயென்னில் யாமென் செய்கோம் ?
தேற்ருதே பெரும்பாவம் செய்கின்றேஞ்
சிறுமையினுற் செய்கை! தேறிப்
போற்ருதேம்! எனினுமெமைப் பொருளாகச்
சீறுவதோ ! புகழான் மிக்கோய் !

(அ - ரை.) *செய்கைதேறி - செய்யுஞ் செய்கையில் தெளிவடைந்து.* (கூ)

490. படைத்திடுவாய் உலகுயிரைப் பரிந்தோம்பிக்
காத்திடுவாய் ! பரனே ! மீண்டுந்
துடைத்திடுங்கால் காற்ருகிக் கூற்ருகிச்
சூழ்பிணியாய்த் துயரே செய்து
புடைத்திடுவாய் எனினுமிவை அருளென்றே
புகல்கின்ருர் புல்மை நூலோர்
சடைத்திகழும் பெருமா!நின் றிருவருளே
வெல்கவெனத் தாழ்வே மன்னே.

(அ - ரை.) *பரிந்தோம்பி - அருள்கூர்ந்து. சூழ்பிணி - உண்டாகும் நோய். சடைத்திகழும் - சடைவிளங்கும்.* (கல)

## ௯௭௭. மீ. கந்தசாமிப் புலவர்

[பாண்டிவள நாட்டில் நெல்லை மாவட்டத்தில் பூழியன்குடிக்கு அண்மையில் உள்ள மலையடிக் குறிச்சி என்னுஞ் சிற்றூரில் மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை, மதுரைத் தமிழ்ச் சங்கம் ஆகிய விடங்களில் கல்விகற்றுத் தமிழ்ப்புலமை பெற்றவர். மதுரை மாநகரில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறார்.]

[தனவணிகர்களைப் புகழ்ந்து பாடியன.]

491. சீராரு மணிமாடப் புகார்நகரத்
திருந்துவரு சிறப்பா லின்று
பேராரும் நகரத்தா ரெனப்பிறங்கு
பெயர்பெற்றுப் பிறநா டுஞ்சென்
றேராரும் மிகுதனத்தால் வாணிகமேற்
கொண்டினிதி னியற்றி வாகைத்
தாராருந் தனவணிகர் எனும்பெயரான்
அம்மக்கள் தழைக்கின் றாரால்.

(அ - ரை.) *புகார்நகரம் - காவிரிப்பூம்பட்டினம். பிறங்கு- விளங்குகிற. வாகைத்தார் - வெற்றிமாலை.* (௧)

492. மாரிதரு நாட்பெயலைத் தன்பாற்கொண்
டணுகுபவர் மகிழ்வு கொள்ள
யாரிவரென் றுரையாது நீர்வழங்கும்
ஊருணிபோல் யாண்டு மின்னோர்
வாரிவழங் கிடுபொருளான் மன்னுமுப்பத்
திரண்டறமும் வளர்த்தார் மற்றுப்
பாரிடைநல் லறஞ்செய்தார் இவர்போல்வார்
எவருண்டு பார்க்கின் அம்மா.

(அ - ரை.) பெயலை - தண்ணீரை. பாரிடை - நிலவுலகில். (௨)

[கல்வி கற்ற காலத்தில் நூல்கள் வாங்க உதவி செய்யவேண்டுமென்று பலவான்குடி திரு. மெ. வெ. வேலப்ப செட்டியாருக்குப் பாடியன.]

**493.** பொன்னுங் கலைமகளும் போற்றுபல வான்குடிவாழ்
மன்னும் பொருள்வணிக மன்னவனே!—நன்னரொரு
வேற்கைமுரு கற்போற்றும் வேலப்ப பூபதியே!
ஏற்கதிரு நெஞ்சத் திசைந்து.

(அ - ரை.) பொன் - திருமகள். மன்னும் - நிலைபெறும். நன்னர் - நன்றாக. (௧)

**494.** தூயவனும் பாண்டித் துரைப்பேரால் மாமதுரை
ஆய தமிழ்ச்சங்கம் அடைந்தேமாய்—மேயதமிழ்
வாசிப்பேம் புத்தகங்கள் வாங்கப் பொருளிலமாய்க்
கூசிப்பின் வந்தேங் கொள.

(அ - ரை.) பொருள் இலமாய் - பொருளில்லாமையை உடையேமாய். கூசி - நாணி. (௨)

**495.** எல்லாத் தருமத்தும் ஏழை படிப்பவனுக்
கில்லாப் பொருள்வழங்கல் ஏற்றமாம்—நல்லவனே!
ஊழி முதல்வன் ஒருவன் திருவருளால்
வாழி பலநாள் மகிழ்ந்து.

(அ - ரை.) ஊழி முதல்வன் - ஊழிகாலம் முதலிய யாவற்றுக்கும் தலைவனாக இருக்குங் கடவுள். (௩)

## ௧௪௫. சி. இலக்குவனார்

[சோழவள நாட்டில் தஞ்சை மாட்டத்தில் திருத்தருப்பூண்டிப் பிரிவில் உள்ள வாய்மேடு என்னுஞ் சிற்றூரில் 1909ஆம் ஆண்டிற் பிறந்தவர். செந்தமிழ்ப் புலமை பெற்று மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணிபுரிபவர்.]

[தமக்கு விரைவில் நரையுண்டாகியதற்குக் காரணங்கூறிப் புறநானூற்றுப் பாடலைப்போல் எதிர்மறையாகப் பாடியது.]

496. யாண்டுபல வின்றியும் நரையுள வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
ஆண்டநம் மக்கள் அடிமைக ளாயினர்
பூண்டநம் பண்பு போலிய தாகின்று
நற்றமிழ் மறந்தனர் நானில மதனில்
பிறமொழிப் பற்றிற் பெரியோ ராயினர்
தமிழகத் தெருவில் தமிழ்தான் இல்லை
ஊரும் பேரும் உயர்மொழி வழக்கும்
அயல்மொழி தன்னில் அமைந்திடக் கண்டோம்
தமிழைக் கற்றோர் தாழ்நிலை உறுவதால்
தமிழைப் பயிலத் தமிழரே வந்திலர்
ஆட்சி மொழியும் அன்னை மொழியெனச்
சொல்லின ராக்கினர் தூத்தமிழ் வெறுக்கும்
அயல்மொழிக் காதலர் ஆட்சி கொண்டுளர்
உயர்கல் விக்குறும் ஊடக மொழியாய்த்
தமிழ்மொழி யமையத் தடுப்பவர் தமிழரே
ஆங்கில மொழிக்கே அளிப்பதிற் பாதியும்
தமிழ்மொழிக் களித்திலர் தமிழைப் போற்றுவோர்
அல்லவை பெருகவும் நல்லவை குறையவும்
மக்கள் வாழ்வில் மகிழ்ச்சிதான் இன்றே.

(அ - ரை.) *யாண்டு பல இன்றியும் - அகவை மிகுதியாக ஆகாமலிருந்தும். யாங்காகியர் - எவ்வாறுண்டாகப்பெற்றீர்.* (க)

## க௪௬. தே. தேவப்பிரியம்

[இவர் மதுரையம்பதியில் கிறித்துவ சமயத்தில் பிறந்தவர். தமிழ் மொழியைக் கற்பதில் பேரவாக்

கொண்டு அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றுப் புலமைபெற்றுத் தமிழாசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறார்.]

[இராசா அண்ணமலைச் செட்டியார்மீது வாழ்த்துப் பாடல்களாகப் பாடியன.]

**497.** கானுடு காத்தான் நகருறை காவலன் காமருசெந்
தேனுடு தொங்கலஞ் செல்வனண் ணமலை தில்லையின்பால்
பாநாடு செந்தமி ழைத்தலை யாக்கியோர் பல்கலையில்
வானுடு மிந்தமண் ணுடும் மதித்திட வைத்தனனே.

(அ - ரை.) காமரு - அழகிய. பாநாடு - பாக்கள் நாடியடைகின்ற. பல்கலை - பலவகைக் கலைகள். (க)

**498.** தலைப்பே றுறுந்தில்லைத் தண்பெரு நாட்டில் தயங்குபல
கலைப்பே ரிலந்தந்த காளையண் ணமலை கற்பகம்போல்
நிலைப்பே ருங்கொடை நல்குநம் வள்ளலிந் நீணிலத்தில்
மலைப்பே ரிமயமும் மேருவும் போன்மன்னி வாழியவே.

(அ - ரை.) தலைப்பேறு உறும் - தலைமையான பெருமையைப் பெற்று விளங்கும். இமயம் - இமயமலை. (உ)

[பசுமலையைக் குறித்துப் பாடியன.]

**499.** பசுமலை யாமிது பார்மலை சீர்மலை பண்புமலை
இசைமலை யென்னு மெழின்மலை நன்மலை யின்பமலை
கொசுமலை நாமங் கொளினுமெக் காலுங் குவலயத்தால்
வசைமலை நாமம் பெறுமலை பொன்மலை வான்மலையே.

(அ - ரை.) இசைமலை - புகழுள்ளமலை. கொசு மலை நாமங் கொளினும் - கொசு வருத்துவதிற் பெயர்பெற்று விளங்கினாலும். குவலயத்தால் - உலகத்தாரால் வசைமலை - பழியைப் பொருது தொலைத்த. நாமம் பெறுமலை - பெயர்பெற்ற மலை. (ந)

**500.** அழகு சிறப்பாய் அருள்பெருகி நிற்பாய்
பழகுநலன் யாவும் படைப்பாய்—பொழில்கொள்

பசுமலையே நீபலவாம் பண்புடையை யேனும்
கோசுமலையை ஏன்கொணர்ந்தாய் கூறு.

(அ - ரை.) பொழில்கொள் - சோலையைத் தன்னிடத்தே கொண்ட. பண்புடையை - நன்மைகளையுடையை. கொசு மலையை - மிகுதியான கொசுக்களை. (ச)

[ஆசிரியர்களைப் பாராட்டிப் பாடியன.]

[திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்கள்.]

501. ஈடில் புகழ்க்கவிஞர் ஏத்துமரு ணாசலப்பேர்ப்
பீடியலுஞ் செல்வப் பிரானருள்கைக்—கூடியன்றோ
சொற்கவியும் இன்பச் சுவைத்தமிழ்ப்பாப் பாடவல்ல
நற்கவிஞர் ஆயினோம் நாம்.

(அ - ரை.) ஈடில் - இணையில்லாத. பீடியலும் - பெருமை யமைந்து விளங்கும். (ரு)

[திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்.]

502. சொல்வேம் அவர்புகழே சோரா திரவுபகல்
புல்வேம் உளத்தவர்தம் பொன்மொழிகள்—எல்வேய்சீர்
நல்வேங் கடசாமி நாட்டார் அடிபணிவேம்
வெல்வேங் கொடிதாம் வினை.

(அ - ரை.) சோராது - தளராமல். புல்வேம் - பொருந்து வேம். எல்வேய்சீர் - புகழொளியமைந்த சிறப்புப்பொருந்திய. வெல்வேம் - வெற்றி கொள்வேம். (சு)

[திரு. கந்தசாமியார்.]

503. தருபயன் மிகுமா றின்பத் தமிழெனக் களித்த வாசான்
திருபுகழ் செல்வ மேன்மை திகழ்பதி சோழ வந்தான்
வருபெருங் குரவன் கந்த சாமியென் வள்ளற் பெம்மான்
இருபனி மலர்த்தாள் என்னுள் என்றும்நின் றருளமாதோ.

(அ - ரை.) *தருபயன் மிகுமாறு - உண்டாகின்ற பயன் மிகுதிப்படும்படி. பனிமலர்த்தாள் - குளிர்ச்சி பொருந்திய மலரைப்போன்ற திருவடிகள்.* (எ)

[கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் பாவைப் புகழ்ந்து பாடியது.]

**504.** தேனே கனியோ செழும்பாகோ தெள்ளமுதம்
தானே வறியேன் தமிழருமற்—றேனேரும்
ஆசுகவி நாயகனென் ருதரவால் கொண்டாடும்
தேசிகவி நாயகன்பாச் சீர்.

(அ - ரை.) *ஆசுகவி நாயகன் என்று - விரைவாகப் பாடுவதில் தலைமை பெற்றவன் என்று.* (அ)

[உடன் தமிழாசிரியர் ஒருவரைப் பாராட்டிப் பாடியது.]

**505.** என்னருமை நண்பர் இனிய மலர்முகத்தார்
கன்னலினும் இன்பங் கனிமொழியார்—மன்னுதமிழ்
வாணர் சிவஞான வள்ளியரை எப்பொழுதும்
காண விரும்பிடுமென் கண்.

(அ - ரை.) *கன்னலினும் - கரும்பைப் பார்க்கினும். தமிழ் வாணர்-தமிழையே பொழுது போக்காகக்கொண்டு வாழ்பவர்.* (௯)

[காந்தியடிகளைச் சுட்டுக் கொன்றதைக் குறித்துப் பாடியது.]

**506.** தாதையார் காந்தி தமைத்தொழுவான் போற்சுட்டான்
பாதகனும் கோட்சே பரமேசா—ஓதில்
தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னர்
அழுதகண் ணீரும் அனைத்து.

(அ - ரை ) *தாதையார் காந்தி - தந்தையைப் போன்ற மகாத்மாகாந்தியடிகள். கோட்சே - காந்தியைச் சுட்டுக்கொன்ற கொடியோனுடைய பெயர். பின்னிரண்டடியுந் திருக்குறள்.* (க0)

## கசஎ. தி. செ. முருகதாச பிள்ளை

[இவர் மகான் வண்ணச் சரபம் திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகள் என்னுஞ் சிறப்புப் பெயர்களையுடைய தண்டபாணி சுவாமிகளின் பெயரராவர். இவருடைய தந்தையார் செந்திநாயகம்பிள்ளை. தண்டபாணி சுவாமிகளைப் போலவே சுவாமிகளுடைய வழிமுறையினரும் புலமைபெற்றுத் திகழ்கிறார்கள். இவர் செய்யுள் நூல்கள் பல செய்துள்ளார்.]

[முருகக் கடவுள்மீது பாடியது.]

507. வேலேந்தும் தோட்குமரா வெற்பினடஞ் செய்புனிதா
கோலேந்துஞ் செங்கைக் குருநாதா—மாலேய்ந்து
வாடும் எனது மனத்துயர்தீர்த் தின்பவெள்ளத்
தாடுவணஞ் செய்தாண் டருள்.

(அ - ரை.) வெற்பில் - மலைகளில். மால்எய்ந்து - மயக்கந் தோய்ந்து. (க)

[பண்டிதமணியவர்களின் மனைவி இறந்தபோது பாடியனுப்பியன.]

508. இல்வாழ்க்கைக் கேற்றதுணை என்றமைந்த அம்மைபுவி
ஒல்வாழ்க்கை கொள்ளா தொளிர்பொன்னூர்—
[செல்வாழ்க்கை
பெற்றமைந்தார் என்றுலகோர் பேசலறிந் தேன்பலநூல்
கற்றநிற்கென் சொல்லுவேன் காண்.

(அ - ரை.) ஒல்வாழ்க்கை - பொருந்திய வாழ்க்கை. பொன்னூர்-தேவருலகு. கற்றநிற்கு - கல்விகற்ற உனக்கு. (உ)

509. இறத்தல் பிறத்தல் இயல்புலகத் தென்னும்
திறத்தைத் தினந்தேர்ந் திடினும்—மறத்தல்
கொளமுடியா இன்னல் கொடுப்ப துயிர்போலும்
வளமனையால் எய்துபிரி வாம்.

(அ - ரை.) திறத்தை-செய்கையை. கொளமுடியா-தாங்கவியலாத. வளமனை – நல்லியல்பமைந்த மனைவி. (ங)

[மனம் நொந்து ஒரு சமயத்திற் பாடியன.]

510 பணப்பித்தன் என்றெவரும் பார்த்துநகை யாடப்
பணப்பத்தர் பாலுளம்புண் பட்ட—குணச்சித்தம்
தீர்த்தெனையாண் டின்னருட்சீர் செய்ய நினைவானே
கூர்த்தஅயில் வேற்கைக் குகன்.

(அ - ரை.) பணப்பத்தர் - பணத்தினிடத்திலே அன்பு செய்து அதனையே தெய்வமாக்க் கொண்டாடுவோர். கூர்த்த அயில் - கூரானவேல். (ச)

511. தந்தையினைத் தம்பியினைத் தாரத் தினைத்தமியேன்
சிந்தைகலங் கப்பிரித்த தெய்வத்தை—முந்தைமறை
வல்லார் பெருங்கருணை வாரிதியென் ருர்எனக்கிப்
பொல்லாங்கேன் தந்தான் புகல்.

(அ - ரை.) தாரம்-மனைவி. முந்தைமறை வல்லார்-பழைய மறை நூல்களில் வல்லவர்கள். கருணை வாரிதி - அருட் கடல். (ரு)

## கசஅ. தி. மு. சங்கரலிங்கம்

[தண்டபாணி சுவாமிகளின் புதல்வராகிய செந்திணுயகம் பிள்ளையவர்கட்கு இவர் பெயரர். இவருடைய தந்தையார் தி. செ. முருகதாச பிள்ளை. சங்கரலிங்கனுர் தமிழ் கற்றுப் புலமைபெற்றுத் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருக்கிருர்.]

[சில ஆண்டுகட்கு முன் ஆட்சியிலிருந்த சிலர் பஞ்சத்தைப் போக்குதற்குப் பிண்ணுக்கு முதலியவைகளையும் மனிதர்கள் உணவாக்க் கொள்ளவேண்டும் என்று கூறியதைக் கேட்டுப் பாடியது.]

512. பருத்தியுடன் பிண்ணுக்கைப் பண்படுத்தி நாளும்
திருத்தியுற உண்ணுகெனச் செப்பும்—அருத்தியுளார்

மக்களென எண்ணுரோ மாக்களெனக் கொண்டாரோ
தக்க அநுபவமோ சாற்று.

(அ - ரை.) திருத்தியுற - மனநிறைவுண்டாக; திருந்தச் செய்து - பொருந்துமாறு. அருத்தியுளார் - விருப்பம் உள்ளவர் கள். மாக்கள் - விலங்குகள். (க)

[சிலர் சட்டைப் பையில் சீப்பு வைத்திருத்தலைக் குறித்துப் பாடியது.]

513. உரஞ்சீர்த்தி யில்லா துழல்வோர்தாம் பையில்
சிரஞ்சீவி வைத்திருப்பர் தேரின்—தரஞ்சீர்
எதிர்காலத் தில்லஃதில் எண்ணெய்கண் ணுடி
மதிமகிழ வைப்பரோ மன்.

(அ - ரை.) உரஞ்சீர்த்தி இல்லாது அறிவு தெளிவடை யாமல், பையில் - சட்டைப்பையில். சிரஞ்சீவி - சீப்பு. அஃதில்- அந்தச் சட்டைப்பையில். (உ)

[திருவாமாத்தூர் மாரியம்மன் சிலை களவுபோன போது பாடியது.]

514. மாரியெனப் பேர்பூண்டு மக்களுளங் கொள்ளை [கொண்டோம்
மாரிபெயச் செய்யாது மன்னுவதில்—காரியமில்
என்னக் கருதிநீ ஏகினையோ வேறென்னே
துன்பவுளம் நீங்கிடவே சொல்.

(அ - ரை.) மாரிபெயச் செய்யாது - மழைபெய்யச் செய் யாமல். மன்னுவதில் - நிலைபெற்றிருப்பதில். (ங)

[மதுவிலக்குச் சட்டத்தைப் போக்கவேண்டு மென் பாரைக் குறித்துப் பாடியது]

515. குடியோங்க வேண்டுமெனக் கூறுவர்பல் வீட்டில்
குடிகொள் மதுவாம் குடியைப்—படியின்மேல்
மக்கள் குடித்து மனமகிழ்தல் கண்டுமதைத்
தக்கதென எண்ணினரோ தாம்.

(அ - ரை.) குடியோங்கவேண்டும் - குடித்தலானது மிகுதிப்படவேண்டும். பல்வீட்டில் - பலவீடுகளில். படியின்மேல் நிலத்திடத்தில். (௪)

[மழைமுகிலின்றி வெண்முகில் திரிதல் கண்டு பாடியது]

516. மேகந்தான் விண்ணில் வெளுத்துத் திரிவதெண்ணில்
தாகந்தான் நீக்ககடல் தண்ணீரைச் — சோகமுடன்
உப்பென்று உன்னி உழன்றதுவோ நீர்குடித்தும்
வெப்பொழிக்க நேர்ந்திலதோ விள்.

(அ - ரை.) வெளுத்துத் திரிவதெண்ணில் - வெண்மையாகத்திரிதலை எண்ணிப்பார்த்தால். உழன்றதுவோ - அலைந்ததுவோ? வெப்பொழிக்க நேர்ந்திலதோ - வெம்மையைப் போக்க முடியவில்லையா? (௫)

## ௧௪௧. தி. வடிவேல் முதலியார்

[நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இவர் பிறந்தார். இராசப்ப நாவலர் மாணவரான சுப்பிரமணிய முதலியாரிடமும் ஞானியார் அடிகளிடமுங் கல்விகற்றுச் சிறந்த தமிழ்ப் புலமையடைந்தார். திருக்கோவலூர் கள்ளக் குறிச்சி முதலிய இடங்களில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். வாமன வைபவம், மத்திய மண்டல சதகம், இரமண மகரிஷிகளின் வாழ்க்கை வரலாறு, உண்ணுமுலையம்மை மாலை முதலியன இவரியற்றிய நூல்கள்.]

[வேலு மயிலும் என்பதைக் குறித்துப் பாடியது.]

517. உண்ணினும் வேலும் மயிலுமென்
பேன்உண் டெழுந்துவெளி
அண்ணினும் வேலும் மயிலுமென்
பேன்அங் குளதொழில்கள்

பண்ணினும் வேலும் மயிலுமென்
பேன்பண்ணி யில்லமதை
நண்ணினும் வேலும் மயிலுமென்
பேன்எங்கள் நாயகனே.

(அ - ரை.) *அண்ணினும் - சேர்ந்தாலும். நண்ணினும் - அடைந்தாலும்.* (க)

[அடியார் பெருமையைக் குறித்துப் பாடியது.]

518. செகத்திலே பொருள்தேடித் தருமமிகப்
புரிவோர்தஞ் செயலுக் கேற்ப
இகத்திலே அனுபவிக்கும் இன்பமலால்
முத்திநிலை எய்து வாரோ
அகந்திலே கண்டுமகிழ் திருவெண்ணெய்
அரனடியை அண்டி னோர்கள்
முகத்திலே விழித்தாலும் போதுமவர்
அடைந்திடுதல் முத்தி தானே.

(அ - ரை.) *இகத்திலே - இப்பிறப்பிலே. அகத்தில் - உள்ளத்தினிடத்தில்.* (உ)

[நாட்குறிப்பு எழுதுவதன் நன்மையைக் குறித்துப் பாடியது.]

519. சென்ற நிகழ்ச்சி தெரிவிக்கும் செய்யாமல்
நின்ற நிகழ்ச்சி நினைவூட்டும்—என்றுமே
ஐயமின்றிச் செய்கை அறியக் கருவியுமாம்
கையிற் குறிப்பிருந்தக் கால்.

(அ - ரை.) *சென்ற நிகழ்ச்சி - முன்னே நிகழ்ந்த காரியம். குறிப்பு - நாட்குறிப்பு (இதனை டைரி என்பர்.)* (௩)

[வினவிடை வெண்பாவாகப் பாடியது.]

520. கஞ்சத் துறைபவள்யார் கண்ணன் விரும்புவதென்
செஞ்சாலி என்றெவரும் செப்புவதென்—எஞ்சலிலா

தென்னும் பதிப்பெயரென் ஈசன்வாழ் கின்றதிரு
வெண்ணெய்நெல் லூராம் விடை.

(அ-ரை.) கஞ்சத்துறைபவள் திரு. கண்ணன் விரும்புவது வெண்ணெய். செஞ்சாலி என்று எல்லோருஞ் செப்புவது நெல் என்று கொண்டுகூட்டிப் பொருள் காண்க. (௪)

[வாழை இலை விற்றுக்கொண்டு தெருவிற் சென்றவன். சொல்லைச் சிதைத்து "வாழலை வாழலை" என்று கூவிக்கொண்டு சென்றான். அதனைக்கேட்டு இவர் பாடியது.]

521. கொண்கன் வெறுத்தனனோ கூடியுள்ளார் தம்பகையோ
பெண்மை இழந்தனளோ பேசுவீர்—பண்புடனே
வாழ மணம்பூண்ட வஞ்சி யவளின்று
வாழலையென் றேசொல் வகை.

(அ-ரை.) கொண்கன் - தலைவன். வஞ்சி-வஞ்சிக்கொடி போல்பவளாகிய பெண். (௫)

[மேற்கூறிய பாட்டையும் அதன் பொருளையுங் கேட்ட வாழையிலை விற்பவன் தான் இனிமேல் அவவாறு கூறுவதில்லையென்று இவரிடம் பிழைபொறுக்க வேண்டியபோது பாடியது.]

522. எம்மகளும் அந்த இடர்ப்பாட்டிற் குற்றதிலை [வோ
இம்முறையில் அப்பொருளென் றெண்ணிலேன்—அம்ம
இன்றளவுஞ் செய்த பிழையைஇனிச் செய்யேன்
நன்றியையுந் தான்மறவேன் நான்.

(அ-ரை.) எம் மகளும் - எந்தப் பெண்ணும். இடர்ப்பாட்டிற் குற்றதில்லை - துன்பத்துக் குள்ளானதில்லை. (௬)

[மாட்டின் கயிற்றைக் கள்ளர்கள் கவர்ந்து கொண்டு சென்றபோது பாடியது.]

523. மாட்டின் தலைக்கயிற்றை மாய முடன்கவர்ந்தே
வாட்டமுறச் செய்தே மகிழ்கின்றார்—நாட்டதனில்

தெய்விகன் ஆண்ட திருக்கோவ லூர்மாந்தர்
கைவிரங் கண்டோங் களிந்து

(அ - ரை.) *தலைக் கயிறு - கழுத்தில் கட்டியிருந்த கயிறு.*

[காயப்போட்டிருந்த வேட்டி காணமற் போன போது பாடியது.] (எ)

524. கொக்கு முதல பறவைகளே
பறக்கு மென்பார் குவலயத்தில்
இக்கு மொழியாய் இதுபோன்ற
தெவரு மியம்பக் கேட்டிலனல்
மிக்க மகிழ்வாய் நெற்குன்றில்
மேவி உலர வைத்தவுடை
பக்க மிருந்த உடையோடும்
பறந்தே சென்று மறைந்ததுவே.

(அ - ரை.) *இக்கு மொழியாய் - கரும்பைப் போன்ற இனிய சொல்லையுடையவளே! நெற்குன்றில் - நெற்குன்றம் என்னும் ஊரில்.* (அ)

[கோட்டை மருதூரிற் சேற்றுவழியிற் சிக்கித் துன்புற்றபோது பாடியது.]

525. பாவியர்கள் சேர்நிரயம் பார்க்க விழைவீரேல்
ஆவிவிட வேண்டுமெனும் அல்லலிலை—மேவி
அடைமழையிற் கோட்டை மருதூ ரடையின்
தடையின்றிக் காண்பீர்கள் தான்.

(அ - ரை.) *பாவியர்கள் - தீவினையாளர்கள். அல்லல் - துன்பம்.* (க)

[சென்னைமா நகர்த் தெருவில் வழிநடந்து சென்ற போது பாடியன.]

526. முன்னர்ச் சென்றிடு மோட்டார் முழக்கமும்
பின்னர்ப் போந்திடு பெரும்லாரி பிளிறலும்

துன்னும் ரிக்ஷா சைக்கிளின் துழனியும்
மன்னிச் சென்னையுள் மாறுகொண் டோங்குமால்.

(அ - ரை.) பிளிறல் - பெருங் கதறல். துன்னும்-பொருந்திய துழனிகள் - ஒலிகள். மன்னி - நிலைபெற்று. மாறுகொண் டோங்கும். மாறுபாட்டைக்கொண்டு விளங்கும். (கO)

527. சுற்றி யெங்கணும் பேரொலி சூழ்ந்திடும்
சற்று நிற்கினும் சார்ந்துமே பலர்நமை
எற்றிச் செல்குவர் என்பதை எண்ணியே
உற்று ஓரத்தில் ஒதுங்கியே செல்வனல்.

(அ - ரை.) எற்றிச் செல்குவர் - தள்ளி இடித்துக்கொண்டு போவார்கள். உற்று ஓரத்தில் - ஓரத்தில் உற்று ; ஓரமாகப் போய். (கக)

528. மோட்டார்க் கொதுங்கியும் முன்னும்பின் னுஞ்செலும்
ஆட்டோ ரிக்ஷா அதன்வகைக் கொதுங்கியும்
கூட்ட மாகச்செல் குழுவினுக் கொதுங்கியும்
ஈட்டச் சென்னையுள் என்றுமே செல்வனல்.

(அ - ரை.) ஆட்டோ ரிக்ஷா - மோட்டாரைப் போன்ற ஒரு சிறு வண்டி. கூட்டமாகச் செல்குழு - பலபேர் சேர்ந்து ஒன்றாகப் போகுங் கூட்டம். ஈட்டச் சென்னை - நெருங்கிய சென்னை. (கஉ)

[தாதாசாரியார் என்பவருக் கெழுதிய நடுவெழுத் தலங்காரச் சீட்டுக்கவி.]

529. திருமகட் கொருதானம் என்னவே விளங்கிடும்
திருமுனைப் பாடி நாட்டில்
திகழ்கள்ளக் குறிச்சியில் நியாயமதை வாதிக்கும்
திறமைமிக் குடைய ராகிப்
பெருமையுடன் வாழ்கின்ற தாதாசா ரியரெனும்
பெயருடையர் தமக்குக் கோவல்

பேணிவாழ் திருவெண்ணெய் வடிவே லெனும்புலவன்
பெட்புடன் வரையும் நிருபம்
அருமையுடன் வாமனவை பவமென்னும் நூல்பாடி
அநேகநாள் ஆன தாலே
அக்கசா லையர்புரவி தோல்பகை எனுஞ்சொல்லில்
அமைந்தநடு எழுத்து தவினல்
இருமையுள வெழுத்துதவு பாற்பசுவுங் குழவிகளும்
எங்குமே நிறைந்த தாகி
இரணியமும் மகிழ்வுமுற என்றென்றும் நனிவாழ
இறைவனருள் புரிவ னன்றே.

(அ - ரை.) தானம் - இடம்.

*அக்க சாலையர் - தபதி - ததி - தயிர்*
*புரவி - குதிரை - குரை - ஆரவாரம்*
*தோல் - தொக்கு - தொகு - நிறைந்த*
*பகை - இகல் - இல் - வீடு.*

*'பதிக்க' உதவின் தயிர்தரும் பசு ஆரவாரஞ் செய்குழவிகள் நிறைந்த செல்வம் மகிழ்வுள்ள வீடு ஆகியவைகளை இறைவன் அருள்புரிவன் என்க.* (கூ)

[சென்னைத் தமிழ்வளர்ச்சிக் கழகத்தார்க் கெழுதிய சீட்டுக் கவி.]

530. செந்தமிழை வளர்க்கவெனச் சென்னைதனில் நிறுவியுள
செய்யகழ கத்தி னர்க்குச்
செழுமையுள திருவெண்ணெய் வடிவே லெனும்புலவன்
தெரியவே வரையும் நிருபம்
சேவலங் கொடியனை மறவாத ஞானியார்
திருவடிக் கன்பு பூண்டே
செந்தமிழ்க் கலைகளைத் துரிசற உணர்ந்தபின்
திருக்கோவல் பள்ளி யதனில்

அந்தமுடன் தமிழ்ப்புலமை நடாத்தியே ஒய்வுபெற்
றமைதியுடன் வாழ்கின்ற யான்
ஆர்வமுடன் வாமன வைபவம் எனுநூலே
அழகாக யாத்துள் ளனன்
அன்றியும் மத்திய மண்டல சதகமென
அரியநூ லும்யாத் துளேன்
அதன்பின்னர் யாத்திட்ட அருட்டுறைபுராணமதை
அச்சிடும் நோக்க மோடு

சிந்தைசெய் தேதிரு வாவடு துறையடிகள்
திருச்சமுக மனுப்பி யுள்ளேன்
திரும்பிவந் தேவிடை பகர்வதாய்க் கூறியே
சிவகாசி சென்று ளார்கள்
சென்றசில ஆண்டின்முன் உரைநடையில் வரைந்துள்
திருஞானி யாரின் சரிதம் [ள
சேர்ந்துங்கள் கவனத்தை யீர்த்திருக் கும்எனச்
சிந்தைதனில் எண்ணு கின்றேன்

இந்தவகை யிவைநிற்க தமிழ்ப்பணி புரியவே
எனக்கார்வ மிக்குள் ளதால்
இதயம திரங்கியோர் அலுவலென் றனக்கீயின்
இதன்மூலம் அடியன் தானும்
இணையிலாக் கவிபாடிச் செந்தமிழ் வளர்த்திடுவன்
ஏந்தலாம் இறைவ னருளால்
இன்பஉல கத்தினில் நீங்களும் புகழ்பெற்று
இனிமையுடன் வாழ்கு வீரால்.

(அ - ரை.) *சேவலங் கொடியன் - முருகக் கடவுள். தூரிசற - குற்றமற. யாத்துள்ளனன் - செய்துள்ளேன். திருஞானியாரின் சரிதம் - ஞானியாரடிகள் வரலாறு.* (கச)

## ௩௫௦. அ. கந்தசாமிப் பிள்ளை

[இவர் புலவரேறு அ. வரதநஞ்சைய பிள்ளையின் உடன் பிறந்தவர்.]

[திராவிட நாட்டைக் குறித்துப் பாடியது.]

531. கடத்தை அமுதம் பொதிந்தன்ன கொங்கைக் [கவுரிபங்கன்
படத்தை அமுதம் பொழிகதிர் பால்விரி பாப்பணியோன்
நடத்தை அமுத மொழிகாண ஆடினன் நாடுதிரா
விடத்தை அமுதென்று கூறிடு மேஇந்த மேதினியே.

(அ - ரை.) *கடத்தை - குடத்தை. கவுரி - உமையவள். பாம்பணி - பாம்பாகிய அணி. நடம் - கூத்து. அமுதமொழி - அமுதம்போன்ற மொழியையுடைய உமையவள். திராவிடம் - தமிழ்.* (௧)

## ௩௫௧. வை. தட்சணாமூர்த்தி எம். ஏ.

[தென்னாற்காடு மாவட்டத்தில் பரங்கிப் பேட்டையிற் பிறந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றவர். திருச்சி தூய சூசையப்பர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றுகின்றார். முன்னேற்றப் பாதையிலே, தமிழ்த் திருமணம், தமிழ்க் கவியுலகில் மறுமலர்ச்சி, நல்ல தமிழ் எழுதுங்கள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், இன்பமாக வாழ்வோம் முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[கவியரசர் தாகூரின் நூற்றாண்டு விழாவிற் பாடியன.]

532. மறைகூறும் மணிச்சொற்கள் யாவுங் கோத்து
மன்பதைதான் வாழ்கின்ற மார்க்கம் எண்ணி
நறைபழுத்த தீஞ்சொல்லால் கீதாஞ் சலியை
நவையறவே உலகுக்குப் பரிசாய் நல்கி

முறைவழுவா முதுபுலவர் நோபல் பரிசை
மூத்தகுடி புகழெய்த முதலில் பெற்ருர்
இறைபழுந்த இந்தியர்க்கு நாட்டுப் பாட்டாய்
இயற்றியிடு சனகணவும் இனிதே யம்மா.

(அ - ரை.) மன்பதைகள் - மக்கட் பரப்பு. நறைபழுத்த- இனிமை மிகுந்த. கீதாஞ்சலி - தாகூருடைய நூல்களில் ஒன்று. நவையற - குற்றமில்லாமல். முதுபுலவர் - பழம்பெரும் புலவர். நோபல் பரிசு - வெளிநாட்டார் அறிவுத் துறைக்கு வழங்கும் பரிசுகளில் ஒன்று. மூத்தகுடி - பழங்குடி. இறைபழுத்த - தலைமைப் பண்பினிடத்தில் அன்புமிகுந்த. சனகணவும் - 'சன கணமன அதிநாயக சயகே' என்று தொடங்குகிற நாட்டு வாழ்த்துப் பாடல். (க)

533. விசுவத்துப் பாரதியாம் வித்தைக் கழகம்
விதவிதமாய்ப் பலநாட்டுக் கலைஞர் கற்க
இசைபெற்று இன்றிலங்கும் நிலையே தாகூர்
இணையற்று இந்தியர்க்குத் தந்த செல்வம்
நசையற்ற மனத்தோராய் நாளும் கவிஞர்
நாட்டிலுள கிராமத்தின் நிலையை எண்ணி
அசைவற்ற அரும்பணிக்குச் சீநி கேதன்
ஆயதொரு பணிமனையை ஆக்கித் தந்தார்.

(அ - ரை.) விசுவத்துப் பாரதி - விசுவபாரதி. நசையற்ற - பற்றில்லாத. பணிமனை - எளியவர்கட்குத் தொண்டு செய்யும் இல்லம். (உ)

534 வந்தனையால் வாழ்த்திடுவோம் கவிஞர் ஏற்றை
வங்கத்தின் நன்கொடையே வாழ்க வாழ்க
சிந்தனையால் செயலாலே சிறப்பைப் பெற்றுச்
சிற்றில்லாய் இவ்வுலகை விடுத்தே இன்று
முந்தையர்கள் ஆயிரமாய் முயங்கி வாழும்
மூதூர்க்குச் சென்றுவிட்டாய் முதல்வோய் வாழி

அந்தணரே அருங்குருவே அமர வாழி
அனைத்துலகும் பின்பற்றும் நெறியே வாழி.

(அ - ரை.) கவிஞர் ஏறு - கவிஞர்களுட் சிறந்தவன். வங்கத்தின் - வங்கநாட்டின். சிற்றில்லாய் - சிறிய வீடாக. முந்தையர்கள் - முன்னோர்கள். முயங்கி - சேர்ந்து. மூதூர்க்கு - பழமையான ஊராகிய விண்ணுலகத்திற்கு. (௩)

## கடுஉ. பண்டிதரத்தின அ. சுருளியாண்டிப் பாவலர்

[மதுரைமாவட்டம் கோம்பை என்னும் ஊரில் கன்னடம் பேசும் ஒக்கலியர் (கௌடர்) மரபில் இவர் பிறந்தார். செந்தமிழ் மொழியை நன்கு கற்றுச் சீரிய புலமையடைந்து பாவியற்றுதலில் வன்மை பெற்றார். அதனால் பாவலர் என்னப்பட்டார். அடையாறு ஆரோக்கிய ஆச்சிரமத்தார் இவருக்குப் பண்டித ரத்தினம் என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கியுள்ளனர். நாட்டுப் பாட்டு, சங்கீதமஞ்சரி, மெய்ப்பொருள் நாயனார் சரித கீதங்கள், முருகன் இசையமுதம், ஐயப்பன் அஞ்சலிப்பா, குறுந்தொகை விருந்து முதலியன இவருடைய நூல்கள்.]

[தம்முடைய தமிழ் வேட்கையைக் குறித்துப் பாடியன.]

535. முன்னோனே தமிழ்மொழியை உலகத்தின்
மொழிகளிலே முதன்மை யாக்க
மன்னோனே மொழிவலியால் வாழ்னேனே
தமிழ்ப்பயிரை வளர்த்தி டேனே
உன்னேனே தமிழுயர்வை உலகத்தார்க்
கிதன்பெருமை உரைத்தி டேனே
என்னேநான் தமிழ்மகனாய் இகமதனில்
பிறந்தபயன் இஃதல் லாதே.

(அ - ரை.) முன்னேனே - எண்ணமாட்டேனே? மன்னேனே - நிலைபெறமாட்டேனே? இகமதனில் - இவ்வுலகத்தில். (க)

536. நாடேனே நற்றமிழை நாடோறும்
நான்மகிழ்ந்து நாடி நாடிப்
பாடேனே யாழிசைத்துப் பண்ணுடனே
பைந்தமிழைப் பாடிப் பாடி
ஆடேனே அகமகிழ்வாய் அபிநயத்தோ
டநவரதம் ஆடி ஆடிக்
கூடேனே தமிழன்பர் கூட்டத்தில்
தினந்தினமுங் குவல யத்தே.

(அ - ரை.) அநவரதம் - எப்பொழுதும். குவலயத்தே - உலகத்திடத்தே. (உ)

537. கூறேனே தமிழ்ப்பெருமை அனைத்தினையுங்
குவலயத்தில் கூறிக் கூறி
ஆறேனே மெய்த்தமிழன் ஆகேனே
அயல்மொழியில் அரிய கல்வி
தேறேனே தெருவெல்லாம் செந்தமிழின்
முழக்கமது செழிக்கக் கண்டு
வீறேனே தமிழ்த்தாயின் மிகுபுகழை
நாடோறும் விளம்பித் தானே.

(அ - ரை.) ஆறேனே - அமைதிபெறமாட்டேனே? அரிய கல்வி தேறேனே - அரிய கல்வியைக் கற்றுத் தெளிவடையமாட்டேனே? (ந)

538. எண்ணேனே முத்தமிழை எண்ணரிய
தமிழ்மலரின் இன்பத் தேனை
உண்ணேனே இரவுபகல் ஓயாமல்
வாரியெடுத் துண்டே தொண்டு

பண்ணேனே தமிழன்னை பழம்புகழைப்
பண்டேபோல் பாரின் மீது
கண்ணேனே கன்னிமனங் கனியேனே?
தாய்மானங் காத்தி டேனே?

(அ - ரை.) பண்டேபோல் - முற்காலத்தைப்போல். கண்ணேனே - கருதமாட்டேனோ. கண்ணி - கருதி. (ச)

## கடுரு. சு. உமைதாணுப் பிள்ளை

[இவர் நாஞ்சில் நாட்டில் உள்ள தேரூரில் புகழ் பெற்ற குடும்பத்தில் சுப்பிரமணிய பிள்ளை என்பவருக்கும் ஈசுவரவடிவு அம்மாள் என்பவருக்கும் புதல்வராகத் தோன்றியவர். செந்தமிழை நன்கு கற்றுப் புலமை பெற்றவர். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் உறவினர். கன்னியாகுமரி மான்மியம், சுசிந்தை மான்மியம் முதலியன இவருடைய நூல்கள். இவர் தனிப் பாடல்கள் பல பாடியுள்ளார்.]

[விவேகாநந்தரைப் பாராட்டிப் பாடியன.]

539. ஏர்மல்கு வங்கநிலம் ஈன்ற செல்வன்
எம்ராம கிருட்ணன்தான் வணங்குஞ் சீலன்
பார்மல்கு விசுவன்தான் பயந்த சிங்கம்
பாரதத்தின் புகழெங்கும் வளர்த்த செம்மல்
சீர்மல்கு வீரேசச் செல்வப் பேரான்
செப்பரிய நரேந்திரநாத் தத்த னென்போன்
தார்மல்கு மெய்த்துறவி விவேகா நந்தன்
தவயோகி தாள்மலரைத் தாழ்கு வோமே.

(அ - ரை.) வங்க நிலம் - வங்காள நாடு. நரேந்திரன் என்பது விவேகானந்தருடைய இளமைப் பெயர். (க)

540. நாடறிய வேதாந்த நன்செய் ஓம்பி
நற்கலைகள் இசைநடனம் பிறவுந் தேர்ந்தோன்

வீடறியும் நன்னெறியை விளங்கக் காட்டும்
　　வித்தகரும் புகழுகின்ற மேதை யானோன்
பீடறிந்த பாரதத்தின் பெருமை யெல்லாம்
　　பிறநாட்டில் பேசியந்நாள் புகழ்வ ளர்த்தோன்
தேடரிய விவேகாநந் தன்பொன் மொழியைச்
　　சிந்தையிலே இருத்தியென்றுஞ் சிறக்க வாழீர்.

(அ - ரை.) நன்செய் - நல்ல நிலம். வீடு - மோட்ச வீடு. மேதை - அறிவுடையோன். பீடு - பெருமை. (உ)

## கடுச. பெ. கோவிந்த மூப்பனார்

[சீவில்லிபுத்தூரிலே சாலிய வகுப்பில் பிறந்தவர். இளமையில் தம் குலத்தொழிலாகிய கலை நெய்தலோடு கலை யெய்தலையும் தம் முயற்சியினால் மேற்கொண்டிருந்து; பின் சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் கல்லூரியிற் சேர்ந்து உ. வே. சாமிநாதய்யர் முதலிய தமிழறிஞர்களிடம் கல்விகற்றுத் தேர்ந்து புலமைச் சிறப்படைந்தவர். தமிழாசிரியராகத் தொண்டாற்றியவர். தமிழ்ப் பதிற்றுப்பத்து, முடிமன்னர் மூவர், கொடைமன்னர் முதலிய நூல்கள் செய்தவர்.]

[கல்விகற்று முடிந்தபின் தில்லையையும் நண்பர்களையும் பிரிந்துசெல்ல நேர்ந்தபொழுது பாடியது.]

541. கூத்தப் பிரானைக் குரவரைக் கல்விநலம்
　　பூத்தபல நண்பரைப் போக்கியுயிர்—நீத்த
　　உடற்செலவு போல்கின்றேன் ஒகொடியை ஊழே
　　விடற்செய்தாய்க் கென்னே வினைவு.

(அ - ரை.) உயிர் நீத்த உடல் செலவுபோல்கின்றேன் - பிணஞ் செல்வதுபோல் செல்லுகின்றேன். (க)

[செந்தமிழ் நாட்டினர் தவச்சிறப்பைப் பற்றிப் பாடியது.]

542. மின்னென மாயும் மெய்யினை வெறுத்து
விளம்பிடும் மெய்யினை நாடும்
இன்னல்கள் புரியும் பொருள்களை வெறுத்தே
இன்புசெய் செம்பொருள் தேடும்
புன்மரம் போர்த்த வீட்டினை வெறுத்துப்
போக்கறு வீட்டினைக் கூடும்
செந்நெறிச் சென்று நன்பயன் கொள்ளும்
செந்தமிழ் நாட்டினர் தவமே.

(அ - ரை.) *செந்தமிழ் நாட்டினர் தவம்; மெய்யினை நாடும் செம்பொருள் தேடும், வீட்டினைக் கூடும் என்று கூட்டுக.* (உ)

## கருரு. வித்துவான் ஞா. தேவநேயப் பாவாணர்

[பாண்டிவள நாட்டிற் சங்கர நயினார் கோவிலில் 1902ஆம் ஆண்டிற் பிறந்தார். தாமே தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். தமிழாசிரியராகப் பணிபுரிகிறார். முதல் தாய் மொழி, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், திராவிடத் தாய், பழந்தமிழாட்சி முதலியன இவர் எழுதிய நூல்கள்.]

[திருவரங்க நீலாம்பிகை யம்மையாரின் பிரிவு குறித்துப் பாடியன.]

543. பட்ட காலிலே படுமெனும் பழமொழிப்
பட்ட வரங்கனார் பத்தினி பிள்ளைமைப்
பட்ட வெண்மரை விட்டிறந் துண்மைகைப்
பட்ட போதியான் பட்டதையென் சொல்வேன்.

(அ - ரை.) *பிள்ளைமைப்பட்ட - பிள்ளைகளாகவுள்ள. யான் பட்டதை - யான்பட்ட துன்பத்தை.* (க)

544. தனித்தமிழ் இயக்கினைத் தாங்குவார் தம்மையே
தனிப்பட வளைத்தனன் தகையில் கூற்றுவன்
இனித்தமிழ் என்னிலை எய்து மோவெனப்
பனிப்பவர் தீக்குறி பார்ப்ப தற்கிதோ.

(அ - ரை.) *இயக்கு - நடை. கூற்றுவன் - யமன். பனிப்பவர் - நடுங்குபவர்.* (உ)

545. புதுவதே யன்றுயிர் போவ தியல்பென
முதுவரும் முன்னரே மொழிந்த துண்மையால்
இதுவரை யிருந்தமைக் கிறையை யேத்தியே
கதுமென யாஞ்செயுங் கடமை யாற்றுவோம்.

(அ - ரை.) *முதுவர் - பேரறிஞர்கள். கதுமென - விரைவாக.* (௩)

## கருரு. பாலகவி வே. இராமநாதன் செட்டியார்

[மதுரை முதலாகப் பல சிவாலயத் திருப்பணிகள் செய்த வயி. நாக. ராம. நாகப்ப ஐயா பரம்பரையைச் சேர்ந்தவர். கோனுபட்டு மகாதேவ முருகப்ப செட்டியாரின் இளைய புதல்வர். குன்றக்குடிச் சுப்பிரமணியர் தோத்திரப் பதிகம், திருஞான சம்பந்தர் பதிகம், மயூரகிரியுலா, திருஞான சம்பந்தர் இரட்டை மணி மாலை, திருப்பரங்கிரி மும்மணிக்கோவை, நடராசர் நவ மணி மாலை, குமரகுருபர சுவாமிகள் போற்றித் திரு அகவல், ஞானசம்பந்தர் நான்மணி மாலை, திருச்செந்தில் இருபா இருபஃது, ஞானசம்பந்தர் நவமணி மாலை, ஆவினன்குடி அந்தாதி, ஞானசம்பந்தர் திருப்பள்ளியெழுச்சி, திருவேரக வருக்கமாலை, ஞானசம்பந்தருலா, ஞானபுரீசுவர சுவாமி பதிகம், குன்றுதோருடல் வெண்பா, கோமதியம்மை பஞ்சரத்தினம், ஞான சம்பந்தர் ஒருபா ஒருபஃது, பழமுதிர்சோலை பதிற்றுப் பத்தந்தாதி, ஞானசம்பந்தர் ஆற்றுப்படை, திருவால

வாய் வெண்பா வந்தாதி, சொக்கநாதர் விண்ணப்ப மாலை, இசைப்பாட்டு, தமிழிசைப் பாடல்கள் முதலிய பல நூல்கள் செய்தவர். மிக இளமைக் காலத்திலேயே பாடல் செய்யும் ஆற்றல் பெற்றிருந்தமையின் பாலகவி என்னுஞ் சிறப்புப்பெயர் பெற்றவர். தருமபுர ஆதீனப் புலவர்களில் ஒருவர். நல்ல சொற்பொழிவாற்றலுடையவர்.]

[தமிழ்ப் புலவர்களில் முதன்மையாகத் தேறுபவர்கட்குத், திருப்பனந்தாள் காசிமடத் தலைவர், ஆண்டு தோறும் ஆயிரம் வெண்பொற் காசளித்தலைப் பாராட்டிப் பாடியது.]

546. முன்னுவிற் பாண்டிய மன்னர் புலவரை மூன்றுசங்கம்
பன்னுள் நிலவுற வைத்தா தரித்தனர் பாரிலவர்க்
கென்னேநின் வள்ளன்மை யாண்டுக்கொ ராயிரம்
[ஈகின்றனை
பொன்னூர் பனசை வருசாமி நாதப் புகழ்முனியே.

(அ - ரை.) *மூன்று சங்கம் - முதல் இடை கடை என்னும் முச்சங்கம்.* (க)

[வீரவநல்லூர் விழாவில் தேரின் உருளைகள் நிலத்திற் புதைந்தபோது பாடியது.]

547. போதுமுன் வன்கண்மை பூமிநா தாசிறியேம்
ஏதுபிழை செய்தோம் எமையிடறி—வாதுசெய்தாய்
நின்றுவ ருந்துவது கண்டு நிலைபெயரா(து)
இன்றுதிருத் தேர்இருந்த தேன்.

(அ - ரை.) *வன்கண்மை - அருளின்மை.* (உ)

[*'தை மாசி பங்குனி மாதம்'* என்னும் ஈற்றடிக்குப் பாடியது.]

548. துணிகொடுத்துச் சொல்லுவதுந் தூயருளு ளொன்று
மணியடித்துச் செல்லுவதும் வாயில்—தணிநிலைகள்

தம்மில் உரைப்பதுவும் சங்கனிடம் சார்வதுவும்
தைம்மாசி பங்குனிமா தம்.

(அ - ரை.) துணிகொடுத்துச் சொல்லுவது - தை. தூய ருளொன்றும் - மாசி. மணியடித்துச் செல்வதும் - இபம், யானை. வாயில்தணி நிலைகள் தம்மில் உரைப்பதுவும் - குனி. சங்கனிடம் சார்வது - மாது. அம் - விகுதி. (௫)

[எய்தற்குரிய இல்லாளின் சிறப்பைக் குறித்துப் பாடியது.]

549. நாட்டுமொழி நூல்கள்பல பயின்றறிவு
பொறையடக்கம் நட்புப் பொற்புக்
காட்டுபுகழ் நிறைநாண மடமச்சம்
பயிர்ப்பிவையால் கவினி நிற்கும்
சூட்டுமலர்ச் சுரிகுழலாள் ஒருத்திமனை
யாம்பேறு சூழ்தல் வேண்டும்
ஈட்டுதவம் பெரிதுடையார் தமக்கேயிச்
சிறப்புடைமை எய்துமா லோ.

(அ - ரை.) பயின்று - படித்து. பொறை - பொறுமை. பொற்பு - அழகு, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு இந்நான்கும் பெண்களுக்குரிய முக்கிய குணங்கள். கவினி நிற்கும் - சிறப் படைந்து விளங்கும். சுரிகுழலாள் - பெண். (௬)

[அட்டநாகபந்தம்.]

550. ஞானந் திகழ நலமா நிலைதரு
மான புனித மலருமே—யானதிரு
வாழவழி யான மதிமிக் கழகாமே
காழி வருவான் கழல்.

கருஎ. புத்தனேரி ரா. சுப்பிரமணியன்

[இவர் திருநெல்வேலியில் உள்ள புத்தனேரியில் 1922ஆம் ஆண்டிற் பிறந்தார். தமிழ்நாட்டுச் சிறு

கதைகள், பொங்கல் விருந்து முதலியன இவர் எழுதிய நூல்கள்.]

[உ. வே. சாமிநாதையரின் தண்டமிழ்த் தொண்டை வியந்து பாடியது.]

551. ஆழி விழுங்கியபின் செந்தீ அருந்தியபின்
பாழுங் கறையான் பருகியபின்—சூழ்நிலையில்
மீத்திருந்த ஏடுகளை நூலாக்கித் தந்ததமிழ்த்
தாத்தாவே சாமிநா தன்.

(அ - ரை.) ஆழி - கடல். சூழ்நிலையில் - தற்கால உலக நிலைமையில். மீத்திருந்த - எஞ்சியிருந்த. (க)

[ரா. பி. சேதுப்பிள்ளையைப் பாராட்டிப் பாடியது.]

552. வாவி நிறைந்து மதகிற் பொழிவதுபோல்
பாவின் சுவைபொழியும் பண்பாளன்—மேவியசீர்
அன்பாளன் காராளன் ஆராய்ச்சி யாளனுயர்
தென்பாங்கில் வல்லாளன் சேது.

(அ - ரை.) வாவி - தடாகம். பாவின் - பாட்டின். காராளன் - வேளாளன். (உ)

## கடுஅ. வளவன் பாண்டியனார்

[திருவரங்கம்பிள்ளை யவர்களின் பிரிவு குறித்துப் பாடியன.]

553. அன்று திருவரங்கா ஆறு அருங்கடலுள்
என்று தெமையாழ்த்தி யெண்ணமெலாம்—மண்ணுகப்
போகப் புகுந்தனையோ பொன்றுடும் நன்றுடே
ஆகத் தமிழமைச்சாய் ஆங்கு.

(அ - ரை.) ஆறு - அமையாத அருங்கடலுள் - துன்பக் கடலுள். (க)

554. முத்தமிழே எத்திசையும் முந்தப் புகழ்மணக்க
வைத்ததனே டுன்புகழை வைத்தனையே— பத்தினியாள்
நீலாள் நினக்குகந்த நீரால் நினைப்பிரிதல்
ஏலாள் எனல்மறந்த தென்.

(அ - ரை.) நீலாள் - நீலாம்பிகையம்மையார். நீரால் - தன்மையால். ஏலாள் - தாங்கமாட்டாள். (உ)

## கருகூ. வி. அ. பரிமேலழகர்

[திருக்குறளுக்கு உரைசெய்த பரிமேலழகர் அல்லர் இவர். சோழநாட்டிலே தஞ்சைக்கடுத்த விண்ணமங்கலத்தில் சைவத் தமிழர் குலத்தில் தோன்றியவர். தமிழ்ப் புலமைத் தேர்விலே தேறிக் கோனுப்பட்டு, வாலாசாபாத், தூத்துக்குடி முதலிய இடங்களிலே தமிழாசிரியராகத் தொண்டு செய்து, தற்சமயம் திரிசிராப்பள்ளி, அர்ச் சூசையப்பர் கல்லூரியில் தமிழ்ப்பணி செய்துகொண்டிருக்கிறார்.]

[உள்ளத் துணர்ச்சியை வெளிப்படுத்திப் பாடியது.]

555. நன்னிதியாம் நற்றமிழின் நலம்பரவ வேண்டும்
நாடெங்கும் நயவஞ்சர் நலிந்தொழிய வேண்டும்
மன்னுலகில் அருளாட்சி மாண்பொளிர வேண்டும்
மனையினிலே பெண்மைநல மலிந்திடுதல் [வேண்டும்
அன்னைபோல் அழுங்குழவிக் கமுதளித்தல் வேண்டும்
அறவழியே நிறைவான அன்புசெயல் வேண்டும்
பொன்னுலக வாழ்வுநலம் பூரணமாய் மக்கள்
புவியினிலே பெற்றிடவே புனிதனருள் வேண்டும்

(அ - ரை.) நன்னிதி - இனிய செல்வம். நலிந்து - மெலிந்து. மலிந்திடுதல் - மிகுதல். புனிதன் - இறைவன். (க)

## கசுo. அம்பிகாபதிப் பாரதி

[இவரைப்பற்றிய குறிப்புக்கள் கிடைக்கவில்லை.]

[பலவான்குடி மெ. வெ. வேலப்ப செட்டியார் மீது பாடியன.]

நேரிசை வெண்பா

556. பொற்பாற் குமணன்போல் போசன்போல் மாவலிபோல்
கற்பகம்போல் பாவலர்க்கீ காவலனே—அற்புடனே
தேமானும் கம்பன்பாத் தேர்ந்துதவும் வேலப்ப
சீமானே நாளுஞ் செயம்.

(அ - ரை.) *பொற்பு - அழகு. அற்பு - அன்பு. தேமானும் - தேனைப்போல் இனிக்கும். செயம் - வெற்றி.* (க)

கட்டளைக் கலித்துறை

557. மயிலால் உயர்ந்தனன் சண்முகன் நாள்தொறும் [மாமரமார்
குயிலால் உயர்ந்தனன் மன்மதன்பைந்தமிழ் கூறுல்கில்
பயிலால் உயர்ந்தனன் வாரிதிஉண்டவன் பாவினுக்கீ
கையினுல் உயர்ந்தனன் வேலப்பன் என்றுசொல் [காவலனே.

(அ - ரை.) *பயில் - பழக்கம். வாரிதி உண்டவன் - அகத்தியன். பாவினுக்கு ஈகையினுல் - பாடல்களுக்கு நன்கொடை வழங்குவதால்.* (உ)

## கசுக. அருணசடை தேசிகர்

[இவரைப்பற்றிய குறிப்புக்கள் கிடைக்கவில்லை.]

[நன்னூல் விருத்தியுரை நூல் ஒன்று வாங்கித்தர வேண்டுமென்று பாடியது.]

நேரிசை வெண்பா

558. நன்னூல் விருத்தியுரை நல்கிடவேண் டும்எனக்குப்
பன்னூல் அறிந்தவனைப் பாடினேன்—எந்நூலும்

போற்றுபல வான்குடிவாழ் புண்ணியவே லப்பனெனும்
ஏற்றமிகும் வள்ளலே இன்று.

(அ - ரை.) பன்னூல் - பலநூல். (௧)

## ௧௬௨. சிதம்பர பாரதி

[இவரைப்பற்றிய குறிப்புக்கள் கிடைக்கவில்லை.]

[பலவான்குடி வேலப்ப செட்டியார்மீது பாடியது.]

559. வள்ளியெங்கே தெய்வமட மாதெங்கே வெற்றியெலாம்
கொள்ளுமயிற் சேவற் கொடியெங்கே—தெள்ளுதமிழ்
ஏலப் படிக்குமுனை இவ்வுலகில் நாள்தோறும்
வேலப்பன் என்றுரைக்கு மே.

(அ - ரை.) ஏல - பொருந்த. (௧)

## ௧௬௩. பு. சி. புன்னைவனநாத முதலியார்

[இவர் பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராயும் கழகப் புலவராயும் பணிபுரிந்தவர்.]

[தமது திருமணத்திற்கு வருமாறு நண்பர்கட்கனுப்பிய திருமண அழைப்புப் பாடல்.]

560. திருமக ளுடன்கலை மகளுமொரு சேரவே
திகழுநெல் லைக்க ணிக்குச்
செழுவதன மாயியம் பத்தகு மெழில்திகழ்
திருப்புத்த னேரி நகரில்
செப்பரும் இருவகைச் செல்வமும் மேலைநான்
செய்தவப் பயன தாகத்
திருநெறிய தமிழ்முறை சிவாகமா திகளையே
சிந்திக்கும் பேறு பெற்றுப்

போருவிலா அன்பர்கட் கருள்செயுஞ் சங்கரன்
புகழ்கமழ் தாட்பூ சையால்
புன்னைவன நாதனென் போன்பெற்ற பேறெனப்
புகழ்வேளாண் குலதி லகனாய்
புகழ்தருஞ் சால்டசிஸ் டெண்டினிஸ் பெக்டராய்ப்
பூதலத் தோர்பு கழவே
புரிந்தரன் தாளிணை செல்சிதம் பரநாத
புனிதவேள் புகழ்வி ளங்க
வருமிரு குமாரருள் அவனியிற் சிரேட்டனாய்
மாண்டமி ழறிவி னோடு
வார்கடற் புவியுளோர் போற்றுமாங் கிலமுருது
மாண்புடன் கற்ற புன்னை
வனநாத வேளன் புடன்விடு மணவிதழ்
மகிழ்ந்தன்பர் இனிது காண்க.
வளர்பரீ தாபியா வணியிரு பானென்பான்
வாள்வெள்ளி அத்த மீனின்
மருவுமெல் லுதயத்துச் சிங்கலக் கினமதின்
மணம்புரிவ தாலு ளன்பு
வைத்தெங்கள் திருமணம் கண்டுநல் லாசியும்
வழங்குக என்று நும்மை
மாதமிழ் வளர்ச்சியே கருதுநல் லீர்சைவ
மதத்தினிற் பற்று முடையீர்
மணம்புணர் கிளைவீ ரைக்குறிச் சிக்கன்று
வந்தருள அழைத்து ளேனே.

*(அ - ரை.) இருவகைச் செல்வம் - கல்விச் செல்வம், பொருட்செல்வம். சால்ட் அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர் - அலுவலின் பெயர், ஆங்கிலச் சொல். அரன்தாளிணை செல் - இறைவன் திருவடியை அடைந்த.* (க).

[சி. கே. சுப்பிரமணிய முதலியாருக்குப் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றபோது பாடியது.]

நேரிசை வெண்பா

561. ஆயிரக்கால் மண்டபத் தன்பாய்த் திருத்தொண்டர்
தூயவர லாறுரைத்த தொன்மையினில்—பாயசீர்ச்
சுப்ரமணி யன்விரித்தான் சொல்புகழ்நீள் ஆயுளுடன்
திப்பியமா வாழி சிறந்து.

(அ - ரை) திருத்தொண்டர் தூயவரலாறு - பெரிய புராணம். திப்பியம் - மேன்மை. (உ)

[முகவை. பா. முத்துராமலிங்க சேதுபதியை 26-3-1909இல் காணச்சென்றபோது பாடியன.]

நேரிசை வெண்பா

562. சீராரும் பாஸ்கரற்குத் தெள்ளமுத மாகவந்த
பேர்முத்து ராமலிங்கா பேசுவேன்—கூரார்ந்த
வேலா யுதத்தனுடன் வேழமுகத் தான்மூன்று
சூலா யுதனுந் துணை.

(அ - ரை.) வேலாயுதத்தான் - முருகன். வேழமுகத்தான் - ஆனைமுகக் கடவுள். சூலாயுதத்தான் - சிவபெருமான். (௩)

563. பேரரசு தாங்கிப் பெருமைவகிக் கும்பெரிய
சீராளா நானென்று செப்புகின்றேன்—பேர்வாய்ந்த
பாண்டிநாட் டார்க்கெல்லாம் பாஸ்கரனுய் நின்றன்(று)
ஆண்டவா றெம்மையுமே ஆள்.

(அ - ரை.) சீராளன் - சிறப்பினை ஆள்பவன். பாஸ்கரன்- கதிரவன். (௪)

564. சீராரும் பூங்கமலத் தெள்ளமுதாள் நின்னடியைச்
சேரானே யானல் சிறப்பில்லை—பாராளும்

ஆதிநா ராயணரை அன்றண் டியபின்னர்த்
தாதியா ளிப்போ தான்.

(அ - ரை.) தெள்ளமுதாள் - திருமகள். தாதி - வேலைக்காரி. (ரு)

565. என்னிற் சிறிய னெடுத்தெழுதும் பாக்களைநீ
கன்னிற் கருமணியாக் காப்பாயே—பண்ணூரும்
தேவாரப் பாமொழிக்குப் பாலளித்த தேவியென்றன்
தாவாக் களையுமொரு தாய்.

(அ - ரை.) பாலளித்த தேவி - ஞானசம்பந்தருக்குப் பால் அளித்த இறைவி. தாவா - வழக்கு. (சு)

566. வெள்ளிக் கிழமையின்று வேந்தேநின் னைக்காணப்
பிள்ளையான் செய்ததவம் பேசுவாய்—உள்ளில்
பெரியோரைக் கண்டுநிதம் பேசுவதே மேன்மை
தெரிந்தேன் இதைநான் தெளிந்து.

(அ - ரை.) உள்ளில் - எண்ணுமிடத்தில். (எ)

[பொ. பாண்டித்துரைத் தேவர் இராமநாதபுரம் ஆசிரியர் சங்க நான்காவது ஆண்டுவிழாவில் தலைமை தாங்கியபொழுது 1910இல் பாடி விளக்கியது.]

567. திங்கள் வதனத்தான் செந்தமிழ்ப் பூவுலகில்
மங்காப் புகழுறச்செய் வண்மையான்—சங்கம்
விழைந்தான் பிரசங்க மாரி மொழிந்தான்
தழைந்தது தண்டமிழும் தான்.

(அ - ரை.) வண்மையான் - வளவின செய்கையை உடையவன். (அ)

[ஷை தேவர் அவர்கள் 1911 கார்த்திகையிற் காலஞ் சென்றதும் பாடிய இரங்கற்பாக்கள் பதினறில் சில.]

568. கன்னல்மொழிக் குருகுவமோ கலைநலத்திற்
குருகுவமோ கற்ருர்போற்றும்
தென்னன்மொழி வளர்சங்கச் சிறப்புநினைந்
துருகுவமோ சீமானேநீ
பன்னருஞ்சீர் வாய்ந்ததமிழ் வளர்த்ததற்கே
உருகுவமோ பாராள்வேந்தே
என்னநினைந் தெதற்கிரங்கி இருநிலத்தில்
யாம்தளர்வேம் இசைத்திடாயே.

(அ - ரை.) *கன்னல் மொழி - கரும்புபோன்ற இனிய மொழி.* (௧)

[நெல்லை மாணவர் தமிழ்ச் சங்கத்தின் 3ஆவது ஆண்டு நிறைவிழா 29-12-1913இல் தென்திருப்பேரை வானமாமலை ஆஸ்தான வித்துவான் ஸ்ரீ அனந்த கிருட்டிணையரவர்கள் கவிச்சிலேடையைப் பாராட்டிப் பாடியது.]

569. வெண்பாச் சிலேடை விதத்தால் தமிழருமை
ஒண்புலவர் போற்ற உரைத்தனன்—நண்பர்
மனமுருக வானமலை வாழனந்த கிட்ணன்
தினம்பெருகி வாழி சிறந்து.

(அ - ரை.) *ஒண்புலவர்-ஒள்ளிய அறிவினையுடைய தமிழ்ப் புலவர் வானமலை - நான்குநேரி என்னும் வானமாமலை.* (௧0)

## ௧௩௪. கு. சுந்தரமூர்த்தி

[இவர் திருச்சி மாவட்டம் முசிறிப் பிரிவில் உள்ள தோளூர்ப்பட்டி என்னுஞ் சிற்றூரில் 1930ஆம் ஆண்டிற் பிறந்தவர். பல்கலைக் கழக இடைநிலை வகுப்புவரை பயின்றபின் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியிற் புலமைக் கல்விகற்றுப் புலவராகி அக்கல்லூரியிலேயே ஆசிரியராகப் பணிபுரிந்து வருகிருர். தொல்காப்பியச்-

சொல்லதிகார இளம்பூரணர் உரைவிளக்கம், நச்சினார்க்கினியர் உரைவிளக்கம், தெய்வச் சிலையார் உரை விளக்கம் கல்லாடர் உரைவிளக்கம் முதலியன இவருடைய நூல்கள்.]

[அறவாழ்வு பொருள் வாழ்வு முதலியவைகளைக் குறித்துப் பாடியன.]

570. அறவாழி அந்தணன்தாள் போற்றல் வேண்டும்
அழுக்காறு வெகுளியவா நீக்கல் வேண்டும்
அறநெறிவாழ் புதல்வரையே பெறுதல் வேண்டும்
அன்புடனே வருவிருந் தோம்பல் வேண்டும்
பிறர்போற்ற வாழ்வாங்கு வாழ்தல் வேண்டும்
பின்எண்ணப் பெறுவர்நல் தெய்வ மாக
அறவாழ்வு இவையென்பார் தமிழர் முன்னோர்
அருளாளர் வள்ளுவனார் என்பேன் என்றும்

(அ - ரை.) *அறவாழி அந்தணன் - கடவுள். அழுக்காறு - பிறர் செல்வத்தைக்கண்டு பொறாமை. அவா - பொருளிற்பற்று. விருந்தோம்பல் - விருந்தினர்க் குணவு முதலியன அளித்துப் பாராட்டுதல்.* (க)

571. இவ்வுலக வாழ்வெண்ணிற் செல்வம் வேண்டும்
இனியகல்வி நல்லகுணம் என்றும் வேண்டும்
இவ்வுலகோர் போற்றிடவே அமைச்சர் மன்னர்
இனியபொருள் தந்திடுநல் நாடு வேண்டும்
இவ்வுலகில் நல்நட்பு என்றும் வேண்டும்
ஈட்டியநற் பொருள்களையும் நெறியே என்றும்
இவ்வுலகோர் போற்றிடவே துய்த்தல் வேண்டும்
இன்குறளின் பொருள்வாழ்வு இதுவே என்பேன்.

(அ - ரை.) *வாழ்வு எண்ணில் - வாழ்வை விரும்பினால். துய்த்தல் - நுகர்தல். இன்குறள் - இனிய திருக்குறள்.* (உ)

572. உள்ளத்தின் உணர்ச்சியினுல் என்றும் ஒன்றி
உண்மையாய் இல்வாழ்க்கை வாழ்தல் நன்றும்
உள்ளொன்று புறமொன்று வைத்து நாளும்
உடலின்பம் வேண்டுகிற வாழ்வு தீதாம்
ஒள்ளியோர் நீத்தவவா தனையே நீத்து
உயர்ந்தோராய் வாழ்ந்திடுதல் நன்றும் என்றும்
வள்ளுவனுர் தெளிந்துரைத்தார் இன்பம் வீட்டு
வாழ்வதனை என்றுசொல்லிப் போற்றல் வேண்

(அ - ரை.) ஒன்றி - பொருந்தி. ஒள்ளியோர் - தெளிந்த அறிவுடையவர்கள். அவா - பற்று. (௩)

[சைவசித்தாந்தப் பரிசு பெற்றபோது உயர்திரு அருணந்தியடிகள் மீது பாடியன.]

573. சிவநெறியும் தமிழ்நெறியும் ஓங்கி வாழச்
சீருலகின் மணிவிளக்காய்ப் பனசை என்னும்
தவநகரில் தமிழ்க்கூடம் அமைத்தே ஈசன்
தளிகளைக்காத் தறநெறியில் தழைத்து நிற்பீர்
தவஞ்செய்யும் இமயமுதல் குமரி யீருய்த்
தமிழ்நெறியே நல்லறங்கள் பலவுஞ் செய்தீர்
பவஞ்செய்கடல் கடப்பதற்கே பரிவி னேடு
பார்த்துச்சித் தாந்தநூல் பயிலச் செய்தீர்.

(அ - ரை.) பனசை-திருப்பனந்தாள். தளிகளை - கோவில்களை. தழைத்து - மேம்பட்டு. பவஞ்செய் கடல் - பிறவிக் கடல். (௪)

574. ஆயிரம்வெண் பொற்காசு அளிக்கச் செய்தீர்
ஆரேயிச் செயல்புரிவார் அகிலந் தன்னில்
பாயிருளை நீக்கிடுநற் பரிதி போலப்
பாரதனில் தோன்றியருட் பண்பு நீடும்

தாயினுநல் அருளுடையாய் அருள்நந் திப்போத்
தம்பிரா னேயுனது தாள்கள் வாழி
தாயாகித் தந்தையுமாய் ஆன நின்றன்
தாள்மலர்கள் எந்நாளும் வாழி மன்னே.

(அ - ரை.) ஆரே - எவர்களே. அகிலம் - உலகம். பாயி ருள் - பரவிய இருள். பரிதி - கதிரவன். (௫)

## ௧௬௫. திருமுருக கிருபானந்தவாரியார்

[வடாற்காடு மாவட்டத்தில் வேலூருக்கு அண்மையில் பாலாற்றின் வடகரையில் உள்ள காங்கேய நல்லூர் என்னுந் திருவூரில் மல்லய்யதாசர் என்பவரின் புதல்வராக இவர் தோன்றினர். முருகக் கடவுளிடத்திலே முறுகிய காதலுடையவராய் அப்பெருமானுடைய புகழை யாண்டும் பரப்பி வருதலோடு திருக்கோயில் திருப்பணி, புராணச் சொற்பொழிவு முதலிய நற்காரியங்களையுஞ் செய்துவருகிறர். திருப்புகழமிர்தம் என்னுந் திங்கள் வெளியீட்டில் திருப்புகழுக்கு உரை முதலியன எழுதிவருகிறர்.]

[கோபுரத்தின் மேலிருந்து கீழேவிழுந்த சிறுவனை முருகப்பெருமான் காப்பாற்றியதைக் குறித்துப் பாடிய பாடல்கள்.]

575. திருவளரும் மதுரைவளம் பதியுறையும்
சிவஞானச் செல்வம் மிக்க
அருமறையோர் குலமணியாம் அரியதிருப்
புகழ்ச்சாமி ஐயர் என்னும்
குருபரனர் குரைகழலை எத்ததியும்
பத்தியிற்கை குவித்துப் போற்றும்
பெருமைமிகு சீடனெனும் பாக்கியமும்
யோக்கியமும் பெற்ற மேலோன்.

(அ - ரை.) எத்திறமும் - எவ்வேளையிலும். பத்தியில்-அன்பில். (௧)

576. மாதமரும் பாதியற்கு மவுனமறை
ஓதுவித்த வள்ளி பங்கன்
காதலொடு மேவுதிருக் காங்கேய
நல்லூர்வாழ் கருணை மிக்கோன்
ஒதரிய தவநெறியான் உயர்சரதம்
மிகுமொழியான் ஒளிசெய் வேலோன்
தாதவிழும் பாதமலர் மறவாத
மல்லைய தாச னென்போன்.

(அ - ரை.) மாதமரும்பாதியன் - சிவபெருமான். சரதம் - உண்மை. (௨)

577. உயர்தூல லிங்கமெனும் சிகரிதனைக்
குகன்தளியில் உவந்து செய்யும்
நயனிலகு விழைவினனுய்ச் செயற்கருமச்
செயலதனை நாளும் உன்னி
அயர்வறுநன் முயற்சியொடு கூடலிற்சென்
ருசிரியன் அருளைப் பெற்றுப்
புயலெனவே பொருளீந்து மிகவிரைந்தக்
கோபுரத்தைப் புதுக்கு மாலோ!

(அ - ரை.) உயர்தூல லிங்கம் - உயர்ந்த தூலலிங்கம் திருக்கோவில்களில் அமைந்துள்ள திருக்கோபுரங்களைத் தூல லிங்கம் என்று கூறுவர். குகன் தளி - முருகன் கோயில். அயர் வறு - தளர்ச்சியற்ற. (௩)

578. கருதருமச் சிகரிதனைப் புதுக்கிடுநாள்
சாலியவா கனசக் காப்தம்
அருமைமிகு ஆயிரத்தெண் சதத்தைம்பான்
சுக்கிலவாண் டாசு வீச

ஒருமதியில் தெய்தியுமேழ் தினந்தனிலந்
நெடுஞ்சிகர வுச்சி சென்ருன்
பொருவருசீர் சீசைல வாசனென
அவர்க்குதித்த புதல்வ னம்மா.

(அ - ரை.) *சிகரி - கோபுரம். பொருவரு - ஒப்பில்லாத.* (ச)

579. சிகரிசெயும் பணியினர்க்குச் சிற்றுணவீந்
தம்மைந்தன் திரும்புங் காலை
செகமுழுதுந் தன்னருளை வெளிப்படுத்த
நெடுஞ்சிகரச் சென்னி நின்று
மகவுதனைத் தலைகீழாய்ப் புவிவீழ்த்தி
அருவுருவாய் வந்து தோன்றி
அகமகிழக் கரமேந்தி ஆட்கொண்டான்
ஆறுமுக அமல மூர்த்தி

(அ - ரை.) *அருவுருவாய் - உருவமற்றவனாய். கரமேந்தி - கையில் ஏந்தி.* (ரு)

580. அந்நாளில் சிகரியில்வீழ் அருணகிரி
தனையினிதி னுண்டு கொண்டான்
எந்நாளும் அவன்புகழை எடுத்துரைப்பார்க்
கிடரணுகா தென்னும் உண்மை
பன்னுளும் நிலைபெறவே அமரர்தொழு
குமரகுரு பரம னம்மா
இந்நாளில் இம்மகவை இனிதாண்டான்
அருட்டிறத்தின் எளிமை என்னே.

(அ - ரை.) *இடர்-துன்பம். எளிமை - எளிய தன்மை.* (௬)

581. இன்னுரும் இனியவரும் இச்செயல்கண்
டிறும்பூதுற் றெண்ணி யெண்ணிக்

கன்னேரு மனமுருகிக் கைகூப்பி
ஆனந்தக் கண்ணீர் பெய்து
முன்னுளவ் வருணகிரி தனையாண்டா
னெனக்கேட்டோம் முருகன் இன்றும்
மின்னுரும் இப்புவியில் இவண்கண்டோம்
எனவியம்பி வியந்து நின்ருர்.

(அ - ரை.) *இறும்பூது - வியப்பு. கன்னேரும் - கல்லை யொத்த.* (எ)

## கூசுசு. மகா. கோவிந்தசுவாமிகள்

[இவர் பாண்டிவள நாட்டில் இராசபாளையம் என்னும் ஊரில் 1908ஆம் ஆண்டிற் பிறந்தவர். இளமையிலேயே கோவிலூரையடைந்து வேதாந்த நூல்களைக் கற்றுத் துறவறத்தை மேற்கொண் டொழுகுபவர். இவர் இயற்றிய நூல்கள் மகாவாக்கிய விசாரம், மகாவாக்கிய விசார சங்கிரகம், காம மரண நீக்கம் முதலியன.]

[எல்லாத் துக்கங்கட்கும் காரணங்கூறிப் பாடியது.]

582\. நிகழெலாத் துயர்கள் நேரக் காரணம் அவாப்பேய் நேர்தல்
திகழவாப் பேய்தான் சேரக் காரணம் அகக்கி ரந்தி
அகங்கரக் கிரந்தி யாரக் காரணம் அவித்தை யார்தல்
வகைமிகும் அவித்தை வாழக் காரணம் தனைக்கா ணுமை.

(அ - ரை.) *அவாப் பேய் நேர்தல் - பேராசைப் பேயானது மனிதனைப்பற்றிக் கொள்ளுதல். அகக்கிரந்தி - அகங்காரத்தையும் ஆன்மாவையும் ஒருமைப்பாடாக நான் என்று கருதும் பற்றுக்கோடாகிய முடிச்சு. அவித்தை ஆர்தல் - அறியாமை பொருந்தியிருத்தல். தனைக்காணுமை - மெய்யறிவினுல் தனது உண்மை நிலையை உணராமை.* (க)

[துக்கங்கள் நீங்கக் காரணமுறை கூறல்.]

583. நிகழேலாத் துயர்கள் நீங்கக் காரணம் அவாப்பேய் [நீங்கல்
திகழவாப் பேய்தான் தீரக் காரணம் கிரந்தி நீங்கல்
அகங்கரக் கிரந்தி யாழக் காரணம் அவித்தை நீங்கல்
வகைமிகும் அவித்தை மாளக் காரணம் தன்னைக் [காண்டல்.

(அ - ரை.) *கிரந்தி நீங்கல் - பற்றுக்கோடாகிய முடிச்சு ஒழிதல். அவித்தை - அறியாமை. தன்னைக் காண்டல் - மெய் யறிவினால் தனது உண்மை நிலையை உணர்தல்.* (உ)

[பகவற்கீதை கூறும் அவாவுக்கு ஏது, உருவம், தொழில், பலன், முடிவுகூறல்.]

584. மன்னுமால் கீதை மயல்செயும் வஞ்ச
வலிப்பகைக் காமத்தின் ஏது
மருவகங் காரக் கிரந்தியா ரவித்தை
வருமுரு வேண்டிடும் எண்ணம்
துன்னுமா செயல்தீ வினைவிருப் பறினும்
சுயமதி மயக்கிமாத் திறலால்
தூண்டிமா பாவஞ் செயச்செயல் மிகவும்
துய்ப்பினும் ஆருதுமிக் குறலாம்
உன்னுமா பயன்சா வாதிதுன் பனைத்தும்
ஒய்வுசா தனங்களால் பகைதீர்
உபாயநான் கினில்தன் ஞானமாந் தண்டம்
ஒங்கவே தற்றுடன் அறலாம்
பன்னுமா றெப்போ துளத்துள காமப்
பகையெலாம் நீங்குமப் போது
பயமர றுதித் துயரெலாம் நீங்கும்
பரசுக விடுறும் எனுமே.

(அ - ரை.) மன்னும் மால்கீதை-என்ஞான்றும் நிலைபெற்று விளங்கும் திருமால் கூறிய பகவற்கீதையானது. மயல் செயும் வஞ்ச வலிப்பகை - முதலில் மயக்கத்தைச்செய்து பின்பு துன்பப் பொருள்களை இன்பப்பொருள்களாகக் காட்டுவதாகிய வஞ்சனையைச் செய்யும் வலிமையான சத்துருவாகிய. காமத்தின் ஏது - ஆசையின் காரணம். மருவு அகங்காரக் கிரந்தி, ஆர் அவித்தை- நேராகப் பொருந்திய அகங்கார முடிச்சும் பரம்பரையாகப் பொருந்திய அஞ்ஞானமும் ஆம். சாவு ஆதி துன்பு அனைத்தும்- மரணம் முதலிய துன்பங்கள் எல்லாம். பகைதீர் உபாயம் நான்கினில் - எதிரியை வசஞ்செய்யத் தக்க சமாதானம், கொடுத்தல், துன்புணர்த்தல், துன்புறுத்தல் என்னும் உபாயங்கள் நான்கனுள். பரசுக வீடு உறும் - பேரின்ப வீடு அடையப்பெறும். (௩)

## கசஎ. தா. ம. வெள்ளைவாரணம்

[இவர் சோழவள நாட்டில் திருக்குடந்தையில் 1927ஆம் ஆண்டிற் பிறந்தார். பள்ளி இறுதி வகுப்பு வரையிற் படித்தபின் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியிற் புலமைக்கல்வி கற்றுப் புலவரானார். தாங் கற்ற கல்லூரியிலேயே தமிழாசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறார். இவருடைய பாவன்மையைப் பாராட்டி அறிஞர்கள் இவருக்கு மதுரகவி என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கியுள்ளனர். இவர் இயற்றிய நூல்கள் நீதிக்கதைகள், திருக்குடந்தைக் கலம்பகம், பனைசமூத்த விநாயகர் தமிழ்விடு தூது, யாப்பு நெறி, அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் மும்மணிக் கோவை, திருவங்கமாலை, திருமரபுந் தொகை அலங்கார பஞ்சகம் முதலியன.]

[கணபதிக்குஞ் சிவனுக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

585. ஆற்றுத் தலையிருப்பால் அங்கண்முன் றுள்ளமையால்
ஆற்றுப் பெருக்கைமுன் ஆக்கியதால்—ஆற்ற
வணஞ்சேந்து காட்டும் வகையால் எனையாள்
கணபதியே சாம்பசிவன் காண்.

(அ-ரை.) ஆற்றுத் தலையிருப்பால் - (கணபதி) ஆற்றங் கரையில் அமர்ந்திருப்பதால் (சிவன்) ஆற்றைத்தலையில் அணிந் திருப்பதால். அம் கண் மூன்று உள்ளமையால் - அழகிய மூன்று கண்களைப் படைத்திருப்பதால். ஆற்றுப்பெருக்கை முன் ஆக்கிய தால் - (கணபதி) குறுமுனிவன் கமண்டல நீரைக் கவிழ்த்துக் காவிரிப் பெருக்கை உண்டாக்கியபடியால் (சிவன்) தலையில் கங்கையைச் சூடி அந்நாளில் கங்கையாற்றுப் பெருக்கை உண் டாக்கியபடியால். வணம் சேர்ந்து காட்டும் - நிறம் சிவப்பாகக் காட்டும். (க)

[கணபதிக்குந் திருமாலுக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

586. கரியாய் விளங்குதலால் காத்தற் றெழிலால்
அரியவெண் கோடேந் தலினல்—விரியும்
பணப்பாம்பு தன்மேற் படுத்துக் கொளலால்
கணபதியே மாலாவான் காண்.

(அ-ரை.) கரியாய் விளங்குதலால் - (கணபதி) யானை முகம் உடையவராக விளங்குகிறபடியால். (திருமால்) கரிய நிற முடையவராக விளங்குகிறபடியினல். அரியவெண்கோடு ஏந்தலி னல் - (கணபதி) அரிய வெண்மையான தந்தத்தைக் கையில் ஏந்துகிறபடியால். (திருமால்) அரிய வெண்மையான சங்கைக் கையில் ஏந்துகிறபடியினல். பணப் பாம்பு தன்மேற் படுத்துக் கொளலால் - (கணபதி) படத்தையுடைய பாம்பை உதரபந்த மாகக் கொள்ளுதலால்; (திருமால்) படத்தையுடைய ஆதிசேடன் மேற் படுத்துக் கொள்ளுகிறபடியால். (உ)

[மாமரத்தைப்பற்றிப் பாடியது.]

587. பூத்தேன் எனமகிழும் பூம்பிஞ்சு வைத்தழைக்கும்
ஏற்றேன் எனக்காட்டும் எண்வடுவை—ஆர்த்தெதுவும்
சொல்லிச்செய் வார்போல் சுவைக்கனிகள் தாமளிக்கும்
மல்குநிழல் சேர்மா மரம்.

(அ-ரை.) பூத்தேன் எனமகிழும் - மாமரம் பூத்திருப்பது அது மகிழ்ந்துகொண்டிருப்பதைப்போல் விளங்கும் என்க. பூம் பிஞ்சுவைத் தழைக்கும் - பூக்கள் மிகுதியாக பிஞ்சுகளை (வடுக்

களை) உண்டாக்கும்; பிஞ்சுகளை நிலத்தில் போட்டுத் தன்பால் மக்களை அழைக்குமென்னும் பொருளுந் தொனிக்கிறது. (௩)

[தென்னை மரத்தைப்பற்றிப் பாடியது.]

**588.** கீற்றுக்கு மட்டை கிளர்ச்சிக் கிளநீர்கள்
போற்றும் உணவிற்குப் பொற்காய்கள்—சீற்ற
எரிக்குத் தனிமேனி ஈனுமே எல்லாம்
தெரிந்து கொடுப்பார்போற் றெங்கு.

(அ - ரை.) கிளர்ச்சிக்கு - மனவெழுச்சிக்கு. இளநீர்கள் - இளநீருங் கள்ளும். (௪)

[தமிழ் விருப்பைக் குறித்துப் பாடியது.]

**589.** கரும்பின் தெளிவோடு கற்கண்டுந் தேனும்
விரும்புங் கனிச்சாறும் வேண்டேம்—சுரும்பும்
அரும்பும் மலிசோலை அண்டேம் தமிழைப்
பெரும்புலவர் நல்கப் பெறின்.

(அ - ரை.) சுரும்பும் - வண்டும். அண்டேம் - நெருங்கேம். (௫)

[அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களைப் பாராட்டிப் பாடியது.]

**590.** முத்தன்ன சோறும் முறுவற் கனிச்சாறும்
முத்தமிழும் இன்பம் முதிரிசையும்—முத்தனுக்காம்
அன்புவழி பாடும் அளித்தார் அருணந்தி
என்றும் மறவேம் இவை.

(அ - ரை.) முத்தன் - வீடுபேற்றைக் கொடுக்கும் இறைவன். (௬)

[இன்னா நாற்பது இனியவை நாற்பது என்னும் நூல்களைப்போல் "பகை நாற்பது" என்று பாடத் தொடங்கிப் பாடியன.]

**591.** மயிலுக்குக் கோம்பியும் மாற்குப் புலியும்
குயிலுக்குக் காக்கைக் குலமும்—அயில்விழியாய்!

நஞ்சுக்கு நல்லமிர்தும் நன்மைக்குத் தீமையும்
பஞ்சுக்குத் தீயும் பகை.

(அ - ரை.) கோம்பி - பச்சோந்தி. மாற்கு - மானுக்கு. அயில்விழியாய் - வேலைப்போன்ற கூரிய விழியை உடையவளே! (எ)

592. வெயிலுக்கு மாரிநீர் விண்ணுக் கரக்கர்
துயிலுக்குத் துன்பக் கொசுக்கள்—பயில்கின்ற
வேம்புக்கு நற்கரும்பு வெண்மைக்கு மைக்கருமை
பாம்புக்குக் கீரி பகை.

(அ - ரை.) விண்ணுக் கரக்கர் - விண்ணுட்டிலுள்ள தேவர் கட்குப் பகைவர்கள் அரக்கர். துயில் - தூக்கம். (அ)

[நெல்லும் உயிரன்றே என்னும் புறநானூற்றுப் பாடலை வெண்பாவாக மாற்றிப் பாடியது.]

593. நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மகிதலம்—அன்னதனுல்
யானுயிர் என்ப தறிதல் படையொடு
வேன்மிகும் வேந்தன் கடன்.

(அ - ரை.) மகிதலம் - உலகம். அத்தன்மையினுல். (கூ)

[முந்திரிக் கொட்டையைப்பற்றிப் பாடியது.]

594. எந்தப் பழத்திற்கும் ஏன்வைத்தான் உள்விதையை
முந்திரிக்கு மாத்திரம் முன்வைத்துச்—சிந்திக்கில்
நல்லவையுள் கற்ருேர்தாம் நாவடக்கி வீற்றிருக்கச்
சொல்லுதலால் பேதைநாச் சோர்ந்து.

(அ - ரை.) முந்திரிக்கு மாத்திரம் விதையை முன்வைத்தது என் என்ற வினவுக்கு நல்லோர் நாவடக்கி அமர்ந்திருக்கும் போது, பேதை நா சோர்ந்து பேசுவதால் அதற்கு உவமை கூறும் பொருட்டு வைத்தான் என்பது விடை. (க0)

## கசஅ. பரலி. சு. நெல்லையப்ப பிள்ளை

[பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிக்கு எட்டுக் கல் தொலைவில் உள்ள பரலிக்கோட்டை என்னும் ஊரில் 18-9-1889இல் பிறந்தவர். தந்தையார் பெயர் சுப்பிரமணிய பிள்ளை. சுப்பிரமணிய பாரதியாருடைய நெருங்கிய நண்பர். சென்னையில் பல ஆண்டுகள் லோகோபகாரி என்னும் கிழமை இதழை நடத்தியவர். இனிய போக்கில் உரைநடையும் செய்யுளும் எழுதுவதில் வல்லவர். மொழிபெயர்ப்பு நூல்கள் சில எழுதியிருக்கிறார்.]

[சேரமாதேவியில் குருகுலத்தை நடத்திவந்த வ. வே. சுப்பிரமணிய ஐயர் பாபநாசம் அருவிக்குத் தம்முடைய மகளோடு இரையானபோது பாடியன.]

595. அருவிநீர் ஆடச் சென்றீர்
அருவியிற் கலந்து விட்டீர்
பெரிதும்யாம் துயர முற்றோம்
பேசொணுத் துயர முற்றோம்
திருவுடை மகளும் நீரும்
தேவர்க்கு விருந்தாய் விட்டீர்
வருதுயர் கருதி னீர்கொல்
வண்தமிழ் நாட்டுக் கெல்லாம்.

(அ - ரை.) *அருவிநீர் - பாபவிநாசத்தில் உள்ள நீர் அருவி. வருதுயர் - மேலே உண்டாகப்போகிற துன்பம்.* (க)

596. வையகத் தெழிலின் மிக்க
மாண்புயர் பாவ நாசத்
தெய்விகக் காட்சி நோக்கிச்
சேரமா தேவி சென்றீர்

உய்வழி செய்வி ரென்றிங்
குறுதியில் வாழ்ந்தோம் உள்ளம்
நைவழி புரிந்து விட்டீர்
நன்றுகொல் நவிலு வீரே.

(அ - ரை.) வையகத்து - உலகத்தில். எழிலின் - அழகில். உய்வழி - கடைத்தேறும் வழி. நைவழி - வருந்தும் வகை. நன்றுகொல் - நன்றாகுமோ? (உ)

597. பைந்தமிழ் மறந்தீர் கொல்லோ
பாட்டினை மறந்தீர் கொல்லோ
செந்தமிழ்க் கம்ப னுர்தம்
தீங்கவி மறந்தீர் கொல்லோ
அந்தரம் புகுந்து கம்பன்
அருகிருந் தவன்வாக் கெல்லாம்
சிந்தையில் உவகை பொங்கக்
கேட்டீரோ செப்பு வீரே.

(அ - ரை.) கம்பனுர்தம் தீங்கவி - இராமாயணப் பாடல். அந்தரம் - விண்ணகம். (ஙு)

598. வீரத்தை வளர்க்க வந்தீர்
வீரரை ஆக்க வந்தீர்
வீரத்தை உணர்த்த வந்தீர்
வீரவாழ் வெய்தி நின்றீர்
வீரத்தில் வாழ்ந்த கன்னி
வீழ்ச்சியில் வீழ்ந்த போது
வீரத்திற் பாய்ந்து விட்டீர்
வீரர்கள் பெரிய வாழ்வே.

(அ - ரை.) வீரம் - ஆண்மை. கன்னி - மகளாகிய சுபத்திரை. வீழ்ச்சியில் - நீர்வீழ்ச்சியில். (ச)

599. செத்தவர் உடலம் சாகச்
சீவன்சா வின்றி யென்றும்
புத்துடல் பெற்று மீளும்
என்பர்கள் புலமை யோர்கள்
எத்தனை வேலை உண்டு
நாட்டிலே அன்பர் கோவே
புத்துடல் பெற்று வாரீர்
விரைவிலே புவியில் வாழ்வீர்.

(அ - ரை.) *புத்துடல் - புதிய உடல்; அஃதாவது மறு பிறப்புடல். புலமையோர்கள் - பேரறிஞர்கள்.* (௫)

## கசுகூ. மு. ரா. பெருமாள் முதலியார்

[கொங்குவள நாட்டில் கோயம்புத்தூரில் 1910 ஆம் ஆண்டில் பிறந்தார். எம். ஏ., எல். டி. வரை கல்வி பயின்றுள்ளார். இந்நாளில் சைதாப்பேட்டை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியின் முதல்வராக இருக்கிறார். இந்திய வரலாற்றுச் சுருக்கம், நமது இந்தியா முதலிய நூல்களின் ஆசிரியர். இனிய முறையில் செய்யுள் இயற்றுவதில் வல்லவர்.]

[வேலூர் மருத்துவ மனையில் நோய் நீக்கத்தின் பொருட்டுச் சேர்ந்து மருத்துவஞ் செய்வித்துக் கொண்டபொழுது பாடியன.]

600. மற்றவரைப் போலேநான் மனம்விரும்பும் உணவுண்டு
குற்றமற்ற உடல்நலத்தால் கூடுகின்ற இன்பத்தைப்
பெற்றிடவே பல்லாண்டாய்ப் பெரிதும்நான் விழைகின்
[றேன்
வெற்றியினும் கிட்டவில்லை வேதனையே மிகுந்திடுமால்.

(அ - ரை.) *விழைகின்றேன் - விரும்புகின்றேன். வெற்றியினும் - வெற்றியானது இன்னும். வேதனை - துன்பம்.* (க)

601. எத்தனையோ மருத்துவர்கள் என்னுடலைச் சோதித்தார்
எத்தனையோ மருந்துகள் எனக்களித்தார் நானுண்டேன்
கத்துகட லிற்கரைத்த காயம்போ லத்தனையும்
சத்தின்றிப் போயினபின் சஞ்சலந்தான் மிஞ்சிற்றே.

(அ - ரை.) கத்துகடல்-ஒலிக்கின்ற கடல். காயம்-பெருங்காயம். சத்து - பலம். சஞ்சலம் - மனவருத்தம். (உ)

602. இப்படிநான் வருந்திமிக இடர்ப்பட்ட வேளையிலே
ஒப்பில்லாத் திறனுடையான் ஒருநாரி யல்வாலா
எப்படியும் எந்நோயைத் தீர்த்திடுவான் எனஸ்டீபன்
செப்பியதைக் கேட்டிங்கே தீவிரமாய் வந்தடைந்தேன்.

(அ - ரை.) திறன் - திறமை. நாரியல்வாலா- ஒரு மருத்துவர் பெயர். தீவிரமாய் - விரைவாக. (ங)

603. திருத்துவர்கள் நடத்துமிந்தக் கீர்த்திமிக்க மருந்தகத்தில்
மருத்துவருந் தாதியரும் மற்றும்பல அலுவலரும்
திருத்தமுடன் தொண்டாற்றும் செயற்றிறமை என்னுடைய
கருத்ததனைக் கவர்ந்ததுவே களித்தேன்நான் அவர்வாழி!

(அ - ரை.) மருந்தகம் - மருத்துவ மனை. திருத்தமுடன்- செவ்வையாக. (ச)

604. தாதியர்கள் பலருள்ளார் தளிர்மேனி இளம்பெண்கள்
மேதினியில் இவர்தொண்டு மேன்மையுள தொண்டாகும்
போதினிலே மதுவெடுக்கும் தேனீக்கள் போலிவர்கள்
சூதில்லா மனத்துடனே சுறுசுறுப்பாய் இயங்குகின்றார்.

(அ - ரை.) மேதினியில்-உலகத்தில். போது-பூ. இயங்குகின்றார் - வேலை செய்கின்றார்கள். (ரு)

605. என்னுடைய டாக்டரம்மாள் இன்முகத்துச் சரோசினிபாய்
பொன்னன குணமுடையாள் பொழுதெல்லாம் உழைத்திடுவாள்

சின்னதோர் உருவுடையாள் சிரிக்கின்ற கண்ணுடையாள்
அன்னவளைக் கண்டதுமே அகலாவோ நோயெல்லாம்.

(அ - ரை.) இன்முகம் - இனிய முகம். அன்னவளை - அவளை. (௬)

606. வேளைக்கோர் விதமுடுத்தும் மெல்லியலாள்
[டெய்சியம்மாள்
காளையவன் பால்வர்கீஸ் கட்டழகன் விஸ்வநாதன்
வாளொத்த கண்ணுடையாள் மைக்குழலி அபரஞ்சி
நாளொத்த ஒளிமுகத்தாள் நளினமிகு முருக்குமணி.

(அ - ரை.) விஸ்வநாதன்-விசுவநாதன்; தொகுத்தல் விகாரம். மைக்குழலி - கரிய கூந்தலையுடையவள். (௭)

607. இத்தனைபே ருஞ்சேர்ந்தார் என்னுடலைச் சோதித்தார்
சத்துள்ள பேருண்டி சாப்பிடென்பார் மறுநாளே
சுத்தமாய்ப் பட்டினியால் சோர்ந்திருக்க வைத்திடுவார்
பத்துமுறை எக்ஸ்ரேமுன் படுக்கவைத்துப் படமெடுப்
[பார்.

(அ - ரை.) சோதித்தார் - ஆராய்ந்தார். எக்ஸ்ரே - நிழல் படமெடுக்குங் கருவி. (அ)

608. குருதியினைச் சோதிப்பார் குத்தூசி தனிலெடுத்தே
விருதாவாய்ச் சிறுநீரை விடமாட்டார் அளந்தெடுப்பார்
ஒருவேளை குடல்கழுவி மறுவேளை உண்ணென்பார்
கரவாது மலமெடுத்துக் கண்ணிலே காட்டென்பார்.

(அ - ரை.) குருதி - செந்நீர். விருதா - வீண். கரவாது - ஒளிக்காமல். (௯)

609. மூக்கிலே குழாய்விடுவார் முயன்றதனை விழுங்கென்பார்
நாக்கைநீ நீட்டென்பார் நடுவயிற்றைப் பிசைந்திடுவார்
யாக்கையை அவர்படுத்தும் பாடெல்லாம்
[எடுத்துரைத்தால்
ஊக்கமது கைவிடேல் உயிர்போகா தென்றுரைப்பார்.

(அ - ரை.) *யாக்கை - உடல். இப்பாட்டில் கூறியன உடல்நல ஆராய்ச்சிக்குரிய செயல்கள்.* (௧0)

**610.** நாரியல்வா லாவினது நனிசிறந்த தனிமையிலே
காரியத்திற் கண்ணுகக் கடனாற்றும் மருத்துவர்கள்
கூரியநன் மதியுடையார் குணமுடையார் அவர்வாழி
பாரினிலே அவர்தொண்டு பயனுடைய தொண்டாமால்.

(அ - ரை.) *பாரினில் - உலகத்தில். தொண்டு - மருத்துவப் பணி.* (௧௧)

**611.** நோய்நாடி நோய்மூலம் தனைநாடி நோய்தீர்க்கும்
வாய்நாடி வாய்ப்பாக மருந்தளிக்கும் மருத்துவர்கள்
தாய்போலப் பரிந்துதவும் தாதியர்கள் பல்துறையும்
தோய்திறத்தின் நுண்செயலர் துன்பின்றி வாழியவே.

(அ - ரை.) *வாய்நாடி - வழிகளை ஆராய்ந்து. வாய்ப்பாக - பொருத்தமாக. பல்துறையும் - பல வழிகளிலும்.* (௧௨)

[சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநரின் அருமைத் திருமகன் வள்ளுவன் மிக இளம்பருவத்திலேயே இவ்வுலகவாழ்வை நீத்தகன்றபோது வருந்திப் பாடியன.]

**612.** வள்ளுவனே! இறந்தனையோ? மனக்கினிய என்நண்பன்
வள்ளற்சுந் தரவடிவேல் தனிமகனே! மறைந்தனையோ?
கள்ளமிலாக் காந்தம்மை கண்மணியே! செத்தனையோ?
உள்ளத்தைக் கொள்ளைகொண்ட ஒளிவிளக்கே!
அணைந்தனையோ?

(அ - ரை.) *மனக்கினிய - மனத்துக்கினிய. காந்தம்மை: வள்ளுவன் தாய் பெயர்.* (௧௩)

**613.** தந்தைக்கும் அன்னைக்கும் தவமகனுய் வந்துதித்தாய்
சிந்தைக்கு மிகவினிய சிறப்பெல்லாம் பெற்றிருந்தாய்
முந்தையநல் வினைப்பயனுல் முதிர்ச்சியினை இளமையிலே
சொந்தமாய்ப் பெற்றறிவுச் சுடர்க்கொழுந்தாய்
[நீயொளிந்தாய்.

(அ - ரை) முதிர்ச்சியினை - அறிவுச் சிறப்பாகிய முதிர்ச்சியினை. ஒளிர்ந்தாய் - விளங்கினாய். (கச)

614. அறிவறிந்த மகனாலே அடைதற்காம் இன்பத்தில்
நெறிபிறழா உந்தையொடு நிறைகுணத்துன் நற்றாயும்
சிறிதளவே நுகர்ந்ததற்பின் சீராளா உன்மறைவால்
வறிஞரென நிற்கின்றார் மனமுடைந்து வருந்துகின்றார்.

(அ - ரை.) அறிவறிந்த - அறியவேண்டியவைகளை யெல்லாம் அறிந்துணர்ந்த. உந்தை - உன் தந்தை, சீராளா - சிறப்பினை உடையவனே! (கரு)

615. மேதையாய் வளர்ந்திடுவாய் மேன்மையெலாம்
[பெற்றனது
தாதைக்குத் துணைவனுமாய்த் தனயனுமாய்த் தானிருந்து
தீதில்லா வின்பமெல்லாம் சேர்த்திடுவாய் என்றென்றே
பேதைநான் நினைந்திருந்தேன் பிள்ளாய்நீ சதிசெய்தாய்.

(அ - ரை.) தனயன் - மகன். மேதை - அறிவுடையவன். சதி செய்தாய் - வஞ்சனை செய்தாய். (கசு)

616. காலையிலே தானரும்பிக் கடும்பகலில் போதாகி
மாலையிலே மலர்ந்துபின்னர் மற்றைநாள் வாடிவிழும்
சோலைமலர் போலேநீ தோன்றினும் மறைந்துவிட்டாய்
காலனவன் உன்மீது கண்வைத்து விட்டானே.

(அ - ரை.) போது - மலர். காலன் - நமன். (கஎ)

617. மலர்வாழ்க்கை யொருநாளே எனினுமதன் மணந்தன்னைப்
பலவாய அதன்நிறத்தைப் பார்த்தவரும் நுகர்ந்தவரும்
பலகாலம் நினைந்திருப்பர் பாலகனே யதுபோல
நிலையாக எந்நெஞ்சில் நிறைந்திருக்கும் உன்நினைவே.

(அ - ரை.) மலர் வாழ்க்கை - மலர் மலர்ந்து நிற்குங் காலம். (கஅ)

618. உன்னுடைய பொன்னுடலில் உன்தந்தை வைத்ததீத்
தன்னுடைய ஆவியிலே தான்பற்றக் கண்டனனால்

கன்னற்சொல் உன்அன்னை காந்தம்மை மணிவயிற்ருே
டென்னனையர் இதயமெலாம் எரிந்திடுமால்
[அந்நெருப்பில்.

(அ - ரை.) கன்னல் சொல் - கரும்புபோலும் இனிய சொல். என் அனையர் - என்னைப்போன்றவர்கள். (கக)

619. குடங்குடமாய்க் கண்ணீரைக் கொட்டிமிக அழுதாலும்
திடங்கொண்டே எரியுமிந்தத் தீயணைக்க வழியிலையே
இடர்மிகுந்த இவ்வுலகில் இருப்பதற்குப் பிடிக்காமல்
நடந்தனையோ தம்பிநீ நல்லுலகம் தனைத்தேடி.

(அ - ரை.) இடர் - தொல்லை. நடந்தனையோ - சென்ருயோ. (உ0)

620. வடிவேலு துரைசாமி மகிழ்பழநிச் சாமியுடன்
அடியேனும் எதிராசும் சண்முகமும் அழுகின்ருேம்
கடிமலர்போல் இனியவனே கண்ணுளா வள்ளுவனே
குடிமுழுகிப் போயிற்றே குழந்தையுன்றன் மறைவாலே.

(அ - ரை.) கடிமலர் - மணந்தங்கிய மலர். கண்ணுளா - கண்ணைப் போன்றவனே. (உக)

621. மலரனைய மென்மனத்து வள்ளுவநீ யிறந்ததனல்
நிலநடுக்கம் ஏற்படினும் நிலைகுலையா நெஞ்சத்தான்
கலைவல்லான் குருசாமி கதறிமிக அழுததனைப்,
பலபேரும் பார்த்திருந்தோம் பதைத்தனவெம்
[முள்ளமெலாம்.

(அ - ரை.) நிலநடுக்கம் - பூகம்பம். பதைத்தன - வருந்தின. (உஉ)

622. திண்மனத்தன் ஈவேரா தென்னகத்தின் அரியேறு
பெண்மகளைப் போன்றுன்றன் பிரிவென்னுந் துயரத்தால்
கண்மழையைப் பொழிந்தன்று கசிந்துருகி அழுதனனல்
உண்மையிலே யுன்மறைவால் துயருருர் உளரேயோ?

(அ - ரை.) ஈ. வே. ரா. - இராமசாமி நாய்க்கர். தென்னகம் - தென்னாடு. அரியேறு - ஆண்சிங்கம். (உ௩)

[மொரார்சிதேசாய் என்பவர் பதினான்கு கார்ரட்டுத் தங்கச் சட்டங் கொண்டுவந்ததைக் குறித்து வேடிக்கையாகப் பாடியன.]

பெண் கேள்வி

கட்டளைக் கலித்துறை

623. காதில் அணியநல் கம்மலும் இல்லை கனமார்பின்
மீதில் அணியவோர் ஆரமும் இல்லையென் மென்கரத்துப்
போதில் அணிய வளையலும் இல்லை பொருந்துமின்பக்
கோதில் திருமணம் எவ்வா றெனக்கினிக் கூடுவதே.

(அ - ரை.) ஆரம் - மாலை. கரத்துப்போதில் - கைம்மலரில். கோதில் திருமணம் - குற்றமற்ற திருமணம். (உ௪)

மொரார்சிதேசாய் மறுமொழி

624. பதினான்கு காரட்டுப் பொன்னுண்டு பொற்கொல்லர்
[பற்பலராம்
விதமாய் நகைசெய்ய வல்லார் விலையும் மிகக்குறைவாம்
அதனால் வருத்தம் தனைவிடு நீயினி ஆரணங்கே
எதனாலும் நில்லா தினியுன் மணநாள் இயம்பினனே.

(அ - ரை.) பதினான்கு காரட்டுப் பொன் - கலப்புப் பொன். பொற்கொல்லர் - தட்டார். அணங்கு - பெண். (உ௫)

பெண் கேள்வி

625. பதினான்கு காரட்டுப் பொன்னகை நல்ல பளபளப்பாய்
நிதமும் இராதே அதனாலென் மாமியாம் நீலியவள்
வதையாய் வதைப்பள் அதுபோது செய்யும்
[வகையறியேன்
இதற்கோ ருபாயம் இருந்தால் உரைத்திடும்
[இப்பொழுதே.

(அ - ரை.) நிதமும் - நாள்தோறும். வதையாய் வதைப்பள் - பீடு நியாகத் துன்புறுத்துவாள். (உகூ)

மொரார்சிதேசாய் மறுமொழி

626. பொன்னகை பொன்னகை யென்றேயுன் மாமி [புலம்பிடிலோர்
புன்னகை தன்னுடன் மெல்ல நடந்துன் புருடனிடம்
இன்னகை தன்னிலும் அந்நகை ஏற்றமோ என்றுனது
நன்னகை காட்டினல் உன்னடி வீழ்வனுன் நாயகனே.

(அ - ரை.) புன்னகை - சிறுநகை. இன்னகை - இனிய மகிழ்ச்சி நகை. நன்னகை - நல்ல மகிழ்ச்சி நகை. (உஎ)

## கஎ0. நாரண—துரைக்கண்ணன்

[இவர் சென்னை திருமயிலையில் 24-8-1906இல் (பராபவ ஆண்டு ஆவணித்திங்கள் ஒன்பதாம் நாள்) பிறந்தார். தந்தையாருடைய பெயர் நாராயண கிராமணி. திருக்குறள் விளக்கம் கி. குப்புச்சாமி முதலியார், மறைமலையடிகள் ஆகியவர்கள்பால் தமிழ் இலக்கியங்களையும் பிற நூல்களையும் பாடங்கேட்டுப் புலமைபெற்றார். கலா நிலையம் டி. என். சேடாசலம் அவர்கள் வாயிலாக ஆங்கிலப் பேரிலக்கியங்களைக் கற்றுணர்ந்தார். பிழை திருத்துவோராகவும் எழுத்துப் பணியாளராகவும் வாழ்க்கையைத் தொடங்கினர். லோகோபகாரி, தேசபந்து, திராவிடன், இந்தியா முதலிய இதழ்களில் துணையாசிரியராக இருந்தார். பிறகு ஆநந்தபோதினி, பிரசண்ட விகடன் ஆகிய இதழ்களுக்கு ஆசிரியரானர். சிறுகதை, நாவல், நாடகம், கவிதை, கட்டுரை, வாழ்க்கை வரலாறு முதலிய பல துறைகளிலுமாக நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை எழுதி வெளியிட்டிருக்கிறர். இவருடைய இலக்கியப் பணியைப் பாராட்டி அரசாங்கமும் இலக்கியக் கழகங்களும் பல சிறப்புக்கள் செய்துள்ளன.]

[குற்றாலநாதர்மீது வணக்கமாகப் பாடியது.]

627. மின்னுடைய வாழ்வில் மிகுதியாய்ச் சேர்த்திட்ட
பொன்னுடைமை யெல்லாம் பொருளல்ல—என்னுடைய
வற்றாக் கவியுளமே வாய்மணக்கச் செந்தமிழால்
குற்றால நாதனையே கூறு.

(அ - ரை.) *மின்னுடைய வாழ்வில் - மின்னலைப்போல் விளங்குகிற உலக வாழ்க்கையில். குற்றாலநாதன் - திருக் குற்றாலத்தில் எழுந்தருளிய சிவபெருமான்.* (௧)

[திருவிலஞ்சியிற் பாடியது]

628. யான்கண்ட தலங்களிலே இலஞ்சியைப்போல்
இனிதான தெங்குங் காணேன்
தேன்கண்ட திருமலர்கள் திசையெங்கும்
பூத்தொளிர்ந்து திகழும் ஆங்கு
மீன்கண்ட தீநறுநீர் மேவுகின்ற
சிற்றாறை மிளிர்ந்தி லங்கும்
வான்கண்ட நெடுமரங்கள் வயங்குகின்ற
திருவிலஞ்சி முருகன் வாழி.

(அ - ரை.) *திருவிலஞ்சி - திருக்குற்றாலத்திற்கு அண்மையில் உள்ள ஓர் ஊர். மீன்கண்ட - மீன்கள் உலாவித் திரிகின்ற. வயங்குகின்ற - விளங்குகின்ற.* (௨)

[தேனருவியைப்பற்றிப் பாடியது.]

629. தேனருவி கண்டாலே தீங்கவியும் உண்டாமே
வானருவி தேன்துளித்து வையத்தைப் பேணிடுமே
கானருவி தனைக்கண்டார் களிகொள்வார் பிணிகொள்ளார்
கோனருவி இதுவேதான் குவலயத்தில் மிகவியப்பே.

(அ - ரை.) *தேனருவி - குற்றால அருவிக்கு அப்பாலுள்ள ஓர் அருவி. வையத்தை - உலகத்தை. கான் அருவி - காட்டிலுள்ள அருவி; அழகிய அருவியெனினுமாம். கோனருவி - தலைமைபெற்ற அருவி.* (௩)

[தென்காசிக் கோயிற் சிற்பங்களைக் குறித்துப் பாடியது.]

630. தென்காசிக் கோயிலமை சிற்பங் களினழகு
என்காட்சிக் கேயினிமை யானவே—பொன்காசு
ஈந்தருள் செய்தபிரான் இன்னண்பர் சுந்தரர்க்கு
வாய்ந்த அருளெனக்கும் வந்து.

(அ - ரை.) *பொன்காசு ஈந்தருள் செய்தபிரான் - சிவபெருமான் சுந்தரர்க்குப் பொன் வழங்கியவர் என்பது வரலாறு.* (௪)

[*மாமல்லபுரத்தின் சிற்பங்களைப் பார்த்துப் பாடியது.*]

631. எழில்கொண்ட சிற்பங்கள் உயிர்ச்சிலைகள்
என்னவே அழகோடு இலங்கித் தோன்றும்
கழிகடந்து நிலங்கடந்து கற்கோயில்
கண்டிடுவார் காசினிவாழ் மாந்த ரெல்லாம்
வழிவழியே பல்லவர்கள் செய்தமைத்தார்
வான்புகழை யடையுமொரு வழியி தென்றே
இழிசெயல்கள் புரியவந்த மற்றவருக்
கிவ்வாறு செயவறிவும் எவ்வா றுண்டே.

(அ - ரை.) *கழி - உப்பங்கழி. காசினிவாழ் மாந்தரெல்லாம்: மகாபலிபுரச் சிற்பங்களைக் காண்டற்கு உலகின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் வருதல் கண்கூடு. உயர்ந்த காரியங்களைப் புரியவந்தவர்கள் உயர்ந்த காரியங்களைச் செய்வார்கள் என்பதும் இழிசெயல்களைச் செய்யவந்தவர்கள் அவ்வாறு செய்யமாட்டார்கள் என்பதும் இறுதியடிக்குப் பொருள்.* (௫)

## கஎக. சாமி சிதம்பரனார்

[சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திற் கடுத்த கடகம் என்னுஞ் சிற்றூரில் 1900ஆம் ஆண்டிற் பிறந்தார். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் கல்வி

கற்றுப் புலமை பெற்ருர். தஞ்சை மாவட்டத்து உயர் நிலைப்பள்ளிகள் பலவற்றில் தமிழாசிரியராகப் பணி புரிந்தார். பின்னுளில் சீரிய நூல்கள் பலவற்றை எழுதி வெளியிட்டார். வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், புதுக்குறள், கம்பன் கண்ட தமிழகம் முதலியன இவருடைய நூல்கள். ஏறக் குறைய நாற்பது நூல்கள் எழுதிய இவர் 1961ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.]

[கடலைப்பற்றிப் பாடியது.]

632. புதியசுகம் பெற்றறிவை வளர்த்திடவே நாடிப்
பொருக்கெனவே எழுந்துவிசை யுடன்நடந்தேன் [நானே
அதிர்திரையின் கரங்காட்டிக் கடல்அழைக்க அருகே
அகமகிழ்ச்சி தழைத்திடவே அருகடைந்தேன் [நின்றேன்
வதியும்உயிர்த் தொகைக்கெல்லாம் வாழ்வளிக்குங் [கதிரோன்
வனைபொன்னின் குடமெனவே தகதகத்து மேலே
எதிரெழவே அதன்அழகில் ஈடுபட்டு மகிழ்ந்தேன்
எனதுணர்வைப் பசுங்கடலின் எழிலினிலே [இழந்தேன்.

(அ - ரை.) விசையுடன் - விரைவாக. திரை - அலை. வனை - செய்யப்பட்ட. தகதகத்து - ஒளிவீசி. (க)

[ஆற்றைக் குறித்துப் பாடியது.]

633. சுதந்தரத்தில் மனிதர்மனம் விரைந்துசெலுந் திறம்போல்
சுழித்துநுரை திரைப்புனல்செல் நதியின்கரை [சேர்ந்தேன்
இதந்தருமந் நதியினிரு கரைவளர்தண் சோலை
இறைஞ்சியிடும் மலர்மாலை அணிந்துவருங் காட்சி

புதியநவ மணிகள்புனை தொடையலெனத் தோன்றும்
பொன்மணிகள் சந்தனமும் அலைக்கரத்தில் ஏந்தும்
மதிநிறையும் புலவர்சுவைக் கவிப்பொருள்கள் எனவே
மாநிதிசேர் நதிப்பெருக்கில் மனதுபறி
[கொடுத்தேன்.

(அ - ரை.) *இதம் தரும் - இனிமையைக் கொடுக்கும். இறைஞ்சியிடும் - வணங்கிப் போடும். தொடையல் - மாலை. மதிநிறையும் - அறிவுநிறைந்த.* (உ)

[காட்டைப்பற்றிப் பாடியது.]

634. மந்திமயில் கரடிபுலி மானினங்கள் கூடி
மகிழ்வுடனே குயில்கீதம் கேட்டிருக்குங் காட்டை
வந்தடைந்தேன் மலர்கள்நிறம் கண்டுமணம் நுகர்ந்தேன்
வான்பிளக்கும் உயர்மரங்கள் தளிர்வனப்புங்
[கண்டேன்
சிந்தைகளி சுரும்பினங்கள் தேனருந்தி வெறித்தே
சிறுகுடியர் போல்உளறும் செயலதனைப் பார்த்தேன்
அந்தஇடந் தனில்விளங்கும் அழகினில்நான் மூழ்கி
அகந்தனிலே சுறுசுறுப்பும் அன்பறிவும் பெற்றேன்.

(அ - ரை.) *தளிர்வனப்பு - தளிரின் அழகு. சுரும்பினங்கள் - வண்டுக் கூட்டங்கள். வெறித்து - மயங்கி. சிறுகுடியர் - அளவாகக் குடிக்குங் குடியர்கள்.* (௩)

[மலையைப்பற்றிப் பாடியது.]

635. மினுமினுத்து வீழ்அருவி அரதனங்கள் சிதறி
மிகுவளங்கள் தருமலையின் மிசையடைந்து
[கண்டேன்
மனங்கவரும் பறவையினம் பார்த்துமனந் தழைத்தேன்
மகிழ்வுடனோர் சுனையடைந்தேன் களைப்பாறி
[நின்றேன்

கனிகளினால் பந்தடித்து மகிழ்குரங்கின் கூட்டம்
கயிறெனவே படர்கொடிகள் பிடித்தூசல் ஆடும்
இனியசுவைத் தேன்கனகக் கம்பியைப்போல் விழவே
எனதிருகை களிலேந்தி அருந்திசெருக் கடைந்தேன்.

(அ - ரை.) மினுமினுத்து - சிறிய ஒளியை வீசி. அரதனங்கள் - பொன் மணிகள். ஊசல் ஆடும் - ஊஞ்சலாடும். கனகக்கம்பி - பொன் கம்பி. செருக்கு - மகிழ்ச்சி. (௪)

## ௧௭௨. சிவகாமி சிதம்பரனார்

[இவ்வம்மையார் சோழவளநாட்டில் திருக்குடந்தையில் பிறந்தவர். காலஞ்சென்ற சாமி சிதம்பரனாருடைய வாழ்க்கைத் துணைவியார். இலக்கண இலக்கியங்கள் கற்றுச் செய்யுளியற்றுந் திறமையும் பெற்றவர்.]

[கணவர் சாமி சிதம்பரனார் காலஞ்சென்றபொழுது பாடியன.]

636. என்னவினி யான்செய்வேன் எவரைக் காண்பேன்
இவ்வுலகில் எமக்கிடமாய் இருந்த சூழல்
கன்னலெனும் வடிவுடையோன் கருணை யூற்று
கலைப்பெருக்கக் கடல்தந்த அமுத மானோன்
சென்னலத்தன் சிதம்பரனார் சென்றார் எங்கே
செப்புவீர் எனக்கேள்வி கேட்டு நின்று
பன்னலமும் அழுதரற்றிப் பிழைத்து வாழப்
பதுங்குமிடம் காணமல் திரியும் அந்தோ.

(அ - ரை.) சூழல் - இடம். கன்னல் - கரும்பு. செல்நலத்தன் - முகிலைப்போன்ற நன்மையைப் பெற்றவன். (௧)

637. நல்லவர்கள் தீயவர்கள் என்றில் லாமல்
நலிந்துவரும் அனைவருக்குந் தண்ணீர் நல்கி

நில்லாமற் பலதிசையும் வளைந்து செல்லும்
நீரோடை திடுமென்று வற்றி னாற்போல்
எல்லோரும் நலமடையப் பணிகள் செய்த
எழிலுருவே நீமறைந்து எங்கே சென்றாய்?
பொல்லாத மக்கள்பலர் உயிரோ டுள்ளார்
புகழ்தமிழுக் கென்னபயன் புகலு வாயே.

(அ - ரை.) *நீரோடை - சிற்றாறு. திடுமென்று - திடீரென்று.* (உ)

638. சந்ததமும் தமிழறிந்த குழுவி னோடு
சார்ந்துதமிழ் ஆராய்ச்சி சதுராய்ச் செய்தாய்
சொந்தநலம் குடும்பநலம் கருத்திற் கொண்டே
சொல்லவொணுத் தீவழியிற் பொருள்கள் சேர்க்கும்
இந்தநிலத் தொருநீயே தமிழ்ப்ப ணிக்கு
ஈட்டினையெப் பொருள்களையும் இனிது நாளும்
செந்தமிழின் கவிச்சுவையே சிறந்த தேனே
செழுங்கடகப் பதிவருசெந் தமிழ்வ லோனே.

(அ - ரை.) *சந்ததமும் - எப்பொழுதும். சதுராய் - மேம்பாடாக. கடகம் : சாமிசிதம்பரனார் தோன்றிய ஊர்.* (ங)

## ௧௭௩. சு. சிவசிதம்பரம் பிள்ளை

[சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் திருத்தருப்பூண்டிக்கு அண்மையில் உள்ள தீவம்மாபுரம் என்னும் ஊரில் தோன்றியவர். தமிழில் நல்ல தேர்ச்சியுடையவர். இருபத்தைந்தாண்டுகட்குமேல் ஆசிரியராகத் தமிழ்ப் பணிபுரிந்து நல்லாசிரியர் எனப் பாராட்டப் பெற்றவர். மைய அரசும் இவருடைய பணியைப் பாராட்டிப் பரிசுவழங்கியுள்ளது. "மாணவர் மனநோய் மருத்துவம், சவகர்லால் வாழ்க்கைப் பாடல்கள்" முதலியன இவருடைய நூல்கள்.]

[விண்ணூர்தியைக் குறித்துப் பாடியது.]

639. மாலைப் பருத்தெடுத்தல் மாவியப்பென் றேமொழிந்தார்
வாலுமிற குங்கொண்டே வானூர்ந்து—நாளு
மிருமீனம் பாக்கத் திருந்தொருமீ னுளைப்
பறந்தெடுத்துப் போகுதையோ பார்.

(அ - ரை.) *மாலை - திருமாலை. பருந்து எடுத்தல் - கருடனை எடுத்தது. மீன் - மீனைப்போன்ற வடிவமுடைய விண்ணூர்தி (ஆகாய விமானம்)* (க)

[ஒரு சிற்றுண்டிச் சாலையின் காபியைப்பற்றி, "காரென்று பேர்படைத்தாய்" என்னும் பாட்டைப் போற் பாடியது.]

640. நீரெனவே பெயரிட்டார் நீகுளத்தே யிருக்கையிலே
பேர்வெந்நீர் என்றிட்டார் பின்புலைச் சூடேற்றியபின்
பாரையர் ஒட்டலிலே பவுடர்த்தூள் துளிபடவே
சீர்காப்பி என்றிட்டார் சேர்முப்பேர் பெற்றுயே.

(அ - ரை.) *பார் ஐயர் ஒட்டல் - பார்க்கப்படுகிற ஐயருடைய சிற்றுண்டிச் சாலை.* (உ)

[காந்தியடிகளை வாழ்த்திப் பாடியது.]

641. திருமலி பரத நாடு சிறந்திட வந்து தோன்றி
தருமிறை யருளை வாழ்த்தித் தகுங்குடி யரசுதன்னை
ஒருதனி முறையி னுலே ஓங்கவே தேடித் தந்த
பெருந்தகை புனிதன் காந்தி பேரடி போற்று வோமே.

(அ - ரை.) *திருமலி - அழகு பொருந்திய. இறை அருளினுல் - கடவுள் அருளால். தனிமுறையினுல் - போர் முதலிய வலுக்கட்டாயமில்லாது நன்முறையில்.* (௩)

[விடுகதைப் பாடலாகப் பாடியது.]

642. தண்டமி ழெழுத்தெட்டுக் கொண்டிட்ட பெயரேது
தலையிரண் டிறும் அரனும்

தருமூன்றே டேழெட்டுத் தலையாகு மாறொன்று
தாக்கிடிற் பஞ்சு போலும்
விண்டிடின் மூன்றிரண் டொருபெரு மூரதாம்
விளங்குநான் கிரண்டு மீறும்
மிக்கநோற் றல்செய்த லிரண்டினோ டேழெட்டு
மேலுமே கேட்ப தொன்றும்
நுவண்டநான் கிரண்டொன்று நோற்பவர்க ளேழொன்று
துய்த்தல்நான் கேழெட் டுமே
துன்னுவகை யானுநான் கைந்தாறு மீறுதாள்
தோன்றுமா றிரண்டெட் டுமே
மண்டுபிற வித்துயர மாறேழு மீறுசிவம்
மகிழிரண்டு நான்கெட் டதாம்
மாவேழு மைந்தாறும் ஈறுமறு வாளேழு
மன்னுநான் கீறு தேரே.

(அ-ரை) இதன் விடை சிவசிதம்பரம் என்னும் ஆசிரியருடைய பெயரேயாகும். (௪)

1 2 3 4 5 6 7 8
சி வ சி த ம் ப ர ம்

| | |
|---|---|
| தலையிரண்டும் ஈறும் | 1, 2, 8 அரன் - சிவம் |
| மூன்றேழெட்டு | 3, 7, 8 தலை - சிரம் |
| ஆறொன்று | 6, 1 (பஞ்சும் பறந்துபோம்) - பனி |
| மூன்றிரண்டை விட்டால் | 1, 4, 5, 6, 7, 8 ஊர் - சிதம்பரம் |
| நான்கிரண்டுமீறும் | 4, 2, 8 நோற்றல் - தவம் |
| இரண்டினோடேழெட்டு | 2, 7, 8 கேட்பது - வரம் |
| நான்கிரண்டொன்று | 4, 2, 1 நோற்பவர்கள் - தவசி |
| ஏழொன்று | 7, 1 துய்த்தல் - ரசி |
| நான்கேழெட்டும் | 4, 7, 8 வகை - தரம் |
| நான்கைந்தாறுமீறும். | 4, 5, 6, 8 ஆண் - தம்பம் |
| ஆறிரண்டெட்டும் | 6, 2, 8 பிறவித்துயரம் - பவம் |
| ஆறேழுமீறு | 6, 7, 8 சிவம் - பரம் |
| இரண்டுநான்கெட்டு | 2, 4, 8 சூர்மா - வதம் |
| ஏழுமைந்துமாறுமீறும் | 7, 5, 6, 8 வாள் - ரம்பம் |
| ஏழுநான்குஈறு | 7, 4, 8 தேர் - ரதம். |

## ௧௨௪. சு. அ. இராமசாமிப் புலவர்

[சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் ஆயக்காரன்புலம் என்னும் ஊரில் 1907ஆம் ஆண்டு பிறந்தவர். ஏறக்குறைய 150 நூல்கள் வரை எழுதியுள்ளார்.]

[ஆண்பாற் பெயர்களை அடையின்றிப் பாடியது.]

**643.** முத்தையன் ரங்கன் முருகேசன் கோபாலன்
பெத்த பெருமாள் பெரியதம்பி—சத்தியநா
தன்நடரா சன்வேலன் சாமியப் பன்கோவிந்
தன்சோமன் ராமநா தன். (௧)

[பெண்பாற் பெயர்களை அடையின்றிப் பாடியது.]

**644.** மங்கையர்க் கரசி மாணிக்க வல்லி
மரகத வல்லிநீ லாம்பாள்
பங்கயச் செல்வி பார்வதி கமலம்
பாக்கியம் சரஸ்வதி வள்ளி
செங்கம லம்கோ மளம்சிவ காமி
சாரதாம் பாள்அபி ராமி
அங்கயற் கண்ணி மீனாட்சி சீதை
அழகம்மாள் சுந்தரி தங்கம். (௨)

[மலைமகள் வணக்கமாகப் பாடியது.]

**645.** உலகெலாம் அழித்த லுக்கு ஒருபெருங் கடவுள் மாட்டே
இலகுறும் சக்தி தன்னை இந்நிலப் பெரியார் முன்னுள்
மலர்தலை உலகம் போற்றும் மலைமகள் என்பர் அந்தத்
தலைமகள் பாதப் போதைத் தலையினால் வணங்கல்
[செய்வாம்.

(அ - ரை.) மாடு - இடம். இலகுறும் - விளங்கும். மலர்தலை உலகம் - பரந்த இடத்தையுடைய உலகம். (௩)

[அலைமகள் வணக்கமாகப் பாடியது.]

646. உலகெலாம் காத்த லுக்கு ஒருபெருங் கடவுள் மாட்டே
இலகுமா நிதியம் தன்னை இந்நிலப் பெரியார் முன்னுள்
நலமிகும் அலைமா தென்று நவின்றனர் அந்தத் தூய
மலர்மகள் பாதப் போதை மனதிடை வணங்கல்
[செய்வாம்.

(அ - ரை.) நிதியம் - செல்வம். அலைமாது - திருமகள். பாதப்போது - திருவடிமலர். (ச)

[கலைமகள் வணக்கமாகப் பாடியது.]

647. உலகெலாம் ஆக்கு தற்கு ஒருபெருங் கடவுள் மாட்டே
இலகுபே ரறிவு தன்னை இந்நிலப் பெரியார் முன்னுள்
நலமுடைக் கலைமா தென்று நவின்றனர் அந்தத் தூய
திலகவாள் நுதலி னின் சேவடி வழுத்தல் செய்வாம்.

(அ - ரை.) ஆக்குதற்கு - படைப்பதற்கு, (ரு)

[மங்கையர் கண்களைப்பற்றி வினுவிடையாகப் பாடியன.]

[மருட்சி ; வினு.]

648. இயற்கையாய் மண்டி எங்கும் எழிலுடன் விளங்கும்
[செய்ய
நயமுடைக் கானில் வாழும் நவ்விகாள் நீவிர் நுங்கள்
வியத்தகு மருட்சி தன்னை மேவிய தெங்கி ருந்தோ
செயமுடன் எனக்கு நன்கு செப்புவீர் சற்று நின்றே.

(அ - ரை.) செய்ய-செம்மையான. நவ்விகள்-மான்கள். மருட்சி-புதிய ஒன்றைக் கண்டவிடத் துண்டாம் சுழற்சி. (சு)

[மான்கள்; விடை.]

649. அருளுடைப் பெரியீர் நுந்தம் ஐயம்யாம் அறிந்தேம்
[கேண்மோ
திருவுடைப் பரத கண்டச் சேயிழை மாத ரார்தம்

கருமைசேர் விழியில் நின்றே கணக்கிலா மருட்சி
[தன்னைத்
தருகிறேன் றினிது பெற்றேம் சாற்றுமீ துண்மை தானே.

(அ - ரை.) சேயிழை - செம்மையான அணிகலன்கள். (எ)

[கருமை பெருமை—வினு.]

650. கணக்கிலாப் பரப்பி னேடு காசினி தன்னைச் சுற்றி
இணக்கமாய் மேவி நிற்கும் இனியமா கடலே உன்றன்
நுணுக்கமார் கருமை யோடு நுவலுநற் பரப்பை எங்கு
வணக்கமாய்ப் பெற்ருய் ஈதை மகிழ்விஞே டுரைசெய்
[வாயே.

(அ - ரை.) காசினி - உலகம். நுணுக்கம் - நுட்பம். (அ)

[கடல்; விடை.]

651. கலைகள்நன் குணர்ந்த சான்றீர் கடாவினைக் கேட்டேன்
[யானும்
தலைமைசேர் கருமை யோடு தக்கநற் பெருமை தம்மை
மலர்தலை உலகில் இந்த மாண்புசேர் பரத நாட்டுத்
திலகவாள் நுதலி னர்தம் திருவிழி யிடம்பெற் றேனல்.

(அ - ரை.) கடா - கேள்வி. மாண்பு - பெருமை. (கூ)

[அழகு; வினு.]

652. மட்டிலாத் தடாகத்தின்கண் மலர்ந்துள குவளைப் போதே
திட்டமா யுள்ள நின்றன் சீரழ கிதனைத் தானும்
இட்டமா யாவர் மாட்டு இருந்தடைந் திட்டாய் என்று
எட்டரு மகிழ்ச்சி யோடு எனக்குநீ உரைசெய் வாயே.

(அ - ரை.) எட்டரு - மிகுந்த. (க௦)

[குவளை; விடை]

653. செந்தமிழ்க் கலைப யின்று சிறப்புடன் விளங்கும் [அண்ணல்
இந்தநல் உலகந் தன்னில் யானென தழகு தன்னை
இந்திய நாட்டு மாதர் எழில்மிகு விழிக ளென்னும்
சுந்தரக் கண்கள் பாலே சொந்தமாய்ப் பெற்றிட் [டேனல்.

(அ - ரை.) அண்ணல்! - பெருமையிற் சிறந்தவரே. (கக)

[கொடுமை; வினா.]

654. போர்செயும் படைவீ ரன்றன் பொற்புறு கையில் மேவி
ஏர்செய்கூர்ங் கணையே நீதான் இணையிலாக் [கொடுமைதன்னை
பார்தனில் யாவர் மாட்டுப் பழகியே பெற்றிட் டாயோ
பேர்பெற எனக்கம் மறையைப் பெட்புடன் உணர்த்து [வாயே.

(அ - ரை.) பொற்பு - அழகு. இணை - ஒப்பு. பார்-உலகம். பெட்பு - பெருமை. (கஉ)

[கணை; விடை]

655. தக்கநற் பெரியீர் நுந்தம் தகைவரும் ஐயந் தன்னை
ஒக்கயான் அறிந்தேன் கேளும் உரைக்குமிவ் வுண்மை [தன்னை
மிக்கநற் பரத நாட்டு மெல்லிய லார்தங் கண்கள்
பக்கத்தே சென்று நின்று பழகியான் வந்திட் டேனல்.

(அ - ரை.) தகைவரும் - தன்மை பொருந்திய. மெல்லிய லார்-பெண்கள். (கங)

[கருவடிவம் — வினா]

656. செடியெலாம் சென்று சுற்றும் சீர்கெழும் வண்டே நீதான்
வடிவெலாம் கொண்டிருக்கும் மாகரு வடிவந் தன்னை

கடிதெவர் பாலிருந்து கைக்கொண்டு வந்திட் டாயோ
நொடியில்நீ இதனை எற்கு நுவன்றிட வேண்டு மாலோ.

(அ - ரை.) கடிது-விரைவில். எற்கு - எனக்கு. (௧௪)

[வண்டு; விடை]

657. அடிகளே நுந்தம் ஐயம் அறிந்தனன் யானுங் கேண்மின்
படியெலாம் சுற்ற வில்லை பகருமிக் கருமை எய்த
ஒடியிடை உடைய நந்தம் உயர்தமிழ் நாட்டு மாதர்
வடிவழ குடைய கண்ணின் மருங்கினில் பெற்றிட்
[டேனல்.

(அ - ரை.) படி - உலகம். மருங்கு - பக்கம். (௧௫)

[புலால் உண்பவர்களைக் குறித்துப் பாடியன.]

எழுசீராசிரிய விருத்தம்

658. ஆடு கோழி தனைஅ டித்து அருந்து கின்ற அன்பர்காள்
மாடு பன்றி தனைஒ ழித்து மாந்து கின்ற மனிதர்காள்
வீடு வீடு என்ற ழிந்து விழுந்து நீவிர் புலம்பினும்
ஓடு ஓடு என்ற டித்து நரகில் உம்மை உய்ப்பரே.

(அ - ரை.) மாந்துகின்ற - உண்ணுகின்ற. வீடு வீடு - விடு விடு அல்லது மோட்சம் மோட்சம் என்று கூறி. அடித்து - வருத்தி. (௧௬)

659. இச்சைகொண்டு மீன்கு லத்தை இழுத்த ருந்தும்
[பாவிகாள்!
அச்சம் மிகவும் அடையுமாறு அடைந்து நன்கு பற்றியே
இச்ச கம்வி டுத்து நும்மை இழுத்து நரகிற் சேர்ப்பரால்
கச்சை கட்டும் மறலி தூதர் கயிறு கொண்டு கட்டியே.

(அ - ரை.) இச்சை - விருப்பம். இச்சகம் - இவ்வுலகம். மறலி - நமன். (௧௭)

660. உயிர்க ளெல்லாம் ஒன்ற தென்று ஓதும் நூல்கள் பலவுள
வயிறு தன்பொ ருட்டு நீவிர் வளரு நல்ல சீவரை
அயிலல் செய்து வாழ லாவீர் அழுதுநீவிர் மாண்டபின்
வெயில தன்கண் புழுவ தென்ன வெய்ய நரகம்
[எய்துவீர்.

(அ - ரை.) அயிலல் செய்து - உண்டு. (௧௮)

661. முட்டை தன்னை உடைத்த ருந்தும் மூதன்மை யான
[மூடனே
கெட்ட செய்கை ஈது என்று கிளத்தி நின்னைப் பற்றியே
மட்டி லாத நரகி லெல்லாம் மாட்டி நன்கு வாட்டுவார்
அட்டி இன்றி மறலி தூதர் அறிந்துநீபி ழைத்திடே.

(அ - ரை.) கிளத்தி - சொல்லி. மட்டு - அளவு. மாட்டி - செலுத்தி. அட்டி - தடை. (௧௯)

662. மனித! உன்றன் வயிற்றி னுக்கு மற்றைச் சீவ
[கோடியைப்
புனித மான உடல்கள் தம்மைப் புசித்து மிக்க துள்ளினுய்
கனித நீர்மை தனை அடைந்து கடவுள் தன்னைப்
[போற்றிலாய்
இனிது மிக்க இனிது மிக்க இழிந்த உன்றன் புத்தியே.

(அ - ரை.) புனிதம்-அவற்றிற்குப் பெருமையுடைய. கனித் நீர்மை - அருளுள்ள தன்மை. இனிதுமிக்க இனிதுமிக்க - ஈண்டு நல்லதன்று என்னும் இகழ்தற் பொருளில் வந்தது. (௨0)

663. மூட்கள் குத்தி இரத்தம் வந்தால் முட்டி யேபு லம்புவாய்
அக்க ணிந்த ஈச னுக்கும் அரிய நல்ல சீவரை
உட்கு மாறு பிடித்த டித்து உரித்தெ டுத்து
[உண்ணுவாய்
நிட்க ளங்கம் அற்ற உன்றன் நீதி என்ன நீதியே.

(அ - ரை.) அக்கு - சிவகண்மணி. உட்குமாறு - அஞ்சும்படி. நிட்களங்கம் - கபடத்தன்மையில்லாத. (௨௧)

664. பூசை யாரி என்னு மோரு புத்தியற்ற பேயனல்
ஆசை கொண்டு ஆடு கோழி அறுத்துநீவிர் விழ்த்துவீர்
பேசும் அந்தக் கடவு ளுக்குப் பிரியம் என்ப துள்ளதேல்
வாசல் செல்லும் ஆடு கோழி வாரி யுண்ணுங் காண்மினே.

(அ - ரை.) ஒரு - ஒரு என்று நீண்டது. வாசல் செல்லும் - கோயில் வாசலில் செல்லும். (௨௨)

665. நரகல் உண்ணும் கோழிதன்னை நச்சு கின்ற தெய்வமும்
அரக ராஇவ் வகிலமீதில் உள்ள தென்று அறைவரோ
கரைக டந்த புரட்டனை கயமைப் பூசை யாரியால்
அரிய சீவர் தமையரிந்து அள்ளி யுண்ண லாயினீர்.

(அ - ரை.) நரகல் - மலம். நச்சுகின்ற - விரும்புகின்ற. அரகரா-சிவசிவ. கரைகடந்த - அளவுகடந்த. கயமை - கீழ்மை. (௨௩)

666. சைவம் என்ப தின்ன தென்றுசற்றும் அறியாப் பேதையீர்
தெய்வம் என்ப தின்ன தென்று தெளிகி லாத மாக்களீர்
உய்வ தற்கு வழியெ தென்று உற்று நீவிர் பார்ப்பிரேல்
பொய்வ ரும்பு லால்ஒ ழித்துப் புனித மாதல் காண்மினே.

(அ - ரை.) இன்னது - இத்தன்மையோடு கூடியது. மாக்களீர் - விலங்கு போன்றவர்களே! பொய்வரும் - தீவினையை வளர்க்கும். (௨௪)

667. உதிரங் கேட்கும் கடவுள் எந்த உலகி லேயும் இல்லையால்
புதிய தாகப் பூசை யாரி புலம்பல் தன்னைக் கேட்டுநீர்
கதறு மாறு கத்தி கொண்டு கழுத்த றுத்துக் கொல்விரேல்
கதிய தில்லை நரக மல்லால் காணும் ஈது உண்மையே.

(அ - ரை.) உதிரம் - இரத்தம். கதி - நற்கதி. (௨௫)

[அறிவிலான் ஒருவன் கூற்றுகப் பாடியது.]

எண்சீராசிரிய விருத்தம்

668 மூடர்களின் முடிமணியாய் முடிந்து நாளும்
முட்டாள்கள் சங்கமதை முனைந்து நிற்பேன்
நாடிநீர் அறவுரைகள் நயந்து கூறின்
நானதனை ஒருசிறிதும் நாடித் தேறேன்
ஏடாஈ தென்னகே டென்று நீவிர்
என்றனைத்தான் கேட்பிரேல் இயம்பு கின்றேன்
கூடியநும் அறிவுரையைக் கொள்ளும் வண்ணம்
கொடுங்கடவுள் எனக்கறிவு கொடுத்தி லானல்.

(அ - ரை.) முனைந்து - சேர்ந்து. ஏடா - அடே. (உசு)

[உலகப்போக்கைக் குறித்துப் பாடியது.]

669. ஞாலமிதைச் சீவர்களின் நலத்திற் காக
நமதிறைவன் உளங்கொண்டு படைத்துக் காத்தான்
மூலஉல கிதுபோகும் முறைமை என்ன
மொய்ம்புடனே மக்கள்பலர் மூடர் ஆனர்
ஏலவே வரும்பஞ்சம் என்னும் பேயும்
இயம்புபல பிணிக்குழுவும் இருக்கும் போது
சாலவே ஒருவரைமற் றொருவர் சாடிச்
சாகின்றார் அந்தோஈ தென்ன கேடே.

(அ - ரை.) ஞாலம்-உலகம். மூலஉலகு - எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கும் உலகம். மொய்ம்பு - வலிமை. ஏல - பொருந்த. பிணிக்குழு - நோய்க்கூட்டம். சால - மிகுதியாக. சாடி - வதைத்து. (உஎ)

[குன்றக்குடி முருகன் வணக்கமாகப் பாடியது.]

670. ஆறுமுக சரவணனே தேவ தேவே
அழகுமிகு முருகேசா அயிலை ஏந்தி

5623



ஏறுமயில் ஏறுசுப்ர மணிய வேளே
எம்பெருமா னேஎங்கள் இனிய கோவே
வீறுபுகழ் ஆறுபடை வீடுமேவும்
விமலபர தெய்வமே என்று நின்றன்
கூறும்இசை மிகநாடிக் கூடும் வாழ்வே
கொடுத்தருள்வாய் குன்றைநகர்க் குமர வேளே.

(அ - ரை.) *அயில் - வேல். வீறுபுகழ் - சிறந்த புகழ்.* (௨அ)

## ௯எ௫. மெ. வெ. வேலப்ப செட்டியார்

[செட்டிமார்நாட்டில் பலவான்குடியில் தனவணிக மரபில் தோன்றியவர். தமிழ் மொழியை விரைவாகக் கற்று வெண்பாப் புலியாகத் திகழ்பவர். அண்ணாமலை அணியறுபது முதலியன இவர் இயற்றிய நூல்கள்.]

[முருகக் கடவுள் வணக்கமாகப் பாடியன.]

நேரிசை வெண்பா

671. வள்ளி மணவாளா! மாமயிலா! வானவர்கள்
உள்ளி மகிழும் உயர்வேலா!—தெள்ளுதமிழ்
வெள்ளப் பெருக்கெடுத்து மேவுநீர் போலநன்கு
கள்ளமற உள்ளளித்துக் காண்.

(அ - ரை.) *கள்ளமற - உள்ளத்திலே உள்ள அறிவின்மையாகிய மறைப்புப் போக.* (க)

[ஒருவர் "தங்கள் பெயர் என்ன?" என்று கேட்டபோது பாடியது]

கட்டளைக் கலித்துறை

672. சீரும் புகழும் செல்வமும் ஓங்கத் தினந்தினமும்
ஆரும் புகழும் ஆர்வமும் நல்கும் அருட்கவிதை

சேரும் புகழைச் சேரத் தருராம சாமிதனை
ஓரும் புகழுறு வேலப்பன் என்றேனை ஓதுவரே.

(அ - ரை.) ஊரும் - வந்து சேரும். ஓரும் - உள்ளத்தில் எண்ணும். (உ)

[மாணிக்கவாசகர் வணக்கமாகப் பாடியது.]

அறுசீராசிரிய விருத்தம்

673. தேனூறு திருவிளங்கும் திருவாச
கத்துடனே திலகம் போன்ற
நானூறு கொண்டதனி நற்கோவை
என்னுமொரு நளின நூலும்
ஆனூரும் அண்ணல்தனக் கன்றளித்த
ஆண்டவனும் அருள்மி குந்த
வானூரும் மாணிக்க வாசகனின்
மலர்ப்பதத்தை வணங்கி வாழ்வாம்.

(அ - ரை.) திரு - அழகு, செல்வம், இனிமை, நற்கோவை- திருக்கோவையார். ஆனூரும் - காளையூர்தியைச் செலுத்தும் வான்ஊரும் - பெருமை மிகுந்த. (௩)

[பொன்னம்பலசிவம் என்பவர் காலமான செய்தியை நண்பர் ஒருவருக்குத் தெரிவித்தது.]

நேரிசை வெண்பா

674. பன்னு பெருங்கவிதைப் பாவலனும் பார்துதிக்கும்
பொன்னம் பலசிவந்தான் போயினனும்—மின்னும்
விதிதான் மதியிழந்து வேறுலகஞ் சேரச்
சதிசெய்து பார்த்தானே தான்.

(அ - ரை.) பன்னு - ஆராயும். சதி - வஞ்சகம். (௪)

## ௬௭௬. ப. இராமநாத பிள்ளை

[இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் குலசேகரன் பட்டினத்தில் 1890ஆம் ஆண்டிற் பிறந்தார். சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், திருமந்திர விளக்கவுரை, திருவாசக உரை முதலியன இவருடைய நூல்கள்.]

[கென்னடி மறைவு குறித்துப் பாடியது.]

675. வையமெலாம் வாழ மனமொழிமெய் மூன்றாலும்
செய்வனவெல் லாஞ்செய்து சீர்சிறப்பார்—மெய்யனிறை
கென்னடியுந் தம்முயிரை விட்டே புகழ்பெற்றார்
இன்புறுக ஆவி இயைந்து.

(அ - ரை.) *கென்னடி - அமெரிக்க நாட்டு மக்களின் தலைவராக இருந்தவர். வையம் - உலகம். சீர்சிறப்பு ஆர் - சீருஞ் சிறப்பும் நிறையப்பெற்ற. மெய்யன் -உண்மையாளன்.* (க)

[மைசூர் முன்னாள் அரசர் செயசாமராச உடையார் சென்னைமாநில ஆளுநராக வந்தபோது பாடியது.]

676. செயசாம ராச உடையார் சிறந்த
செயமுடனே மேலாந் திருவும்—உயவருநல்
ஆண்மையும் பூண்டு தமிழகத்தை ஆண்டென்றும்
கேண்மையுடன் வாழ்க கிளர்ந்து.

(அ - ரை.) *செயம் - வெற்றி. உயவுஅரு - வருந்துதலில்லாத. கேண்மை - நட்பு. கிளர்ந்து - சிறந்து.* (உ)

[சவகர்லால் நேரு காலமானபோது பாடியன.]

677. எல்லா வுலகமும் என்றுமின் புற்றுயரச்
சொல்லால் செயலதனுல் தூவுளத்தால்—நல்லாராய்
நின்றுழைத்த நேருப் பெருமகனார் நீள்புகழ்கள்
என்றுமே வாழ்க இனிது.

(அ - ரை.) *தூவுளம் - தூய்மையமைந்த உள்ளம். நல்லாராய் - நல்லவராய்.* (௩)

678. ஆட்சிமுறை ஆண்மை அறிவூக்கம் ஆன்றபொறை
மாட்சிமிகு நோக்கம் வளர்பொதுமை—காட்சிக்
கெளிமைகட னாற்றல் இனிமையறம் நேரு
ஒளிநமக்கிங் குற்றதுணை வாழ்த்து.

(அ - ரை.) ஆன்றபொறை - நிறைந்த அடக்கம். காட்சிக் கெளிமை - காண்டற்கெளிய நிலையிலிருக்குந் தன்மை. (ச)

679. வாழ்ந்தகா லம்போல் மறைந்தபினும் நந்தமக்கிங்
காழ்ந்ததுணை யாவர் அவரின்பம்—சூழ்ந்த
இயற்கையினை உற்றார் இசைத்தபடி எல்லாம்
செயற்படவே ஆற்றல் கடன்.

(அ - ரை.) ஆழ்ந்த துணை - பெருந் துணை. இயற்கையினை - மறைவை. (ரு)

## ௧௭௭. தி. சங்குப் புலவர்

[திருநெல்வேலி மாவட்டத்தில் எட்டிசேரி என்னும் ஊரில் 1893ஆம் ஆண்டிற் பிறந்தார். விநாயகர் ஒருபா ஒருபஃது, சரசுவதி நாற்பா மூவினமாலை, கலைமகள் பதிகம், திருச்செந்தூர் நிரனிறை யெதுகை மாலை, மதுரைச் சிலேடை வெண்பா, மாணவர் தமிழிலக்கணம் முதலியன இவருடைய நூல்கள்.]

[தமிழணங்கு வணக்கமாகப் பாடியது.]

680. காதிலகுங் குண்டலமாக் குண்டலகே
சியுமிடைமே கலையாச் சாத்தன்
ஓதுமணி மேகலையும் ஒளிர்கைவளை
யாவளையா பதியு மார்பின்
மீதணிசிந் தாமணியாச் சிந்தாம
ணியுங்காலில் வியன்சி லம்பாத்

தீதில்சிலப் பதிகார மும்புனைந்த
தமிழணங்கைச் சிந்தை செய்வாம்.

(அ - ரை.) காதிலகும் - காதில் விளங்கும். குண்டலம் - காதணிகளில் ஒன்று. குண்டலகேசி - ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. மேகலையா - மேகலையாக. சாத்தன் - கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர். கைவளை - கையில் அணியும் வளையல். சிந்தாமணி - அணிகலன்களில் ஒன்று; ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. சிலம்பு - காற்சிலம்பு, சிலப்பதிகாரம். (க)

[தமிழரசி வாழ்த்தாகப் பாடியது.]

681. காதன்மண நூலாகக் கருதுஞ்சிந்
தாமணிப்போர்க் களிற்றி லேறித்
தீதில்சிலப் பதிகாரப் பரியுமணி
மேகலையாந் தேரு மூர்ந்தே
ஆதிவரம் பெறுபுலவ ரியற்றியபல்
லிலக்கியக்கா லாட்கள் கொண்டு
நீதியுறு திருக்குறட்செங் கோல்கொண்ட
தமிழரசி நெடிது வாழி.

(அ - ரை) இச் செய்யுளில் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய மூன்று காப்பியங்களும் யானை குதிரை தேர் ஆகவும் பிற சிற்றிலக்கியங்கள் காலாட்களாகவும் திருக்குறள் செங்கோலாகவும் உருவகஞ் செய்யப்பெற்றன. (உ)

[பள்ளத்தூர் அ. மு. ப. அ. மு. முருகப்ப செட்டியார் காலமானபோது பாடியன.]

682. கள்ளத்தூர்க் கயவமரங் களைப்புகழ்ந்து
கவிபாடிக் கவலா தென்றும்
உள்ளத்தூர் பேரன்பில் புலவர்தமைப்
புரக்கும்வன்மை யுடைய கோவே
பள்ளத்தூர் வாழுமுரு கப்பமகி
பதியேயென் பால்நீ கொண்ட

வெள்ளத்தூர் வரியநட்பை மறந்திறந்து
விண்புகுந்த விதந்தான் என்னே.

(அ - ரை.) கள்ளம்தூர் - கள்ளம் என்ற தூர்களையுடைய (கள்ளம் - வஞ்சகம்) கயவமரங்களை - மரங்களைப் போன்ற கீழ் மக்களை. உள்ளத்து ஊர் - மனதிலே உண்டாகின்ற. புரக்கும் - காக்கும். ஊர்வரிய - மறைதற்கு அருமையான. (௩)

683. சீரமையும் பள்ளத்தூர் முருகப்ப
பூமநின்பால் சேர்ந்த வன்றே
ஆருயிர்நட் பாளனென எனைமதித்தாய்
நின்பதிவிட் டகன்ற பின்னும்
வாரமொரு முறைநிருபம் தவறாமல்
உய்த்துநட்பை வளர்த்து வந்தாய்
ஒருரையுங் கூறாமல் விண்ணாடு
சென்றதென்னே ஓது வாயே.

(அ - ரை.) உய்த்து - அனுப்பி. விண்ணாடு - தேவருலகு. (௪)

[மேலைச் சிவபுரி சன்மார்க்க சபை வெள்ளிவிழாவின்போது பாடியது.]

684. மேலைச் சிவபுரிச்சன் மார்க்கசபை வெள்ளிவிழாப்
போலச் சிறந்ததுண்டோ பூமீது—நூலோர்
நவிற்றுபுகழ் சேர்சாமி நாதவண்ணல் வந்திங்
கிவைத்தலைவ ராயமர்ந்த தால்.

(அ - ரை.) நூலோர் - அறிஞர். நவிற்றுபுகழ் - கூறுகிற புகழ். சாமிநாத அண்ணல் - மகா மகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்; அவையின் வெள்ளி விழாவுக்கு இவர் தலைமை தாங்கினார். (௫)

## ௧௭அ. காசிகானந்த ஞானாசிரிய சுவாமிகள்

[பாண்டிவள நாட்டில் தேவகோட்டை என்னுந் தனவைசிய நகரில் இராமசாமிச் செட்டியார் என்பவருக்கும் உமையாம்பிகை என்பவருக்கும் அருந்தவப் புதல்வராக வியஆண்டு (20-4-1886) சித்திரைத் திங்கள் ஒன்பதாம் நாள் தோன்றியவர். காசிமாநகர் சென்று வடமொழி நூல்களை நன்கு கற்று வடமொழிப் புலமை பெற்றதோடு தமிழ் நூல்களையும் நன்கு கற்றுத் தமிழ்ப் புலமையும் பெற்றவர். வேதாந்தப் புலமையில் மேதகு சிறப்போடு விளங்கும் இப்பெரியார் நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார்.]

[முருகக் கடவுள் வணக்கமாகப் பாடியது.]

685. சிறைவைத்து மலரவனைத் திண்பொருளைச் சடைமுடியில்
பிறைவைத்த பெம்மாற்குப் பிறங்கவளித் தெமையாள
நறைவைத்த மலர்ப்பொழில்சூழ் நல்வன்னி வனமேய
கறைவைத்த வேலேந்துங் கடவுள்மலர் அடிநினைவாம்.

(அ-ரை.) *மலரவன் - நான்முகன். பிறங்க - விளங்க. நறை-தேன். வன்னிவனம் - கோயிலூர்.* (க)

[முத்திராமலிங்க ஞானதேசிகர்மீது பாடியது.]

686. வித்தி டாமல் விளைய வல்ல
மேன்மை யுற்று விண்ணவர்
மெச்சு மாறு கோயி லூரெ
னச்சி றந்த கழனியில்
இத்த ராத லங்க விக்க
எய்தி உண்மை யோர்ந்துநின்
றேக மான பிரம மேயிவ்
வடிவெ னத்து தித்திடச்

சித்த மேவு புரண ளுகி
நல்வே தாந்த சிரவணம்
செய்த நேக ரைச்சை தந்ய
மாக வைத்த தூயனும்
முத்தி ராம லிங்க ஞான
தேசி கன்ம லர்க்கழல்
முடிய ணிந்து பிணியொ ழிந்து
சீவன் முத்தர் ஆகுவாம்.

(அ - ரை.) *வித்திடாமல் - விதை விதைக்காமல். கழனி நகர் - கோயிலூர். இத்தராதலம் - இவ்வுலகம்.* (உ)

[குரு வணக்கமாகப் பாடியது.]

687. அலங்கலர வெனவவனி அமைப்பறியா
தலமருவோர்க் கருள்வான் போந்து
துலங்கலுறு துறவொழுக்கச் சீர்காட்டிச்
சுகநாட்டத் துணையாய் நின்று
இலங்குசிவா காரமதா யிருந்துலகம்
ஏத்தெடுப்ப எனையாட் கொண்ட
கலங்கலிலா வீரசே கரஞான
தேசிகர்பொற் கழல்கள் போற்றி.

(அ - ரை) *அலங்கல் அரவு - மாலையில் தோன்றும் பொய்யான பாம்புத் தோற்றம். அவனி - உலகம். அலமருவோர் - சுழல்வோர். துலங்கல்உறு - விளக்கம் பொருந்திய.* (௩)

## ௧௭௩. இராமரத்னக் கவிராயர்

இவர் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் தோன்றிச் சிறந்து விளங்கியவர் என்பதைத் தவிர வேறொன்றுந் தெரியவில்லை. குருகை மாலை' என்னுஞ் சிறந்த நூலை இவர் இயற்றியிருக்கிருர். இக்

குருகைமாலைக்குத் தாயவலந் தீர்த்தான் கவிராயர் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார் ]

[நூபுரம் அணிந்த காலுக்கும் நூற்றுக்கால் மேடைக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

688. நூபுரத்தின் காலுமெழு நூற்றுக்கால் மேடையும்வான்
கோபுரத்தை நாடுங் குருகையே—மாபுரத்தன்
பன்னகத்தான் பொன்னகத்தான் பாரவரை மார்பிடந்த
பன்னகத்தான் பொன்னகத்தான் பற்று.

(அ - ரை.) நூபுரத்தின் காலும் - சிலம்பு என்னும் அணி கலன் அணிந்த மகளிர் கால்களும், எழு - உயர்ந்த. கால், 'வான் கோபுரத்தை நாடும்-சிறந்த அரசனுடைய கோயிலை (நடித்தற்கு ஏற்றதலமாக) விரும்பும் என்றும்; நூற்றுக்கால் மேடை, வான் கோபுரத்தை நாடும் - பெரிய கோபுரத்தை ஒத்து உயர்ந்து விளங்கும் என்றும் பொருள் உரைக்க. மாபுரத்தன் - பெரிய உடல் உடையவன். புரம் - உடம்பு. பன்னகத்தான் - ஆதிசேடனாகிய பாம்பை அணையாக உடையவன். பொன் நகத்தான் பார வரை மார்பு இடந்த பல்நகத்தான் - பொன்மலை போன்றவனான இரணியனுடைய கவசம் அணிந்த ரேகைகளையுடைய மார்பைப் பிளந்த பல நகங்களையுடையான். பொன் நகம் - பொன்மலை. பாரம் - கவசம். வரை-ரேகை. பொன் அகத்தான்-திருமகளை, மார்பில் உடையவன். பற்று - விரும்பியுறையும் இடம். (௭)

[கடலுக்குங் குருகைக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

689. தண்டலையில் வண்டுழலால் சந்ததநந் தாமையினால்
குண்டுகட லொப்பாம் குருகையே—பண்டொருத்தி
நீரா யிரந்தழைத்தார் நீதிமறை நூலுரைக்கும்
பேரா யிரந்தழைத்தார் பெட்பு.

(அ - ரை.) (கடல்) தண்டு அலையில் வண்டு உழலால் - விரும்பப்படுகிற அலையின்கண் உள்ள சங்குகள் உழுதலால், தண்டுதல் - விரும்புதல், வண்டு - சங்கு. சந்ததம் நந்து ஆமையினால் - எப்பொழுதும் நத்தைகளையும் ஆமைகளையும் உடைமையால். (குருகை) தண்டலையில் வண்டு உழலால் - சோலையில் வண்டுகள் சுழலுதலால், சந்ததம் நந்தாமையினால் - எப்பொழு

தும் அழியாதிருத்தலால். நந்தாமை - கெடாமை; அழியாமை. குண்டு - ஆழம். பண்டு - முன்பு. ஒருத்தி - துரோபதை. நீராய் இரந்து அழைத்தார் - கசிந்துருகி வேண்டியழைக்கப்பட்டவர். (௨)

[மறையோர்க்கும் நந்தவனத்திற்குஞ் சிலேடையாகப் பாடியது.]

690. தொல்லைமறை யோர்குணமும் சோலையினந் தாவனமும்
குல்லைமணம் வீசும் குருகையே—வில்விசயன்
மாவிரதம் பூண்டுகைத்தார் வாழ்வுறுசிற் றன்னைசொல்
மாவிரதம் பூண்டுகைத்தார் வாழ்வு. [லால்

(அ - ரை.) மறையோர் குணம் குல்லை மணம் வீசுதலாவது-வேதியருடைய பண்பானது கற்பித்து அமையாமல் திருத்துழாய் முளைக்கும்போதே நறுமணத்தோடு முளைத்தல்போலக் கருவிலே அமைந்ததாய் விளங்குதலாம். தொல்லை - பழமை. குல்லை - துழாய். உகைத்தார் - செலுத்தினர். கைத்தார் - வெறுத்தார். நந்தாவனம் நீட்டல் விகாரம். (௩)

[மன்மதன் வில்லுக்கும் மகளிர் இடைக்குஞ் சிலேடையாகப் பாடியது.]

691. வெம்புமதன் பூங்கரும்பு வில்லுமட மாதரிடைக்
கொம்புமையம் பார்க்கும் குருகையே—அம்புவிமேல்
ஆரணங்கைக் கொண்டான் அரவிந்த மாளிகைவாழ்
ஆரணங்கைக் கொண்டான் அகம்.

(அ - ரை.) ஐயம்பு ஆர்க்கும் - ஐந்து அம்புகள் பூட்டப்படும். ஐயம்பார்க்கும் - ஐயங்கொண்டு பார்க்கும். ஆரணம் - மறை. அரவிந்தமாளிகை - தாமரைமலர். ஆர் அணங்கை - திருமகளை. (௪)



[தளவாய் இரகுநாத சேதுபதிமீது]

வண்ணம்

தந்தானத்தன தந்தானத்தன தந்தானத்தன
தனதானன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தத்தன தனதானன

692. வங்காரக்கிரி சிங்காரத்தொடு சங்காரச்சிலை
யெனவேயொரு கைக்குள்வ ளைத்தொரு கைக்குள்வ
டிக்கணை முப்புரம் வெப்பெழ விடுவார்மிசை
செம்பாதிக்கொரு வெண்பாதிப்பிறை சம்பாதித்தொரு
முடிசூடினர் பத்திர தத்தன்வி சித்ரனெ னத்தகு
புத்ரன ருச்சனை புரிதாளினர்
வன்காசிக்கதி கஞ்சேதித்தல மிங்கேநித்தலு
முறைவோமென மைக்கண்ம டக்கொடி முக்யப
ருப்பத வர்த்தனி யுத்தமி யுடன்வாழ்பவர்.

தொங்கல்

[ராமநாய கரைமுற்று நம்பிஞேன்]

வங்காளத்திலி ருந்தேசெச்சையில் வந்தார்கொற்றவர்
சிலபேர் சிலர் மக்கர்து ருக்கர்வ ரத்தடை பட்டும
ணிக்கடை நிற்பர்கள் சிலபேர்சில
பொன்காணிக்கைகொ ணர்ந்தோமிப்பொழு தென்குர்
[குச்சரர்
சிலபேர்சில கொப்பைய டித்தது பட்டுமு
டித்தலை ரத்னமு திர்ப்பர்கள் சிலபேர்சில
மன்குடிச்சொலி நின்றுரிட்டனர் கன்றுனைத்திரள்
சிலபேர்மிகு கப்பவ ழக்கந டக்கைத
ரச்சொலி யொப்பமி டச்சொல்வர் சிலபேரென.

[ராசகாரிய நடத்து நங்கண்மால்.]

செங்காவிக்குடை யுங்காவிக்கொடி யுங்காவிச்சிவி
கையுமாய்விரு தொக்கவ ரத்துரை மக்கள்வ
ரப்படை பக்கம்வ ரப்பொரு களைமீதெழு
செந்தூள்பட்டிரு சந்த்ரா தித்தர்ம றைந்தோடத்தரி
யலர்பேரணி தட்டழி யப்பரி பட்டழி
யக்கரி செத்துரு ளச்சமர் பொருதேர்பரி
செண்டாடப்பகை கொண்டாரைத்தலை பந்தாடப்பெரு
நரிபேயுண ரத்தச லத்தைர ணப்பலி
யிட்டுர ணக்கொடி கட்டிய ரணகேசரி;

[வாமமார் குழலியர்க்கு வந்தவேள்.]

செண்பாகத்தொடு சொம்பாகக்குயில் பண்பாடச்செய
லொருபான்மயில் வட்டம ணிச்சிறை விட்டுந
டித்திடு கட்டளை செக்கணி யொருபாலளி
கொண்டாடப்பல வின்கோலச்சுளை பொன்போலப்பெய்வ
தொருபாலுயர் பச்சைம டற்கமு குச்சிது
ளக்கிவெண் முத்தமு குப்பன வொருபால்வளர்
செந்தேன்வைத்தப சுங்காய்மொய்த்திடு தென்தேவைத் [துரை
தளவாய்தரு சித்தச னுத்தமன் முத்தமிழ்
வித்வச னத்தைவ ளர்த்தவன் ரெகுநாதமன்;

[மாரிநீ ரருவிசுற்று குன்றின்வாய்.]

சங்கீதக்கிளி வந்தாள்சற்றெல்கி நின்ருளுப்பரி
கையின்வேல்வள ரொப்பனை யிட்டொரு சற்பனை
யிட்டிரு கட்கடை யிட்டவள் மார்பிலே,

முந்தேகுத்தும தம்பாய்வெற்பைவி ரைந்தேதொட்டபீ
னுடல்மேல்விழ வைச்சது வர்ப்பிள வெச்சில்வ
கைச்சுருள் வைத்தது துய்த்தலு மவளேயிதழ்
தந்தாளிப்படி யுண்டோப்பற்படு மென்றுள்சொற்படி
மெலவேமெல முத்தம ளித்தும டிக்குளி
ருத்திமு லைக்குள ணைத்தொரு கைபளீரென;

[சேமமார்தரு முழக்க மண்டவே.]

சஞ்சீவிப்புற வுங்காடைக்குல மும்பேடைக்குயின்
மயில்பேரளி குக்கில னத்தொடு குக்குட
மெட்டுவ கைப்படு புட்குரல் வரவேமன
துஞ்சோரத்துகி லுஞ்சோரக்குழ லுஞ்சோரப்பர
வசமாயுளு ருக்கியு ருக்கிம ணித்தொடை
யொக்கநெ ருக்கிநெ ருக்கிமன் மதனுமொரு
சந்தோடத்தெய்வம் வந்தேறிச்சன தம்பேசிப்புள
கிதமாய்மலி கைத்தொடை பிச்சிம ருக்கள
பப்புள கிப்பொடு நற்பரி மளம்வீசிய;

[சீதவீயிலகு சப்ரமஞ்சமேல்.]

அங்கோசிற்றிடை யிங்கோசிற்றிடை யெங்கோபற்றிட
மெனமாயமெ னப்பத றிப்பத றிக்கத
றித்துவ ளப்பரி புரமோலிட
முன்போகித்தது பின்போகித்தது சம்போகத்தினி
லறியாமன்ம யக்கம்வ ரத்தமு வித்தமு
விப்புண ரப்புண ரப்புது நலமாகியி
ரண்டாகத்துயி லொன்றாகத்தய வொன்றாகச்சிறு
பிறையாகிய நெற்றிவி யர்த்தொரு சற்றவ
சக்கனை நித்திரை மெத்தையில் வரவேயுடன்;

[காமமீறிய முயக்கிலன்றில்போல்.]

அன்பாகத்தொழி லின்பாகச்செய்து முன்பாகப்பொரு
மிருபார்வைம யக்கம யக்கிவ ருட்டிவெ
ருட்டியி தத்தறி வைத்திறை கொளவேயமிர்

தம்போலக்குதி கொண்டேசித்தச னன்போடொத்தெழு
சலராசிய ணைத்தலை தத்தியு டைத்தபெ
ருக்கின்ம ணத்தை விடற்கொரு கதியேதென

வென்காயக்கமு முன்காயக்கமு மின்றேயுத்தியி [கொரு
னன்றுகப்பெரி தறிவோமென மெச்சொரு வர்க்
வர்க்கதிகப்பட விச்சைகொ ளச்செய்தசுகலீலையே.

[காதலாய்மிக நினைக்கு நெஞ்சமே.]

[தொங்கல்களைச் சேர்த்தால் ஒரு பாட்டாக முடியும்.]

ராமநாய கரைமுற்று நம்பினேன்
ராசகாரிய நடத்து நங்கண்மால்,
வாமமார் குழலியர்க்கு வந்தவேள்
மாரிநீ ரருவிசுற்று குன்றின்வாய்,
சேமமார்தரு முழக்க மண்டவே
சீதவீயிலகு சப்ரமஞ்ச மேல்,
காமமீறிய முயக்கி லன்றில்போல்
காதலாய்மிக நினைக்கு நெஞ்சமே.

(அ - ரை.) வங்காரம்-பொன். பத்திரதத்தன் - தசரதன். கொப்பு - கொண்டை. கப்பம் - அரசிறைப்பொருள். தரியலர் - பகைவர். இரணம் - போர். செக்கணி - மயில் நடனம். சற்பனை - வஞ்சனை. அளி - வண்டு. துவர்ப்பிளவு - பாக்குப் பிளவு. சன்னதம் - ஆவேசம். வருட்டி - வற்புறுத்தி. சலராசி- கடல். (௯)

[ஒரு புலவரைக் கள்ளர்கள் வழிமறித்து அவருடைய பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு போய்விட்டார்கள். அப்புலவர் முல்லைத் தாண்டவராய பிள்ளை என்னுஞ் செல்வரிடஞ் சென்று பாடியது.]

693. ஆகாத கள்ளர் அடித்துப் பறித்தமுதல்
போகாது போகாது போகாது — வாகார்
சதுரனைத் தென்முல்லைத் தாண்டவ ராய
விதுரனைவாங் காமல் விடேன்.

(அ - ரை.) வாகார் - பெருமை பொருந்திய. சதுரன் - மேம்பாட்டை யுடையவன். (உ)

[ஒரு புலவர் பெருநிலக்கிழார் ஒருவர்மீது திக்கு விசயம் என்னும் நூல் ஒன்று பாடி அரங்கேற்றினர். பெருநிலக்கிழார் பிறகு அந்நூலைக் கொல்லங்கொண்டான் பெருநிலக்கிழாரிடத்தும், சேற்றூர்ப் பெருநிலக்கிழாரிடத்தும் படித்துக்காட்டி வருமாறு சொல்லியனுப்பினர். புலவர் அவ்வாறே சென்று படித்துக்காட்டிவிட்டுத் திரும்பிவந்து பெருநிலக்கிழாரிடத்துப் பாடியது.]

694. வேண்டாத மருவலரை வென்றரசு
புரியுமுயர் வேந்தே நாளும்
தூண்டாத மணிவிளக்கே வரகுணரா
மேந்தி ரனேசொல்லக் கேளாய்
கூண்டார வாரமுடன் நின்தானு
பதியுடன்யான் கூடப் போனேன்
வாண்டாயன் தலைமறைந்தான் செம்பொன்வட
மலைத்திருவன் வழங்கி னனே.

(அ - ரை.) வாண்டாயன் - கொல்லங்கொண்டான் பெருநிலக்கிழார். வடமலைத்திருவன் - சேற்றூர்ப் பெருநிலக்கிழார். (௩)

[சிவகிரிப் பெருநிலக்கிழார்மீது ஒரு புலவர் பாடியது.]

695. வாக்கிரண்டு பேசா வரகுணரா மேந்திரனே
வாக்கிரண்டு பேசமனம் வைத்தான்—தாக்கு
மருவலரைக் கொல்லென்றேன் வந்தடைந்த போது
வெருவாமற் காப்போமென் றான்.

(அ - ரை.) தருவலர் - பகைவர். வெருவாமல் - அஞ்சாமல். (௪)

[சேற்றூர்ப் பெருநிலக் கிழாரிடத்தில் ஒரு புலவர் வந்து பின்வருஞ் செய்யுளில் 'தெரியும்' என்பதுவரை பாடினார். உடனே பெருநிலக்கிழார் புலவருடைய கழுத்தைப் பிடித்துக்கொண்டு "இங்கேவந்து இது வரையில் வசை பாடியவர்கள் எவரும் இலர். இதற்கு மேல் இசையாகப் பாடவேண்டும்" என்றபோது அப் புலவர் பாடியது.]

696. படிவாங்கப் படும்பாடு பரமசிவன்
அறிவனவன் பங்கில் வாழும்
வடிவாளும் அறிவளவள் மக்களுக்குந்
தெரியுமிந்த வருத்தந் தீர்ப்பாய்
முடிவேந்தர் அடிதாழ்ந்து முறைமுறையே
திறையளக்கும் முகுந்தா மேலாம்
துடிவேந்தா ரதிகாந்தா துரைத் திருவா
தரைக்கொருவா சுகிர்த வானே.

(அ - ரை.) படி - நாட்செலவுக்குரிய பொருள். துடிவேந்தா-சுறுசுறுப்புள்ள அரசனே! ரதிகாந்தா - காமன்போன்றவனே! சுகிர்தவான் - நன்மைகள் அமையப்பெற்றவன். (௫)

[போலிப் புலவர் ஒருவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடஞ் சென்று இந்தப் பாடலைச்

சொல்லி "இதற்குப் பொருள் சொல்லுங்கள் பார்க்கலாம்" என்று சொன்னார். பிள்ளையவர்கள் பாடலைக் கேட்டுவிட்டு உடனே பொருள் சொன்னார்.]

697. காணியுங் காணியுங் காணியுங் காணியுங் காணியுங்காற்
காணியுங் காணியுங் காணியுங் காணியுங் காணிமுக்காற்
காணியுங் காணியுங் காணியுங் காணியுங் காணியுநாற்
காணியுங் காணியுங் காணியுங் காட்டுங் கழுக்குன்றமே.

(அ - ரை.) *இதிலுள்ள காணிகள் இருபது; இருபது காணி கொண்டது காலென்னும் எண்; கால் என்பது இங்கே திருவடியைக் குறிக்கிறது. திருக்கழுக்குன்றத்தை அடைந்தால் அச் சிவப்பதி சிவபெருமானுடைய திருவடிகளைக் காணச் செய்யும் என்பது இதன் பொருள்.* (சு)

[ஒரு புலவர் தமக்கு இத்தகைய பெண் மனைவியாக அமையவேண்டும் என்று பாடியது.]

698. ஆசாரம் உள்ளவ ளாய்ப்பெரி யோரை அறிபவளாய்க்
காசாசை சற்றுமி லாதவ ளாய்க்கருத் துள்ளவளாய்க்
கூசாம லேவிழைந் தின்பா னுபவங் கொடுப்பவளாய்
ஈசா எனக்கொரு பெண்தரு வாய்கச்சி யேகம்பனே.

(அ - ரை.) *ஆசாரம் - தூய்மை. விழைந்து-விரும்பி.* (எ)

[காரைப்பதி என்னும் ஊரிலே சர்க்கரைப்பிள்ளை என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் சிறந்து விளங்கினான். ஒருநாள் ஒரு புலவர் அச்செல்வனிடம் வந்து "நீர் நம்மை இகழ்ந்துரைத்ததாகக் கேள்விப் பட்டோம். இகழ்ந்தது உண்மைதானா?" என்று உசாவினார். அதற்கு அச்செல்வர், "நான் உங்களை இகழ்ந்துரைக்கவில்லை" என்று கூறியதுடன் நெய்யைக் காயவைத்து அதிலே கையைவிட்டுச் சுடாதிருத்தலைக் காட்டினார். புலவர் வியப்படைந்து பாடியது.]

699. மகிழ்ந்துகா ரைப்பதியில் வாழ்சர்க் கரைதான்
புகழ்ந்து திரிபுல வோரை—இகழ்ந்துநான்
வையவில்லை என்றுசொல்லி மண்டலமெல் லாந்துதிக்க
நெய்யிலே கையையிட்டான் நேர்ந்து.

(அ - ரை.) நெய்யிலே கையைவிட்டு உண்மையை நிலை நாட்டல் அந்நாள் வழக்காறு. இச்செய்யுளைக் கேட்டுச் சர்க்கரைப்பிள்ளை மகிழ்ந்தார். புலவரைத் தம்மில்லில் உணவருந்தச் செய்தார். பிறகு கையலம்பும்போது புலவர் செல்வரைப் பார்த்து, "நீர் நம்மிடத்தில் அன்புடையவராயின் நம்முடைய எச்சில் வாயைக்கழுவி விடும்" என்றார். செல்வர் மகிழ்ச்சியடைந்து அவ்வாறே புலவர் வாயையும் கழுவி விட்டார். (அ)

[வாடிமிட்டாபெருநிலக்கிழார் மரக்கம்பைய நாயுடு என்பவரிடத்தில் ஒரு புலவர் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார். பெருநிலக்கிழார் பராமுகமாக இருந்தார். உடனே புலவருக்குச் சினமுண்டாகிவிட்டது. வைததன்றிப் பெருநிலக்கிழாருடைய முகத்தில் அறைந்துவிட்டார். பெருநிலக்கிழார் சினங்கொள்ளவில்லை. ''நல்லறிவு வரச்செய்தீர்'' என்றுகூறித் தமது கையில் இருந்த மோதிரத்தைப் புலவர்கையில் அணிந்தார். பொருளும் வழங்கினர். அப்பொழுது அப்புலவர் மகிழ்ந்து பாடியது.]

700. வையம் புகழுஞ் சந்திரகிரி வளங்கொள்
பதியைப் புரக்கும் எங்கள்
ஐயன் குமரக் கம்பையவேள் அறிவுக்
கினிமேல் நிகருண்டோ
வைதேன் வைதேன் சினந்தீர வாயில்
அடித்தேன் நோகும் என்று
கையைப் பிடித்து மோதிரமும் கனக
முடிப்புந் தந்தா னே.

(அ - ரை.) வாயில் - கன்னத்தில். கனக முடிப்பு - பொற்கிழி. (க)

[பெரியவன் என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் வேண்டுவார் வேண்டுவதை யீவானாக விளங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய கொடைத் திறத்தை ஆராய்ந்து பார்க்க விரும்பிய ஒரு புலவர் அச்செல்வனிடஞ் சென்று, "நீர் உம்முடைய மனைவியைக் கொடும்" என்று கேட்டார். உடனே அச்செல்வன், "அழைத்துக்கொண்டு போம்" என்று கூறித் தன் மனைவியை அழைத்து அப் புலவருக்குமுன் நிறுத்தி, "நான் உன்னை இப்புலவருக்குக் கொடுத்துவிட்டேன் இவருடன் செல்" என்று கூறினான். அப்பொழுது அப்புலவர் பாடியது.]

**701.** கன்னா யிரம்படைத் தான்மக வானைவர் காடுறைந்தார்
எண்ணான நூற்றொரு பேர்மடிந் தாரிலங் காபுரியும்
மண்ணாய் மடிந்தது வாலியும் பட்டனன் மாநிலத்தில்
பெண்ணாள் உனக்கெளி தாமோநந் தேவைப்
[பெரியவனே.

(அ - ரை.) *மகவான் - இந்திரன். ஐவர் - பாண்டவர். நூற்றொருபேர் - துரியோதனன் முதலியோர்.* (௧0)

[சேதுபதி அரசுசெய்யும் நகரங்களில் திருமணமாகாத பெண்கள் மிகுதியாக இருத்தலைக் கண்டு சேதுபதி மன்னரின் அமைச்சர் முத்திருளப்பபிள்ளை குறுணித் தாலி செய்துவரச் செய்து திருமணமாகாத ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒவ்வொரு தாலியும் செலவுக்கு வேண்டிய பொருளுங் கொடுத்தார். இதனைக் கண்ட ஒரு புலவர் பாடியது.]

**702.** அமரிக்கை யாளன்முத்து ராமலிங்க
சேதுபதி அவனிக் கெல்லாம்
சுமுகப்ர தாபன்எங்கள் முத்திருளப்
பேந்த்ரமந்த்ரி துலங்கு நாளில்

சமருக்கென் றெதிர்த்த மன்னர்
தரையிலில்லை மதனொருவன் தவிரமின்னூர்
குமரிக்குட் கன்னியா குமரியல்லான்
மற்றிலைப்பெண் குமரி தானே.

(அ - ரை.) அமரிக்கை - பொறுமை. சமருக்கு-போருக்கு. மதன் - காமன். கன்யாகுமரியைத் தவிர மற்றைக் குமரியர்கட்கெல்லாம் மணமாகிவிட்டதென்க. (கக)

[சிவகங்கையை ஆண்ட மருதுபாண்டியனது வள்ளன்மையையும் ஒரே மனைவி நோன்பையும் வியந்து ஒரு புலவர் பாடியன.]

703. தேனுந்து தாமன் மருதேந்த்ர ராசன் தியாகங்கண்டு
வானும்பர் தாமும் புலவரென் றூர்வடி வேற்குகனென்
போனும் புலவனென் றுன்புதன் தானும் புலவனென்றுன்
நானுங் கவியென்று சுக்கிரன் தானும் நவின்றனனே.

(அ - ரை.) தேன்உந்து தாமன் - தேன் துளிக்கின்ற மாலையை உடையவன். மருதுப்பாண்டியனுடைய வள்ளன்மையைக் கண்டே தேவர்களும் புலவரென்று பெயர்கொண்டார்கள். முருகனும் பாண்டியனிடம் பொருள் வாங்குதற்கென்றே புலவனாயினன். புதன் புலவனானதும் சுக்கிரன் கவியென்று பெயர்கொண்டதும் வள்ளன்மைகண்டே என்க. (கஉ)

704. பரனூர் இயல்புணரும் பண்பன்தன் இன்பம்
பரநா ரியர்அறியாப் பண்பன்—திரனூர்
அணிமருது பாண்டில்விழ அன்றுதைத்தோன் யாரும்
பணிமருது பாண்டியபூ பன்.

(அ -ரை.) பரனூர்-இறைவன். பரநாரியர் - பிறமாதர்கள். திரன் - உறுதி. மருது - மருதமரம். பாண்டில்-வண்டி. (கங)

[தனக்கு அட்டமத்துச் சனியாவார் இவர் இவர் என்று ஒரு புலவர் பாடியது.]

705. காலையிலே பல்கலைநூல் கல்லாத் தலைமகனும்
மாலையெரி போன்ற வயலானும்—சால
மலைக்கட் டழிக்கும் மனையாள்இம் மூவர்
தனக்கட் டமத்துச் சனி.

(அ - ரை.) காலையில் - பாலப்பருவத்தில். மனைக்கட்டழிக்கும் - கூடா ஒழுக்கத்தில் ஈடுபடும். (௧௭)

[இக்காலத்தில் செய்யுள்கள் மதிப்பிழந்தமை.]

706. அந்நாட் புலவர்கவிக் காயிரம் ஐஞ்ஞூறு
பொன்னும் கவிதை புனிதமாம்—இந்நாளில்
வாசமற்ற தோசியெனும் மாந்தர் தலையெடுக்கக்
காசுக்கைஞ் ஞூறு கவி.

(அ - ரை.) கவிதை புனிதமாம் - பாடலும் மதிப்புடையதாம். வாசமற்ற - கல்விமணம் அற்ற. (௧௮)

[மல்லைச் சிற்றம்பலப் பிள்ளைமீது ஒரு புலவர் பாடியது.]

707. காசா கிலுங்கற்ற பேர்க்குத வாத கசடர்தமக்
காசார மென்ன முழுக்கென்ன பூசைக ளாவதென்ன
சீசாகவுமறி யார்கரம் போலத் திரிவர்நல்ல
பூசா பலாமல்லை வேந்தாசிற் றம்பல பூப்தியே.

(அ - ரை.) சாகவும் அறியார். கரம் - கழுதை. (௧௯)

[சிவஞான முனிவர் காஞ்சியில் எழுந்தருளியிருந்த போது சில புலவர்கள் கூறி உரைகேட்ட பாட்டு.]

708 அங்கோழி முட்டை யுறப்புவி யாண்டல ராலவிந்த
வெங்கோழி முட்டைமுன் சேரா வுருப்பவெல் வெம்மை [பஞ்சே
ருங்கோழி முட்டை வரும்பாலை போல உருக்குமந்தோ
செங்கோழி முட்டைக் கருப்போ லெழுந்த செழுந்திங்க [ளே.

(அ - ரை.) அழகிய உறையூரானது முட்டினையுறும்படி உலகத்தை ஆண்டு செவ்வந்திப்பூக் காரணமாக மண்மாரியால் அவிந்த வெவ்விய அரசனுருட்டுந்திகிரியும், அவனைக் கொல்ல வந்த முகிலும், அவன் கையிற் படைக்கலமும் போலும் வெப்பமும் கொழுத்த யானையும் முள்ளும் பரம்பா நின்ற பாலை நிலத்தைப்போல உருத்தலைச் செய்யா நிற்கும்; செவ்விய கோழியினது முட்டையாகிய் கருவைப்போல் எழுந்து ஒளிர்கின்ற வளவிய திங்கள் ஒன்றே.

அம் - அழகு. கோழி - உறையூர். முட்டை - முட்டுப்பாட்டினை. வெங்கோ - வெவ்விய அரசன். வெங்கோ என்பதற்குப் பின் வரும் ழி, மு, டை என்னும் எழுத்துக்கள் பின்னர் நிற்ப அவற்றின் முன்னே முறையே பொருந்தும் ஆ, உரு, ப என்பவற்றுலாய சொற்கள், ஆழி, உருமு, படை என்பன. பம் என்பதைச் சேர்ந்த கோழியாவது கோழிபம் என்பது. முள் - முள்ளு. தைவரல் - தடவல். செங்கோழி - செவ்விய கோழி. (கள)

[உண்ணுதற்காகும் இலைகளையும், வாழையிலையைத் தண்டு உரித்துப் போட்டுச் சாப்பிடக்கூடாது என்பது பற்றியும் ஒரு புலவர் பாடிய பாட்டு.]

**709.** வாழையிலை தெங்கு வளர்பலா மாப்புன்னை
தாழையிலை யூனையிலை தானுமே—வாழையிலை
தண்டுரித்தால் ஆகாது தார்வேந்தர்க் கானலும்
பண்டுரைத்த நூலின் பயன்.

(அ - ரை.) தெங்கு - தென்னை ஓலையால் தைத்த இலை. தண்டு - இலைக்குப் பின்புறம் உள்ள நரம்பு. (கஅ)

[ஒரு பெண்ணின் கூற்றாக ஒரு புலவர் பாடியது.]

**710.** எந்தனங்கள் பட்டுருவி என்கணவன் போனவழி
கந்தமலர்ப் பூங்குழலீர் காணீரோ—நுங்கணவன்
வாழையிலே கண்டேன் வரப்பிலே கால்கண்டேன்
தாழையிலே கண்டேன் தலை.

(அ - ரை.) வாழையிலே - இன்ப வாழ்க்கையை நடத்துகையிலே. வரப்பில் - கொல்லை வரப்பில். தாழையில் - ஊடலைத் தீர்த்தற்கு உங்களை வணங்குகையில். (கக)

[தலைவி பாணனைப் பார்த்து இகழ்ந்து பாடிய கூற்றாக ஒரு புலவர் பாடியது.]

711. ஈட்டு புகழ்நந்தி பாணநீ எங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடியளவும்—காட்டிலழும்
பேயென்றாள் அன்னை பிறர்நரியென் றார்தோழி
நாயென்றாள் நீயென்றேன் நான்.

(அ - ரை.) எங்கையர் - காதற் பரத்தையர். (௨0)

[பாலனைப் பழித்தலாகப் பாடியது.]

712. ககரம் பிறந்தசொல் லான்கரு மாணிக்கன் கப்பல்வெற் [பில்
உகரம் படைத்திருந் தோமில்லை யேஉனைப் பெற்றபின்பு
வகரம் பிடித்தும்வந் தாரிலையே என்ன மாயஞ்செய்தாய்
அகர இகரம் தனமாக்கி வைத்த அருமகவே.

(அ - ரை.) ககரம் (க) என்பது தமிழ் எண்ணில் ஒன்றைக் குறிக்குமாதலால், ஒன்றேயன்றி மாறுபாடு அவன் சொல்லில் இல்லையென்பதை விளக்கி நின்றது. உகரம் படைத்திருந்தோம் இல்லை - நாம் இரண்டுபட்டிருந்ததில்லை. வகரம் பிடித்தும் - (வ) காலைப்பிடித்தும். அகர இகரம் தனமாக்கி - [அகர இகரம் அஇ - எட்டரை] நாலுந்தனம் அல்லது அரையை எட்டிய தனம். (௨௧)

[திருவாவடுதுறைக் கச்சியப்ப முனிவர் திருவடிப் பேறுபெற்ற நாள் ஆண்டு திங்கள் முதலியவைகளை அமைத்து ஒரு புலவர் பாடியது.]

713. ஏர்தரு சாலி வாகன சகாத்தம்
ஆயிரத் தெழுசதத் தொருபத்
திரண்டின்மேற் சாதா ரணவரு டத்தில்
இயைதரு சித்திரைத் திங்கள்

சார்தரு தேதி பத்தினே டொன்று
தருசெவ்வாய் வாரம்பூ ருவத்தில்
சத்தமி புனர்பூ சத்திரு நாளில்
தவலருங் கும்பலக் கினத்தில்
சீர்தரு துறைசை வாழ்சிவ ஞான
தேவன்மா றுக்கரின் முதன்மை
திகழ்ந்துள கச்சி யப்பமா முனிவன்
திருப்பெருங் காஞ்சியில் எய்திச்
சேர்தரும் அடியார் தமதக விருளைத்
தினகரன் முன்னிரு ளென்னத்
திருந்துதன் அருளால் அகற்றிவீ டுறுத்திச்
சிறந்தபூ ரணமடைந் தனனே.

(அ - ரை.) *சாலிவாகன சகாப்தம்* 1712 *சாதாரண ஆண்டு. அகவிருள் - அஞ்ஞானம். தினகரன் - கதிரவன்.* (௨௨)

[பாண்டித்துரைத்தேவர் காலமானபோது ஒருவர் பாடிய இரங்கற்பா.]

**714.** சங்க நிதிவளர்க்கும் தாளாளன் வானிலுள்ள
சங்க நிதிகொணர்வான் சார்ந்தனனே—அங்கிருக்கும்
சிந்தா மணிகொணர்வான் சென்றனனே ஒன்றுணரேன்
மைந்தார் புகழ்ப்பாண்டி மன்.

(அ - ரை.) *சங்கநிதி - இருவகைச் செல்வத்துள் ஒன்று.* (௨௩)

[மறைந்துபோன ஆமாத்தூர்க் கோவையில் ஒரு பாட்டு.]

**715.** மேதிக் குலஞ்சொரி பால்கயல் மாந்தும் விரைப்பழன
மாதைப் பரமர் சடாடவி யோமணிப் பேரணியோ
ஆதித்தனிவிழி யோசெங்கை யோசெங்கை அம்பினயோ
போதுற்ற சேவடி யோஐய நீதந்த பூந்தழையே.

(அ - ரை.) *மாதை - திருவாமாத்தூர். மேதி - எருமை. மார்தும் - உன்னும். சடாடவி-சடைக்காடு.* (௨௪)

[மறைந்துபோன கண்டன் கோவையில் ஒரு பாட்டு.]

**716.** ஆவியெங் கேயென்னில் ஆவியெங்
கேயென்னு மானகஞ்சத்
தேவியெங் கேயென்னில் தேவியெங்
கேயென்னும் செல்விருந்தைக்
கூவியங் கேயழைக் குங்கரத்
தான்கண்டன் கோழிவெற்பில்
பாவியிங் கேகொண்ட மால்கொண்ட
தோஇப் பனிவரையே.

(அ - ரை.) *கண்டன் - சோழன். கோழி - உறையூர்.* (௨௫)

[ஒரு புலவர் நீண்டநேரம் மிக முயற்சிசெய்து ஒரு செய்யுள் இயற்றினர். அதனைக் கண்ட மற்றொரு புலவர் கேலி செய்து பாடியது.]

கட்டளைக் கலிப்பா

**717.** ஓலை தேடி எழுத்தாணி தேடியாள்
ஒய்ந்தி ருக்கு மிடந்தேடி யேயொரு
மூலை தேடி இருந்துதன் மூக்குக்கண்
ணூடி தேடி முகத்திற் பொருத்தியே
மாலை தேடி வருமட்டு மோர்கவி
வந்த தென்று வரைந்து வழுத்துவான்
சாலை நீடிய பாப்பரங் குளத்துக்குத்
தக்கசொக்கலிங் கக்கவி ராயனே.

(அ - ரை.) *ஆள் ஒய்ந்திருக்குமிடம் - தனியிடம். பாப்பாங்குளம் - ஓர் ஊர்.* (௨௬)

[வரதுங்கராமன் வீடுபேறடைந்த நாளை யமைத்து ஒரு புலவர் பாடியது.]

718. அறுதியிலாப் புகழ்பரவக் கலியுகவாண்
டொருநாலா யிரத்து நானூற்
றறுபதுவி காரியாம் வருடமார்
கழிமாதம் பூர்வ பக்கம்
மறுவில்சதுர்த் தசியெனுநா ளிற்கருவை
யம்பதிப்பால் வண்ண நாதன்
நறுமலர்த்தாட் கன்புடையோன் வரதுங்கன்
பரமபதம் நண்ணி னனே.

(அ - ரை.) *அறுதி - முடிவு. மறு - குற்றம். கருவை-கரிவலம் வந்த நல்லூர்.* (உஎ)

[ஞானப்பிரகாசர் என்பவர் கிருட்டிண தேவராயர் மேல் மஞ்சரிப்பா என்றொரு நூலும், கச்சிச் சிவபெருமான்மீது கச்சிக்கலம்பகம் என்னும் நூலும் பாடினர். இவைகட்குப் பரிசாக இராயர் பதினெண்வகை வாத்தியமும், பொற்சிவிகை, சிங்கமுகச் சுருட்டி முதலியவைகளும் நன்கொடை வழங்கினர். அப்பொழுது அதனைப் பார்த்திருந்த ஒரு புலவர் பாடியது.]

719. நீடாழி உலகத்தில் கரிகால சோழனுண்
முதனிகழ் தொண்டைமண் டலத்து
நிகரிலாக் கச்சிதனின் ஞானப்ர காசநன்
நிதிமூர்த்தி யார்த மக்கு
வாடாப் புகழ்க்கிருட்டின ராயராம் வேள்தந்த
மாதங்கக் கொடியா டையும்
மாவுடங் காவெண் டயமேல்வெண் கலப்பேரி
மதிபாநு பிறையுடன் வாச்சியம்

சோடாய திருச்சின்னம் கவுரிகா ளம்பூரி
சொல்லுமெக் காளை தாளம்
தோற்கருவி தவுண்டைபல் லரிதவளச் சங்கு
சொர்ணச் சிவிகை கவிகை

ஆடா மணிச்சிங்க முகவா சுருட்டியும்
அணியுபய வெண்சா மரமும்
அருகில்வரு குஞ்சரம் பகல்தீவட்டி யுருகு
வாளான பதினெண்வாச் சியமும்

ஈடான முப்பத் திரண்டுவிரு தாண்மையும்
இரத்தினம் இழைத்த குல்லாய்
எழுதோ மரங்கபாய் கைலாவு கட்டியம்
இன்னம் அநேக பலவும்

சேடனு யிரத்துபய நாவினல் சொல்லரிய
தெய்வீக விநோத விருதும்
சீராய் நடத்தினன் ஏகம்ப ரறியவா
சித்தன் மதியுள்ள காலமே.*

(அ - ரை.) ஆழி உலகம் - கடலாற் சூழப்பட்ட உலகம். கச்சி - காஞ்சீபுரம். மதிபானுபிறை - சந்திரப்பிறை, சூரியப்பிறை. சோடு - இரட்டை. உபய-இரட்டை. * இப்பாட்டு மூலப்படியில் இவ்வாறேயுள்ளது. (உ அ)

[பழநியின் சிறப்பைக்குறித்து ஒருபுலவர் பாடியது.]

720. அன்னம் அளிக்குமூர் அண்டினரைக் காக்குமூர்
சொன்ன மழைபோற் சொரியுமூர்—உன்னினர்க்குத்
தீதுபிணி தீர்க்குமூர் செவ்வேள் இருக்குமூர்
ஓது திருப்பழநி யூர்.

(அ - ரை.) சொன்னம் - பொன். உன்னினர் - நினைத்தவர். * 'ஓதுதிருப்.போரூரம்மூர்.' என்று திருப்போரூர்ச் சந்நிதி முறையிலுளது. (உ௧)

[மாம்பழக் கவிச்சிங்க நாவலரின் திறமையை வியந்து ஒரு புலவர் பாடியது.]

721. எட்டும் அதன்மேல் இரட்டியுமற்
றியம்புஞ் சதமும் விதவிதமாய்க்
கட்டும் அவதா னங்களில்தன்
கருத்தை எளிதிற் பொருத்தவல்லான்
விட்டுப் பிரிந்தார் பல்லாண்டின்
மேலாண் டினுஞ்சொற் குறியுணர்ந்து
கிட்டுங் கேண்மை ஞாபகஞ்சேர்
கீர்த்திக் கொருவன் மாம்பழமே.

(அ - ரை.) *எட்டு-அட்டாவதானம். அதன்மேல் இரட்டி-சோடசாவதானம். சதம் - சதாவதானம். கேண்மை ஞாபகம்-நட்பு நினைவு.* (௩௰)

[மாம்பழக்கவிச்சிங்க நாவலர் இராமநாதபுரத்தில் இருந்தபோது அவருடைய நண்பராகிய ஒருவர் பொன்னுச்சாமித் தேவர்மேல் எழுதிக்கொண்டுவந்து மாம்பழக்கவிச்சிங்க நாவலரிடங் காட்டிய பாட்டு.]

722. வீதிதொறு மாடஞ் சிறக்க விளங்குதென் புதுவை வாழும்
நாதியிலை எனவந் தார்க்கு நல்குபொன்னுச் சாமி வேந்தே
சேதியொன்று செப்பக்கேளும் செகத்தினிற்பற் பலரைப் [பாடி
பாதிவலி குன்றினேற்குப் பரிசுதந் தருளு வாயே.

(அ - ரை.) *நாதி - காப்பவர். இச்செய்யுளைக் கேட்ட நாவலர் நகைத்தார். "நண்பரே! வீதிதோறும் மாடு அஞ்சு இறந்தால், அந்த ஊரினர் எவ்வாறு நல்வாழ்வு வாழ்தல் கூடும்?" என்று கேட்டார். பிறகு மாடஞ்சிறக்க என்பதை, மாடகூடம் என்று திருத்திக்கொடுத்தார் என்ப.* (௩௧)

[இராமநாதபுரம் சமத்தான அமைச்சர் முத்திருளப்ப பிள்ளையைப் புகழ்ந்து ஒரு புலவர் பாடியது.]

அறுசீராசிரிய விருத்தம்

**723.** தத்துவமாய்த் தசரதனும் அறுபதினா
யிரவருடந் தவமே செய்து
புத்திரனைப் பெற்றெடுத்துக் கோசலநாட்
டினைமட்டும் புரக்கச் செய்தான்
முத்திருளப் பேந்த்ர மந்திரி
நீஇவ்வுலகம் முழுதும் காக்க
எத்தனைநாள் தவமிருந்தான் சவுந்தரபாண்
டியனுனைப்பெற் றெடுக்கத் தானே.

(அ - ரை.) தத்துவம் - உண்மை. புரக்க-காக்க. (௩௨)

[ஒரு புலவர் முத்திருளப்ப பிள்ளையிடம் நன் கொடைபெறச் சென்றிருந்தார். முத்திருளப்பபிள்ளை கணக்கனைப் பார்த்து, "நான் நூறு ரூபா கொடுக்கச் சொன்னதாக ஒரு சீட்டு எழுதென்றார். அக் கணக்கன் "நானூறு ரூபாய்" என்று எழுதிக்கொண்டுவந்து இவரிடம் நீட்டிக் கையெழுத்திடச் சொன்னான். "நூறு ரூபாய்தானே சொன்னேன் ஏன் இப்படி எழுதினாய் என்று கூறித் திருத்தச்சொன்னார். பின்வரும் பாட்டைப் புலவர் பாடி நானூறு ரூபாக்களையுந் தட்டிக்கொண்டு போய்விட்டார்.]

**724.** உறுக்குமதி வேந்தருக்கும் கள்வருக்கும்
நீதிதப்பி ஒழுகி னோர்க்கும்
கிறுக்குவரச் செயுந்துரையே பாவாணர்
ஓலையினுங் கிறுக்குண் டாமோ
பொறுக்குமர சுரிமைமுத்து ராமலிங்கச்
சேதுபதி பூமி யெல்லாம்

நிறுக்குமதி மந்திரிமுத் திருளப்பா
அருளப்பா நிருபந் தானே.

(அ - ரை.) உறுக்கும் - சினக்கும். நிறுக்கும் - சீர்தூக்கிப் பார்க்கும். (௩௩)

[கன்னிவாடிப் பெருநிலக்கிழார் பேரையூர் அறைக் கீரைமீது பேரவாக்கொண்டு நாள்தோறும் அஞ்சல் வழியாகத் தருவித்து உண்டுகொண்டிருந்தார். அத னைக் குறித்து ஒரு புலவர் பாடியன.]

**725.** பலபடப்பை உற்றதனுல் அன்னமிசை
ஏறியிருப் பதனுல் என்றும்
நில்வும்உடல் பசந்ததனுல் அரிஅரியென்
றருந்தவர்கள் நிகழ்த்த லான்மா
நலகையிலே வாய்வாசம் உறுதலினுல்
சைவர்களும் நாட லால்இச்
சொலவரிய பேரையூர் அறைக்கீரை
திரிமூர்த்தி சொரூபந் தானே.

(அ - ரை.) படப்பை - தோட்டம் அன்னம் - உணவு, அன்னப்பறவை. "அரி அரி"—திருமாலே திருமாலே, அறு, அறு. அருந்தவர் - முனிவர், உண்பவர். கையிலேவாய் வாசம் - கைலேமலேயிடத்தில் இருப்பு; இலேயிடத்துப் படைக்கப்படு தல். (௩௪)

**726.** பூவினிக்கும் தழையினிக்கும் வேரினிக்கும்
விதையினிக்கும் புடைசூழ் கின்ற
காவினிக்கும் தன்மைபெற்ற பேரையூர்
அறைக்கீரைக் கறியை உண்ண
நாவினிக்கும் அன்றியதைக் கண்டகண்ணும்
இனிக்குமதை நாடிப் பாடும்

பாவிலிக்கும் கேட்டசெவி இனிக்குமனம்
இனிக்குமெனப் பகர லாமே.

(அ - ரை.) கா - சோலை. பா - பாட்டு. (௩௫)

727. உரகமுடிச் சுமையுலகில் பேரையூர்
அழைக்கிறை உவந்தே யாரும்
சிரகரகம் பிதம்புரிய நற்பூசைக்
கமுதுதவச் செய்யும் போதில்
அரகரவென் றுரைக்கிலது கேட்டோடப்
பரங்கிரிமேல் ஐயர் இன்று
மரகதக லாபமயில் கீழொருகால்
மேலொருகால் வைக்கின் றாரே.

(அ - ரை.) உரகம் - நிலந்தாங்கு பெரும் பாம்பு. சிரகரகம் பிதம் புரிதல் - தலையாட்டலும் கைதட்டுதலும். (௩௬)

[மலையாண்டியப்பைய நாயுடுவை ஒரு புலவர் புகழ்ந்து பாடியது.]

கட்டளைக் கலித்துறை

728. கல்லொக்குஞ் சிந்தை உறுந்துரை காள்கொடை கற்க [வென்றால்
வல்லக்க வார்குல நாரசிங் கையன் வரத்துதித்த
செல்வக் குமாரன் மலையாண்டி அப்பைய சிங்கத்திற்குப்
பல்லக்குக் கொம்பு சுமந்தீரென் றற்புத்தி பாலிக்குமே.

(அ - ரை.) கல்லொக்கும்-கருங்கல்லை நிகர்க்கும். கொடை- ஈகைத்தன்மை. (௩௭)

[மேற்படி அப்பைய நாயுடு அறிஞர்கள் நிரம்பிய அவையுடன் இருக்கும்போது அவருக்கு மிகவும் அறிமுகமான பெரும்புலவர் ஒருவர் அங்கே வந்தார். வந்த புலவரை அச்செல்வர் பார்த்து, "வாருங்கள் இருங்

கள்'' என்று கூறினர். அவையில் இருந்தவர்கள் விலகி இடங்கொடுக்கவில்லை. அதனைக் கண்ட புலவர், ''இடத்தைக் காணேமே எங்கேயிருக்கிறது?'' என்று கேட்டார். உடனே செல்வர் திடீரென்று எழுந்து கைகளை நீட்டி, ''என்னுடைய தலைமேல் இருக்கத்தகும்'' என்று கூறினர். உடனே கூடியிருந்தவர்கள் விலகி அப்புலவர் இருப்பதற்கு இடங்கொடுத்தார்கள். ஆண்டுகள் சில சென்றன. அச்செல்வர் காலமானுர். மேற்படி புலவர் மேற்படி செய்தியை அமைத்துப் பின்வரும் இரங்கற்பாவைப் பாடினர்.]

**729.** மலைமீது வைத்த விளக்காம் வராக கிரியருகே
சிலையேந்து செங்கை மலையாண்டி அப்பைய
சிங்கமெங்கோன்
நிலைவானர் தங்களைக் கண்டே எழுந்துகை
நீட்டியென்தன்
தலைமேல் இருக்கத் தகுமென்ற வாயுந் தழலுண்டதே.

(அ - ரை.) *வராககிரி - பன்றிமலை. சிலை - வில். தழல்-தீ.* (௩௮)

[எழுமலைப் பெநிலக்கிழார் நல்லகாமய நாயுடு புகழைக் குறித்து ஒரு புலவர் பாடியது.]

எண்சீராசிரிய விருத்தம்

**730.** ஆராயும் வேதியர்க்குள் ஆரும் இல்லை
அறிவில்லா வலையருமப் படியே யாகும்
சீரான துலுக்கருக்குட் சீதக் காதி
சிறப்புடைய வணிகருக்குள் செந்தில்காத்தான்
காராளர் தங்களுக்குள் வெண்ணெ யூரரன்
கருதரிய மறவருக்குள் மூவ ராயன்

பேரான மூங்கிலணை நல்ல காமா
தொட்டியர்க்குள் நீயொருவன் பேர்பெற் றுயே.

(அ - ரை.) வெண்ணெயூரான் - சடையப்ப முதலியார்- (நக)

[மேற்படி காமய நாயுடு காலஞ்சென்றபோது ஒரு புலவர் பாடியது.]

731. பணவர வல்குல் செவ்வாய்
பாரதி வறுமை உற்ருள்
துணையினி வேறும் உண்டோ
சொற்பெருந் தகைசேர் மூங்கில்
அணைதரு நல்ல காமன்
அமரர்நா டடைந்த போது
கணவனை இழந்த மாதர்
ஆயினேங் கவிஞ ரெல்லாம்.

(அ - ரை.) பண அரவு - படத்தையுடைய பாம்பு. பாரதி கலைமகள். அமரர்நாடு - விண்ணுலகம். (௬0)

[முல்லான் என்னும் ஒரு முகமதியச் செல்வனுடைய மகள் ஊமையாயிருந்தாள். ஊமை நீங்குவதற்குப் பல ஊர்கட்குப் போயும் ஊமை நீங்கவில்லை. இராமநாதபுரத்தைச் சார்ந்துள்ள நயினுர் கோயில் என்னும் ஊரையடைந்து வரம்வேண்டியிருந்தபோது ஊமை நீங்கியது. அப்பொழுது ஒரு புலவர் பாடியது.]

நேரிசை வெண்பா

732. ஆரோ நயினுரென் றம்புவியெல் லாமலைந்தோம்
நீரே நயினுர் நிசங்கண்டேம்—சீரேறு
முல்லானின் பெண்வாயின் மூடந் திறந்ததனுல்
அல்லாவும் நீராகு மால்.

(அ - ரை.) நயினுர் - தந்தை. மூடம் - பேசாமை. அல்லா - முகமதியர் கடவுள். (௪௧)

[பாஞ்சாலங்குறிச்சிப் புலவர் ஒருவர் வேருேர் ஊருக்குச் சென்றிருந்தார். அப்போது ஒருவர், "உங்கள் அரசரும் இறந்தனரே" என்று கூறினுர். அப்போது அப்புலவர் பாடியது.]

அறுசீர் விருத்தம்

733. மனுவிறந்தனன் மாந்தாதா துஞ்சினன்
வானவர் முடிசாயத்
தனுவ ளேத்தபோர் முசுகுந்தன்
துஞ்சினன் தசரதன் சமைந்தற்ருன்
இனிதெ மக்கென இரவியு
மதியமும் இலங்கையிற் புகவிட்ட
புனித வெஞ்சிலே இராமனும்
போயினுன்-ஆரினிப் பொன்ருதார்.

(அ - ரை.) துஞ்சினன் - இறந்தனன். புனிதவெஞ்சிலே-தூய கொடுஞ்சிலே. (௪௨)

[இராக்கன் என்னும் ஒரு செல்வனே ஒரு புலவர் புகழ்ந்து பாடினுர். அவன், "கற்பனேப் பாக்களே ஒப்புக்கொள்ளமாட்டேன். உண்மையான செய்திகளே அமைத்துப் பாடினுல் நன்கொடை வழங்குவேன்" என்ருன். உடனே புலவர் வேடிக்கையாகப் பின்வரும் பாடல்களேப் பாடினுர்.]

கலிநிலேத்துறை

734. பாக்காவது கமுகம்பழம் பருப்பாவது துவரை
மேற்காவது கிழக்கேநின்று பார்த்தால் அதுதெரியும்
நாற்காதமும் முக்காதமும் நடந்தால் எழுகாதம்
ராக்கா உண்மையைச் சொன்னேன் ரட்சிப்பாயே.

(௪௩)

கலி விருத்தம்

735. அண்ணன் என்பவன் தம்பிக்கு மூத்தவன்
வெண்ணெய் என்பது பாலில் விளைவது
திண்ணை என்பது தெருவில் உயர்ந்தது
கண்ணன் என்பவன் கண்ணிரண் டுள்ளவன்.
(௪௪)

[பதினெட்டுக் காசு கொடுத்த முத்துக்குமாரசாமி என்பவனிடம் ஒரு புலவர் பாடியது.]

எண்சீர் விருத்தம்

736. முந்தப் பாட்டுக்குச் சீதக்கா தித்துரை
மோதி ரங்கொடுத் தான்குழி மீதினில்
சந்தப் பாட்டுக்குக் காளத்தி யப்பனும்
சர்ப்ப மாமணி ஈந்தன னேரத
பந்தப் பாட்டுக்கும் சீட்டுக் கவிதைக்கும்
பதினெட்டுத் துட்டுத்தந் திட்ட பாண்டியா
சொந்தப் பாட்டுக்கும் வீட்டுக்கும் என்செய்வாய்
சொல்லுமுத் துக்கு மாரசு வாமியே.

(அ - ரை.) *ரதபந்தப்பாட்டு - சித்திரகவி வகைகளில் ஒன்று. சொந்தப்பாடு - சொந்தச் செலவு.* (௪௫)

[திருநெல்வேலிக்குத் தெற்கில் உள்ள ஓமநல்லூர் அநந்தபத்மநாப பிள்ளையிடம் ஒரு புலவர் பாடிய பாட்டு.]

அறுசீராசிரிய விருத்தம்

737. குலைவைக்கும் செந்நெல்வயல் நல்லூர்ச்சங்
கரமூர்த்தி குமரா மன்னர்
தலைவைக்குங் கிள்ளாக்கை அநந்தபத்ம
நாபாஎன் தன்மை கேளாய்

விலைவைக்கும் கடையரிசி வாங்கியுண்ண
முடியாதென் வீட்டில் இப்போ(து)
உலைவைக்கச் சொல்லிவந்தேன் நெற்கொடுத்தால்
அரிசிகுத்தி உண்ண லாமே.

(அ - ரை.) குலைவைக்கும் - குலையாகக் காய்க்கும். (௬௬)

[இச் செய்யுளைக் கேட்டவுடன் அச் செல்வர் புலவர்வீடு நிறைய நெல் கொண்டுவந்து குவிக்கும்படி செய்தார். அப்பொழுது புலவர் பாடியது.]

738. எந்தக்கா லமும்அநந்த பத்மநா
பன்சுகமாய் இருக்க வேண்டும்
வந்தக்கா லவன்தனக்கே மகத்தான
பெருஞ்செல்வம் வரவும் வேண்டும்
பந்தற்கால் போலுயர்ந்து பருத்திருக்கும்
மடையர்களைப் பாடிப் பாதி
தந்தக்கா லென்னதரா திருந்தக்கால்
என்னசொல்லுந் தமிழ்சொல் வீரே.

(அ - ரை.) மகத்தான - மிகுதியான. தமிழ் சொல்வீர் - தமிழ்ப் பாடல்களைப் பாடுபவர்கள். (௬௭)

[அழகப்பபூபதி என்பான் ஒருவனது இல்லத்திற்குச் சென்று அவன் மனைவியால் முறத்தடிபட்ட ஒரு புலவர் பாடியது.]

கட்டளைக் கலித்துறை

739. நறைபட்ட தொங்கல் அழகப்ப பூபதி நாமஞ்சொல்லி
முறையிட்ட போதவன் பாரி எறிந்த முறத்திருகா
தறுபட்டு வீணை உடைபட்டு நானும் அவிடம்விட்டுப்
பறிபட்டு வந்ததென் பாரிமுன் ஒள்செய்த பாக்கியமே.

(அ - ரை.) நறைபட்ட தொங்கல் - தேன் பொருந்திய மாலை. முறையிட்டபோது - குறைகளைச் சொல்லிக்கொண்ட போது. பாரி - மனைவி. பறிபட்டு - விடுபட்டு. (௬௮)

[திருமகள் வாழும் இடங்களைக் குறித்து ஒரு புலவர் பாடியது.]

எண்சீராசிரிய விருத்தம்

740. முல்லைநறு மலருடனே பதுமஞ் சங்கம்
மொழிதருவெண் கவரிகுடை மூரி யானை
சொல்லரிய சவுரியன்பத் தினிப்பெண் மெய்யன்
தூயமனை கண்ணாடி களபச் சேறு
வெல்லவரு பதாகைபரி ஆவின் பிட்டம்
வேசைமுகம் அரசர்பதி விளக்குச் செம்பொன்
செல்வவளஞ் சிறந்தோங்கும் இடங்கள் தோறும்
செந்திருவாழ் இடமென்னச் செப்ப லாமே.

(அ - ரை.) பதுமம் - தாமரை. சங்கம்-சங்கு. மூரியானை-பெருமையுடைய யானை. சவுரியன் - வீரன். மெய்யன்-உண்மை பேசுவோன். பதாகை - கொடி பரி-குதிரை. ஆவின்பிட்டம் - பசுவின் பின்புறம். (௬௧)

[அரசர்கள் புலவர்கட்குச் செய்யும் எழுவகை வரிசை.]

நேரிசை வெண்பா

741. பஞ்சலோகம் ரத்நம் பலதானியங் கேத்திரம்
மிஞ்சுமணி வாகனம் வேய்துகிலே—அஞ்சலென
வைத்தாங்கு வந்தகவி வாணருக்குப் பூவேந்தர்
சத்தாரங் செய்வரிசை தான்.

(அ - ரை.) பஞ்சலோகம் - ஐவகை உலோகம். கேத்திரம்-விளைநிலம். துகில் - ஆடை. (௬௦)

[திங்களுக்குந் தேர்கொடி குதிரை சாரதி உண்டென்பதைப்பற்றி ஒரு புலவர் பாடியது.]

நேரிசை வெண்பா

742. வெண்குதிரை பத்து விளங்குமயி லின்தூவி
நண்ணுகொடி யாக நாட்டியே—விண்ணுலகில்
சங்கவண்ணன் தேரூரத் தானிருந்தான் திங்களுமே
எங்கொளிப்பேன் மாதே இனி.

(அ - ரை.) சங்கவண்ணன் - வெள்ளிய நிறத்தினனாகிய அருணன். (௬௧)

[அறிவில்லாதவர்கள்மேற் செய்யுட்கள் இயற்றிச் சென்று நன்கொடை பெருமல் துன்புற்ற ஒரு புலவர் பாடியன.]

அறுசீர் விருத்தம்

743. துங்க யானைக்கால் படுத்தினும் படுத்துக
சுடர்விழிப் பகுவாய
சிங்க வாயிடைச் செலுத்தினும் செலுத்துக
தென்புலத்தவர் கோமான்
வெங்கண் மாநர கத்திடை வீழ்த்தினும்
வீழ்த்துக விடையேறும்
எங்கள் நாயகா தமிழறி யார்கண்முன்
இயம்புதல் தவிர்ப்பாயே.

(அ - ரை.) பகுவாய் - பிளவுபட்டவாய். தென்புலத்தவர் கோமான் - நமன். விடை - காளை. இயம்புதல் - செய்யுள் இயற்றிக் கூறுதல். (௬௨)

கலி விருத்தம்

744. பாட்டியற் செந்தமிழ் பன்னிப் பன்னியிக்
கூட்டிய தேனெனக் கோவை செய்ததை

மோட்டர்கள் பாற்சென்று மொழிந்த வண்ணம்வின்
நாட்டவிர் அமிர்தத்தை நாய்க்கு வார்த்ததே.

(அ - ரை.) கோவை - வரிசை. மோட்டர்கள்-முரடர்கள். மொழிந்தவண்ணம் - கூறியதன்மை. (௩௫)

ஆசிரிய விருத்தம்

745. இலக்கனம் பார்த்துப் பொருத்தமும் பார்த்தங்
கீபவர் ஊர்பெயர் பார்த்தே
இசைகவி செய்து சகுனமும் பார்த்தே
ஏகியவ் வூர்புகுந் தவர்வாழ்
தலைக்கடை பார்த்துச் சென்றுநின் றேங்கித்
தருவரோ தரார்கொலோ என்னச்
சார்ந்தவர் தம்மை வினவிநாம் இந்தச்
சங்கடந் தவிர்ப்பதென் றென்று
கலக்கமுற் றேங்கி வாடுமெம் மிடத்தில்
கடைக்கண்பார்த் தருளவொண் ணுதோ
காமனை முனிந்த யோகியின் உள்ளம்
கனிவுறச் செய்திடுங் கனியே
அலைக்கட லமுதே மலைத்துறை மகளே
அம்மையே வெண்ணெய்நல் லூர்வாழ்
அன்பரைத் தடுத்தாட் கொண்டவர்க் கருளும்
அழகிய மங்கைநா யகியே.

(அ - ரை.) இசைகவி - பொருத்தமான புகழ்ப்பாட்டு. சங்கடம் - துன்பம். யோகி - சிவபெருமான். (௩௬)

746. இரப்பதெளி தெனவித்து வானென் றுசென்றால்
இலக்கியம் பார்க்க வேணும்
இயல்வரவும் வேணுமொரு பயல்வரவும் வேணுமுக
இங்கிதம் சொல்ல வேணும்

வரத்தொடு தியாகத்தை ஒன்றுபத் தாப்புளுகி
மனதுமெய்ப் பிக்க வேணும்
வாய்வேணும் இசைவேணும் லோபியர்கள் மேற்சொன்
வசைசொலிக் காட்ட வேணும் [ன
உரத்தொடு கடுக்கனசை யப்பேசி மோதிரம்
உருட்டுவிரல் நீட்ட வேணும்
உல்லாசம் வேணுமிவை எல்லாம்உன் அடிமைக்கு
உபாயமுடன் வாரா மையால்
நரத்துதி செயாமல் சிவத்துதி செயக்கிருபை
நாடினேன் தந்தருளு வாய்
நாதர்தாந் தழுவுமுயர் வேதபாந் தவிமோன
ஞான சாந்தகி அம்மையே.

(அ - ரை.) இங்கிதம் - இனிமை. வரம் - மேன்மை. தியாகம் - கொடை. மனது மெய்ப்பிக்க வேணும் - அவர்கள் உள்ளம் மகிழ்ச்சியடையுமாறு செய்யவேண்டும். வசைசொலிக் காட்ட வேணும் - அச்சமுண்டாதற்குப் பிறர்மீது கூறிய வசையைச் சொல்லிக் காட்டவேண்டும். நரத்துதி - மனிதர்களைப் புகழ்தல். (௫௫)

[கலைக்கன்னிக்கு உறவினர்கள்.]

கட்டளைக் கலித்துறை

747. சொற்கலைக் கன்னிக்குத் தந்தைசொன் னேனெங்குந் [தோன்றநிலை
நிற்கும் படிக்குப் படிப்பவள் தாயதை நீள்நிதியம்
தக்க கொடுத்துப் புனைவோன் பதிதமிழ்க் கன்னிகையின்
பொற்புறு சாரந் தெரியார் சகோதரர் போன்றவரே.

(அ - ரை.) கலைக்கன்னி - கலைமாது. கலையைக் கற்பிப்பவன் தந்தை, படிப்பவள் தாய், கலைக்கு நிதிகொடுத்துக் காப்பவன் கணவன். கலையை உணராதவர் உடன் பிறந்தார். (௫௬)

[ஒருவருக்கு நோய்வந்தால் அதைக்குறித்து அறிவில்லாதவரும் அறிவுடையவருங் காரணங் கூறுதல்.]

எண்சீராசிரிய விருத்தம்

748. குலதெய்வக் குறையென்பான் பேய்கொண் டாடி
குறிகாரன் கன்னிவந்து குதக்கு தென்பான்
பலநோயின் வகைசொல்வான் வாக டத்தான்
பரிந்துண்ணு விளைவென்பார் பாவை மார்கள்
கலகமிடும் ஏவலென்பான் மந்த்ர வாதி
கணிதத்தோன் திசைநாதன் காலம் என்பான்
உலகினிலிப் படியாகப் பலர்தாஞ் சொல்வார்
ஊழ்வினையின் பயனென்பார் உணர்வான் மிக்கோர்.

(அ - ரை.) *குதக்குது - வருத்துகிறது. வாகடத்தான் - மருத்துவன். கணிதத்தோன் - காலக்கணிதன். உணர்வான் மிக்கோர் - அறிஞர்.* (௫எ)

[எட்டையபுரத்தில் ஊரில் உள்ள பிள்ளைகளுக்குப் பால் தருமமாக வழங்குவதைப் பார்த்து ஒரு புலவர் பாடியது.]

கட்டளைக் கலித்துறை

749. ஆர்க்கின்ற அண்ட பகிரண்ட கூடத்திற் கப்புறத்தும்
பார்க்கின்ற கீர்த்திக் குமாரெட்ட வேள்பண்ணைப் புரன் [மகப்பால்
வார்க்கின்ற போததை ஏற்கின்ற பேர்கையில் வள்ளஞ் [சிந்தி
ஈர்க்கின்ற துள்ளிகண் டாற்கடல் வீழ்வ திலைக் [கண்ணனே.

(அ - ரை.) *ஆர்க்கின்ற - ஆரவாரிக்கின்ற. அண்டம் - இவ்வுலகம். பகிரண்டம் - வெளியுலகம். வள்ளம் - கிண்ணம்.* (௫அ)

[தீவினைக்கேற்ற பிறப்புக்களைக்குறித்து ஒரு புலவர் பாடியது.]

அறுசீராசிரிய விருத்தம்

750. பிறந்தவரிற் சப்பாணி பித்தர்குரு
டுமையுடல் பெருநோ யாளர்
குறைந்தகால் பெருவயிறு குட்டமிவை
அனைத்தையுமே கூறக் கேண்மின்
அறம்பிழைத்தார் கற்பழித்தார் அரசனைக்கொன்
றோர்குருவின் அடிபோற் றாதார்
பிறன்கடையில் திரிந்தவர்கள் இவரென்றே
ஆகமங்கள் பேசு மாறே.

(அ - ரை.) குறைந்தகால் - நொண்டி. பிறன்கடையில் திரிந்தவர்கள் - அயலான் மனைவியை விரும்பி அவன் வீட்டு வாசலில் திரிந்தவர்கள். (௨௧)

[தருமபுரக் குருவணக்கப் பாடல்.]

ஆசிரிய விருத்தம்

751. அருண்ஞானப் பிரகாச குருஞானசம்பந்தர்
ஆநந்த பரவ சஞ்செய்
அருள்சச்சி தாநந்தர் மாசிலா மணிமூர்த்தி
அணிஞான சம்பந் தராம்
திருஞான சம்பந்தர் திருவம் பலக்குரவர்
சின்மயத் திருமே னியாய்த்
திகழுமழ கியதிருச் சிற்றம் பலக்குரவர்
திருநாவுக் கரச குரவர்
தருமைநகர் மேவுசிவ ஞானதே சிகராசர்
சச்சிதா நந்த குரவர்
தாழ்விலா முத்துக் குமாரதே சிகருண்மை
திருஞான சம்பந் தராம்

கருதரிய வாழ்வுதரு கந்தப்ப தேசிகர்
கவின்மாசி லாம லியெனுங்
கந்தரருள் சச்சிதா னந்தகுரு மாணிக்க
வாசகர் கழல்பணி குவாம்.

(௯௦)

[திருவாவடுதுறைக் குருவணக்கப் பாடல்.]

752. திருநந்தி குருசனற் குமரர்சத் தியஞான
தெரிசனை பரஞ்சோதி யார்
திகழுமெய் கண்டரரு ணந்திமறை ஞானசம்
பந்தருமா பதிதே சிகர்
அருணமச் சிவாயர்சித் தர்சிவப் பிரகாசர்
அணிதுறைசை நமசி வாயர்
ஆரணம் பரவுமறை ஞானரம் பலவாணர்
அவிருருத் திரகோ டியார்
பொருவில்வே லப்பரிரு குமாரசா மிக்குரவர்
புகழ்மாசி லாமணி யர்தம்
புதல்வரென வருராம லிங்கரிரு வேலப்ப
போதரெமை யாள வேண்டி
வருதிருச் சிற்றம்ப லக்குரவ ரம்பல
வாணகுரு சுப்ர மண்ய
வரதரம் பலவாண குருசுப் பிரமணிய
குருமரு மலர்த்தாள்கள் போற்றி.

(அ-ரை.) ஆரணம் - மறை. அவிர் - விளங்கு. பொரு -
ஒப்பு.
(௯௧)

[சமயாச்சாரியர் நால்வருஞ் செய்த வியத்தகு செயல்களிற் சிலவற்றை அமைத்துப் பாடிய பாடல்கள்.]

[திருஞானசம்பந்தர்.]

நேரிசை வெண்பா

753. ஓடஞ் சிவிகை உலவாக் கிழியடைக்கப்
பாடல் பணைதாளம் பாலைநெய்தல்—ஏடெதிர்வைப்(பு)
என்புக் குயிர்கொடுத்தல் ஈங்கிவைதாம் ஓங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்.

(அ - ரை.) திருஞானசம்பந்தர் புதுமைச் செயல்கள் பல இதிற் குறிப்பிடப்பட்டுள்ளன. தென்புகலி - தெற்குத் திக்கில் உள்ள சீகாழி. (௬௨)

[திருநாவுக்கரசர்.]

754. கொல்கரியின் நீற்றறையின் நஞ்சிற் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீத்தல்—நல்ல
மருவார் மறைக்காட்டில் வாசல் திறப்பித்தல்
திருவாமூ ராளி செயல்.

(அ - ரை.) இதில் திருநாவுக்கரசரின் புதுமைச் செயல்கள் பல கூறப்பட்டன. திருவாமூராளி - திருநாவுக்கரசர். (௬௩)

[சுந்தரமூர்த்தி.]

755. மோகம் அறுத்திடின்நாம் முத்தி கொடுப்பமென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்தொண்டன் தொண்டுகளை
ஏதாகச் சொல்வேனி யான்.

(அ - ரை.) இறைவன் சங்கிலி நாச்சியாரிடமும் பரவை நாச்சியாரிடமும் தூது சென்ற செயல்கள் இதில் குறிப்பிடப் பட்டன. வன்தொண்டன் - சுந்தரர். (௬௪)

[திருவாதவூரடிகள்.]

756. பாயபரியோன் றந்தப் பரமானந் தப்பரனை
தூயதிரு வாய்மலரார் சொற்செய்து—மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தே.

(அ - ரை.) *நாம் கருவாதை அறியாமற் போதற்குக் காரணம் திருவாசகத்தை ஓதி வீடுபேறெய்துதல் என்க. தே - தேவன்.* (௬௫)

[*திருச்செந்தூர்த் திருவிழாக் காலத்தில் மழையை நிறுத்தப் பாடியது.*]

757. வந்து மழைபொழியும் வானேவெஞ் சூர்தடிந்த
கந்தர் திருவிழாக் காலத்தில்—தொந்தரையா
நீர்த்துளியை யூற்றிவிடல் நேர்த்தியல மாற்றிவிடு
கீர்த்திவரு நாட்டென்மொழி கேள்.

(அ - ரை.) *வெம்சூர் தடிந்த - கொடிய சூரனைச்செற்ற.* (௬௬)

[*திருச்செந்தூர்க் கந்தர்மேற் பாடியன.*]

758. போற்றுவார் வல்வினையைப் போக்குமே பூமலர்
[கொண்(டு)
ஏற்றுவா ரைக்கயிலை யேற்றுமே—தோற்றிய
சந்தந்தங் குஞ்செஞ்சொற் சங்கம்பொங் குஞ்செந்திற்
கந்தன்செம் பொன்றண்டைக் கால்.

(அ - ரை.) *சங்கம் பொங்கும் செந்தில் - சங்குகள் மிகுதியாகப் பொலிவுற்று விளங்கும் திருச்செந்தூர்.* (௬௭)

759. ஆறுமுகமென் றளவில் அச்சந் தவிர்க்குமே
வேறு வினைவந்தால் விலக்குமே—கூறுபுகழ்

மாரியொத்த சூரபன்மன் மார்பிளக்க வேல்தொடுத்த
வீரசத்தி யான்மிகுத்த வேல்.

(அ - ரை.) *மாரியொத்த-மேகத்தைப்போன்ற கரிய.* (சுஅ)

760. வேலா விராலிமலை வீராஉனக் கொருபெண்
மாலாகியே நின்று வாடுகிருள்—நீலான
உற்பலக்க யற்கணிச்சி யுத்தரித்தி டச்சமர்த்தி
அற்பசிற்றி டைக்கொடிச்சி யாள்.

(அ - ரை.) *நீலான உற்பலக்கயல் கணிச்சி - கருநிறமுள்ள குவளைப் பூப்போன்ற கயல்மீனையொத்த கண்ணையுடைய காதலி. உத்தரித்திடச் சமர்த்தி - உமக்குப் பதில் சொல்லக்கூடிய திறமையுடையவள்.* (சுக)

761. கந்தனென்றும் வேலனென்றும் கானமயில் வீரனென்றும்
செந்தனென்றும் ஏன்புலவீர் செப்புகின்றீர்—முந்தவிளம்
கூனற்பிறை சூடச்சிவ னுருக்குப தேசித்தருள்
ஞானக்குரு வேடப் பயலை.

(அ - ரை.) *செந்தனென்றும்-சிவந்த நிறமுடையவனென்றும். சேந்தன்; முதல் குறுகிற்று.* (எ0)

762. பன்னிரண்டு தோளா பரங்குன்ற வெப்பொழுதும்
என்னிரண்டு தோள்மீதி லேயிருப்பாய்—பொன்னின்
கதிர்முடியப் பாசிகரக் கனவரையப் பாபழனிக்
கதிபதியப் பாகுமரப் பா.

(அ - ரை.) *சிகரக் கனவரையப்பா - உச்சியையுடைய கனத்த குன்றங்களில் உறையும் தலைவனே.* (எக)

763. நோகாதோ வேலாநீ நோக்குமட மானுக்காப்
போகா வனந்தேடிப் போனக்கால்—வாகாத்
தினைநினைந்திட் டுனைவணங்கித் திரியுமன்பர்க் கருள்செ
கனகதண்டைச் சிறுசதங்கைக் கால். [யும்பொற்

(அ - ரை.) நோக்கு மடமானுக்காப் போகாவனம் தேடிப் போனக்கால் - அழகிய இளமான் போன்ற பெண்ணுக்காக நடந்துபோகக் கூடாத காட்டில் தேடி நீ போனால். (எஉ)

**764.** வாரீர் பழனி வடிவேல ரேகடம்பைத்
தாரீரென் சிந்தையினில் தானுறையீர்—சேரீர்நீர்
கன்றுடைந்து நஞ்சுமஞ்சு கண்களுஞ் சிவந்துபொங்க
என்றனங்க ளுங்கசங்க வே

(அ - ரை.) கன்று உடைந்து நஞ்சும் அஞ்சு கண்களும்- வளையல்களும் உடைந்து நஞ்சானது அஞ்சத்தக்க என் கண் களும். (எங)

**765.** மேகநிற மேனிசெங்கண் மேவியவ ராகவிது
வாகடினம் வாடுமிவள் ஆவியருள்—வாகுவளை
நத்தத்தத் திற்பற்றி நச்சுப்பைக் குட்டத்து
நித்தத்திற் கிச்சித்த நீ.

(அ - ரை.) வாகுவளை நத்து அத்தத்திற்பற்றி - அழகாக வளைந்த சங்கைக் கையிலேந்தி, நச்சுப்பைக் குட்டத்து - நஞ்சை யுடைய பாம்புப் படத்துமேல் குளத்தில், நித்தத்திற்கு இச்சித்த- நடனஞ் செய்வதற்கு விரும்பிய. இதுவாகடினம் - இது உனக்கு வருத்தமா. வராக - பன்றி யுருவெடுத்தவனே! (எச)

**766.** பூவைக்கு நண்ணுபகல் போதுகம தாமெலிந்தாள்
வாவிக்க வின்தணிகை வாழ்குமரா— பாவிமதன்
அம்புரம் புகுத்தலைக்க வம்பகந்த ணந்தெறிக்க
வெம்பிநெஞ்ச முந்திகைக்க வே.

(அ - ரை.) அம்புரம் புகுந்து அலைக்க - அம்பானது மார் பில் ஊடுருவிச்சென்று வருத்தவும், அம்பகம் தண் அம்தெறிக்க- கண்கள் குளிர்ந்த நீரைச்சிந்தவும். எறிக்க - அறிவுமயங்கி ஒழிய வும். உகமதாம் - ஒரு யுகமாய்க் கழிந்தது. (எரு)

**767.** என்னிடத்தி லேகுமரா யெண்ணுதே பேதகமாய்
உன்னிடத்திற் கொண்டமயற் கோதாயோ—துன்னிரவு

செல்லா பகட்டுமென்கண் செல்லா புரட்டுமங்கம்
பொல்லாப் பரத்தைவஞ்சி போல்.

(அ - ரை.) துன்னிரவு செல்லா பகட்டு மென்கண்-நெருங்கிய இரவானது கழியாமல் என்கண் மயக்கமடைகின்றது. (எசு)

768. செங்கமலக் கண்கலங்கிச் சிந்தைநொந்தி ராமுழுதும்
வெங்கலைக்குஞ் சங்கலைக்கும் வேலோனே-அங்கசன்றன்
பூங்கணைமெத் தத்தைத்துப் பூங்கொடிகத் தும்பட்டுத்
தாங்கணைமெத் தைத்துத் தான்.

(அ - ரை.) பட்டுத்தாங்கு அணைமெத்தைத்துதான் - பட்டினாலாகிய படுக்கையினிடத்துத்தானே. வெங்கலைக்கும்-கொடிய கலைத்திங்களுக்கும். சங்கு அலைக்கும் - சங்குகள் உள்ள கடலுக்கும். பூங்கொடி, கலைக்கும் அலைக்கு நொந்து கத்தும். கத்தும் - கதறுவாள் என முடிவு செய்க. (எஎ)

769. கந்தா கடம்பா கயிலாய மாமலையான்
மைந்தா சுவாமி வடிவேலா—சந்தக்
குறமகளா சைகொள்கண வாகுருபரனு கியகுமரா
அறுமுக வாபழ னியின்வேலா.

(அ - ரை.) கந்தா - ஆறுமுகமும் ஒன்ருய்ச்சேர்ந்த பெருமானே! (எஅ)

[வேலின் மாண்பு.]

770. அன்பர் பயங்கெடுக்கும் அத்திகிரி யைத்துளைக்கும்
இன்பவள்ளி கண்ணுக் கெதிராகும்—மின்பரந்த
வாகுதோளி லேறிமீறி வாகுசாரி யோடிவாட
வேகசூரன் மார்பிடந்த வேல்

(அ - ரை.) மின்பரந்த வாகுதோளி லேறி - மின்போல ஒளி வீசுகின்ற வீரவாகுதேவர் தோளிலமர்ந்து, மீறி-அங்கிருந்து மேலே கிளம்பி, வாகுசாரி ஓடி ஆடி - அழகாக வலசாரி யிடசாரியாகப் பாய்ந்தசைந்து, அத் திகிரியைத் துளைக்கும் - அந்தக் கிரௌஞ்சமலையை ஊடுருவிச் செல்லும். (எக

771. அஞ்சி மயல்சகியா தங்கம் உருகிநின்ற
வஞ்சியைச்சேர் தென்றணிகை வள்ளலே—பஞ்சமலர்
அங்கசனுக் குங்கிரணத் தந்திமதிக் குங்கடலுக்
குங்குழலுக் குங்குயிலுக் கும்.

(அ - ரை.) *கிரணத்து அந்தி மதிக்கும் - நிலாக் கதிர் வீசுகின்ற மாலைத்திங்களுக்கும்.* (அ௦)

772. தாமரைப்பூந் தேனையுண்டு தாதளைந்து வண்டிமிர்ந்து
காமரஞ்செய் வாவிகள்சூழ் கந்தர்சிவ—மாமலைவாழ்
பூவையரங் கந்தங்கம் பூகமிலங் குங்கண்டம்
காவையரங் கஞ்சங்கண் காண்.

(அ - ரை.) *இமிர்ந்து காமரஞ்செய் - ரீங்காரஞ்செய்து இசைப்பாட்டுப் பாடவும். அங்கம் தங்கம் - உடம்பு பொன்மயமானது. கண்டம் பூகம் இலங்கும் - கழுத்தானது கமுகைப் போல விளங்கும். வைஅரம் கஞ்சம்கண் - கண்களானவை கூர்மையான அரம் போலவும் தாமரை போலவும் உள்ளன. காண்கா - பார்ப்பாய் காப்பாய்.* (அக)

[விநாயகர் வணக்கச் சிறப்பு.]

773. கல்விக்கு ஞானக் கருத்துண்டாங் காயமுறும்
தொல்வினைக ளெல்லாந் தொலையுமே—வில்லைத
னிற்புயற்றி ருக்கணத்த னித்தன்வச்சி ரப்புயத்தோர்
கற்பகத்தி னைத்துதித்தக் கால்.

(அ - ரை.) *வில்லைதனில் - வில்வாரணிய மென்னும் பதியில். புயல் திருக்கண் அத்தன் - முகில்போல அருளைப் பொழிகின்ற திருக்கண்களையுடைய அப்பனும்.* (அ௨)

[இதுவுமது.]

774. வாங்கு சிலைநுதலார் மாயக் கலவியிலே
ஏங்கி மனமே யிளையாதே—மாங்கனிக்காத்

தம்பியொக்கச் சண்டையிட்டுத் தந்தையைச்சுற் [றந்தவொற்றைக்-
கொம்பனைச்சற் றன்புவைத்துக் கூறு.

(அ - ரை.) வாங்குசிலை நுதலார் - வளைந்த விற்போன்ற நெற்றியையுடைய பெண்கள். (அ௩)

775. சிந்தா குலந்தீருஞ் செய்கருமங் கைகூடும்
சந்தா னமென்றுந் தழைத்தேறும்—பைந்தாமத்
தானை வயத்தானைமலைப் பாவையளித் தானைமகத்
தானைமுகத் தானைநினைத் தால்.

(அ - ரை.) பைந்தாமத்தானை - புதுமலர் மாலையணிந்த பெருமானை. வயத்தானை - சுயாதீனமுடையவனை. மகத்து ஆனைமுகத்தானை - பெருமை பொருந்திய யானைமுகக் கடவுளை. (அச)

[விரிஞ்சைப் பதியிலுள்ள சிவபெருமான்மீது பாடிய துதி.]

776. செல்வம் பெறலாஞ் செழித்தபுகழ் சேரலாம்
வில்வம் புனைவார் விரிஞ்சேசர்—புல்லுமதன்
கோளை முடித்தாரிமயக் கோதையிடத்தார் கமலத்
தாளைமனத் தூடுநினைத் தால்.

(அ - ரை.) புல்லுமதன் கோளை முடித்தார் - நெருங்கிய மன்மதனது ஆண்மையைத் தொலைத்தார். (அரு)

[வேற்சிறப்பு.]

777. அண்டர் தமக்கரசாம் அன்புபட ரக்கொம்பாம்
மண்டவுணர் தம்முயிர்க்கு வன்னியாம்—பண்டுதிறற்
கஞ்சனஞ் சவங்கடம் பணிந்தெழுந்து கந்துசூர்
மிஞ்சுநெஞ்சு ரம்பிளந்த வேல்.

(அ - ரை.) பண்டுதிறல் கஞ்சன் அஞ்ச - முற்காலத்தில் வலிமையையுடைய நான்முகன் அஞ்சும்படி. நெஞ்சுரம் பிளந்த

வேல் - வலிய நெஞ்சைக் கிழித்துத் தள்ளிய வேலாயுதமானது. (அசு)

778. ஆதரவா யென்னருகில் அஞ்சலென்று வந்துநின்று
போதரவு செய்யுமெப் போதுமே—ஓதுதமிழ்
சந்தமுந்த லங்கிர்தஞ்செ றிந்துநன்கு யர்ந்துதங்கு
விந்தைகொண் டிலங்குசெந்தில் வேல்.

(அ - ரை.) ஓதுதமிழ்ச் சந்தமுந்து அலங்கிர்தஞ் செறிந்து- சிறப்பாகப் பேசுகின்ற தமிழ்வண்ணப் பாட்டுகளுள் அளவு மிகுந்த பகுதிகளில் மிகுதியாகப் போற்றப்பட்டு. போதரவு செய்யும் - நல்வழியிற் செலுத்தும். (அஎ)

779. இங்கிதமா நல்வாழ் வெமக்களிக்கு முற்பகல்செய்
சங்கடமாம் வேலை தணிக்குமே—பொங்கமுறத்
தற்பரற்க னுக்கிரகித்தி டக்கருத்த னித்தசுத்த
வெற்பினைத் துளைத்தவுக்ர வேல்.

(அ - ரை.) சத்த வெற்பினைத் தொளைத்த நித்த உக்ர வேல் - ஏழு மலைகளையும் ஊடுருவிய வீரமிகுந்த அழியாத வேலாயுதமானது. முற்பகல் செய்சங்கடமாம் வேலைதணிக்கும்- முன்னாளில் செய்த தீவினைப்பயனாக வந்த துன்பமாகிய கடலை வற்றச் செய்யும். தற்பரற்கு அனுக்கிரகித்திடு அக்கருத்தன் - சிவபெருமானுக்கு மந்திரம் உபதேசித்த அந்தக் கடவுள் (முருகன்). (அஅ)

[இதுவுமது.]

780. ஈட்டும் வினைகளறுத் தின்பமுற வேயெனது
பாட்டுக் குகந்தினருள் பாலிக்கும்—நாட்டமிகும்
மண்டலங்க லங்குகண்டர் கண்டதுண்ட முண்டுண்டு
விண்டொடுங்க மண்டியுண்ட வேல்.

(அ - ரை.) கண்டர் - வீரர்களாகிய சூரர். கண்ட துண்டம் உண்டு உருண்டு - பலப்பல துண்டங்களை யடைந்து உருண்டு. விண்டு ஒடுங்க - பிளந்து அடங்கும்படியாக. (அகூ)

[இதுவுமது.]

781. உன்னவினி தாயிருக்கும் ஒங்குசெல்வ மும்பெருக்கும்
நன்னரரு ளைக்கொடுக்கு நாடோறும்—பன்னும்
சகடம்உருள நெருடுகமல சரணகருணை யரியின்மருகன்
விகடகரியின் இளையமுருகன் வேல்.

(அ - ரை.) பன்னும் சகடம் உருள நெருடு கமலசரண - பேசப்பட்ட சகடாசுரன் உருண்டு சாகும்படி தேய்த்த திருவடித் தாமரைகளையுடைய. நாடோறும் நன்னல் அருளைக்கொடுக்கும் - ஒவ்வொரு நாளும் சிறந்த திருவருள் பாலிக்கும். (கூ0)

782. ஊழ்வினை யைப்போக்குமே யுள்ளொளியைக் காட்டுமே
வாழ்வதற் கோர்வித்தாய் வளருமே—தாழ்வார்
தடதட வெனவதிர் கடலதன் முடிமிசை
விடவதி பொடிசெயும் வேல்.

(அ - ரை.) உள் ஒளியைக் காட்டுமே - அகவொளியாகிய அறிவை யுணர்த்தும். (கூக)

783. ஓராறு சென்னி ஒருமுருகா வென்றளவில்
தீராத வல்வினைநோய் தீருமே—போராடிக்
கொக்கரித்து வெற்படர்த்துக் கொக்கரக்க னைத்துணித்த
விக்ரமத்திருக் கரத்து வேல்.

(அ - ரை.) போராடிக் கொக்கரித்து வெற்படர்த்து - சண்டையிட்டு ஆரவாரஞ்செய்த கிரௌஞ்சமலையைத் தாக்கித் துளைத்து. கொக்கு அரக்கனைத் துணித்த - மாமரத்தின் உருவங்கொண்ட சூரபதுமனை யிரு கூறுகப் பிளந்த. விக்ரமம் - வெற்றி. (கூஉ)

[மீனாட்சியம்மை இகழ்ச்சி வணக்கம்.]

784. மாப்பிட் டெனுஞ்சிறு தூட்பிட்டுக்காகமண் ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக் கொண்டடி பட்டசொக் கேசருக் காசைப்
[பட்டுச்

சேப்பிட்டு மையிட்டுப் பூமாலை கந்தந்திமிர்ந்து மஞ்சட்
காப்பிட்டு வாழ்க்கைப் பட்டாள் கூடல்வாழுங் கயற்
[கண்ணியே.

(அ - ரை.) மாப்பிட்டு எனும் சிறுதூள் பிட்டுக்காக - மாவை யவித்துச்செய்யும் பிட்டினில் உதிர்ந்த சிறு தூள் வடிவமாகிய பிட்டை விரும்பி. சேப்பிட்டு சிவந்த திலதமிட்டுக் கொண்டு. (௯௩)

[காதலி வலையிற் சிக்கிய கணவனுக்கு மனைவி கூறுதல்.]

785. காமா கயற்கண்ணி கோபம் பொருள்என்றன் கண்பனிநீர்
சீமான் கரத்தில் துடைக்கரி தேசெக மேழுமெச்சும்
கோமான் கரத்தில் குனிசிலைராயன் குகன்சிலம்பில்
மாமாவின் காலல்லவே மன்னவாநின் மலர்க்கரமே.

(அ - ரை.) செகமேழு மெச்சும் கோமான் - எழுலகமும் புகழ்கின்ற அரசனும். கரத்தில் குனிசிலைராயன் - கையில் வளைந்த வில்லையுடைய அரசனுமாகிய. குகன் சிலம்பில் - குகனுடைய மலையில். மன்னவா - வேந்தனே. காமா - மன்மதனே, கயற்கண்ணி கோபம் பொருள் - கயல்மீன் போன்ற கண்ணையுடையவளாகிய உன் காதலி நீ யெனக்கு அருள்செய்வது தெரிந்தால் கோபித்துப் பொறுக்கமாட்டாள். (ஆதலினால்) என்றன் கண்பனி நீர் - என்னுடைய கண்ணிலிருந்து நடுக்கத்தோடு விழுகின்ற கண்ணீரை. சீமான் கரத்தில் துடைக்கரிதே- செல்வனாகிய உம்முடைய கையினால் துடைப்பது அரிதாகும். (இஃது உம்முடைய காதற்கிழத்திக்குத் தெரியுமேல்) மாமாவின் காலல்லவே உன் மலர்க்கரமே - குதிரையின் கால்களல்ல உங்களுடைய மலர்போன்ற கைகள். (குதிரையின் கால் வெட்டுண்டதுபோல் கைகளும் வெட்டுண்ணும்.) குதிரையின்மேலேறித் தினமும் ஆசைநாயகி வீட்டிற்குச் சென்றுகொண்டிருக்குமொருவன் ஓர்தினம் மனைவியின் இல்லத்திற்குச் சென்றுவிட்டு மறுதினம் அதே குதிரையின்மேலேறிக் காதலியிருப்பிடஞ் செல்ல அன்னாள் நடந்த விருத்தாந்தமறிந்து குதிரையின் காலை வெட்டிவிட்டாள். மறுதினம் மனைவியினில்லத்திற்கேகி உணவருந்துகையில் மனைவி குதிரையின் காலை வெட்டியமையை யறிந்து

கண்ணீர் விட்டாள். உடனே தனது கையால் கண்ணீரைத் துடைத்தான். அதுகண்ட மனைவி இப்படிக் கண்ணீர் துடைத்தமை அவனுக்குத் தெரியின் உங்கள் கைகளும் வெட்டுண்டு போகுமே ஆகையினால் குதிரையின் காலுக்குச் சமமல்லவே உங்கள் கைகள், என அநுதாபப்படும் முறையில் மேலே கண்ட பாட்டுப் பாடப்பட்டது. (௩௪)

[தலைவி கூற்று.]

786. ஆச்சரியந் தென்னமரம் அத்தனை யுங்குத்துமுலை
காய்ச்சிருக்குந் தென்குடந்தைக் காவலா—மாச்சான்
வரக்குப்பை யாநீ மருவாநாள் எல்லாம்
சரக்குப்பை யாமே தனம்.

(அ - ரை.) ஆச்சரியம் - வியக்கத்தக்கபடி. குத்து-முலை போன்ற இளநீர்க்காய். மாச்சான் - மாச்சானுடைய. வரக் குப்பையா - வரத்தினால் பிறந்த மகனாகிய குப்பையனே. சரக் குப்பையாமே - மன்மதனது அம்பின் கூட்டம் நிறையப் பெறு கின்றது தனத்தில். (௩௫)

[ஆபத்துச் சகாயர்மீது பாடிய இகழ்ச்சி வணக்கம்.]

787. தந்தைபோய்த் தாய்போய்த் தமர்போயென் சுற்றமும்
வெந்த புரியாகி விட்டேனே—முந்தவே
ஆழாழி நஞ்சுண்ட வாபத்சகாய னென்னும்
பாழாவான் கண்ணோறு பட்டு.

(அ - ரை.) பாழாவான் கண்ணோறு பட்டு - மாயைக்கு அப்பாலுள்ள பெருமானது திருக்கண் பார்வை பொருந்தப் பெற்று. வெந்தபுரியாகி விட்டேன் - தீயினால் கருகிய வைக் கோற்புரியின் தன்மையை யடைந்துவிட்டேன். (௩௬)

[விடனொருவன் பெண்கள் இடைக்கு இரங்கிக் கூறியது.]

788. கைக்குட்டமும் ரெண்டு கனககும் பக்குடமும்
முக்குட்டமுங் கொண்டால் முறியாதோ—மைக்குழலீர்

வேய்க்காற்றி ஞல்விளங்கும் வீரனந்தி மாநகரில்
ஈக்காற்றுக் காற்று விடை.

(அ - ரை.) வேய்க்காற்றினால் விளங்கும் - மூங்கில் காட்டின் காற்றா லிருந்த. வீரன் நந்திமாநகரில் - வீரபாண்டியனது நந்திபுரி யென்னுமூரில். (௬எ)

[திருமால் சிவனை வழிபட்டது.]

789. வையம் புகழு மலரா யிரம்எடுத்துக்
கையிலொரு மாமலரைக் காணமல்—வையகத்தில்
செங்கண்மால் ஈசன் திருவடிக்கெண் ணுயிரமாத்
தங்கண்மலர் சாத்தினன் றன்.

(அ - ரை.) எண்ணுயிரமா - ஆயிரம் என்ற எண் குறையில்லாம லிருக்கும்படி. (௬அ)

[பெரியபாளையத்துப் பேதைக் காட்சியைக் கண்ட ஒரு புலவர் பாடியது.]

790. பாம்புசேர் தோளிணையாள் பாளையத்து மாமாரி
சாம்பசிவன் தன்னடியைச் சாராரை—வேம்பின்
இலையை யுடுத்தியவர் ஈனமானம் போக்கித்
தலையில்விளக் கேற்றிவைப்பாள் தான்.

(அ - ரை.) பாளையத்து மாமாரி - பெரியபாளையத்தி லுள்ள மாரியம்மன். சாம்பசிவன் தன்னடியைச் சாராரை - பரமசிவனது திருவடியை வணங்காதவர்களை. (௬௬)

[கல்வி கற்கக்கூடாத நாட்கள்.]

791. அட்டமியில் ஓதினல் ஆசானுக் காகாது
சிட்டருக்குப் பன்னுன்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமையில்
பித்தரும் பேசார் பிழை.

(அ - ரை.) சிட்டருக்குப் பன்னொன்று நீதாகும் - சதுர்த்தசியில் ஓதினால் மாணாக்கர்களுக்குத் தீமை விளைக்கும். கெட்டவுவா வித்தைக்கு நாசமாம் - பௌர்ணமி கல்விக்குக் கெடுதியுண்டாக்கும். (௧00)

[செவிலி கூற்று.]

792. ஆயிரம்பாக் கன்னமுலை யன்னநடைக் கன்னிபதி
னாயிரம்பாக் காறளுன் றுரையினால்—நீயிரங்கி
வந்தாள வேண்டும் மலைப்பழனி வேலவனே
சந்தாள வேறில்லை தான்.

(அ - ரை.) ஆயிரம்பாக் கன்னமுலை - கலசம்போன்ற தனம். பதினாயிரம்பாக்கு அமணமென்று கூறப்பெறும். (௧0௧)

[தந்தையர்கள் இவர்களாமெனல்.]

793. பிறப்பித்தோன் வித்தைதனைப் பேணிக் கொடுத்தோன்
சிறப்பி னுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தில் அன்னம் பகிர்ந்தோன் பயந்தீர்த்தோன்
எஞ்சாப் பிதாக்களென வெண்.

(அ - ரை.) சிறப்பின் உபதேசம் செய்தோன் - வீடுபெறுவதற்குக் காரணமாகிய உண்மையை யறிவித்தவன். அறப்பெரிய பஞ்சத்தில் அன்னம் பகிர்ந்தோன் - மிகுந்த கொடிய கருப்பில் ஏழைகளுக்கு உணவளித்தவன். (௧0௨)

[தலைவி கூற்று.]

794. கானக் கடல்மல்லைக் கார்வண்ணன் றனுமால்
நானக் குழல்மடவீர் நானுமால்— ஆனக்கால்
தன்கையிற் சங்காழி தாமிருக்கப் போவதேன்
என்கையிற் சங்காழி யின்று.

(அ - ரை.) கார்வண்ணன் பெயர் - மால். அவன் பெயரினால் மாலானேன் நான் - அவன்மேல் வைத்த காதலால் மாலானேன். சங்கு - வளையல். ஆழி - மோதிரம், சக்கரம். நானக்

குழல் மடவீர் - கஸ்தூரிச் சாந்தணிந்த கூந்தலையுடைய தோழி களே. கானக் கடல்மல்லை - சோலை யடுக்கப்பெற்ற கடல் சூழ்ந்த மாவலிபுரம். (௪0௩)

[புலவரைப் போற்றுதாரை யிகழ்தல்.]

795. கட்டி யடிப்போர்க்குங் கல்மீதி லேற்றுவர்க்கும்
எட்டி யடிப்போர்க்கும் ஈவரே—திட்டமுடன்
பாடுவோர்க் கீயாரே பல்லுதிரத் தாடையினில்
போடுவோர்க் கீவார் பொருள்.

(அ - ரை.) கன்மீதி லேற்றுவர்க்கும் - தங்களைக் குனிய வைத்து முதுகில் கல்லேற்றுகின்றவர்களுக்கும். (௪0௪)

[செவிலி கூற்று.]

796. செய்யாள் கணவா செகராச சேகரா
அய்யா வடகங்கைக் காரியா—துய்யா
குடஞ்சுட்டுப் பின்போன கோபாலா முத்து
வடஞ்சுட்டுக் கண்டுயிலாள் மான்.

(அ - ரை.) வடகங்கைக்கு ஆரியா - வடபாலுள்ள கங் கைக் கரையில் உயர்வாகப் போற்றப்படுபவனே. குடஞ்சுட்டுப் பின்போன கோபாலா - ஆன் தொகைகளின் பின்னே சென்ற கோக்காவலனே. முத்து வடஞ்சுட்டு - மார்பிலணிந்த முத்து மாலையினால் தகிக்கப்பெற்று. (௪0௫)

[தாய் கூற்று.]

797. உன்றன் மகளை யொறுப்பதற்குக் காரணமென்
என்றன் மகள்தன் இயல்புகேள்—குன்றுச்
சிராப்பளியான் ஏறிவருஞ் சேவின்மணி யோசைக்
கிராப்பளியுங் கொள்ளாள் இவள்.

(அ - ரை.) சிராப்பளியான் ஏறிவருஞ் சேவின் மணி யோசை - திருச்சிராப்பள்ளிப் பெருமான் எழுந்தருளி வருகின்ற காளையின் கழுத்திற் கட்டியமணி யொலியைக் கேட்டு. (௪0௬)

[இதுவுமது.]

798 நீரூருஞ் செஞ்சடைமேல் நீரூரும்பாம் பணிந்து
நீரூரி லேவருதல் நீதியோ—நேரே
படவரவஞ் சாடப் பலியிடென வந்தால்
இடவரவஞ் சாளோ விவள்.

(அ - ரை.) நீர் ஊரிலே வருதல் நீதியோ - நீர் ஊருக்குள்ளே வருவது முறையா? நேரே பட அரவம் சாட - கண்ணெதிரிலே படத்தையுடைய பாம்பானது சீறிப்பாய. இவள் இடவர அஞ்சாளோ - இவள் சோறிட வருவதற்கு அஞ்சமாட்டாளா? (௪0௭)

[கருடனுக்குந் திங்களுக்கும் இரு பொருள்.]

799. வாலைப் பொருந்துதலால் வல்லரவம் பற்றுதலால்
மாலை யெடுத்துநெடு வானுறலால்—சோலைதிகழ்
உம்பர்பூ சித்தருளும் ஒற்றியூரன் வரையில்
அம்புலியு நன்கருட னும்.

(அ - ரை.) வாலைப் பொருந்துதலால்-வெண்மையுடைமையாலும். வல்லரவம் பற்றுதலால் - கொடிய ராகுக் கோளால் பற்றப்படுதலாலும். மாலை எடுத்து நெடுவான் உறலால் - சாயங்காலத்தை யணுகிப் பெரிய விண்ணில் தோன்றுதலாலும்,

வாலைப் பொருந்துதலால் - வாலுடைமையாலும். வல்லரவம் பற்றுதலால் - பெரிய பாம்புகளைப் பிடிப்பதாலும். மாலை யெடுத்து நெடுவான் உறலால் - திருமாலைச் சுமந்து விண்ணிற் சேர்தலாலும். திங்கள் கருடனுக்கு ஒப்பாகும். (௪0அ)

[முருகனை வேண்டல்]

800. அம்மையிலே யேறி யடியேன் இடர்தீர
இம்மையிலே வந்தென்னை யிடேற்றி—உம்மையிலே
எந்தப்பா வஞ்செய்தேன் அந்தப்பா வந்தீரக்
கந்தப்பா வந்திப்போ கா.

(அ - ரை.) அம்மையிலே ஏறி - அழகிய மயில்மீதிலே எழுந்தருளி. (௪0௯)

[விடுகவி.]

801. ஏறேறு நீரேறும் எண்ணில் உயிர்க்குயிராம்
பாரேறுங் காலாற் படியளக்கும்—வீறேறும்
அன்னங்காண் ஈசன் அரியயனுந் தாமன்று
துன்னுபுகழ் மாரியப்பா சொல்.

(அ - ரை.) ஏறேறும் - எருது சுமக்கப்பெறுவதும். நீரேறும் - நீர்பாயப் பெறுவதும். உயிர்க்கு உயிராம் - உயிர்களுக்கு இன்றியமையாததும். படியளக்கும் - படிபடியாக அளக்கப்படும். பாறு ஏறும் - மரக்கால் ஏற்றியளக்கப்படும். அன்னங்காண் - உணவாக இருப்பதும். (ஆகையால்) இதில் குறிக்கப்பெறுவது நெல். (௧௧0)

[தலைவன் ஏமாற்றமடைந்து தன்னுள் சொல்லிக் கொண்டது.]

802. கோடுதிக்குங் கும்பமுலைக் கோதையரைக் கூடவென்றால்
மாடுதின்னி யென்னை மறுத்தானே—மாடுதின்னி
தன்பொழுதும் போச்சுதே தன்னந் தனித்திருந்து
என்பொழுதும் போச்சுதே யின்று.

(அ - ரை.) மாடுதின்னி என்னை மறுத்தானே - மாடு தின்னுவதாகிய வைக்கோலினாற் செய்த பாவை வடிவம் உண்மையான ஆள்போல என்னைத் தடுப்பதாகத் தோன்றிற்று. (௧௧௧)

[வறுமையைக் கூறல்.]

803. அத்தற்கு மூன்றுகண்ணும் ஆயிரங்கண் இந்திரற்குப்
பத்தா யிரங்கண் என்றன் பச்சைவடம்—இத்தையான்
மெள்ள விரித்துடுத்தேன் வெண்ணைநல் லூர்ச்சடையா
எள்ளிருக்க வில்லை யிடம்.

(அ - ரை) அத்தற்கு மூன்றுகண் - அப்பனாகிய சிவபெருமானுக்குக் கண்கள் மூன்றுள்ளன. என்றன் பச்சைவடம் பதினாயிரம் கண் - அழுக்கடைந்து பச்சையான கயிறு போன்ற என்னுடைய ஆடை பத்தாயிரம் கண் அஃதாவது பீற்றலுடையது. (௧௧௨)

[சிவதலங்கள் ஆயிரத்தெட் டென்பது.]

804. மூவர்கவி முந்நூறு முன்சோழன் ஐந்நூறு
நாவலர்மா ணிக்கர்தல நாற்பத்தெட்—டோவறுசீர்
நூதனசி வாலயங்கள் நூற்றறுப துங்கூட
ஒதவரும் ஆயிரத்தெட் டோர்.

(அ - ரை) *முன்சோழன் ஐநூறு - சோழ மன்னர்முன்னதாக அமைத்த தலங்கள் ஐந்நூறாகும். மாணிக்கர் தலம் நாற்பத்தெட்டு - மாணிக்க வாசக அடிகள் பாடிய திருப்பதிகள் நாற்பத்தெட்டாகும்.* (௧௧௩)

[புகையிலை விடுகவி.]

805. நாலெ முத்துப்பூடு நடுவே நரம்பிருக்கும்
காலுந் தலையுங் கடைச்சாதி—மேலாக
ஒட்டு முதலெழுத்தும் ஒதுமூன் றுமெழுத்தும்
விட்டாற் பரமனுக்கு வீடு

(அ - ரை.) *நாலெழுத்துப்பூடு - நாலெழுத்தினாலாகிய ஒரு பூண்டு. காலும் தலையும் கடைச்சாதி-முதலெழுத்தையும் கடைசியெழுத்தையும் சேர்த்தால் இழிந்த குலத்தை உணர்த்தும். பூலை - பரமனுக்கு வீடு கைலை.* (௧௧௪)

[கைத்தடியின் குணம்.]

806. முனியதட்டும் முள்தூக்கும் முன்னீர் அளக்கும்
கனியுதிர்க்குங் கவ்வுநாய் காக்குந்—தனிவழிக்குப்
பத்திரம தாக்கும் பயந்தீர்க்கும் பாம்படிக்கும்
கைத்தலத்திற் றண்டிருந்தக் கால்.

(அ - ரை.) *முனியதட்டும் - பேயை அச்சுறுத்தும். முள் தூக்கும் - முள் கிடந்தால் அதை யெடுத்துத் தூரப்போடும். முன்னீர் அளக்கும் - எதிரே கிடக்கின்ற தண்ணீரின் ஆழத்தை யளந்து காட்டும்.* (௧௧௫)

[குடையின் குணம்.]

807. பகலோன் தெறுங்கிரணம் பாய்பறவை யெச்சம்
மிகமேல் உருதகற்றும் விண்ணின்—முகிலதனுல்
பெய்யுமழை யைத்தடுக்கும் பேரழகுமாம் ஒருவர்
கையிற் குடையிருந்தக் கால்.

(அ - ரை.) *பகலோன் தெறுங்கிரணம் - ஞாயிற்றினுடைய கொடிய கதிர். பாய் பறவை எச்சம்-வானில் பறக்கின்ற பறவைகளின் எச்சமென்னு மிவற்றை. மிகமேல் உருதபடி அகற்றும் - மிகுதியாக நம்முடைய உடம்பில் விழாதபடி விலக்கும்.* (௧௧௬)

[மிதியடியின் குணம்.]

808. கல்லும் உறுத்தாது காலினில்முள் தையாது
எல்லைமார்த் தாண்டன்சூ டேருது—தொல்லைவரும்
மாலை யிருளில் வழிநடக்கக் கூசாது
காலிற் செருப்பிருந்தக் கால்.

(அ - ரை.) *மார்த்தாண்டன் - ஞாயிறு.* (௧௧௭)

[தோழி கூற்று.]

809. வந்தவனைக் கையாது வாய்முத்தந் தந்தருள்வாய்
தேர்ந்தவனைக் கையா துவாரகையா—சந்துவனை
கோசையிடத் தானே குயிலோசைக் கஞ்சியுளத்
தாசையிடத் தானே யறிந்து.

(அ - ரை.) *தொந்தவனைக்கையா - பொருத்தமான சங்கைக் கையிலேந்தியவனே!. சந்துவனைக் கோசையிடத்தானே-சந்தன மரங்கள் சூழ்ந்த கோசைப்பதியில் வீற்றிருப்பவனே!* (௧௧௮)

810. அறிந்துதவிப் பாரை யருள்கோசை யாண்மால்
செறிந்துதவிப் பாரைத் திருத்தும்—திறந்தழைந்த
வைகுந்த னூர்வாய் மடமானே கொவ்வைநிகர்
வைகுந்த னூர்வாய் மடுத்து.

(அ - ரை) வைகுந்தன் ஊர்வாய் மடுத்து - தங்குகின்ற தன்னுடைய ஊரிலுஞ் சேர்ந்து. அறிந்து தவிப்பாரையருள் கோசையான்மால் - தன் சிறப்பை யறிந்து அருள்பெறும் வேட்கையு முடையவர்க்கு அருளைக் கொடுக்கின்ற கோசைப்பதிக்குத் தலைவனாகிய திருமால். (கககூ)

811. மடுக்குஞ் சரமழைக்கும் வான்கோசை மாலே
விடுக்குஞ் சரமழைக்கும் மேலாய்—முடுக்கும்
அநங்கனை யஞ்சங்கம் அடுத்தேனை யாள்வாய்
அநங்கனை யஞ்சங்க மலர்.

(அ - ரை.) மடுகுஞ்சரம் அழைக்கும் வான்கோசை மாலே-நீர் மடுவில் முதலை வாயிலகப்பட்டுக்கொண்ட யானையழைத்த கோசைப்பதியில் வீற்றிருக்கின்ற பெருமாளே! (கஉ0)

812. அலரோதி மத்தா னறைகோசை மாலே
அலரோதி டித்தா னடிக்கும்—அலரோதி
நந்தனகத் தாளுறவே நண்ணிநின்ரு யானடைந்தேன்
உந்தன்அகத் தாளுறவே யோர்ந்து.

(அ - ரை.) அலர் ஓதிமத்தான் - தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற நான்முகன். அறை - போற்றுகின்ற. அலர் ஓதி - தூற்றுகின்ற சொல்லைச் சொல்லி. மத்தால் அடிக்கும் - தயிர்கடையு மத்தினாலே தாக்கிய. அலர் ஓதி - பூ முடித்த குழலையுடைய இடைச்சியாகிய அசோதை. நந்தன் நக - நந்தகோபன் சிரிக்க. தாள் உறவே நண்ணி நின்ருய் - அவன் பாதத்தைப் பொருந்தி நெருங்கி நின்றவனே. உந்தன் அகத்து ஆள் உறவே ஓர்ந்து அடைந்தேன் - உன்னிடத்தில் அடிமையாகிய உறவை ஆராய்ந்து சேர்ந்தேன். (கஉக)

813. ஓர்ந்தண் டரையாளும் உத்தமநற் கோசையனே
ஈர்ந்தண் டரையாளும் இந்திரையும்—சேர்ந்திலகு
தூயத்திருக் கறுப்பா தோற்றியடி யேனுடைய
மாயத்திருக் கறுப்பாய் வந்து.

(அ - ரை.) தரையாள் - நிலமகள். இந்திரை - திருமகள். மாயத்திருக்கு அறுப்பாய் - வஞ்சகமான குற்றத்தை யொழித் தருள்வாய். (கஉஉ)

814. சல்லடைக்கண் ணகித் தளர்ந்தாள் அருள்புரிவாய்
மல்லடையுங் கோசைநகர் வைகுந்தா—கல்லடையும்
பாந்தளிரை தேர்காலான் பாணம் வருத்துதலால்
மாந்தளிரை நேர்காலாள் மார்பு

(அ - ரை.) மல்லடையும் - செழிப்பு நிறைந்த. கல்லடையும் பாந்தள் இரை - மலையினின்று வருகின்ற பாம்பின் உணவாக. தேர்காலான் - தென்றற் காற்றாகிய தேரினையுடைய மன்மதனது. (கஉங)

815. காரங்க மேனிக் கருணைக் கடலான
சீரங்க நாதரே செல்வரே—நீரங்கே
அள்ளியுண்ட வெண்ணெய்க்கா அம்மையடிப்பா ளென்
பள்ளிகொண்டாற் போமோ பயம். [று

(அ - ரை.) காரங்க மேனி - கரிய திருவுரு. (கஉச)

816. மேயும் பசுவதனை வேங்கை யடித்ததென
ஆயனுரை செய்த தறியாயோ—மாயன்
விழிசுமக்குஞ் சோணகிரி வித்தகா நின்மேல்
பழிசுமக்கும் நன்றாகப் பார்.

(அ - ரை.) மேயும்பசு - இளம்பெண். வேங்கை - பொன் போன்ற பசலை. ஆயன் - தூதன். மாயன் - விழிசுமக்கும் சோணகிரி வித்தகா திருமால் தன் கண்ணை மலராக அர்ச்சித்ததனால் அக் கண்மலரைத் திருவடியிற் சுமக்கும் திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் விநோதப் பெருமானே! (கஉரு)

817 படைப்பானுங் காப்பானும் பார்க்கில் அருணேசன்
படைப்பான் அயனென்றல் பாவம்—படைக்கில்அயன்
ஐந்தலையில் ஒன்றை அரனறுத்த போதிலவன்
தன்தலையைப் பண்ணறியான் றன்.

(அ - ரை.) பாவம் - குற்றம். பண்ணறியான் - உண்டாக்கிக் கொள்ள உணரான். (கஉசு)

[பழநிவேலவர்மீது இகழ்ச்சி வணக்கம்.]

818. நாறுங்க டம்பும்நடை யுடையும்பாவ னையும்
வீறுமுனக் கேன்பழநி வேலவா—ஆறுதனில்
வெட்டுண்டான் உங்கலயன் வெண்ணெய்தனை
[யேதிருடிக்
கட்டுண்டான் உங்களம்மான் காண்.

(அ - ரை.) நாறும் கடம்பும் - நல்ல மனமுடைய கடப்பம் பூமாலையும். ஆறுதனில் வெட்டுண்டான் - திருநெல்வேலியில் மூங்கிலடியில் வழியிலிருந்து வெட்டுப்பட்டார். (கஉஎ)

[கணிகையர் கூற்று.]

819. பூங்கோ தைமாதர் புனைகின்ற முத்தாரம்
வாங்கோங் குடிக்குவடு வென்றே—நாங்கள்
முலைக்கோ டணிவதெல்லாம் முக்கண்ணன் சென்னித்
தலைக்கோடு பட்ட தழும்பு.

(அ - ரை.) முத்தாரம் - கண்ணீர்த் தொகுதியாகிய முத்து வடத்தை. குடிக்கு வடுவென்றே வாங்கோம் - எங்கள் குலத்திற்குக் குறைவென்று நாங்கள் வாங்குவதில்லை. முலைக்கோடு அணிவதெல்லாம் - முலைக்கொம்பில் அணிந்துகொள்வன. முக்கண்ணன் சென்னித் தலைக்கோடு - சிவபெருமான் தலையில் தரித்த மூன்றும் பிறைபோன்ற நகக்குறி. (கஉஅ)

820. வாரிதரளஞ் சொரிய மாமலையின் ஊடுருவிச்
சேரனமர் நாடளவுஞ் சேர்ந்ததே—மூரிமதன்
அம்போ டலைகின்ற ஆயிழைக்கு நீகுதிரைக்
கொம்போ குலோத்துங்கா கூறு.

(அ - ரை.) வாரி தரளஞ் சொரிய - கடல்போன்ற கண்ணானது முத்துப்போன்ற கண்ணீரைச் சிந்த. மாமலையின் ஊடுருவி - அக் கண்ணீரானது பெரிய மலைபோன்ற கொங்கையின் நடு வழியாகச் சென்று. சேரன் அமர் நாடு அளவும் சேர்ந்ததே - சேரன் தங்கிய ஊர் ஆகிய வஞ்சிவரையும் போய்ச் சேர்ந்தது வஞ்சி என்பது வஞ்சிக்கொடி போன்ற இடையை யுணர்த்தியது.

நீ குதிரைக் கொம்போ கூறு - நீ அவளுக்குக் குதிரைக் கொம்பு போல அரியவளா யிருக்கின்றாயோ. (௩௨௧)

[குயிலைப் பழித்தல்.]

821. தேமிருக்கு மாந்தளிரைச் செந்தீ வனமென்றும்
பூமுருக்கை யத்தீப் பொறியென்றும்—நாமிருக்கும்
மாப்படுமே யென்றெண்ணி வாடிம னந்தளர்ந்து
கூப்பிடுமே யந்தக் குயில்.

(அ - ரை.) தேம் இருக்கும்-மணம் இருக்கும். பூமுருக்கு-முருக்கம் பூ. மா - மாமரம். படும் - எரிந்தழியும். (௩௯௦)

[இதுவுமது.]

822. காமனார் வீட்டினிலே கள்ளன் புகுந்தானோ
சோமனா ரைப்பாம்பு சூழ்ந்ததோ—மாமரந்தான்
தீப்பட்டு வேகிறதோ தியாகேசர் நன்னாட்டில்
கூப்பிட்ட தேயக் குயில்.

(அ - ரை.) சோமனாரை - திங்களை. (௩௯௧)

823. செந்தமிழோர் உய்யவன்பு செய்யவந்த சோழவள்ளல்
சந்ததமுஞ் சேராநாள் தாழ்குழலே—வந்தனைசெய்
ஐங்கரனை வேலவனை யன்றழற்கண் வந்தவனைச்
சங்கரனை வாசுகியைத் தான்.

(அ - ரை ) கரும்பு வில்லை முறிக்க ஆனை முகனையும், கடலை யடைக்க வேலனையும், திங்களைத் தேய்க்க வீரபத்திரனையும், காமனை யெரிக்கச் சங்கரனையும், தென்றலை யுண்ணப் பாம்பையும் வணங்கு என்பது கருத்து. (௩௯௨)

[சேலத்தை ஒரு புலவர் புகழ்ந்தது.]

824. சேலநக ரேமதுரை சீர்ச்செழிய னேசெழியன்
சாலவதில் உள்ளோரே சங்கத்தார்—சீலமிகும்

கம்பால தேவர் கடம்ப வனவாசர்
தம்பாரி மீனுட்சித் தாய்.

(அ - ரை.) *சீலமிகும் கம்பால தேவர் - ஒழுக்கத்திற் சிறந்த கம்பால தேவரென்னும் பெரியவர். கடம்ப வனவாசர் மதுரையில் வசிப்பவராகிய சோமசுந்தரக் கடவுளுக் கொப்பாவார். தம் பாரி - அவர் மனைவி.* (௧௩௩)

[நமச்சிவாயனென்னும் செல்வனை இகழ்ந்தது.]

**825.** புட்டவல் பட்டாணி பொரிதேங் குழலப்பம்
மட்டவி ழுந்தோசை வடையுடனே—சட்டமுடன்
ஒயாமற் சோறுகறி யுண்டையுண்டை யாயடைக்கும்
வாயா நமச்சி வாயா.

(அ - ரை.) *மட்டு அவிழும் தோசை - மணம் உண்டாகும் தோசை.* (௧௩௪)

[பாட்டும் பொருளும் எப்படி இலங்கவேண்டும் என்பதற்குப் பாடியது.]

**826.** குச்சிலிய மாதர் குயமுங் குவலயத்தோர்
மெச்சுதமிழ் மாதர் வியன்முலையும்—சிச்சீ
தெலுங்க மடமாதர் சிங்காரக் கொங்கைக்
கலிங்கமென வேசொல் கவி.

(அ - ரை.) *பொருள் சிறிது விளங்கியும் விளங்காமலும் இருக்குமாறு செய்யுள் இயற்றுதல் வேண்டும்.* (௧௩௫)

**827.** இங்கிருக்க வென்ருல் எமனெட்டான் இவ்விடம்விட்
டங்கிருக்க வென்ருல் அயனெட்டான்—எங்குவைத்துப்
பேணுவேன் இவ்வுடலைப் பித்தா பிறைசூடும்
தாணுவே சொக்கநா தா.

(அ - ரை.) *பித்தா பிறை சூடும் தாணுவே சொக்கநாதா - பித்தனென்னும் பெயர் பெற்றவரே! திங்களை யணிந்த கடவுளே! சொக்கலிங்கப் பெருமானே!* (௧௩

828. வெள்ளிமலை பொன்னின்மலை மேவமகிழ் வீடாகி
பிள்ளைகளோ புத்திசொலும் பிள்ளைகளாய்-தெள்ளுமுகம்
வாடா வடிவுடையாள் மாமனையாள் ஆனைக்கால்
ஆடாரோ வொற்றியப்ப னூர்.

(அ - ரை.) *பிள்ளைகளோ புத்திசொலும் பிள்ளைகளாய் - புதல்வர்களோ தமக்கு அறிவுரை கூறக்கூடிய சிறந்த புதல்வர்களாகவும். தெள்ளுமுகம் - தெளிவான திருமுகம்.* (௧௩௭)

829. பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேரம் இன்றிக்—குரல்நெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோலமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணப் பொருள்.

(அ - ரை.) *மால் பூப்பிட்டுங் காணப் பொருள் - திருமால் பூமியைப் பிளந்துபோய்க் காணமுடியாத பரம்பொருள்.* (௧௩௮)

[கடலொடு கூறல்.]

830. காந்தனுக்கென் றன்கொடி காமவிகார மெல்லாம்
போந்தறிவித் தாலுனக்குப் புண்ணியமாம்-சேர்ந்தோடும்
தேளிபட வாடுந் திரைக்கடலே மன்மதன்கை
வாளிபட வாடும் மனம்

(அ - ரை.) *சேர்ந்தோடும் தேளி பட ஆடும் - கூட்டங் கூட்டமாய்ச் செல்கின்ற தேளி மீன்கள் கரையிற் பொருந்தும் படி அசையும்.* (௧௩௯)

[கும்பகோணம் மாரியப்பப் புலவரைப்பற்றிப் பாடியது.]

831. கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத்த [னென்றும்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வாரோ—அம்புவியில்
மன்னு வலர்புடைசூழ் வாழ்குடந்தை மாரியப்பன்
அந்நாவி லேயிருந்தக் கால்.

(அ - ரை.) கும்பமுனி - *அகத்தியர்.* (௧௪௦)

832. மெய்ச்ச ரசமாக விளையாடும் வேளையிலே
கைக்சரச மென்றதல்லால் கைச்சரச மென்றேனே
அச்சனகி யார்மீதில் ஆசைகொண்ட ராவணனைத்
தச்சுருவ வாளிதொட்ட தாமோத ரேந்திரனே.

(அ-ரை.) *கைச்சரசமென்றதல்லால் - இது கைக் கலப்பென்று கூறினேனேயன்றி, கைச்சரசம் என்றேனோ - வெறுப்புச் சுவைக்குரிய விளையாட்டு என்றேனோ.* (௧௬௪)

[சிவநாராயணன் என்னும் வள்ளலைத் தலைவி கூற்றாகப் பாடியது.]

833. மீன்பார்த்து விண்பார்த்து வேளையும்பார்த் தாள்வரவு
தான்பார்த் தெனைப்போல் சரிபார்க்கும் வெண்குருகே
மான்பார்த்து வாளிதொட்ட மால்சிவநா ராயணனை
நான்பார்த்து மாதர் நகைபார்த் திருந்தேனே.

(அ-ரை.) *வெண்குருகு - வெள்ளிய நாரை, மான் - மாய மான், சிவநாராயணன் - ஒரு கொடையாளன்.* (௧௬௨)

[சுப்பிரமணிய மன்னனை முன்னிலைப்படுத்திக் கூறியது.]

834. முல்லைமுல்லை யாய்த்தொடுத்து மோகமதன் எய்யவந்த
வில்லைவில்லை யாய்நறுக்கி மெல்லமெல்லத் தாராயோ
இல்லையில்லை யென்றுசொல்லி யேற்கவரும் பாவலர்கள்
தொல்லைதவிர்க் குங்களந்தைச் சுப்ரமண்ய பூபதியே.

(அ-ரை.) *முல்லை முல்லையாய்த் தொகுத்து மோகமதன் எய்ய வந்த வில்லை - முல்லைப் பூவைத் தன் வெற்றிக்கறிகுறியாக அம்பாகச் செலுத்துவதற்கு மயல் விளைக்கும் மன்மதன் உபயோகிக்கும் கரும்பு வில்லினை.* (௧௬௩)

[விசைய ரகுநாதவள்ளலை முன்னிலைப்படுத்திக் கூறியது.]

835. ஆயிரங்கண் ணுகமதன் அம்புமேல் அம்புவிட
ஈயிரங்கு செந்தேன் இருலின்அங்கம் ஆனேனே
தாயிரங்க வேணபெண்கள் தாமிரங்க வானிரங்க
வேயிரங்கும் வாயா விசயரகு நாயகனே.

(அ - ரை.) வேயிரங்கும் வாயா - புல்லாங்குழலை யூதும் வாயையுடையவனே, வேண பெண்கள் தாமிரங்க - மிகுந்த தோழிகள் வருந்தும்படியாகவும், இருலின் அங்கம் - தேன் கூட்டின் வடிவம். ஈஇரங்கு - தேனீக்கள் ஒலிக்கின்ற. (கசச)

[மாவலிவாணனென்னும் வள்ளலைப் பிரிந்த தலைவி பாடியது.]

836. கன்னலெனுஞ் சிறுகுருவி ககனமழைக் காற்றுமல்
மின்னலெனும் புழுவெடுத்து விளக்கேற்றுங் கார்காலம்
மன்னவனுந் தென்மதுரை மாவலிவா ணனைப்பிரிந்திங்
கென்னபிழைப் பென்னவிருப் பென்னநகைப்
[பின்னமுமே.

(அ - ரை.) கன்னலெனும் சிறுகுருவி - சிறு தூக்கணங் குருவி, மின்னலெனும் புழுவெடுத்து - மின்மினிப் பூச்சியைத் தூக்கிக்கொண்டுபோய். (கசரு)

[தலைவி கூற்று.]

837. கைத்தலத் தழற்கணிச்சி வைத்திடப்பு றத்தொருத்தி
கட்கடைப்ப டைக்கிளைத்த திறலோராம்
முத்தலைப்ப டைக்கரத்தெ மத்தர்சிற்ச பைக்குள்நிற்கு
முக்கணக்க ருக்கொருத்தர் மொழியாரோ
நித்திலத்தி னைப்பதித்த கச்சறுத்த டிக்கனத்து
நிற்குமற்பு தத்தனத்தின் இடையேவேள்

அச்சரத்தி னைத்தொடுத்து விட்டுநெட்ட யிற்கணைத்த
லக்கனுற்றி டச்செய்விக்கும் அதுதானே.

(அ - ரை.) *அழல்கணிச்சி - தீயையும் மழுவையும், திறலோராம் - வலியையுடையவராகிய, முத்தலைப் படைக்கரத்து எமது அத்தர் - மூன்று கிளைகளையுடைய சூலத்தைக் கையிலேந்திய எமது தலைவர். நித்திலம் - முத்து, நெட்டயில் கணைத்து அலக்கணுற்றிடச் செய்விக்கும் அது - நீண்ட வேலாயுதக் கூட்டந் துளைத்ததுபோலத் துன்பப் படும்படி செய்கின்ற அச்செயல்.* (௧௬௬)

[பால் விற்கும் இடைச்சியரை நோக்கி ஒருவன் கூறியது.]

838. கருப்பாலே பணையடைத்துப் பனிநீர் தேக்கிக்
கதலிபலாக் கனியதனல் வரம்புகட்டும்
திருப்பாலை வாழீசர் பவனி யாடுந்
தெருவிற்பால் விலைபகர்சிற் றிடைச்சியாரே
அருட்பாலோ பொருட்பாலோ காமப்பாலோ
ஆழிதனைக் கடைந்தெடுத்த வமுதப்பாலோ
இருப்பாலே மனம்படைத்தீர் நில்லீர் செல்லீர்
எந்தப்பால் விற்கவந்தீர் இயம்புவீரே.

(அ - ரை.) *கருப்பாலே பணையடைத்து - கரும்பைக்கொண்டு வயலில் நீரையடைத்துப் பண்படுத்தி, அருட்பாலோ பொருட்பாலோ காமப்பாலோ - அறம்பொருளின்பமென்னும் மூன்றின் பகுதிகளாகிய பால்களையோ.* (௧௬௭)

[வறுமை கூறல்.]

839. பூப்பார்த்துப் புகழ்பார்த்துப் பொருள்பார்த்துக்
கவிதைசொல்லும் புலவோர் தங்கள்
நாப்பார்த்துக் கொடைகொடுக்கும் நல்லதம்பிதந்த
சொக்க நாதா என்னுல்

காப்பாற்ற முடியாது கையிலொரு
காசுமில்லை கடனென் றாலும்
பார்ப்பார்த்தி சோறிடுவாள் இருந்தாலும்
உறங்கமதப் பயலொட் டானே.

(அ - ரை.) பூப்பார்த்துப் புகழ்பார்த்துப் பொருள்பார்த்து—இலத்தின் வரவு கருதியும் புகழ் மிகுதியாக உண்டாவது கருதியும் தன்னிடத்திலுள்ள பொருளின் அளவை நோக்கியும். (கசஅ)

[உள்ளன்பொடு இட்ட கூழின் சிறப்பையுரைத்தது.]

840. கெட்டசாறு தவிடுகஞ்சி கிருமியுண்ட மாவரைக்
கீரைவேர் தெளிந்தமோர் முறிந்தபாகு கிண்டிமா
இட்டசோறு கொழியலுப்பி டாதபுற்கை யாயினும்
எங்குமன்ப தாகநுங்க வின்பமா யிருக்குமே
பட்டபாகு பசுவினெய் பருப்புமுக் கனிக்குழாம்
பாளிதங்கள் தாளிதங்கள் பண்ணியார வகையுடன்
அட்டபாற்குழம்பு கன்னல்அ முதமோடும் உதவினும்
அன்பிலே டளித்திடாத அசனமென்ன அசனமே.

(அ- ரை.) கெட்டசாறு - சுவைகெட்ட ரசமும், மாகிண்டி இட்ட கொழியல் சோறு - வரகுமாவிட்டுக் கலந்த கொழியலரிசிச் சோறும், நுங்க - உண்ணுதற்கு, பட்டபாகு - நன்றாயமைந்த வெல்லப்பாகு; பாளிதம் - பாலன்னம், தாளிதம் - தாளித்த உணவு வகைகள், அட்டபால் குழம்பு - நன்றாகச் சமைத்த பாற்குழம்பு, கன்னல் - கற்கண்டு, அசனம் - உணவு. (கசகூ)

[சிறப்புச் சிவத்தலங்கள்.]

841. துங்கவட கயிலாய முதலா மைந்து
துளுவமொன்று தொண்டைவள நாட்டெண்ணான்கு
தங்குநடு நாட்டிருபத் திரண்டு பொன்னித்
தலநூற்றுத் தொண்ணூறு மலைநாட் டொன்று

கொங்கேழு சிங்களத்தில் இரண்டுவையைக்
குளிர்தமிழ்நாட் டீரேழு மேலாஞ்சூலச்
செங்கையார் தலமிருநூற் றெழுபானுறில்
தென்பாகங் கயிலாயந் திருக்குற்றாலம்.

(அ - ரை.) துங்கவட கயிலாய முதலாம் ஐந்து - உயர்ந்த வடதிசை கயிலாயம் முதலிய ஐந்து தலங்கள், பொன்னித்தலம் நூற்றுத் தொண்ணூறு - காவிரி பாயும் சோழநாட்டிலுள்ள தலங்கள் நூற்றுத் தொண்ணூறு, சிங்களத்து இரண்டு - ஈழ நாட்டுத் தலம் இரண்டு. (குO)

[ஆலமரத்தின்மீது தாமரை மலர் இருந்தது.]

842. ஓதுமைந்தி லொன்றி லைந்திலொன்றுமன்ன வன்பிதா
ஊர்திதொட்டோ ரேழின்மீதில் உற்றதற்கு நிருபனுர்
தாதுகொண்ட கோபிதாரன் தம்பிதம்பி தம்பிசேய்
தண்குடைப்பி னைவன்மற்ற லைக்கிரீட துவசனுர்
காதல்நண்பன் தந்தைபாகன் பின்னவன் பகைச்சுமைக்
கலையெடுத்த கையரையர் கதிபெறத் தவஞ்செய்
[தோன்
தீதில்தாதை கொண்டுவந்த சிலைவதிந்த பதியினுன்
சிரமரிந்த வன்கொள்பாரி சேரிலால் உறைந்ததே.

(அ - ரை.) ஓதும் ஐந்தில் ஒன்று - சொல்லப்படுகின்ற ஐம் பூதங்களில் ஒன்ருகிய நிலம், ஐந்தில் ஒன்று - நிலத்தின் பகுதி யாகிய ஐந்திணையுள் ஒன்று குறிஞ்சி நிலம், மன்னவன் - அந்நிலத் திற்குத் தலைவன் முருகன். அவன் பிதா - அவனுடைய தந்தை யாகிய இறைவன். ஊர்தி - அவனுடைய ஊர்தியாகிய காளை, தொட்டோர் ஏழின் மீதிலுற்ற - அதிலிருந்து ஏழாவதாகிய விருச்சிகத்திற்கடுத்தாற்போலுள்ள ராசிக்கு நிருபனுர் - தனுசுக் குத் தலைவனுகிய பரசுராமன், தாதுகொண்ட கோபிதாரன் தம்பி - மணத்தூள் கலந்த சந்தனத்தூளணிந்த தசரத ராமன் அவன் தம்பி, தம்பி தம்பிசேய் - அவன் தம்பியாகிய பலராமன் தம்பியாகிய கண்ணனின் புதல்வனுகிய மன்மதன், தண்குடை - அவனுடைய குளிர்ந்த குடையானது திங்கள், பின்னவன் - திங்க

*ளுக்குப் பின் ஐந்தாவது கிரகமாவது சனி, மற்று தலைக்கிரீடம் - அவன் தலையிலுள்ள முடிபாம்பு, துவசனார் - பாம்பைக் கொடியாக உடையவன் துரியோதனன், காதல் நண்பன் - அவனுடைய விருப்பமிக்க நண்பன் கர்ணன், தந்தை - அவன் தந்தை ஞாயிறு, பாகன் - ஞாயிற்றினது தேர்ப்பாகன் அருணன், பின்னவன் - அவன் தம்பி கருடன், பகை - அவனுக்குப் பகை ஆதிசேடன். சுமை - ஆதிசேடனுடைய சுமை நிலம், கலை - பூமியின் ஆடை கடல், எடுத்தகையர் - அக்கடலை யெடுத்துக் குடித்த கையையுடையவர் அகத்தியர், ஐயர் அவர் தகப்பனார் நான்முகன்; கதிபெறத் தவஞ்செய்தோன் - பிரமபதவியை அடைவதற்குத் தவஞ் செய்தவன் அநுமான், தீதில்தாதை - அவனுடைய குற்றமற்ற தகப்பனார் வாயுபகவான். அவன் கொண்டுவந்த சிலை - அவன் மோதியடித்துப் பிடுங்கிக் கொண்டுவந்த கல் மேருவின்முடி. வதிந்த பதியினன் - சிகரங்கள் போய்த்தங்கிய இடத்தை யுடையவன் இராவணன். சிரம் அரிந்தவன் - அவன் தலையை வெட்டியவன் இராமனாகிய திருமால். கொள்பாரி - அவன் மணந்த மனைவி இலக்குமி. சேர்இல் - அவன் போய்ச் சேர்கின்ற வீடு தாமரை. ஆல் உறைந்ததே - அந்தத் தாமரைப்பூ ஆலமரத்தின் மேலிருந்தது.* (௧௫௧)

**843.** **தொடுத்த முத்தமிழுக் ககத்தியன் எனவே**
**தோன்றிய புவனச்சே றையர்கோன்**
**சொலக்கணப் புலவன் இலக்கணக் கவியைத்**
**துதித்தகங் களித்திடும் களியேம்**

**மடத்தினிற் புகுந்து மதுத்திறந் தவனூர்**
**வடித்தகள் குடித்துநின் றவனூர்**
**வறுத்தசுட் கடித்துக் குதட்டுகின் றவனூர்**
**மயக்கியுட் டியக்கமுற் றவனூர்**

**கடுக்கனை மிடற்றில் ஒடுக்கியிட் டவனே**
**கையிலே சிலம்பையிட் டவனே**
**கனத்தநூற் கொடியை நாவிலிட் டவனே**
**கண்ணிலே குழையையிட் டவனே**

முடுக்கிய வயிற்றில் ஆழியிட் டவனே
முகத்திரு பதக்கமிட் டவனே
முளைத்ததோள் இருபான் சதங்கையிட் டவனே
முழுப்புரட் டவர்க்கலா திலையே.

(அ - ரை.) புவனச் சேறையர்கோன் - உலகத்தில் தோன்றிய சேற்றூர் மன்னன். சொல் அக்கணப்புலவன்-சொற்களின் தொகுதியை நன்றாக ஆராய்ந்த கல்விமான். மடத்தினில் புகுந்து - எங்கள் மடத்திலே புகுந்து. கடுக்கனை - நஞ்சை. சிலம்பை யிட்டவனே-மலையை யெடுத்துப் பிடித்த கோபாலனே. கனத்த நூல் கொடியை - மேன்மையான கல்விப் பெண்ணாகிய கலைமகளை. கண்ணிலே குழையை இட்டவனே - கண்ணிலே காதையுடைய ஆதிசேடனே. முடுக்கிய வயிற்றிலே ஆழியிட்டவனே - வயிற்றில் கடலையடக்கிய அகத்தியனே. அக்கம் இட்டவனே - கண்களையுடைய இராவணனே. முளைத்ததோள் இருபான் சதங்கை இட்டவனே - தோளில் முளைத்த இரண்டாயிரங் கைகளையுடைய வாணாசுரனே. (௯௪௨)

844. பொன்முக நோக்கிமின் தன்முக நோக்குமுன் [போயினனென்
றுன்னிட வீழ்ந்தனன் கைதொட வுய்ந்தனள் உன்னுடனே
பின்னும் புணர்ந்திட முன்னறிவுற்றிடப் பெற்றபிறப்
பென்னல மென்றனள் ஏரகத்தான்மலை யிங்கொடியே.

(அ - ரை.) பொன்முகம் நோக்கிமின் தன் முகம் நோக்கும் - தலைவனது அழகிய முகத்தைப் பார்த்துப் பிற்பாடு தன் உடம்பையும் உற்று நோக்குவாள். கைதொட உய்ந்தனள் - அவன் திரும்பி வந்து கைதொட்டவுடன் உயிர் பிழைத்தவன் போலானாள். (௯௪௩)

[கடலரசன் கூறியது.]

845. நீறணிந் திடுபரம சிவனுக் கணிந்துகொள
நிகரில்பிறை யொன்றீந் தனன்
நீலவண் ணன்றனக் கூதவுங் கூட்டவும்
நிலவுநற் சங்க மோடு

கூறரிய பூமாது தம்மையீந் திட்டனன்
கோபதி தனக்கு நிதியும்
குளிர்பஞ்ச தருவுமளி நற்காம தேனுவுங்
கொடுத்தனன் தேவர் கட்கு
மாறுநரை திரைமூப்பு வீவிவை யிலாததோர்
மாவமுதமுங் கலைகடேர்
மன்னுமசு வனிதேவர் இருவரையும் ஈந்தனன்
மாவுலகர் மீதில் அன்பு
வீறுபெற வைத்திருக் கின்றவெனை யங்கைகொடு
விறன் முனிவன் உண்டபோது
மிகுகருணை கடலரசன் உபகாரியென் றெருவர்
விள்ளா திருந்த தேனே.

(அ - ரை.) நீலவண்ணன் தனக்கு ஊதவும் நிலவு நற்சங்கமோடு - நீலநிறமுடைய திருமாலுக்குத் திருவாயில் வைத்து ஊதுதற்குப் பாஞ்ச சன்னியமென்ற சங்கத்தையும். கோபதி தனக்கு நிதியும் குளிர்பஞ்ச தருவும் அளிநற் காமதேனும் கொடுத்தனன் - இந்திரனுக்குச் சங்கநிதி பதுமநிதி யென்ற இருநிதிகளையும் குளிர்ந்த கற்பகம், பாரிசாதம், சந்தனம், தேவதாரு, மந்தார மென்ற ஐந்து தேவமரங்களையும் வேண்டியதைக் கொடுக்கின்ற காமதேனுவையும் கொடுத்தனன். விள்ளாதிருந்தது - கூறாதிருந்தது. (கஙச)

[தலைவி கூற்று.]

846. வல்லெனச் சொன்முலை யில்லெனச் சொலிடை
வல்லியே யெனது வாய்மைகேள்
வளமி குத்திடு விரிஞ்சை வாழ்கடவுள்
வருமுன் மன்மதன் பகைத்தெனைக்
கொல்லவே தனது தேரி லேறிமுன்
குறுகி னனவன் றேரினைக்
குலவு மல்குலுண் டுவகை யானபின்
கூறும் யானைமிசை வந்தனன்

சொல்லுநா லிடை கண்டவ் வானையைத்
தோற்றி ரிந்திட வென்றபின்
தூர மாகவே பூவிருந் தென்மேற்
சூத பாணமொன் றேவினன்

ஒல்லை வந்துமதி முகமு னக்கணே
ஒளியிழந் திதழ் குவியவே
ஓவியத்தை நிகர் ஒத்தநந் துணைவர்
உருவு கண்டுசென் றனனரோ.

(அ - ரை.) பூவிருந்து - தாமரைப் பூவிலிருந்துகொண்டு. - சூதபாணம் - மாம்பூக்கணை. ஒல்லை வந்து - விரைந்து வந்து.
(௧௫௫)

[ஒரு பெண்ணின் அடிமுதல் முடிவரை உருவகம்.]

847. பன்னு மோர்வணி கனுக்கு றுந்துணைவர்
பாரி லோர்புதுமை வஞ்சிகேள்
பசியதா மோர்கொடி யசைய வேயிரு
பதும மாமலர் வதிந்தன

துன்னும் அம்மலரின் மேல்வ ராலுகள்
தொக்க ஞெண்டதி லிருக்கநீள்
துணைகுறங் கதனில் உற்றி ருக்கமிசை
துட்ட நாகமொன் றுற்றதே

அன்னதின் மேலொரு சிங்க மேவவதில்
அளவிலா வெறும் பேறிமேல்
அடர்ந்த நாகமணி பணிகள் கொண்டவிரு
ஆரமார் மலையைத் தாக்கின

மன்னுமம் மலையிற் சங்கிருக்க வதில்
மதிய மொன்றுநகை காட்டவெம்

மதியின் மீதுசெற் றுரைத்தனஞ் செயும்
வகைசொல் வார்கள்கவி வாணரே.

(அ - ரை) பசியதாம் ஓர் கொடி-பசுமையான ஒரு கொடியாடு. அசையவே இரு பதுமமாமலர் வதிந்தன - அசைந்து செல்லுதற்குரிய இருதாமரைப் பூக்களின்மேல் தங்கிற்று. தூன்றும் அம்மலரின்மேல் வரால் உகள - வரால் மீன்போன்ற கணைக்கால்கள் அசைய. அன்னதின்மேல் ஒரு சிங்கம்மேவ - அதன்மேல் சிங்கம்போன்ற இடையிருக்க. அதில் அளவிலா எறும்பேறி - அளவற்ற எறும்புபோன்ற மயிர் ஒழுங்கமைந்து. அதில் மதியம் ஒன்று நகைகாட்ட - அதற்குமேல் திங்கள்போன்ற முகம் விளங்கவும். செல் துரைத்தனம் செயும் - முகில்போன்ற கூந்தலானது தலைமையாக அமைந்திருக்கும். (கடுசு)

[காமன் நீருகியது.]

848. மாறு ஊர்ந்திடு தாறு விட்டிடு
வாழை தாழைவன் மாழைசூழ்
மாநி லத்தினி லேயோ ரற்புதம்
வாய்த்த துண்டதை வஞ்சிகேள்
கூறு வாரண மொன்றி னிற்றலை
கொண்ட வாயிரம் பாம்பின்மேல்
கூடியே நெடு நாள தாகவே
கோர சிங்க மிருந்துபின்
தேறு காலை யாளிங்க வஃதொரு
சேரி யோர்நரி முன்புபோய்ச்
செகத்தில் யாவரு மறியோ னுவகை
செய்த போரினை யென்சொல்வேன்
வீறு மந்நரி திட்டி பட்டிட
வெந்து சாம்பலாய் விட்டது
விருப்ப மோடிதை யுற்று ணர்ந்து
விளம்ப வல்லவர் புலவரே.

(அ - ரை.) வாழை தாழை வன்மாழைசூழ் - வாழை மரங்களும் தென்னமரங்களும் மாமரங்களும் சூழப்பெற்ற. கூடியே நெடுநாளதாகவே கோர சிங்கமிருந்து - பொருந்தி நெடுநாளாக வீரமிக்க மனித மடங்கலாகிய திருமால் தங்கி. பின் தேறு காலே யளிக்க - பின்பு தேள் போன்ற மன்மதனைத் தோற்றுவிக்க. அஃது ஒரு சேரியோர் நரி முன்பு போய் - அது ஓரிடத்தில் ஒப்பற்ற சம்பு (சிவன்) முன்புபோய். வீறும் அந்நரி திட்டிபட்டிட வெந்து சாம்பலாய் விட்டது - தனிச்சிறப்புடைய அந்தச் சிவபெருமானின் நெற்றிக்கண் நோக்கமானது பட்டவுடன் மன்மதன் வெந்து சாம்பலாகி விட்டான். (கஙஎ)

[வேடிக்கையாகப் பாடியது.]

849. திருநி றைந்திடு நளின வாவியு
மருவ ழங்கிய சோலேயும்
செம்பொ னுலய முந்து லங்கிய
சிகர கோபுர மதில்களும்
பரிதி மண்டல மளவு மண்டப
வளமை கொள்பசு மாதைவாழ்
பசுப தீச்சுரன் அடிமை யாகிய
பாவை யேசில புதுமைகேள்
அரிம கன்திரு நாதன் மெச்சிய
அஞ்சு தாய்மக னல்லவோ
ஆடு மாடுமெ டுக்க வந்தவன்
அப்பன் மைந்தனு மல்லவோ
நரியொ ரானையை யின்று தும்பட
நாகப் பாம்பை யெடுத்ததும்
நண்டு மேலொரு சிங்க நின்றதும்
நவவி சித்திர மாகுமே.

(அ - ரை.) மாதை - திருவாமாத்தூர். அரிமகன் - அபிமன்னன். அஞ்சுதாய் மகன் - பாஞ்சாலியின் புதல்வன். ஆடு எடுக்க - கூத்துச் செய்வதற்காக. மாடு எடுக்கவந்த - காளே

நந்தியின்மேல் எழுந்தருளி வந்த. அப்பயி - தந்தையாகிய சிவபெருமான். கரி ஓர் ஆனையை ஈன்றதும் - சம்புவாகிய சிவபெருமான் ஆனைமுகக் கடவுளாகிய விநாயகரைப் பெற்றதும். நண்டுமேல் ஒரு சிங்கம் நின்றதும் - முழங்கால்மேல் இடையிருப்பதும். (௧௫௮)

[புகையிலை.]

850. சீராருந் திருநெடுமால் ஆனிரைப்பின்
புகையிலைக்காம் பெடுத்துக் கொண்டான்
வாராரும் முலையுமைசேர் அரனேசம்
புகையிலையில் வசிப்பதானுன்
சீராரும் அக்கினிக்குப் புகையிலையே
யென்ருற்பின் சீவன்போகும்
பேராரும் புகையிலையின் பெருமைதனை
யெவராலும் பேசொணுதே.

(அ - ரை.) சீராருந்திரு நெடுமால் ஆனிரைப்பின் புகையிலைக் காம்பு எடுத்துக்கொண்டான் - சிறப்புப் பொருந்திய திருமால் அமிசமான கண்ணன் ஆன் கூட்டத்திற்குப் பின்னே செல்லுகையில் அவற்றை யோட்டுவதற்கு மூங்கிற்கோலைக் கையிற் கொண்டான். சம்பு கைலையில் வசிப்பதானுன் - சிவபெருமான் கைலைமலையில் வாழ்கின்றவனுனான். பின்பு+கையில்+ஐ+காம்பு எனப் பிரித்துக்கொள்க. (௧௫௯)

[திருமாலுக்கும் தட்டானுக்கும் இருபொருள்]

851. பொன்னுட னேதினம் பழகிக் குழல்வாயூதிப்
போந்துருக்கு மணிசேர்த்துப் படியுங்கொண்டு
மின்னுமா தங்கமதை நிறுத்து மச்ச
வேலையிலே வரையெடுத்து விரும்பிநாளும்
மன்னுகலை யாழிசங்கு வட்டங் காட்டி
வடிவுளசிற் றிடைச்சிகலை வணக்கையாலே
அன்னசத்ர சோமனகர் அழகன்தன்னை
அலங்காரப் பொற்கொல்லன் என்னலாமே.

(அ - ரை.) பொன்னுடனே தினம் பழகி - திருமகளோடு நாள்தோறும் பயின்று. குழல்வாய் ஊதிப்போந்து - ஆக்களை யழைப்பதற்காகப் புல்லாங்குழலை வாயில்வைத்தூதிச் சென்று. ருக்குமணி சேர்ந்து - உருக்குமணியை மனைவியாகச் சேர்த்துக் கொண்டு. படியும் கொண்டு - பூமியையும் வயிற்றுட்கொண்டு. மாதங்கமதை நிறுத்து - யானையைக் காப்பாற்றி, வேலையிலே மின்னும் மச்சம் - கடலிலே மின்னுகின்ற கயலாகத் தோன்றி. வரையெடுத்து - கோவர்த்தனமலையைக் குடையாக எடுத்துப் பிடித்து, விரும்பிநாளும் - விருப்பத்தோடு எந்நாளிலும், மன்னு கணை ஆழிசங்கு வட்டம் காட்டி - அம்பு ஆழி சங்கு வளைதடி என்பனவற்றைத் திருக்கைகளில் வைத்துக்காட்டி. வடிவுள சிற்றிடைச்சிகளை வணக்கையாலே - அழகிய சிறு இடையுடைய கோபிகைகளைத் தன்கைகளால் வளைப்பதினாலே. அன்ன சத்ர சோமன் நகர் அழகு தன்னை - உணவறச்சாலை வைத்த சோமனுடைய பதியில் வீற்றிருக்கும் அழகனாகிய திருமால். பொன்னைக் கொண்டு தினந்தோறும் வேலை செய்து, ஊது குழல்வாயிலாக நெருப்பையூதி, இரத்தினங்களோடு உருகுகின்ற தங்கத்தைச் சேர்த்து, கட்டளைப்படிக் கல்லைவைத்து, சில் நிறுத்து, பொன் மச்சமெடுத்து வைத்து. தொழிலிலே அளவு எடுத்து விருப்பமாக ஒவ்வொரு நாளும் நிலைபெறுன மோதிரம் சங்கவளையல்கள் முதலியவற்றைச் செய்து காட்டியும் சேதாரம் சாட்டியும், அழகான சிறிய இடையுடைய பெண்கள் நகை விரும்பிச் சூழச்செய்வதிலே, அணி செய்யும் தட்டானும் திருமாலும் சமம் என்று சொல்லலாம். (௧௯0)

[தலைவியின் இயல்பை வியப்புத்தோன்றப் பாடியது.]

852. பஞ்சலட் சணநூலில் ஒரிலக் கணமேழு
பாரையடி யாலளந்த
பகவனது பேர்கொண்டு பாண்டிமா நகர்தனைப்
பார்த்துக்கை யால்வளைத்து
அஞ்சக்கரக் கடவுள் அணியினது பெயர்மறந்
தயனூர்தி பெயர்வெறுத்து
ஆனையின் பெயராகி மதனவேள் போர்க்கிலக்
காயினள் வந்தணைகுவாய்

வஞ்சியிடை முன்சொன்ன தனிலொன்று குழல்பின்
வகுத்தமொழி தன்னிலொன்று
வாருண்முலை ராசிதனில் ஒன்றுபல் லோர்நிலம்
வதனமக பதிமனைவிபேர்
கொஞ்சுமொழி யானது சவுக்கியப் பெயர்பெற்ற
குருவியிதழ் ஓர்பிரபந்தம்
குணம்ஆண்டி லொன்றுநற் கோவளம் வாழுங்
குபேரசங் கரலிங்கனே.

(அ - ரை.) கோவளம் - ஓர் ஊர். பஞ்சலட்சணமதனில் ஓர் இலக்கணம் - காரிகை (அஃதாவது பெண்) பேர்கொண்டு - மால்கொண்டு. பாண்டிமா நகர்தனைப் பார்த்துக் கையால் வளைத்து. சுழிகூடல் கைவிரலினால் இழைத்துப் பார்த்து. அஞ்சக்கரக் கடவுள் அணியினது பெயர்மறந்து - ஐந்தெழுத்தையுடையவராகிய சிவபெருமான் அணிகின்ற அணிகலமாகிய பாம்பை. (பணியை மறந்து.) அயன் ஊர்தி பெயர் வெறுத்து - சோற்றை வெறுத்து. யானையின் பெயராகி - அத்தி (எலும்பு) ஆய்ப்போய், வஞ்சியிடை முன் சொன்னதில் ஒன்று - பெண்ணிடையானது முன் சொன்ன இருமொழிகளில் ஒன்று (நூல்) போன்றது. குழல்பின் வகுத்த மொழி தன்னிலொன்று - அவளுடைய கூந்தலானது பின் சொன்னமால் (முகில்) போன்றது. பல் ஓர் நிலம் - அவளுடைய பல்லானது ஐவகை நிலங்களில் ஒன்றாகிய (முல்லையரும்பு) போன்றது. வதனம் மகபதி மனைவி பேர் - முல்லை அவளுடைய முகமானது இந்திரன் மனைவியாகிய சசி (திங்கள்) போன்றது, கொஞ்சுமொழியானது சவுக்கியப் பேர் பெற்ற குருவி - அவள் கொஞ்சிப்பேசும் சொல்லானது சுகம் (கிளியின்மொழி) போன்றது. இதழ் ஒரு பிரபந்தம் - அவளுடைய உதடானது கோவை அஃது (கோவைக்கனி) போன்றது. குணம் ஆண்டில் ஒன்று - அவளுடைய குணமானது சுபகிருது (மங்கலம் மகிழ்ச்சி) வாய்ந்தது. (௧௬௧)

[சிவபெருமான்மீது இகழ்ச்சி வணக்கம்.]

853. தேவரீர் உமது துர்க்குண மதனைச்
செப்பிடத் தொலையுமோ தொண்டன்

சிறுவனை வதைத்தீர் மறலியை யுதைத்தீர்
செம்மன் மைத் துனனையுங் கொன்றீர்
வாவெனு மாமன் தலையறுப் பித்தீர்
மாமியைக் காதறுப் பித்தீர்
மருமகன் தலையைத் திருகினீர் அவனு
மகளையும் மூக்கறுப்பித்தீர்
தாவுசேர் புரத்தை நீறெழச் சுட்டீர்
சம்பரன் தன்னையும் எரித்தீர்
தாருகா வனத்து இருடிகள் தங்கள்
தையலர் கற்பையுங் கெடுத்தீர்
மேவிய உம்மைப் பசுபதி யென்று
மேதினி சொல்லவும் ஆனீர்
வித்தக நித்தா அத்தனே யீசா
விமலனே யமலை நாயகனே.

*(அ - ரை.) செம்மல் மைத்துனனையுங் கொன்றீர் - ஆண்மையுடையவனாகிய திருமாலைத் தக்கன்யாகத்தில் மடியச் செய்தீர்; வாவெனும் மாமன் தலையறுப்பித்தீர் - வாவென்று உம்மையழைத்த மாமனாகிய தக்கனை வீரபத்திரனால் கொல்வித்தீர்; மாமியைக்காது அறுப்பித்தீர் - அவன் மனையைக் காதையிழக்கும்படி செய்தீர்; மருமகன் தலையைத் திருகினீர் - திருமாலின் மகனும் உம்முடைய மருமகனுமாகிய நான்முகன் ஒருதலையைக்கொய்தீர்; அவன் நாமகளையும் மூக்கறுப்பித்தீர் - அவன் நாவில் வீற்றிருக்கும் கலைமகளையும் தக்கன் வேள்வியில் மூக்கினை இழக்கும்படி செய்தீர்.* (௩௬௨

[மாதர் கலவி வர்ணனை.]

854. ஏக வெண்கவிகை நிழலில் அம்புவியில்
ஏகவென்றைய மெனச்செயும்
இராமசேது ரகுநாத பூபன்மிகு
ரவிகுலாதிப துரந்தரன்

கோக மண்டல மெனக்குளிர்ந் ததுரை
ராய தொண்டைமன் அலித்நமால்
கோடி யந்தரகு ராமனுக் கிளைய
குமரன் மேவியுறை வரையினூர்
மேக மண்டலம் அசைந்த சைந்துநல
சந்த்ர மண்டல மறைந்தது
மேரு மண்டலம் அசைந்த போதுவட
விருட்சம் ஒன்றுமிசை நின்றது
நாக மண்டலம் அசைந்த சைந்தமுத
சலதி பொங்கமலர் அணையின்மேல்
நாலு மண்டலம் அசைந்த போதுபதி
னாலு மண்டலம் அசைந்தவே.

(அ - ரை.) அம்புவி அலேக ஏகவென்று ஐயமெனச் செயும் - அழகிய பூமியானது வெள்ளேடோ என்று ஐயப்படும்படி செய்யும். மிகுரவி குலாதிப துரந்தரன் - கதிரோன் குலத்திற்குத் தலைவனாய் அதனைப் பேணுபவனாகிய. கோகமண்டல மெனக் குளிர்ந்த - திங்கள் மண்டலமெனக் குளிர்ச்சியடைந்த. மேகமண்டலம் அசைந்தசைந்து நல சந்த்ரமண்டலம் மறைந்தது - கூந்தல் அசைந்தசைந்து நல்ல திங்கள் மண்டலம் போன்ற முகமானது மறைவுற்றது. மலரணையின் மேல் நாலு மண்டலம் அசைந்த போது பதினாலுமண்டலம் அசைந்தவே. (கரு௩)

[இதுவுமது.]

855. ஏருடைக்கவி வாணருக்கும் இரப்பவர்க்கு நிரந்தரம்
இன்றுநாளை யெனுமல்ஈயும் இராக்கதச்சொற் பராக்ர [மன்
வீரவிக்ரம விசயராயன் விளங்குசாரல்வரை மெல்லியார்
மேவிவாழு மநுராகபோக விசித்ரமாகிய நல்வேளையில்
தாரகைக்குலம் உதிரவும்வட மேருபொற்கிரி யசையவும்
தாகவேலை சிவப்பவும்மதி தன்னைவந்திருள் மூடவும்
காரணக்குறி யானதிப்படி காசினிக்கிது புதுமையே
காஞ்சிதமு தலத்திலேமிகு கலக்கமுள்ளது காணுமே.

(அ - ரை.) கரும் இராச்சொல் பராக்கிரமன் - சினமில்லாதவனென்று பேர் பெற்ற வீரனாகிய. தாரகைக்குலம் உதிரவும் - உடுக்கள் போன்ற மலர்கள் சிதறவும் தாகவேலை சிவப்பவும் - வேட்கையையுணர்த்தும் கடல் போன்ற கண்ணானது சிவக்கவும். மதிதன்னை வந்து இருள்மூடவும் - மதிபோன்ற முகத்தை இருள் போன்ற கூந்தல் மறைக்கவும். (௧௩௪).

[விநாயகக் கடவுள் முடிமலர்மீது வண்டிருந்தது.]

856. சீனர்சோனகர் ஈழர்ஆரியர் திறையளந்திடு வாயிலான்
சேரையாதிபன் அரசகேசரி செல்வனாகிய கல்வி
[மான்
மீனுலாவிய கண்ணியர்க்குளம் வெள்குருமயல் தந்தவன்
மிக்கதேவனல் வரையிலேயொரு விசித்ரமாம்ஒரு
வஞ்சிகேள்
ஆனைமேலொரு பூவிருந்திட அந்தமாகிய பூவின்மேல்
அச்சமற்றொரு குதிரைநின்றிட வந்தவாம் பரிமீதிலே
கானுலாவிய புலியிருந்தது கருதுமப்புலி மீதிலே
கடியசிங்கம் இருந்துலாவிடல் காசினிக்கிது
[புதுமையே.

(அ - ரை.) ஆனைமேல் ஒரு பூ இருந்திட - விநாயகக் கடவுள் மேல் ஒரு மலர் தங்கவும். அந்தமாகிய பூவின்மேல் அச்சமற்று ஒரு குதிரை நின்றிட - அழகிய அந்தப் பூவின் மேல் அச்சமில்லாமல் ஒரு குதிரை அஃதாவது பத்திரியாகிய இலை இருந்திட. அந்தவாம்பரி மீதிலே கானுலாவிய புலியிருந்தது - அந்த அழகான இலையின்மீது மணம் பொருந்திய தாமரைப்பூ இருந்தது. கருதும் அப்புலி மீதிலே கடிய சிங்கம் இருந்துலாவிடல் - விரும்பப்பெற்ற அந்தத் தாமரைப் பூவின்மீது அரியாகிய வண்டு இருந்தது. (௧௩௫).

[தலைவியின் மெலிவு.]

857. வாடைப்பனி மட்டோமதன் வாடைப்பலிச் சிக்கென்
மலைவேலை யொலிக்கே திருமலைவேலை நினைத்தாள்

கூடற்கிறை காணுதவள் கூடற்கர சேநின்
குவளைத்தொடை தாவென்றுரு குவளைத் தழுவிலை
ஆடற்கொடி யிடையாள் நகையாடற் கிடமானுள் [யே
அஞ்சும்புகல் நடையாளிதை யஞ்சம் புகலானுள்
ஒடித்திரி கின்ருள்துயர் ஒடித்திரி கின்ருள்
உறவாடுவ திவரேமயல் உறவாடுவ திவளே.

(அ - ரை.) மதன்வாடு அப்பு அணிச்சி- காமன் வாட்டுதற் கேதுவாகிய அம்புதைத்து. வேலை - கடல். அஞ்சம் புகல் நடையாள் - அன்னம் அடைக்கலம் புகக்கூடிய நடையையுடையவள். இதையம்சம்பு உகலானுள் - இருதயத்தில் சுகத்தை யிழந்தவளானுள். ஓடித்திரிகின்ருள் துயரோடு இத்து இரிகின்ருள் - ஓடித் திரிபவளாகிய அவள் துயரிஞலே மனமுறிந்து அஞ்சுகின்ருள். (௧௬௬)

[பிட்சாடன விழாவின்பொழுது சொல்லியது.]

859. உழைசுமந்திடு கையரேயிள நற்பதஞ்சலி மெய்யரே
உண்பலிகொள வந்துமாதர்கள் உயிரையும்பலி [கொள்கிறீர்
பிழைசுமந்திட எங்கள்வாசலில் ஏனடிக்கடி வருகிறீர்
பெண்கள் வாழ்ந்திடு வீதியல்லது பின்னைவேறிடம் [இல்லையோ
இழைசுமந்தவர் உயிர்பறிப்பது தருமமோவிது தேவரீர்
இன்றுவந்தது போலநாளையும் இந்தவீதியில் [வந்திடில்
பழிசுமந்திடு நீரொருத்தர் பலிக்குவந்த நிமித்தமாப்
பாவம்வந்திட வேண்டுமோவொரு பறையறைந்து [பின் வாருமே.

(அ - ரை.) உழை - மான். இளநற்பதஞ்சலி மெய்யரே - மென்மையான நல்ல திருவடியிஞலாடுகின்ற உடலையுடையவரே. பிழைசுமந்திட - குற்றத்திற்குப் பொறுப்பாக. இழை அணிகலம். (௧௬௭)

859. விலைமதித்திடு தமிழ்புனைந்திடு வீரராகவன் உதவுமால்
வெள்ளியூர்வரு வேலபூபதிரு வெற்பிலேயொ
[புதுமைகேள்
அலையிருக்கிற கடலிலேயொரு குவளைநிற்குது கமலமோ
அருகிருக்குது முல்லையான வரும்புநிற்குது
[அதனுளே
கலையிருக்குது மானிருக்குது கரியமேகமு முடுகுவாள்
காணவேயிரு பிறைகள்நிற்குது கண்கண்முக்கண
[வள்ளலும்
மலையிருக்குது வரவிருக்குது வஞ்சிநிற்கிற வஞ்சிகீழ்
வாழைநிற்குது நடுவில்தேன்தொடை வைத்திருக்
[குது காணுமே.

(அ – ரை.) *அலையிருக்கிற கடலிலே ஒருகுவளை நிற்குது - அலையுடைய கடலைப்போன்ற கண்ணிலே குவளைப்பூப் போன்ற கருமணியிருக்கிறது. கமலமோ அருகிருக்கிறது - தாமரைப்பூப் போன்ற வாய் அதன் பக்கத்தில் இருக்கிறது. அதனுளே முல்லையான அரும்பு நிற்குது - அதற்குள்ளே முல்லையரும்பு போன்ற பற்களிருக்கின்றன. முடுகுவாள் காணவே - கண்ணிலிருந்துவரும் ஒளியைக் கவனித்துப் பார்க்க.* (கசுஅ)

860. சோலையொத்த கொடைக்கரன்புகழ்
அதிகமாகிய தொண்டைமான்
துட்டரைப்பலி யிட்டுவிட்டலர்
சோனகன்வரை தன்னிலே
ஆனெய்தன்னையுண் டெலியெடுத்ததும்
அரசுதானொரு முசலின்மேல்
அம்பலந்தனி லேதழைத்ததும்
அன்றுதானொரு புதுமைகேள்
மீனையுண்ட பருந்திலேறி
மிகப்பருத்தது சிங்கமாம்

வேளையில்லொரு பக்கிகொத்தி
விசும்புளாடிய பாகனர்
மானிருப்பது மலையிலேபெரு
மனிதர்தின்பது வாரணம்
வண்டுமேற்சில பூநெயேறுதல்
வையகத்தில் வளப்பமே

(அ - ரை.) சோனை - முகில். ஆனெய் தன்னையுண்டு எலியெடுத்தது - சிவாலயத்தில் விளக்கிட்ட பசுநெய்யையுண்ட எலியானது அரசனய்த் தோன்றியதும். அரசுதானொரு முசலின் மேல் அம்பலந்தன்னிலே தழைத்ததும் - அரசனகிய சிவபெருமான் முயலகனை மிதித்து நின்று பொன்னம்பலத்திலே நடனஞ் செய்ததும். மீனையுண்ட பருந்திலேறி மிகப்பருத்தது சிங்கமாம் - மீனைத்தின்கின்ற கருடன் மீதேறிய திருமால் நரசிங்காவதாரத்தில் இரணியன் இரத்தத்தைக் குடித்ததில் மிகக்கொழுப்படைந்ததும். வேளையில் ஒருபக்கி கொத்தி விசும்புளாடிய பாகனர் - அச்சமயத்தில் சிம்புள் பறவையாக வந்து சிவபெருமான் அந்நரசிங்கத்தின் உக்கிரத்தையடக்கி விண்ணில் உலாவினர். மானிருப்பது மலையிலே மனிதர் தின்பது ஆரணம் - மானகிய உமாதேவி யிருப்பது கயிலைமலையிலே மனிதர் அனுபவத்திலறிவது வேதப்பொருள். சில பூனை (பூநெய்) மேல் வண்டு ஏறுதல் - சில்வகையான தேனிருக்குமிடத்தில் வண்டு போய்த் தங்குதல்.
(௧௬௯)

861. மைதவழ்ந்த மகிழடிக்கண் ஒற்றியூரில் இட்டசூள்
வழுவழுக்கச் சுந்தரற்கு மன்னிமுன் மறைந்தகண்
எய்தவே கொடுத்தி ரண்டுதூர்துசென் றொருத்தியோ(டு)
இணங்கினர் இணங்கியும் இசைந்தநூலி லேயெலா
பொய்தவிர்ந்து காமமுந் துறந்ததூய ரேநமைப் [ம்
பொருந்துவார் அலாதபேர் பொருந்தலா
[ரெனச்சொல்வார்
செய்தவாறு செய்வரென்று தேறிநிற்ப தேயலால்
தெரியுமோ தியாகராயர் திருவுளத்தி யற்கையே.

(அ - ரை.) மைதவழ்ந்த மகிழ் அடிக்கண் - முகில்கள் ஊர்ந்து செல்லும் படியான மகிழமரத்தினடியில். இணங்கியும் இசைந்த நூலிலேயெலாம் - அப்படிப்பெண்ணேடு சேர்ந்திருந் தும் பொருத்தமான நூல்களிலெல்லாம். (கஎ0)

862. எத்தலப் புறத்தினும் பிறப்பிறப்பி னுட்படும்
எவ்வுயிர்க்கும் அயன்விதிப்ப தென்பதேமிகச்
[சொல்வார்
கைத்தலத்தில் அவர்பெருங் கபாலமாய வன்பெரும்
கருந்தலைக்குள் ஒன்றுபட்ட கருமமார் விதித்ததோ
அத்தனைக்கும் ஒருவராய் அளிப்பதோ வதன்றியும்
அன்னவேத னுதியோரை யாரெனப் படைப்பதோ
சித்தமித் தனைக்கெலாம் தியக்கமா நமக்கெலாம்
தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே.

(அ - ரை.) பெரும் கருந்தலைக்குள் ஒன்றுபட்ட கருமல் ஆர்விதித்ததோ - நான்முகனுடைய பெரிய கரியதலைப்பகுதியிம் அப்படிப்பொருந்து வதற்கேதுவான வினைப்பயனை எழுதினவர் யார். சித்தம் இத்தனைக்கெலாம் தியக்கமோ நமக்கு - இவ்வள வெல்லாம் சிந்திப்பதனுல் நமக்குத் திகிலேற்படுமோ. (கஎக)

863. அருணமார் மூலைக்கிடுப டீரதூளி மொய்ப்பவும்
அருமைபெற்ற சிறுர்தவழ்ந்த டிப்பொடிக்குள் மூழ்
பொருவிலாத யானைவாசி சேனையின்ப ராகமே [கவும்
பொதுளவுந் திருந்தவம் புரிந்துபோக வைப்பரோ
கருவிழாத வகைநமக்கு மாலயன் புரந்தரன்
கரங்குவித் துளங்கனிந்து கண்குளிர்ந்த மாசினற்
றிருவிழா வெழுந்தபூழி யுடலமூட விடுவரோ
தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே.

(அ - ரை.) அருமை பெற்ற சிறுர் தவழ்ந்து அடிப்பொடிக் குள் மூழ்கவும் - அருமையாகப் பெற்ற சிறு குழந்தைகளுடைய அடித்தூளியினுள் மூழ்கவும். கருவிழாதவகை-பிறவியில் விழாத படி, பூழி - புழுதி. (கஎஉ)

864. செய்யோன்அக ளங்கன்வள வன்சோழகு லேசன்
சென்னிக்குல தீபன்னுயர் பொன்னித்திரு நாடன்
பொய்யோ டொருநாளும் முறைசெய்யா மநுதுங்கன்
போர்வல்லவன் மல்லற்பொழில் பொங்குங்குரு கீரே
ஐயோஅவ ரைப்போலொரு நிட்டூரரும் உண்டோ
அஞ்சம்படு கைக்கேதுயர் நெஞ்சம் படுகைக்கே
வெய்யோன்விழு கைக்கேமுழு மதிவந்தெழு கைக்கே
விழிநீர்சொரி கைக்கேயெனை விட்டுப்பிரிந் தாரே.

(அ - ரை.) *சென்னிக்குலதீபன் - சென்னி யென்னும் அரச குடும்பத்திற்கு விளக்குப்போல்பவன். அஞ்சம்படுகைக்கே- காமனுடைய ஐங்கணைகள் நம்மைத் தாக்குவதற்கே.* (கஎங)

865. தாக்கச்செறி சுடர்பட்டது தனமேல்விடு பனிநீர்
தரளத்தொகை பொடிபட்டது தழலுற்றது களபம்
வாக்குக்குழ றிப்போனது வசமற்றது கைகால்
மைதோய்விழி நிலையுற்றதென் மடிமேற்றுயில் [கொள்வான்
மூக்கிற்கரம் வைத்தாலுயிர் உண்டில்லை யனங்கன்
முழுநீலம் எடுத்தால்உயிர் விடுகின்றது சரதம்
காக்கத்திரு வுளமோதுயர் காணத்திரு வுளமோ
கண்ணங்குடி நின்ரூர்நம தெண்ணந்தெரி யாரே.

(அ - ரை.) *சுடர்பட்டது - தீப்பொறி பட்டாற்போலிருந் தது. தழலுற்றது களபம் - சந்தனமானது நெருப்புப்போல வெதுப்பிற்று. மைதோய்விழி நிலையுற்றது - மை தடவிய கண் கள் அசையாமல் நின்றது. அனங்கன் முழுநீல மெடுத்தால் உயிர் விடுகின்றது சரதம் - காமன் முழுக்குவளை மலரை யெடுத்தெய் வானுனல் இவளுக்கு உயிர்போவது உண்மையாகும்.* (கஎச)

866. செங்கான்மட வன்னம்படர் தீயாமென வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமு [கின்

பைங்காய்மர கத்மீது படர்ந்தேறி நறுந்தண்
பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யுடன்மைந்தரும் உடனுக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவ களங்கா
கொங்காமது துங்காவென மதுரேசர் வணங்கும்
கொல்யானைகள் பங்காவிவள் குழலோசை
[பொருளே.

(அ - ரை.) *சிறையில் பெடை மறைய - தன்னுடைய சிற கின்கீழ்த் தன்னுடைய பெட்டை யன்னமானது புகலடைய. மது துங்கா-தேன்போலச் சிறந்தவனே!. தலைகா எமது உடல்கா எமது உயிர்கா - எமது தலையைக் காக்கவேண்டும் எமது உடலைக் காக்கவேண்டும் எமது உயிரைக் காக்கவேண்டும் என்று வணங் கிக்கூற.* (*௩௭௫*)

[வண்டு விடுதூது]

867. நீறுபட்ட கமல மெய்யர் நிலவுபட்ட வேணியர்
நித்தரத்தர் சுத்தர்பித்தர் நிமலர்காவை யீசர்செஞ்
சேறுபட்ட களபமார்பர் திருவெண்ணுவல் ஈசனுர்
திருவுளத்தி னினைவறிந்து செப்பவேண்டும்
[வண்டுகாள்
மாறுபட்ட வேள்கை யம்பின் ஊறுபட்ட கொங்கையும்
மஞ்சுபட்ட குழலுமுட்ட மாசுபட்ட மேனியும்
ஆறுபட்ட கண்ணுமங்ஙன் வேறுபட்ட சிந்தையும்
அந்திபட்ட போதுபாவி யர்விபட்ட பாடுமே

(அ - ரை.) *நிலவுபட்ட வேணியர் - திங்கள் பொருந்திய சடைமுடியை யுடையவர். காவையீசர் - திருவானைக்காவிலுறை யும் பெருமான்.* (*௩௭௬*)

868. பாரி கூப்பிட நெடிய சோலை
பரந்து கோகில நிரையெலாம்

பரிந்து கூப்பிட வன்றில் வெள்ள
மிருந்து கூப்பிட நதியெனும்
நாரி கூப்பிட இறைவர் பார்வையி
னலம ழிந்தவன் அம்பினுல்
நைந்து கூப்பிடும் சிவனே வைத்தினி
நாங்கள் கூப்பிடல் நீதியோ
வாரி கூப்பிட முன்ன மேமத
வாலி கூப்பிட ராவணன்
மறிந்து கூப்பிட மதிலிலங் கையின்
மகர தோரண மறுகெலாம்
ஓரி கூப்பிட வில்வளைத்தரு
ளொருவ னேமழை யுருவனே
உலகை யோரடி யாலளந்திடும்
ஓங்கு வேங்கட வாணனே.

(அ - ரை.) *மதிலிலங்கையின் மகரதோரண மறுகெலாம் - மதிற் சுவருடைய இலங்கை நகரில் மகரதோரணங் கட்டிய தெருக்களிலெல்லாம். ஓரி கூப்பிட - நரி யூளையிடும்படியாக. நெடிய சோலை பாரிகூப்பிட - பெரிய பொழில்கள் மகரந்தத்தை நிலத்தின் மேலிடவும். இறைவர் பார்வையின் நலன்அழிந்தவன் அம்பினுல் - சிவபெருமானினது கண் பார்வையினுல் உருவமழிந்த மன்மதனுடைய பாணத்தினுல்.* (௮௬௮)

869. தண்டாமரை தருநாள்மலர் மீதோதிம மீனத்
தவளத்திரள் பவளத்திரள் என்றேழையர் தங்கைக்
கொண்டாடிட முன்னைக்கிது மன்னத்திரு செம்மைக்
குணநான்மடி யுளதாகிய குழகாவிரி நாடா
பண்டாலிலை யமளித்துயில் குழவிப்பரு வத்தே
பௌவத்தொடும் உலகைச்சிறு பவளத்திரு வாயால்
உண்டாயக ளங்காநிக ளங்கால்கரி தொழுதாள்
உய்யத்திரு வுளமோவெது செய்யத்திரு வுளமோ.

(அ - ரை.) மீனத் ரளத்திரள் பவளத்திரள் என்று - விண்மீன்போன்ற முத்தின் தொகுதி பவளக் கூட்டத்தின் மேலிருப்பது போலாமென்று. செம்மைக்குண நான்மடியுளதாகிய - செந்நிறமானது நான்கு மடங்கு அதிகமாகப் பெற்ற பௌவத்தொடும் உலகைச் சிறு பவளத்திரு வாயால் உண்டாய் - கடலோடு உலகத்தையும் உன்னுடைய சிறிய வாயினாலே உட்கொண்டாய். (௬௭அ)

[தலைவி கூற்று]

870. வன்ன குங்கும படீர வாகுவரி
கேச ரிக்குரிய மருகனும்
மதுரை யாதிபதி சீவலச் செழியன்
வழுதி வம்சகுல தீபகன்

தன்னை முன்பவனி கண்டு நெஞ்சுகலை
வளைகள் தோற்றமட மங்கையர்
தாய ரற்றவரும் அல்லரின் றெனது
தலையெ முத்தினு மடைந்ததால்

என்னை யின்னிலவில் இட்டு வைப்பதுவும்
அன்றி வெய்யபனி நீரைமேல்
இறைத்து நித்திலமு நீறு செய்திடுவள்
இளமை யானபரு வத்திலே

அன்னை யன்னையதி பாவி பாவியிவள்
ஆசை கொண்டவளும் அல்லள்முன்
ஆசை கொண்டசில மாதர் தங்களிட
வருகி ருந்தவளு மல்லளே.

(அ - ரை.) நெஞ்சுகலை வளைகள் தோற்ற மடமங்கையர் - மனத்தையும் ஆடையையும் வளையல்களையும் மோகத்தால் கழுவப் பெற்ற இளம் பெண்கள். நித்திலமும் நீறு செய்திடுவள் அன்னை - என் முத்துமாலையும் வெப்பத்தால் பொடிபடும்படியாகத் தாய் செய்கின்றாள். (௬௭௬)

871. பூதம்பணி கொண்டாய்கடல் பாதந்தொழ நின்றாய்
புயலைத்தளை யிட்டாய்கயல் பொற்குன்று பொறித்
மூதண்ட புரேசன்கதிர் முடிசிந்த முனிந்தாய் [தாய்
மூரிச்சிலை வேளாண்மை முடிக்குந்திறம் அரிதோ
வேதண்டமோ ரெட்டுங்கிளர் வேழங்களோ ரெட்டும்
விடநாகமு முடிநொந்து விழாமற்புவி யாளும்
கோதண்ட முகுந்தாவர குலசேகர மாறா
கூடற்பதி யிறைவாவுயர் கொற்கைப் பெருமானே.

(அ - ரை.) வேதண்டம் - மலை. பூதம்பணி கொண்டாய் - பூதத்தலே ஏவி வேலை செய்வித்தாய். புயலைத் தளையிட்டாய் - முகிலுக்கு விலங்கு பூட்டினாய். மூதண்டபுரேசன் - இந்திரன். புரி + ஈசன் = புரேசன். (கஅ0)

872. அண்ட ரண்டபகி ரண்டமுந் திசையும்
வெடிப டப்பிளிறி யடியினால்
அரவி னுச்சிநெற நெறெனப் புடவி
யடவி தூளியெழ வடவையும்
துண்ட கண்டமுற வடுப னைக்கைமத
வேழ நல்கியருள் தொண்டைமான்
துங்க வேங்கடவன் மல்லை யாதிபதி
தோளின் மாலையரு ளாதநாள்
சண்டை சண்டமத ராச னுக்குமிவ
ளுக்கு மென்பதறி யாமலே
தழலில் வெய்யபனி நீரை யும்புழுகு
தன்னை யுங்கொடிய அன்னைமீர்
மொண்டு மொண்டிளகு சந்த னத்தொடு
குழைக்கி றீர்இவள் பிழைக்கவோ
மூச்சு மில்லையொரு பேச்சு மில்லையிவள்
மூலையி லிட்டறிய வாருமே.

(அ - ரை.) புடவி அடவி தூளியெழ - நிலத்திலும் காடுகளிலும் புழுதி கிளம்பும்படியாகவும். அடுபனைக்கை மதவேழம் நல்கியருள் தொண்டைமான் - கொல்லும்படியான மதம் பொருந்திய யானையைப் பரிசாகக் கொடுத்தருள்கின்ற தொண்டைமானென்னும் மன்னன். மல்லையாதிபன் - கடல் மல்லையாகிய மாவலிபுரத்திற்குத் தலைவன். இளகு சந்தனத்தொடு குழைக்கிறீர் - நெகிழ்ந்த சந்தனத்தோடு கலக்குகிறீர்கள். (கஅ௬)

**873.** பேயி ரங்கவும் உயிர்அ ருந்திய
பிள்ளை மாமுகில் சுந்தரன்
பெருகு தண்புனல் வையை யந்துறை
பிரிவு ருதம கன்றில்காள்
தாயி ரங்குவ தற்ற வர்க்கொரு
தமரி ரங்க நினைப்பரோ
தலையி லிப்படி யெழுது மோவிது
சதுமு கற்கிது நீதியோ
வேயி ரங்குவ தொன்று கரம
விரோத மொன்றுள தல்லதால்
வெண்ம தித்தழல் என்றெ ருத்தியை
வெல்ல வித்தனை வேண்டுமோ
ஆயி ரம்பகை கூடி யென்செயும்
ஆவி யொன்றல தில்லையால்
ஆகி லுஞ்சொல நீர றிந்திரு
மன்பர் பெண்பழி யாளரே.

(அ - ரை.) மகன்றில்காள் - அன்றிப் பறவைகளே! தாயிரங்க அற்றவர்க்கு ஒருதமரிரங்க நினைப்பரோ - அன்னை பரிவு கூறுதற்கில்லாத பெண்களுக்கு உறவினர் பரிதாபிப்படுவார்களா.
(கஅஎ)

**874.** காவிரித்து றைப்படிந்து பொருநையைக் கலக்கியே
கடைக்கணங்கி கொண்டுகொற்கை களல்கொளுத்
[துமியானையான்

வாவுமிக்க மாவுகைக்கும் வஞ்சிவென்ற வஞ்சியான்
மதுரைவீர் கஞ்சுகன் வரைப்புறத்து மாதரீர்
பாவையர்க்கு வாடைவே றெனக்குவேறு வாடையோ
பாயல்மற் றவர்க்குவே றெனக்குவேறு பாயலோ
யாவருக்கு மதியம்வே றெனக்குவேறு மதியமோ
யாரெனுருத்தி பெண்பிறந் திரண்டுபட்ட துலகமே.

(அ - ரை.) *வாவுமிக்க மாவுகைக்கும் வஞ்சிவென்ற வஞ்சியான் - தாவிச் செல்வதில் சிறந்த குதிரைகளைச் செலுத்தும் சேர மன்னனை வென்ற வஞ்சகமற்றவன்.* (கஅந)

875. திக்கயங்கள் எட்டுமுட்ட வைத்தபுட் பதாகையான்
செழியர்கொற்ற வளவர்வந்து திறையளக்கு முன்றிலான்
மைக்கருங்கண் மாதரார் மனங்கவற்று மாரவேள்
மதுரைவீர கஞ்சுகன் மணந்துதந்த பந்தநோய்
கைக்குள்வந் தகப்படாது கண்முனிற்கு மொருவராற்
காணொணாது காணுமென்று காட்டொணாத தன்றியும்
ஒக்குமென் றுரைக்கலான வுவமையில்லை யிருவரும்
உள்ளறிந்த தன்றிமற்றிவ் வூரறிந்த தல்லவே.

(அ - ரை.) *திக்கயங்கள் எட்டும் முட்டவைத்த புள் பதாகையான் - எட்டுத் திக்குகளிலுமுள்ள யானைகளைப் போய்த் தட்டும்படியாகப் பரவுகின்ற பறவைக் கொடியை யுடையவன். கண்முன்னிற்கும் ஒருவரால் காணொணாது - கண்ணுக்குமுன்னே நிற்பதுபோலத் தோன்றும் ஆனால் உறுதியாகக் காணமுடியாது. இருவரும் உள் அறிந்ததன்றி மற்று இவ்வூர் அறிந்ததல்லவே - தலைவனும் நானும் அறிந்தோமே யன்றி மற்றும் இவ்வூரார்கள் அதைத் தெரியவில்லை.* (கஅச)

876. பழுத்து டைந்தகனி நெக்கு நெக்குருகி
சாறு வீழவடி சேறெழும்
பல்பெ ருஞ்சுனையை யமுத மென்று
வெயில்படவெ ளுதனம றைப்பபோல்

பொழிற் புறஞ்சொரியு முகிலி னந்தமுவு
புதுவை வாழ்சடைய னுதவுசேய்
பூத லம்பரவு சேதி பன்றனது
பொன்னி னுடனைய பூவையார்
விழித்த னந்தலொ டெழுந் திருந்ததுவு
மெய்து வட்சியு மகிழ்ச்சியும்
மென்ம ருங்கினி லெடுத்து டுத்தவும்
மேக லைத்தலை யணைத்ததும்
வழுத்தி வந்துதிரு நீறு தந்துவிடை
தந்த பார்வையை மறப்பினும்
வாச லின்படி பிடித்து நின்றநிலை
மனம றப்பதிலை காணுமே.

(அ - ரை.) பூதலம்பரவு சேதிபன் தனது பொன்னின் னாடனைய — உலகத்தார் போற்றுகின்ற சேதிப மன்னனுடைய காவிரி நாடு. விழித்து அனந்தலொடெழுந்து இருந்ததும் — தூக்கத்தோடு விடியற் காலத்திலெழுந்து உட்கார்ந்திருந்ததும். (கஅரு)

[தலைவன் பிரிவாற்றுமைபற்றித் தலைவி கூறியது.]

877. வாசமேவுசொற் பொய்யாத பிள்ளைநாயன் மாதைசூழ்
வாவிமேவு சோலைசூழு மதுரகீத வண்டுகாள்
ஓசைகூர மாரனெய்ய வுள்ளுடைந்த நோயெலாம்
ஒருவரோ டுரைக்கொணுதென் னுள்ளகத்தடக்கி [னேன்
பேசொணுது வாய்திறந்து பேசவேண்டுமாகிலோ
பெண்பிறக்கொ ணுதுபெண் பிறக்கவேண்டு மாகி [லோ
ஆசைகொள் ளொணுததாசை கொள்ளவேண்டு மாகிலோ
அங்கொருத்தர் இங்கொருத்தர்ஆ கொணுது [காணுமே.

(அ-ரை) வாசமேவு சொற்பொய்யாத பிள்ளைநாயன் மாலைதரும் - மணம்பொருந்திய நற்சொல்லினையுடைய பொய்யாத பிள்ளைநாயகன் என்னும் தலைவரது மாதைப்பதியைச் சுற்றியுள்ள. ஓலைசகூட - வருத்தத்தால் கூக்குரல் மிகும்படி படியாக. (கஅசு)

[இதுவுமது]

878. பல்லார்பகை கொள்ளுந்தொழில் கடியாதுகொல் லரவம்
பால்கைத்து வெறுக்குந்துயர் பரிகாரமி லாநோய்
பொல்லாருள மகிழுங்கதை புகையார்சொரி யனலம்
பூவும்பொரு கலகம்பிறர் போக்காமருள் கண்டும்
கொல்லாரருள் என்னக்குளிர் குடகாவிரி யமுதம்
குடிகொண்ட குடந்தைக்கொரு கோனெங்கள்
[குமண்டூர்
நல்லார்திரு மலையன்புய னளினத்தொடை யருளான்
நல்கின்றவர் நல்காதது நான்செய்திடு பிழையே.

(அ-ரை.) கடியாது கொல் அரவம் - அது கடியாமல் கொல்லுகின்ற பாம்பாகும். பால்கைத்து வெறுக்கும் துயர் - பால் கசந்து வெறுக்கப்படுதற் கேதுவாகிய துன்பம். பூவும் பொருகலகம் - பூவினால் சண்டை விளைக்கின்ற கலகமாகும். பிறர் போக்கா மருள்கண்டும் - அது தலைவர் தவிரப் பிறரால் நீக்கமுடியாத மயக்கமென்பது தெரிந்தும். கொல்லார் அருள் என்ன - கொல்லாதவர்களுடைய கருணைபோல. (கஅஎ)

[பரத்தையர் கூற்று.]

879. கைகொடுத்தும் அளகபாரமயிர் கொடுத்து மறைவிலே
கடிசுருட் கொடுத்துமாசை கைநகங்கள் வையென
மெய்கொடுத்து மெய்யிதென்று பொய்கொடுத்தும்
[விலைபெரு
விரலின்மோ திரங்கொடுத்தும் வித்தம்வாங்க
[வல்லமோ

மைகொடுத்த விழிசிவப்ப நுதல்வியர்ப்ப வரையிலே
மயில்கொடுத்த வமளிசோர மரகதக் கொழுந்து
[போல்
நெய்கொடுத்த பொழுதிலாயர் மனையிலாடு மேகமே
நீதிகண்ட பாலைவந்த நீலகண்ட பூபனே.

(அ - ரை.) வரையிலே மயில்கொடுத்த அமளி சோர - மலையிலுள்ள மயிலின் தோகையினாற் செய்த படுக்கை கலையும் படியாக. நீதிகண்ட பாலையென்னும் ஊரில் தோன்றிய நீல கண்ட மன்னனே!. ஆசை கை நகங்கள் வையென மெய் கொடுத்து - காதலினால் நகக்குறிகள் வைக்கும்படி உடம்பைக் காட்டியும். வித்தம் - பொன். (௧அஅ)

[அதரப் புகழ்ச்சி.]

880. குருத்து வாழைகள் வேள்கு டைக்கொரு
கோற ருந்திரு மங்கலம்
குடிவி ளங்கிய வாவி நாயகர்
கோபு ரந்திரு மண்டபம்
நிருத்த மாதரோ டாடல் பாடல்கள்
கண்ட மாமுகில் பாலைவாய்
நீல கண்டன் வரைக்கு ளேயெதிர்
நிற்கு மாதர் முகத்திலே
பருத்தி ராதுசி ருதுவெண்மை
படாது ரேகை விடாதுசெம்
பவள மொன்றை யெடுத்து மிக்க
பதப்ப டுத்தி வணக்கியே
அருத்து பாகில் அழுத்தி யண்டர்தம்
அமுதை யுள்ளி லடக்கியே
அழகு கொண்டு பொதிந்த தொன்றினை
யதர மென்னுமிவ் வுலகமே.

(அ - ரை.) வெண்மைபடாது - வெண்ணிறங் கலவாமலும். ரேகைவிடாது - உரியவரிகள் தவறுமலிருக்கப் பெற்றும் உள்ள. செம்பவள மொன்றை யெடுத்து மிக்க பதப்பண்படுத்தி வணக்கியே - செந்நிறமான பவளத்துண்டொன்றை யெடுத்துப் படுத்தி. அருத்து பாகில் அழுத்தி - உண்ணுகின்ற வெல்லப் பாகிற்றேய்த்து. அண்டர்தம் அமுதையுள்ளின் அடக்கியே - தேவாமிர்தத்தை யதனுளடைத்து. அழகுகொண்டு பொதிந்த தொன்றினை - அழகாக அமைத்து வைத்த உறுப்பினை. அதரம் என்னும் இவ்வுலகமே - இவ்வுலகத்தார் உதடு என்று சொல்வார்கள். (கஅசு)

881. வனசன்கொடி லங்காபுரி நிருபன்கொடி யனிலன்
மைந்தன்கொடி சேரன்கொடி மாரன்கொடி துரியோ
தனனன்கொடி நிகராகிய நடைசொல்லிடை நுதல்கண்
தடவல்குல் படைத்தாள் மயல்தணியத் தொடை [தாராய்
கனகங்குடை துகில்தண்டிகை காளங்கரி பரிதேர்
கற்றோர்களை வாழ்வித்தருள் கார்கண்டயர் அதிபன்
நனிதங்கிய கமலாசன மாதைப்பிள்ளை நாய்கன்
நாராயண பட்டப்பொளி நன்றுடை யானே.

(அ - ரை.) கார்கண்டு அயர் அதிபன் - முகிலைப் பார்த்து ஈகையைச் செய்கின்ற தலைவன். வனசன் கொடிநடை - நான்முகன் கொடியில் எழுதப்பெற்ற அன்னம்போன்ற நடையும். அனிலன் மைந்தன் கொடி இடை - காற்று மகனாகிய வீமனுடைய கொடியாகிய சிங்கம்போன்ற இடையும். சேரன் கொடி நுதல் - சேரனுடைய கொடியாகிய வில்போன்ற நெற்றியும். மாரன் கொடிகண் - மன்மதனுடைய கொடியாகிய கயல்மீன் போன்ற கண்ணும். (கஅ௦)

882. தனக்காறு மாதமும்போய் நாட்டிற்காட்டில்
தங்குபட்டி விக்கிரமன் சரிதம்போல
எனக்காறு மாதம்போ யானியாடி
ஆவணிவந் தெய்தியபின் மாதம்போறல்

மனக்காதல் கொண்டிருந்த மாதர்பின்னே
மாதப்பேர் இட்டழைப்பார் மதுரைவாசல்
தனக்கான மதிமந்திரி யிந்திரன்றன்
தபோபலனே குடந்தைக்குந் தமிழ்க்கும் வாழ்வே.

(அ - ரை.) *பின் மாதம் புரட்டாசி - பின்னே மாதப்பேர் புரட்டாசிக் கடுத்த மாசம் அற்பசி; அற்ப: சீ! என்று அழைப்பார்கள்.* (கக்க)

883. குன்றுகுடை யாவெடுத்துக் கோவைக் காத்த
கோபாலா நின்பெருமை கூறக்கேண்மோ
அன்றுமலர் வந்தவள்தன் வீட்டைவிட்டே
ஆயர்மனை வந்ததனுல் ஆயர்மாதர்
கன்றுகட்டுந் தாம்புகொண்டே யுரலிற்கட்டிக்
கரியதிரு மேனிசிவப் பேறமத்தால்
என்றுமழி யாப்பெயராத் திருடனென்றே
எற்றியதும் உன்றலையில் எழுத்துத்தானே.

(அ - ரை.) *அன்றுமலர் வந்தவள் தன் வீட்டை விட்டே - அக்காலத்தில் தாமரைப் பூவில் தோன்றிய திருமகளின் வீட்டை விட்டே. ஆயர் மாதர் - இடைப் பெண்கள்.* (கக உ)

884. கொல்லா விரதத் தமிழ்முனிவன்
முதலோர்குணவா கடநூலில்
எல்லாப் பிணிக்கும் மருந்திசைத்தார்
யானும் அவைதேர்ந் துறுதிகண்டேன்
பொல்லாப் பசிநோய்க் கொருமருந்து
புகலா மையின்யான் தேடிநின்றன்
சொல்லா மெனவெண் ணுழியந்நோய்
தொலைந்த துறைசார் பறிகிலனே.

(அ - ரை.) *குண வாகட நூலில் - வாகடம் போன்ற மருத்துவ நூல்களில். யான் தேடி நின்றன் சொல்லாமென எண்*

ஞாழி யானதற்கு மருந்தை நாடி உன்மொழியே அதற்கு மருந்தென்று நினைத்தபோது. (ககஙு)

885. கட்பூக்குழல்மா வடுவண்டாங்
கழைவிற் புதல்கூர்அசிநாட்டம்
எட்பூத்துண்டம் முருக்கோட்டம்
இலகுவிதுவா னனம்பாணி
தட்பூச்சுவர்க்கஞ் சிலம்பிடைநூல்நி
தம்பம்அகிபை வரால்தான்சொல்
வெட்பால் குரல்கோ கிலம்அன்ன
நடையும்வடமீன் கற்புடையாள்.

(அ - ரை.) கண் - மாவடு. பூக்குழல் வண்டாம் - வண்டைப் போன்ற அழகிய கூந்தல். கழைவிற்புதல் - கரும்புவிற் போன்ற புருவம். கூர் அசி நாட்டம் - கூரிய வாள் போன்ற பார்வை, துண்டம் - மூக்கு. முருக்கு ஓட்டம் - முருக்கம் பூப்போன்ற உதடும். இலகுவிது ஆனனம் - ஒளிருகின்ற திங்கள் போன்ற முகம். பாணிதட்பூ - குளிர்ந்த தாமரைப் பூப்போன்ற கை, சுவர்க்கம் சிலம்பு - கொங்கை மலை போன்றது. நிதம்பம் அகிபை-அல்குல் பாம்பின் படம். சொல் வெட்பால்-வெண்மையான பாலின் சுவை போன்ற மொழி. குரல்கோகிலம் - ஒலி குயில் கூவுதல் போன்றது. (ககச)

[திருவருட்பேறு பெற்றமை செப்பல்.]

886. வாக்கு மனமுமெட் டாப்பர மேசர் வலியநம்மைக்
காக்கும் படிகங்க ணங்கட்டிக் கொண்டனர் [காய்ந்துநமைத்
தாக்கும் படியனு காதினிமாயைச் சனியனிதம்
பாக்கும் பணமும்வைத் தேயழைத்தாலும் படியகத்தே.

(அ - ரை.) வாக்கு மனமும் எட்டா பரமேசர் - சொல்லுக்கும் மனதிற்கும் அப்பாற்பட்ட பெரிய முதல்வராகிய சிவ பெருமான். (ககரு)

[தலைவியின் பிரிவாற்றுமையால் தலைவன் கூறியது.]

887. விடவாளை வென்ற வழியாளைப் பூமியின் மேலதிர
நடவாளைப் பெண்கள்த நாயக மாமொரு நாயகத்தை
மடவாளை யென்னுள் வதிவாளையின்ப மருவவென்சொல்
கடவாளை யென்தெய்வ மேயென்று போயினிக்
[காண்பதுவே.

(அ - ரை.) விடவாளை வென்ற விழியாளை - நஞ்சு கலந்த வாளினுஞ் சிறந்த கண்ணுடையவளை. (கககூ)

[தனக்கு நோய்தீர்த்த ஈசனென்னும் மருத்துவன் மீது பாடியது.]

888. தேசம் புகழுந் திருநெல்லை யில்வாழும்
ஈசனைநம் மீசனுக்கொப் பென்னலாம்—ஈசன்
பிறவாமற் காப்பான் பிறந்தாரை நாளும்
இறவாமற் காப்பான் இவன்.

(அ - ரை.) நம்மீசனுக்கு ஒப்பென்னலாம் - மருத்துவனாகிய நம்மீசனுக்குச் சமானமாகச் சொல்லலாம். (கஅஎ)

[திருக்கடவூர்ச் சுவாமி துதி.]

889. பொன்னருகு நரர்அருகும் பூவையார்அருகு நிலம்
தன்னருகும் உழன்றுழன்று தவித்திருந்தேன் கடவூரில்
முன்னருகர்தமை வென்றுர் முதன்மூவர் தமிழ்மணக்கும்
உன்னருகு வரப்பெற் றேன்உடையாயுன் னருள்
[இயல்பே.

(அ - ரை.) முன்னருகர் தமை வென்றுர் - முற்காலத்திற் சமணரை வென்றவராகிய திருஞானசம்பந்தர். (கஅஅ)

[இராசிகளில் உதித்தவன் குணம்.]

890. ஆடோ டெதிரிடேல் மாடோடு சேரேல்
தண்டுகொண் டிற்புகேல் நண்டுக்கிடங் கொடேல்
சிங்கத்தா னேடே துங்கப் போர்செயேல்
கன்னிமகனைத் துன்னி விடாதே
கோலா னென்றிலுந் தோலான் தேளான்
தன்னைப்பேண உன்னிக் கொள்ளுக
வில்லான் றன்னைச் சொல்லால் வளைத்திடு
மானு னேடே யானு வழக்கிடேல்
குடத்தான் படையெலாம் படத்தான் வெல்லுவன்
மீனத்தா னட்பைத் தானுகந் திடுகவென்
ரேதினர் மூதறி வுடைய நாவலரே.

(அ - ரை.) ஆடு - மேட ராசி. மாடு-இடப ராசி. தண்டு—மிதுன ராசி. நண்டு - கடக ராசி. சிங்கத்தானேடு - சிங்க ராசியிற் பிறந்தவனேடு. கன்னி - கன்னி ராசி. கோலான் ஒன்றிலும் தோலான் - துலா ராசியிற் பிறந்தவன் தோல்வி யடைய மாட்டான். வில்லான் - தனு ராசியிற் பிறந்தவன். மானுனேடே - மகர ராசியிற் பிறந்தவனேடு. குடத்தான் - கும்ப ராசியிற் பிறந்தவன். மீனத்தான் - மீன ராசியிற் பிறந்தவன். (ககக)

[திருவாரூர்ப் பெருமானைத் தூது விடுத்ததைப் பற்றி யிகழ்ந்து பாடியது.]

891. தருக்காலு மலர்ப்பொழில்சூழ் ஆரூரன்
தமிழ்ப்புலமைத் தருக்குத்தன்னுல்
பெருக்காலும் இவரருமைப் பெம்மானென்
றெண்ணுமல் பெண்பித்தேறி
முருக்காலும் வெலற்கரிய விதழ்ப்பரவை
யிணங்கும்வகை மொழிந்துவாவென்

ிருக்காலு நடத்தினுன் ஒருக்காலுந்
தமிழ்க்கிரங்கி யிருக்கோ றுதே.

(அ - ரை.) தருக்காலும் - மரங்கள் சிந்துகின்ற. முருக்காலும் வெலற்கரிய - முருக்கம் பூவினுலும் வெல்ல முடியாத. (உ00)

[ஒரு கன்னியைப் புகழ்தல்.]

892. அருக்கன்மதி யுதித்துவரும் அம்புவியில்
அதிசயங்கள் அன்பாய்க் கேளீர்
உருக்குமந்த உடல்ஈரா றென்றறையும்
ஒன்றறையும் உகந்து கொண்டு
இருக்குமந்த விடந்தனிலே நாலிரண்டு
விதமான திருக்கக் கண்டேன்
திருக்குளத்துப் படித்துறையிற் கலுக்கெனவே
சிறுக்கியவள் சிரிக்கின் றுளே.

(அ - ரை.) அருக்கன்மதி - ஞாயிறும் திங்களும். உருக்குமந்த உடல் ஈராறு ஒன்றறையும் ஒன்றறையும் உகந்து கொண்டு-மனதை யுருக்கக்கூடிய இறைவர் திருமேனி பதினைந்தாவது நட்சத்திரமாகிய சோதியை யுட்கொண்டு. நாலு இரண்டு விதமானது இருக்கக் கண்டேன் - ஆருவது ராசியாகிய கன்னி யிருக்கப் பார்த்தேன். (உ0க)

[திருவாரூர்ப் பெருமான் துதி]

893. கங்குலிலே நடப்பார்க்குக் காலிலே
கண்வேண்டுங் கண்டீ ரந்தச்
சங்கரனுர் திருத்தாளிற் கண்ணிடந்து
சாத்திவைத்த சமத்தைப் பாரீர்
அங்கணனுர் ஆரூரர்ஆடவே கிண்கிணிக்கால்
அருமை யெல்லாம்
செங்கணெடு மால்தனக்கே யல்லால்மற்
றெருவருக்குந் தெரிந்தி டாதே.

(அ - ரை.) அங்கணனார் ஆரூரர் ஆடவே - அழகிய அருட் கண்ணராகிய திருவாரூர்ப் பெருமான் ஆடுங்காலத்தில், கிண் கிணிக்கால் அருமையெலாம் கிண்கிணியணிந்த அப்பெருமானது திருவடியில் அறிதற்கரிய நுட்பங்களெல்லாம். (உ0உ)

[செங்காட்டங்குடிப் பெருமான் இகழ்ச்சி வணக்கம்.]

894. ஓர்குடிக்கே யோர்மகவாஞ் சிறுத்தொண்டன்
பிள்ளைபழி யொன்று போதும்
பார்குடிக்குட் செங்காட்டங் குடிமேவும்
உத்தரா பதிய ரேநீர்
கார்குடிக்குங் கஞ்சுகமுங் கப்பறையும்
பொக்கணமுங் கையிற் கொண்டே
யார்குடியைக் கெடுப்பதற்கே யாண்டிவே
டங்கொண்டே யலைகின் றீரே.

(அ - ரை.) உத்தராபதியாரே - வட நாட்டினரென்று தம்மைச் சொல்லிக்கொண்ட பெருமானே! கார்குடிக்கும் கஞ்சுகமும் கப்பறையும் பொக்கணமும் கையில் கொண்டே - கருமை மிகுந்த போர்வையையும் ஐயப்பாத்திரத்தையும் மிகுந்த சுமையையுங் கையிலெடுத்துக்கொண்டு. (உ0௩)

895. அச்சுதனார் உம்முடைய மச்சினனார்
படியளந்தே யகிலங் காத்தார்
நிச்சயமாய் வாழ்வுதரும் லட்சுமிதன்
னுடன்பிறந்தீர் நிலைமை யாக
உச்சிதமாம் பொன்மலையும் வெள்ளிமலை
யும்படைத்தீர் உமக்குச் சார்பாய்ப்
பச்சைமர கதமிருக்கப் பிச்சையெடுத்
துண்டதென்ன பட்டி யாரே.

(அ - ரை.) பட்டியாரே - கள்ளன் போன்றவரே! உச்சித மாம் பொன் மலையும் வெள்ளி மலையும் படைத்தீர் - மேன்மை யுடைய மேரு மலையையும் கைலை மலையையும் உடையவர் நீரே. (உ0௪)

[இரகுநாத சேதுபதியின் யானையை வியந்தது.]

896. கடிவாங்கு மலர்த்தடஞ்சூழ் சேதுபதி
ரகுநாதன் களிநல் யானை
அடிவாங்கி முன்னடக்கில் வடகலிங்கங்
கிடுகிடெனும் அங்க தேசம்
குடிவாங்குங் கடலேழும் உள்வாங்கும்
ஒன்னலர்கள் கோட்டை வாசல்
படிவாங்கும் அரசர்மணி முடிவாங்குஞ்
சேடன்முடி படியுந் தானே.

(அ - ரை.) கடிவாங்கும் - மணம் வீசுகின்ற. வடகலிங்கம் கிடுகிடெனும் - வடக்கேயுள்ள கலிங்க நாட்டார் நடுநடுங்கி அஞ்சுவர். அங்கதேசம் குடிவாங்கும் - வங்காள நாட்டுக் குடிகள் உள்ளடங்குவர். ஒன்னலர்கள் கோட்டை வாசற்படி வாங்கும்- பகைவர்களுடைய அரண்மனை வாசற்படிகள் அதிர்ந்தடங்கும். (உ0ரு)

[வண்டோச்சி மருங்கணைதல்.]

897. சினம்பெரிதாய் மதனைவென்ற திருவாரூர்த்
தியாகேசர் திகழு நாட்டில்
இனம்பெரிதாம் மதுகரமே இவள்அளக
மீதிருத்தல் இயல்போ வேறே
வனம்பெரிதாக் கிடையாதோ விடையொடிந்தாற்
பழிசுமக்கு மார்பிற் கொங்கைக்
கனம்பெரிதா யிடைசிறிதா யிருந்தாலுங்
கொடிக்குக்காய் கனத்தி ராதே.

(அ - ரை.) இனம் பெரிதாம் மதுகரமே - கூட்டம் பெரிதாக வுடைய வண்டே. அளகம் - கூந்தல். (உ0சு)

[நல்லவைகள்.]

898. கன்றினி தூட்டிக் கறந்ததீம்பாலுங்
கலவியின் மகவிரும் பறவை

தின்றதீங் கனியும் வேட்டையில் ஞமலி
கறித்திடு கின்றமென் றசையும்
ஒன்றையும் எச்சில் எனஇகழ்ந் துரையார்
உணர்ந்துளோர் உறுகடன் பொருட்டும்
நன்றுடன் வேள்வி வேட்டிடும் பொருட்டு
நனிபொருள் வழங்கல்நன் ருமால்.

(அ - ரை.) ஞமலி கறித்திடுகின்ற மென்தசையும் - வேட்டைக் காலத்தில் வேட்டை நாய் பற்றிக் கடித்து வீழ்த்திய உயிர்களின் மெல்லிய ஊனும். (உ0எ)

[மலர்க்குறி பிழைத்தமையைத் தலைவன் கூறுதல்.]

899. காம்பாயர் தெய்வத்தின் பேரீரெழுத்தின் கடையெழுத்தை
யாம்பாதி செய்தது வேகுறி யாமலர்ப் பாவையங்கம்
பூம்பாவை யாக்குநல் லண்ணுமலையர் பொருப்பிடத்தே
தாம்பாதி வைத்தும் வராதிருந் தாலென்ன சாற்றுவதே.

(அ - ரை.) காம்பு ஆயர் - மூங்கிற் குழலை யூதுகின்ற இடையர். தெய்வத்தின் பேரீர் ஈரெழுத்தின் கடையெழுத்தை - வழிபடு கடவுளாகிய திருமாலின் இரண்டெழுத்துப் பேராகிய அரி யென்பதின் ஈற்றெழுத்தாகிய ரி யென்பதனை. ஆம்பாதிசெய்து - பாதியாகச் செய்து அஃதாவது பாதிரி யெனக்கொண்டு; அதுவே குறியா - அதனையே யிரவில் எதிர்ப்படும் இடமெனக் கருதி. தாம்பாதி - தாமரையை. (உ0அ)

[ஆத்தி மரத்தின்மீது வள்ளிக்கொடி இருந்தது.]

900. கட்டளை யாகப் புவிராசர் மெச்சக் கடியுலகைத்
திட்டமிட் டேபணி கொள்ளவல் லான்திறை யாவரையும்
மட்டவிழ் சோலைத் திருமலை ராய மகிபன்வெற்பில்
செட்டிபெண் டாட்டியை வண்ணாத்தி சேரச் சுமந்
[தனளே.

(அ - ரை.) கடியுலகை யாவரையும் - தனது காவலுடைய உலகத்திலுள்ள எந்த மன்னரையும், பணிதிறை கொள்ளவல்

லான் - வேலை செய்விக்கவும் கப்பலுஞ் செலுத்துவிக்கவுந் திறமையுடையவனாகிய. செட்டி பெண்டாட்டியை - முருகன் தேவியின் பெயருடைய வள்ளிக் கொடியை. வண் ஆத்தி - வளப்பமான ஆத்திமரம் சேரச் சுமந்தனளே - முற்றிலுந் தாங்கி யிருந்தது. (உ0க)

[வேங்கை மரத்தின்மீது தாமரைமலர் இருந்தது.]

901. நறைமலர்ச் சோலை மலிதணி காசல நாதன்வெற்பில்
நிறைமதி நேர்முக மாதே புதுமை நிகழ்த்திடக்கேள்
பிறவிக் குருடன் மகன்றன் கொடியும் பெருமுனிவன்
தறையிற் புதைத்த கிரியு மேபுலி தாங்கியதே.

(அ - ரை.) பிறவிக் குருடன் மகன்றன் கொடியும்-திருதராட்டிரன் மகனாகிய துரியோதனன் கொடியாகிய அரவும். பெருமுனிவன் தரையிற் புதைத்த கிரியும் - அகத்தியர் நிலத்திற்குள் போகும்படியாக அழுத்திய மலையாகிய விந்தமும் உண்டாகிய (அரவிந்த) மலரை. புலி - வேங்கை மரம். (உக0)

[நாணிப் புறங்காட்டல்.]

902 வாகான கொன்றை மழவரங் கேசன்பொன் மால்வரையீர்
சோகா திகந்தரு மோகவி காரச் சுரந்தனக்கு
ஆகாது பச்சை யிளநீரென் றுந்தம் அகத்திலெண்ணித்
தாகாதி கத்திற்கு வெந்நீர் அளித்த தயவுநன்றே.

(அ - ரை.) வாகான கொன்றை - அழகிய கொன்றைப் பதியிலுள்ள. வெந்நீர் அளித்த தயவுநன்றே - முதுகை நீர் காட்டித் தந்தது அருட்செயலாக இருக்கிறது. (உகக)

903. அக்கர வம்புனை யாரூர்த் தியாகர் அணிவரையில்
இக்கினை வென்ற மொழியணங் கேபுறந் தானினிது
சக்கரை யோர்புறங் கைப்பதுண் டோவது தானுமன்றி
அக்கரை யிக்கரை யென்பதுண் டோகங்கை யாடுதற்கே.

(அ - ரை.) அக்கு - எலும்புமாலை இக்கினை - கரும்பினை. புறந்தான் இனிது - உன்னுடைய பின்பக்கமும் அழகு. (உகஉ)

904. நதியமர் வேணிக் கரனூர் வழித்துணை நாதன்வெற்பில்
மதிநுத லீரென்ன வாறுசெய் தீரென்செவ் வாய்க்கினிய
அதிரச முங்கண்டத் தோசையு நற்பணி யாரமுங்கேட்
டெதிரடைந் தேனதைத் தாராமல் தேங்குழல் ஈந்தனையே.

(அ - ரை.) என் செவ்வாய்க்கு இனிமை தரும் அதர பானத்தையும். கண்டத்து ஓசையும் - தொண்டையிலெழும் இனிய குரலையும், நல்பணி யாரமும் - நல்ல நகைகளையும் முத்து மாலையையும் தரித்த தனங்களையும். (உகங)

905. சேலூரும் வயல்சூழும் உமைபாகர்
திருக்காமி யீசர் நாட்டில்
பாலூறு மொழிமானே யுனக்குநல்ல
வீர்ங்கலசப் பாக்க மாச்சு
வேலூரும் உனதாச்சு பெருங்கொண்டை
யெமக்களித்தீர் வேண்டாங் கண்டீர்
காலூரைப் பிடிப்பதற்கு விதப்பட்டே
கொடுங்காலுங் கடுகத் தானே.

(அ - ரை.) உனக்கு நல்ல ஈர்ங்கலசப் பாக்கமாச்சு-உனக்கு அழகிய குளிர்ந்த கலசம்போன்ற தனமிருக்குமிடம் உரியதாயிற்று. பெருங்கொண்டை யெமக்களித்தீர் வேண்டாங் கண்டீர் - உம்முடைய பெரிய கொண்டையை எமக்குக் கொடுத்தீர், அது வேண்டியதில்லை. (உகச)

906. மாகத்தை மேவும் புகழ்க்கொன்றை யூரன் மணிவரையில்
பாகொத்த மென்மொழிப் பாவைநல் லீர்என் பருவிரக
தாகத்தைத் தீர்க்குநற் கும்பமுந் தாம்புந் தனிக்கிணறும்
ஆகத் திருக்கவிண் மேகத்தைக் காட்டுவ தன்பல்லவே.

(அ - ரை.) நல் கும்பமும் தாம்பும் தனிக்கிணறும் ஆகத் திருக்க - நல்ல குடம்போன்ற தனமும் கயிறுபோன்ற உரோமமும் ஒப்பற்ற கிணறுபோன்ற கடிதடமும் உடம்பிலிருக்கும் போது, விண்மேகத்தைக் காட்டுவது அன்பல்லவே - விண்ணிலிருக்கின்ற முகிலைப் போன்ற கூந்தலைக் காட்டுவது அன்புக் குறி யாகாது. (உகரு)

907. ஏழைக் கிரங்கிடும் வன்மிக நாதர் எழில்வரையில்
யாழை வருத்தும் மொழிமட வாய்நல் லனமிருக்க
வாழை வருக்கைக் கனியிரு பாற்குடம் வைத்திருந்தும்
கூழை யெனக்களித் தீர்மறு மாற்றங் கொடுத்திடுமே.

(அ - ரை.) நல்லனமிருக்க - அழகிய அன்னம் போன்ற நடையிருக்கவும். வாழை வருக்கைக் கனியிரு பாற்குடம் வைத்திருந்தும் - வாழைத் தண்டுபோன்ற தொடையையும் பலாக்கனி போன்ற சொல்லையும் இரண்டு பாற்குடம் போன்ற தனங்களையு முடையவளாக இருந்தும். கூழை யெனக்களித்தீர் - கூந்தலை யெனக்குக் கொடுத்தீர். (௨௧௬)

908. அழலைத் தரித்த திருவிரிஞ் சேசர் அணிவரையில்
மழலைச் சுரமெனும் மந்த்ரோ தயமு மணிமருந்தும்
தழலைப் பொருத்திய பாம்புங் குடமுந் தராமல்வெறுங்
குழலைத்தந் தாலினிப் பாம்பாட் டுவதெங்ஙன் கூறுதிரே.

(அ - ரை.) மழலைச் சுரமெனும் மந்த்ரோதயமும் - மழலைச் சொல்லிசை யென்னும் மந்திரம் உதயமாகிற வாயையும், அணிமருந்தும் - அழகிய அதரபானத்தையும். தழலைப் பொருத்திய பாம்பும் குடமும் தராமல் - வெப்பமுடைய பாம்புபோன்ற அல்குலையும் குடம்போன்ற தனத்தையுங் காட்டாமல். வெறும் குழலைத் தந்தால் - பயனற்ற கூந்தலைக் காட்டினால். (௨௧௭)

909. அரியைத் தரித்த மதுரா புரீசர் அணிவரையில்
அரியைத் தரித்த குழல்மட வீர்அன் றரியெடுத்த
அரியைப் புதையும் அரிபுதை யாமல் அரிபுதைத்தீர்
அரியைச் சிரம்விட் டடிவால் பிடித்த அறிவொக்குமே.

(அ - ரை.) அரி-திங்கள். அரியைத் தரித்த குழல்மடவீர்-வண்டுகளைச் சுமந்த கூந்தலையுடைய பெண்டிரே!. அன்று அரி யெடுத்த அரியைப் புதையும் - அக்காலத்திலே திருமால் கூருன கண்ணன் எடுத்துப் பிடித்தமலை போன்ற கொங்கையை மறையுங்கள். அரி புதையாமல் அரிபுதைத்தீர் - மலையை மறையாமல் கடலாகிய கண்ணை மறைத்தீர். அரி - பாம்பு. (௨௧௮)

வேறு

910. ஆனையைத் தோய்ந்த குழலாள் கணவற் கசனமிட
ஆனையைக் கொண்டிரண் டானையை மூடி யறுசுவையோ
டானையைக் குத்தி யொருசட்டி யாக அவித்திறக்கி
ஆனையைச் சாறுவைத் தாள்சத்தி பூசைக் கணிபெறவே.

(அ - ரை.) ஆனை - வண்டு. அசனம்இட - உணவு இடுவ தற்கு, ஆனையைக் கொண்டு - அத்திக்காயைக் கொண்டு, அறு சுவையோடு ஆனையைக் குத்தி - அறுசுவைக் கறிகளில் பசு நெய்யை யூற்றி, ஒரு சட்டியாக அவித்திறக்கி - ஒரு பாத்திரத் தில் வேகவைத்திறக்கி, அணிபெறவே - அழகாகவே, சத்தி பூசைக்கு - அம்பாள் நிவேதனத்திற்கு. ஆனையைச் சாறு வைத் தாள் - அத்திக்காயைக் குழம்பிலிட்டு வைத்தாள். (உ௧௧)

911. சென்னிமலை வேலவற்குச் சேர்ந்தகொம்பி ரண்டுண்டு
கன்னிகுற வள்ளிக்குக் காலில்லை—முன்னமே
ஆட்டுக்குக் கொம்பில்லை ஆனைக்குக் காலில்லை
பாட்டுக்குள் ஆராய்ந்து பார்.

(அ - ரை.) வள்ளி, ஆடு, ஆனை என்னும் சொற்களில் (ா ெ) காலும் கொம்பும் இன்மையைக் காண்க. (உ௨0)

912. தார்க்கொன்றை தாவென்றேன் தாவேழில் ஒன்றென்றான்
ஊர்க்கஞ்சி யான்மூன்றி லொன்றென்றேன்—யார்க்கும்
பொதுவென்றான் பூவென்றேன் போயினான் றோழி
இதுவோநம் மீசன் இயல்பு.

(அ - ரை.) ஏழிலொன்று தா என்றான் - நாட்கள் ஏழில் ஒன்றாகிய செவ்வாயைக் கொடு என்றான். நான் மூன்றில் ஒன் றென்றேன் - கன்னி மணப்பெண் கைம்பெண் என்ற மூன்றில் முதலாவதாகிய கன்னி யென்றேன். யார்க்கும் பொது என்றான் - கன்னியை யாரும் நாடலாமென்றான். பூ - பூப்பு, மாதவிடாய். (உ௨௧)

913. பறவைநாய் நாகம் பகைவிலங்கு பங்கம்
செறியும்இருள் நாரஞ் சிதடன்—குறிகிழவன்

என்றுரைத்த விரைந்தும் ஏர்தண்டத் தின்பண்பால்
ஒன்றும் எனஉரைப்ப ரால்.

(அ - ரை.) நாரம் - தண்ணீர். சிதடன் - கண் தெரியாதவன். குறிகிழவன் - வழிவருந்திக் காணும் முதியோன். ஏர்தண்டத்தின் பண்பால் ஒன்றும் - அழகிய கோலின் பயனால் மாறியொழியும். (௨௨௨)

914. நக்கனூர் சோணகிரி நாதனூர் வேள்வியிலே
தக்கனு ரைத்தகர்த்த தக்கனூர்—பொக்கைவாய்
ஆக்கினூர் சூரியனை அம்புலியைத் தேய்த்தரியைத்
தாக்கினூர் ஓடோடத் தான்.

(அ - ரை.) தக்கனுரைத் தகர்த்த தக்கனூர் - தக்கன் யாகத்திலே தக்கனைத் தாக்கி யடித்த தகுதியுடையவர். அரியை- இந்திரனை. (௨௨௩)

915. பேரான வீரெழுத்தை முடியி லேற்றான்
பின்னைவந்த வீரெழுத்தை யிடக்கை யேற்றான்
சீரான வீரெழுத்தை வலக்கை யேற்றான்
சிறப்பான வீரெழுத்தில் ஏறிக் கொண்டான்
காரான வீரெழுத்தை மிடற்றிற் கொண்டான்
கருணைசெயும் ஈரெழுத்தைப் பாகங் கொண்டான்
ஆராகி லும்பொருளை யறிந்து சொல்லின்
அவர்கள்தமைப் புலவரென அறைய லாமே.

(அ - ரை.) பேரான ஈரெழுத்தை - மதியை. பின்னை வந்த யீரெழுத்தை - பிற்பாடு இரண்டெழுத்தினாலாகிய மான் என்பதை. சீரான ஈரெழுத்தை சிறப்பான விரண்டெழுத்தினாலாகிய மழு என்பதை. ஈரெழுத்தில் ஏறிக்கொண்டான் - இரண்டெழுத்தினாலாகிய விடையின்மேல் ஏறிக்கொண்டான். ஈரெழுத்தை மிடற்றிற் கொண்டான் - கருமையைக் குறிக்கும் இரண்டெழுத்தினாலாகிய கடு என்பதைக் கண்டத்தில் வைத்தான். ஈரெழுத்தை - உமையை. (௨௨௪)

[நடுவெழுத்தலங்காரம்.]

916. அந்தமுள்ள புவியிலொரு மரத்தின் பேரும்
அலைகடலில் வாழுமொரு சீவன் பேரும்
விந்தைபெறு பட்டணப்பேர் வெகுகா லப்பேர்
விளங்குமொரு பிள்ளைப்பேர் மெல்லி யாள்பேர்
சந்ததமும் இந்தவகை யாறுங் கூட்டித்
தமிழெழுத்தின் நடுவெழுத்தைச் சார்ந்து பார்க்கில்
சுந்தரஞ்சேர் வைகுந்தந் தன்னில் வாழும்
துய்யரங்க நாதனென்றே சொல்ல லாமே.

(அ - ரை.) இதில் குறிக்கப்பட்டுள்ள பெயர்கள். அரசு, சங்கு, நகர், அநாதி, சுதன், கன்னி; இவற்றின் நடு. (௨௨௫)

[பிசினரைக் குறித்துப் பாடியது.]

917. எண்ணுங்கு முப்பத்தி ரண்டுபற் காட்டி யிசையுடனே
பண்ணுகச் செந்தமிழ் பாடிவந் தாலுமிப் பாரிலுள்ளோர்
அண்ணாந்து கேட்பர் அழகழ கென்பர் அதன்பிறகு
சுண்ணாம்பு பட்ட இலையுங் கொடார்கவி [சொன்னவர்க்கே.

(அ - ரை.) அண்ணாந்து கேட்பர் - மேலே தலையை உயர்த்திக் கவனமாய்க் கேட்பார்கள். (௨௨௬)

918. பாலொத்த மென்மொழி தாண்டவ பூபன்இப் பாரினிலக்
காலத்தில் வந்துதித் தாலாதி சேடனுங் காற்றுண்பனே
மாலத் தரையை விழுங்குவ னேசிவன் வாய்வைப்பனே
ஆலத்தி லக்கடல் நீருண் பனேசொல் அகத்தியனே.

(அ - ரை.) ஆதிசேடனும் காற்றுண்பனே - ஆதிசேடன் காற்றை உணவாகக் கொள்வானே. (௨௨௭)

[செல்வரைக் குறித்துப் பாடியது.]

919. உண்ணு விருந்தும் உதவிகொள் ளாத உறவினர்பொன்
எண்ணுக் கணிகை யுடன்புல வோர்கள்நல் லேவலரும்
தண்ணூரம் புல்லருந் தாமாவுங் காலுணுஞ் சற்குருவும்
கண்ணாரக் காணின் மகிழ்வார்கள் செல்வக் கயவர்களே.

(அ - ரை.) பொன் எண்ணுக் கணிகையுடன் புலவோர்கள் நல் ஏவலரும் - பொருளை நாடாத விலைமகளிரும் நல்ல கல்விமான்களும் தக்க தொழிலாளிகளும். தண் ஆர் அம்புல் அருந்தா மாவும் - குளிர்ந்த அழகிய புல்லைத் தின்னாத குதிரையும். கால் உணுஞ் சற்குருவும் - காற்றை உண்ணும் நல்ல ஆசாரியனும். (உஉஅ)

வேறு

920. அக்காண்டி யக்கை யணிவாண்டி யாடை
[யவிழ்க்கச்சற்றும்
வெக்காண்டி மாமறை மீதிருப் பாண்டிநம் வீட்டில்வந்து
சிக்காண்டி தேடித் திரிவாண்டி கேளிந்தத் தென்மதுரைச்
சொக்காண்டி நாளை வருவாண்டி யேண்டி துயருனக்கே.

(அ - ரை.) அக்காண்டி - எலும்பை யணிந்த துறவி. அக் கையணி வாண்டி - உருத்திராக்க மணியைத் தரித்துக்கொள் வான். நம் வீட்டில்வந்து சிக்காண்டி - நமது வீடாகிய மோட் சத்தில் வந்து அகப்படுவான். (உஉகூ)

921. ஆடுஞ்சி தம்பரன்அம்பல வாணன் அணிவரையில்
நீடுங் கயற்கண்ணி யாள்தந்த மோக நிறையவெங்கும்
கோடுங் குளமுங் குளத்தரு கேநின்ற குன்றுகளும்
காடுஞ்செடியும் அவளாகத் தோற்றுமென்
[கண்ணிணைக்கே.

(அ - ரை.) கோடும் குளமும் குளத்தருகே நின்ற குன்று களும் - குளத்தின் கரையும் குளமும் குளத்திற்குப் பக்கத்தி லிருந்த மலைகளும். (உகூ0)

922. ஒருகா லெழுதிமுன் மாக்கொம் பெழுதி யுரைத்தவஞ்சி
இருகா லெழுத மறந்தன ளோவிந்த எண்டிசையும்
தருகாம சுந்தரன் காளத்தி வாணன் தடங்கிரியில்
உருகாத வஞ்சியர்க் கென்றே யெழுத முயல்நண்பனே.

(அ - ரை.) *ஒருகால் எழுதி - எழுத்துறுப்பாகிய காலை (ா) எழுதி. முன்மாக் கொம்பு எழுதி - மகரத்திற்கு முன்னாகிய பகரத்தையும் அதற்கு முற்பட்ட கொம்பையு மெழுதி அஃதாவது போவென் றெழுதி. உரைத்த வஞ்சி - போவென்று கூறிய பெண்ணானவள். இருகால் எழுத மறந்தனளோ - ஒருகாலுறுப்பையும் கால் என்கின்ற எண் பகுதியையுங் குறிக்கும் வகரத்தையும் அஃதாவது (வா) என்று எழுத மறந்துவிட்டாளோ.* (௨௩௧)

923. போரேற்று வந்த மதன்படைக் கஞ்சிப் புகுந்தவெனைக்
காரேற்றி நீலக் கருங்கட லேற்றிக் கனத்தகொங்கை
மேரேற்றி யுந்திச் சுழியாற்றில் ஏற்றி விரகவ்ல்குல்
தேரேற்றி வைக்கின்ற மாதையெப் போகண்டு சேருவதே.

(அ - ரை.) *காரேற்று - முகில்போன்ற கூந்தலை என்மீது சார்த்தி. நீலக் கருங்கடல் ஏற்றி - நீலநிறமாகிய பெரிய கடல் போன்ற கண்ணினால் அன்பாகப் பார்த்து.* (௨௩௨)

[ஆலத்தி காட்டிச் சென்ற பெண்ணைக் குறித்துப் பாடியது.]

924. மதிசூ டியதில்லை யம்பல வாணர் வரையிடத்தே
அதிசய மான அதிசய மேஅரன் வீதிவரத்
துதிசெய்து மூவெட்டுத் தும்பியுங் கொண்டு [துவண்டொருபெண்
எதிர்நின் றிரண்டு மரங்கரத் தேபிடித் தேகினளே.

(அ - ரை.) *மூவெட்டு தும்பியுங்கொண்டு - இருபத்து நான்கு யானையும் அஃதாவது இரண்டு கடகமுந் தரித்துக் கொண்டு. இரண்டுமரம் கரத்தே பிடித்தேகினளே - ஆல் அத்தி (ஆலத்தி) இரண்டு கையினாலும் பிடித்துக் காட்டிவிட்டுப் போயினள்.* (௨௩௩)

925. செவ்வந்தி மாலை சிவந்ததென் றுள்திங்கள் வந்ததென்றுள்
கைவந்த வண்டு கழன்றதென் றுள்கலை சோர்ந்ததென்றுள்
மைவந்த கண்ணி திருவொற்றி யூரை மதுரையென்றுள்
எவ்வந்தி யோவறி யேனிவள் சொன்ன விடுவந்தியே.

(அ - ரை. செவ்வந்தி மாலை சிவந்த தென்றுள் - வானம் சிவந்திருக்கும் மாலைக்காலம் சினந்ததென்று கூறினுள். கைவந்த வண்டு கழன்ற தென்றுள் - கையிலே வந்த வளையல் நழுவிற் றென்றுள். திருவொற்றியூரை மதுரை யென்றுள் - திருவொற்றியூரைக் கூடலென்றுள் அஃதாவது கூடுமிட மென்றுள்.
(உ௩௪).

926. அலையாழி நஞ்சை யமுதா வருந்தி யமரரெல்லாம்
நலியாமற் காத்த வருணு சலேசர்தந் நல்வரைமேல்
நிலையா யிருக்கும் விலைமா தரேயென்னை நீர் கொடுபோய்ப்
புலியூரைக் காட்டிக் கலையூரிற் சேர்த்திடிற் புண்ணியமே.

(அ - ரை.) புலியூரைக் காட்டி - குசமாகிய தனங்களைக் காட்டி. கலையூரில் - ஆடை தங்குமிடமாகிய கடிதடத்தில்.
(உ௩௫).

[திருவல்லிக்கேணிப் பெருமாளைப் பாடியது.]

927. தானேர் வலையினுந் தாழ்வு படாமற் சகலரையும்
வானேரை யுங்கொண்டு வாரிக்குள் ஆலித்து வானரத்தின்
கோனே டெழுபது வெள்ளத்தி லேவந்து கொக்கைக்
[கொன்ற
மீனே திருவல்லிக் கேணிக்குள் ளேவந்து மேவியதே.

(அ - ரை.) வாரிக்குள் ஆலித்து - கடலில் ஆரவாரமாய்க் கலக்கி. கொக்கைக் கொன்ற - மூலநட்சத்திரத்திற் றேன்றிய அரக்கரை யழித்த. மீனே-மச்சாவதாரப் பெருமானோ. (உ௩௬).

928. கைத்தலந் தன்னிற் பசும்பொன் வளையல் கலகலெனச்
சத்த மொலித்திட நூபுரம் பாதச் சதங்கைகொஞ்சத்
தித்திமி யென்று நடஞ்செய்சம் பிசர்தஞ் சந்நிதிப்பெண்
செத்த குரங்கைத் தலைமேற் சுமந்து திரிந்தனளே.

(அ - ரை) செத்த குரங்கைத் தலைமேற் சுமந்து திரிந் தனளே - சாமந்திப் பூவைத் தலையில் வைத்துக்கொண்டு திரிந் தாள். (௨௬௭)

929. பரிக்கொம்பு போலப் பகவான் சரிதை பகர்ந்திடினும்
உரிக்கம்ப தாயினும் ஈயார் கடனுடன் ஓடிச்சென்று
கரிக்கொம்பு போன்முலை மின்னருக் கீவரக் கன்னியர்கை
நரிக்கொம்பு தாலுமுன் டோவேங்க டாசல நாயகனே.

(அ - ரை.) பரிக்கொம்பு போலப் பகவான் சரிதை பகர்ந் திடினும் - குதிரைக் கொம்புபோல அருமையான தெய்வ வர லாறுகளை யெடுத்துக் கூறினாலும். உரிக்கம்பதாயினும் ஈயார் - அரைப்படி கம்பம்புல்லரிசி கூடக் கொடுக்காதவர்கள். (௨௬௮)

[பாலனைப் பழித்தல்.]

930. கேளந்த நாளையில் மைந்தாநின் னையரைக் கிட்டிமத
வேள்வந்து பூச லிடமதிகாய வெருண்டெனது
தாள்வந்து பற்றிமுன் வாய்புதைத் தேநின்று தாழ்மை
[சொன்ன
நாளந்த நாளல்ல வேயிந்த நாளந்த நாயகர்க்கே.

(அ - ரை.) மதிகாய - திங்கள் வெப்பந்தரவும். (௨௬௯)

931. பக்குவமாகக் கவிநூறு செய்துபரிசு பெற
முக்கர ணம்மெதிர் பல்காலும் போட்டு முயன்றிடினும்
அக்கட போவெனும் லோபரைப் பாடி யலுத்துவத்த
குக்கலை யாண்டருள் வில்வ வனத்துக் குயிலம்மையே.

(அ - ரை.) முக்கரணம் எதிர் பல்காலும் போட்டு முயன் றிடினும் - பலமுறை மூன்று கரணம்போட்டு முன்னே நின்று வேண்டினும். அக்கட போவெனும் - அப்பாற் செல்லுக வென. குக்கல் - நாய். (௨௭௦)

932. பொல்லா மதப்பயல் எந்நே ரமுஞ்செய்யும் போருமெனைக்
கொல்லாமற் கொல்லு மதியுங் கடலுங் குயிலும்இவை

எல்லாந் தொலைந்ததென் றெண்ணினன் பாவியிப் [போதுன்மனம்
கல்லாயி ருக்குமென் றெவ்வள வேனுமுன் கண்டிலனே.

(அ-ரை.) கல்லா யிருக்குமென்று - கடினமா யிருக்கு மென்று. (உசக)

933. நாலடி வள்ளுவ ராமேயிப் பாலை நடந்தபெருங்
காலடி மேலடி மானடி யேகட் டுரலிற்பட்டும்
பாலடி சில்வெண்ணெ யுண்டோன் அரங்கன் |பனிவரையில்
வேலடி முள்ளுக் குபாயமிட் டேகும் விரகுநன்றே.

(அ-ரை.) நாலடி வள்ளுவராமே - தலைவன் தலைவி இருவருடைய நான்கு அடிச்சுவடுகள் இரண்டடிச் சுவடுகளாகக் காணப்படுகின்றன. இப்பாலை நடந்தபெரும் காலடி மேலடி மானடியே - இச்சுரத்தில் நடந்தாலுண்டாகிய பெரிய இரண்டு அடிச்சுவடுக்கு மேலுள்ள சிற்றடிச் சுவடு என் பெண்ணின் அடிச்சுவடே. (உசஉ)

934. புலியைக் கொடுத்துப் பசுவாங்கி ஓர்புலிப் பூங்குழலாள்
புலியைப் பசுத்தின்ன விட்டுப் புலியைத் திறுதகற்றிப்
புலியை யரைத்துப் பலகாரஞ் செய்து பொருந்துமுகப்
புலியைக் களிப்புடன் சாறுவைத் தாள்தன் புருடனுக்கே.

(அ-ரை.) புலியைக் கொடுத்துப் பசு வாங்கி - வேங்கை அஃதாவது பொன்னைக் கொடுத்துப் பசுவைப் பெற்று. புலியைப் பசுத்தின்ன விட்டு - பசு புல்லைத் தின்னும்படியாக அதனைவிட்டு. புலியைத் திறுதகற்றி - புலியானது பசுவைத் தின்றுதபடி விலக்கிவிட்டு (பசுவின் பாலுடன்) புலியை அரைத்து - நெல்லினின்றெடுத்த அரிசியை யரைத்து. சாறு வைத்தாள் - விருந்து செய்தாள். (உசங)

[பாலனைப் பழித்தல்.]

935. வேளாம் அழகன் துரைசீதக் காதியென் வீட்டிலொரு
நாளா கிலும்வரக் காண்கில னேயெந்த நாளும்அவன்

தோளால் அணையும் சுகவா லிபத்தைத் துணிக்கவொரு
வாளாய்ப் பிறந்தனை யேமைந்த னேயென்ன வாயுனக்கே.

(அ - ரை.) *சுகவாலிபத்தை - இன்பந்தரும் இளமைக் காலத்தை.* (உசச)

936. நடந்தாள் ஒருகன்னி மாராச கேசரி நாட்டிற்கொங்கைக்
குடந்தான் அசைய ஒயிலா யதுகண்டு கொற்றவரும்
தொடர்ந்தார்சந் யாசியர் யோகம்விட் டார்சுத்த [சைவரெல்லாம்
மடந்தான் அடைத்துச் சிவபூசை யுங்கட்டி வைத்தனரே

(அ - ரை.) *ஒயிலாய் நடந்தாள் - கெம்பீரமாக நடந்து சென்றாள்.* (உசரு)

937. நாலா கலைதெரி யேகம்ப வாணர்நன் னாட்டில்வளர்
சேலாகக் கண்கள் படைத்தபெண் ணேநின் [னிகழும்வயி(று)
ஆலாகவும் அல்குல் பாம்பா கவும்அவ் வணையின்மிசை
மாலாக யான்பள்ளி கொள்ளவந் தேன்உன்றன் [மாளிகைக்கே.

(அ - ரை.) *நாலாகலைதெரி யேகம்பவாணன் நன்னாட்டில்— பலவகையான கலைகளைக் கற்ற ஏகம்பவாணனது தேசத்தில்.*

[இருபெண்கள் தங்கள் காதலரைப் பற்றிக் கூறிக்கொண்டது.]

938. அரவிந்த நண்பன் சுதன்தம்பி மைத்துனன் [அண்ணன் கையில்
வரமுந்தி ஆயுதம் பூண்டவன் காணுமற் றங்கவனே
பரமன் றிகிரியை ஏந்தினன் மைந்தன் பகைவன்வெற்பை
உரமொன் றெடுத்தவன் மாற்றான்றன் சேவகன் [ஒண்டொடியே.

(அ - ரை.) *வரமுந்திய ஆயுதமாகிய கலப்பையைப் பூண்டவன் எருமைக்கடா; மாற்றான்றன் சேவகன் அனுமான்: எருமைக்கடா என்றொருத்திகூற மற்றவள் குரங்கு என்றாள்.* (உசஎ)

[ஆடவர் இருவர் தங்கள் காதலியைப் பற்றிக் கூறிக்கொண்டது.]

939. சங்கரன் றேவி தமையன் மனைவி தனக்குமுன்னும்
மங்கையர் ஏறிய வாகனங் காணுமற் றங்கவளோ
கொங்கைகள் ஈரைந் துடையவ ளாய்இக் குவலயத்தில்
எங்கும் திரியும் வயிரவர் ஊர்தியென் றேநினையே.

(அ - ரை.) இலக்குமிக்கும் முன்னும் மங்கையர் - முன் தோன்றியவளாகிய மூதேவி. வயிரவர் ஊர்தி - நாய். (உ௪அ)

வேறு

940. மாத்தானைப் பித்தனை மாடேறு வானை மதகரித்தோல்
போர்த்தானை வேதப் பொடிபூசு வானையிப் பூதலத்தென்
ஆத்தா ளுடன்எதிர்த் தம்பலத் தேயென்றும் ஆடிநிற்கும்
கூத்தாடிப் பையலுக் கோமக ளேமயல் கொண்டனையே.

(அ - ரை.) மாத்தானைப் பித்தனை-பெரிய பூதப் படையையுடைய பித்தனெனப் படுபவனை. (உ௪௧)

941. தாராளன் எங்கள் திருநின்றைச் சேடன் சயிலத்தின்பால்
நீரார் முகிற்குழல் பெண்பே தையைவிட்டு நீபிரிந்தால்
சீராமன் இல்லை யமுதில்லை யஞ்சனைச் செல்வனில்லை
காரார் பொழில்வளர் காழிப் பிரானில்லை காப்பதற்கே.

(அ - ரை.) அஞ்சனைச் செல்வனில்லை - சஞ்சீவி மலையைக் கொணர்ந்த அஞ்சனையின் புதல்வனாகிய அனுமானிங்கில்லை. (உ௫0)

942. அம்பள வெவ்வள வவ்வள வேவிழி யார்ந்தகொவ்வைச்
செம்பளம் எவ்வள வவ்வள வேயிதழ் சீர்கொள்வஞ்சிக்
கொம்பள வெவ்வள வவ்வள வேயிடை கூறெலுமிச்
சம்பளம் எவ்வள வவ்வள வேதனந் தையலுக்கே.

(அ - ரை.) இதழ் ஆர்ந்த கொவ்வைச் செம்பளம் எவ்வளவு அவ்வளவே - உதடானது சிவப்பான முழுக் கொவ்வைக் கனி எத்தன்மையதோ அத்தன்மையதே. (உ௫௧)

943. நச்சணி கண்டத்தர் ஆரூர்த் தியாகர் நளினவெற்பில்
கச்சணி யும்முலை மாதே யிதுவென்ன காரணமோ
அச்சுத னுமத் திரண்டா மெழுத்தின் அரையெழுத்தில்
வச்சிர பாணி மனையாள் பகைவந்து வாய்த்ததுவே.

(அ - ரை.) வச்சிரபாணி - இந்திரன். மனையாள் சசி, திங்கள் : பகைதாமரை. (பாதிரி மரத்தில் தாமரை மலர் இருந்தது) என்க. (உ௫உ)

[பள்ளிகொண்டான் என்னும் வள்ளல்மீது பாடியது.]

944. போமே பொழுது வருமே மதியம் புரண்டேன்அங்கம்
வேமே மதனன் சரந்தைக்கு மேதைத்த புண்வழியில்
பூமேவு தென்றல் புகுமேயென் பெண்புத்தி போய் [விடுமே
கோமே தகப்புய லேமழ வாபள்ளி கொண்டவனே.

(அ - ரை.) கோமேதகப் புயலே - கோமேதக மணி போலக் கருநிறமும் பளபளப்புமுள்ள மழைமேகம் போன்றவனே. என் அங்கம் புரண்டுவேமே - என்னுடைய உடல் புரளுவதுடன் வெப்பமடையுமே. (உ௫௩)

[கீழோரின் கீழ்மைக் குணமும் மேலோரின் மேன்மைக் குணமும் கூறியது.]

945. மெய்யினு நல்லவர் ஈனம் பொருர்மயிர் வீழ்தொடக்கம்
செய்யினு மானக் கவரியுய் யாசிற் றினக்கயவர்
வய்யினும் வாழ்வர் தகரையக் காது மயிருமொக்கக்
கொய்யினும் பின்செல்லு மேமழ வாபள்ளி கொண்ட [வனே.

(அ - ரை.) நல்லவர் மெய்யினும் ஈனம் பொருர் - நல்ல வியல்புடையவர்கள் உடம்பிற்கூட ஏதாவது குறை யேற்பட்டால் தாங்கமாட்டார். தகரை அக்காதும் மயிரும் ஒக்கக் கொய்யினும் பின் செலுமே - ஆட்டினது செவியையும் மயிரையும் ஒருங்கறுத் தாலும் அங்ஙனஞ் செய்தவருடைய புறத்தே செல்லும். (உ௫௪)

[பாலனைப் பழித்தல்.]

946. மாலாக்கி யென்னைப் பெருவய தாக்கியென்
மார்பின்முலைப்
பாலாக்கி யங்கம் பசுநரம் பாக்கியப்
பாவையரை
மேலாக்கிச் சிக்கு விளக்கெண்ணெ யாக்கியென்
மேனியெங்கும்
தோலாக்க வோமக னேபிள்ளை யாய்வந்து
தோன்றினையே.

(அ - ரை.) *அப்பாவையரை மேலாக்கி - தலைவன் விரும்புகின்ற அந்தப் பெண்களை என்னிலும் அழகிற் சிறந்தவர்களாகத் தோன்றும்படி செய்து.* (உ௯௯)

947. சதிரா யிருந்த ரதிமாமி மன்மதன் சற்பனைசெய்(து)
எதிராளி யாயைங் கணைதூவ வானத் திருந்துகனல்
மதிவாரி வீச வினைவை மறந்து மதிமயங்கிப்
பதினயிரங் கொட்டைப் பாக்கா யிருந்தனள் பைங்
[கொடியே.

(அ - ரை.) *ரதிமாமி - திருமகள். பதினயிரங் கொட்டைப் பாக்கா யிருந்தனள் - அம்மணமாய் இருந்தாள்.* (உ௯௬)

[இரகுநாத பூபதியின் பிரதாபத்தைப் பாடியது.]

948. அன்பட்ட திக்கெங்கும் போற்றுந்தென் கோட்டுக்
[கதிபதியாய்ப்
பொன்பட்டஞ் சூடும் ரகுநாத பூபவிப் பூதலத்தே
நின்பட்ட மேபட்டம் நீயே துரைமற்றிந் நீனிலத்தோர்
தன்பட்டம் என்பட்டம் தோலால் அடிபடுந் தம்பட்டமே.

(அ - ரை.) *பொன்பட்டஞ் சூடும் ரகுநாதபூப - தங்கமுடி அணிந்த ரகுநாத மன்னனே!* (உ௯எ)

[தலைவியின் பிரிவச்சம்.]

949. திரைகட லோடித் திரவியந் தேடென்று செப்பும்ஔவை
உரைபழு தன்றெனச் சோர்ந்தாள் கழுக்குன்றத்
[தோர்மடமான்
அரைபனி நீர்சந் தனங்கொண்டு பாங்கியர் ஆற்றியபின்
இரைகடல் போய்வர எத்தனை நாளென் றெழுந்தனளே.

(அ - ரை.) அரைபனி சந்தனங்கொண்டு ஆற்றியபின் - அரைத்த சந்தனத்தோடு சேர்ந்த பன்னீரைத் தெளித்து மூர்ச்சையின் வேகத்தைத் தணித்தபின். (உ௫அ)

[கன்னிக் காட்சி.]

950. மேகம் பிறைசிலை வேல்குமிழ் வள்ளைவெண் முத்தந்
[தொண்டை
பூகம் பசுங்கழை தேனுமிழ் காந்தள்வெற் பாலிலைநூல்
நாகங் கதலி யலவன் வரால்நன் னவினமுண்டு
மாகம் பொழிற்றிருத் தில்லையி லேயொரு வல்லியிலே.

(அ - ரை.) பூகம் - கமுகு. பசும் கழை - இள மூங்கில். கதலி - வாழைத்தண்டு. அலவன் - நண்டு. (உ௫௯)

[கிளி விடுதூது.]

951. இளந்தத்தை யேநல் லமுதத்தை யேபுசித் தென்கரத்தில்
வளர்ந்தத்தை யாதும் உணர்ந்திலை யேமய லாகிமனம்
தளர்ந்தத்தை யேயென் திருவரங் கேசர்க்குச் சாற்றச்
[சொன்னால்
அளந்தத்தை யேயளந் தாய்பின்னை யாதும் அளந்
[திலையே.

(அ - ரை.) மயலாகி மனம் தளர்ந்தத்தையே - காதல் மயக்கங் கொண்டு உள்ளம் தளர்ச்சியுற்றதை. அளந்தத்தையே அளந்தாய் - சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லுகிறாய். (உ௬௦)

—❋—

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : செய்யுளெண்]